உ

ஸ்ரீராமசந்த்ர பரப்ரஹ்மணே நம:

# ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம்

# ஸுந்தர காண்டம்.


ஸங்கீத பீஷ்ம கீர்த்தனாசார்ய

ஸி. ஆர். ஸ்ரீநிவாஸய்யங்கார், பி. ஏ.

அவர்களால் மொழிபெயர்க்கப்பட்டது.



PUBLISHED BY

THE MANAGER "RAMAYANA VILAS"

**Mylapore, Madras.**

**1952.**

Ramani Press, Mylapore.


 விலை, **Rs.** 5-8-0 

Sri Kanchi Kamakoti Peetadhipathi Jagadguru
Sri Sankaracharya Swamigal Mutt Samasthanam,
KUMBAKONAM.

ஸ்ரீமத் பரம ஹம்ஸபரிவ்
ராஜகாசார்யவர்ய
ஸ்ரீமத் சங்கர பகவத்பாத
ப்ரதிஷ்டித
ஸ்ரீ காஞ்சீ காமகோடி பீடாதிப
ஜகத்குரு
ஸ்ரீமத் சந்த்ரசேகரேந்த்ர
ஸரஸ்வதீ ஸ்ரீ பாதை:

தங்களால் அனுப்பப்பட்ட ராமாயண ஸுந்தரகாண்ட தமிழ்மொழிபெயர்ப்பு நம்முடைய பார்வைக்கு வைக்கப்பட்டது. ஸ்ரீ ராமனுடைய சரிதம் படிப்பவர்களுக்கும் கேழ்ப்பவர்களுக்கும் ஐஹிக ஆமுஷ்மிக பலன்களைத் தரக்கூடியது. அந்த சரித்தத்தை ஸ்ரீ வால்மீகிரிஷி ஸம்ஸ்கிருதபாஷையில் இயற்றிருக்கிறார். ஸம்ஸ்கிருதபாஷையில் பழக்கமில்லாதவர்கள் ஸ்ரீ ராம சரித்தத்தை படிக்க முடியாதவர்களாய் இருக்கிறார்கள். ஸகல ஜனங்களும் ஸ்ரீராமனுடைய சரித்தத்தை படித்து ஸத்கதியடைய வேண்டுமென்னும் ஆசையினால் தங்கள் தகப்பனார் ஸ்ரீமான் சி. ஆர். ஸ்ரீனிவாஸய்யங்கார் ஸ்ரீ வால்மீகியின் கிரந்தத்தை அநேக வ்யாக்யானங்களைத்தழுவி தமிழில் மொழிபெயர்த்து விரிவான அநேக குறிப்புகளுடன் அச்சிட்டு உதவினார். அந்தப் புஸ்தகங்கள் இப்போது கிடைப்பதில்லை. அதை மறுபடியும் அச்சிட்டு ஜனங்களுக்கு உதவ தாங்கள் முன்வந்திருப்பதைப் பார்த்து சந்தோஷிக்கிறோம். அதிலும் ஸ்ரீ ராமாயணத்தில் விசேஷமகிமையுடன் கூடியதான ஸுந்தரகாண்டத்தைத் தாங்கள் முதலில் அச்சுப்போட முன்வந்திருப்பது மிகவும் போற்றத் தகுந்ததே. ஸ்ரீ சந்திரமௌளீசுவரர் கிருபையால் தாங்கள் இம்மாதிரி ஸத்காரியங்கள் செய்துகொண்டு சகல சிரேயஸ்ஸுகளையும் அடையவேணும் என்று ஆசீர்வதிக்கிறோம்.

(முகாம்) சாத்தனூர்.
நந்தன ௵ ஆனி ௴ 31௳

நாராயணஸ்மரணை.

# ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம்

தமிழ் வசனம்

BY

கீர்த்தனாசார்ய ஸி. ஆர். ஸ்ரீநிவாஸய்யங்கார், B.A.

( மூன்றாம் பதிப்பு )

---

ஏற்கனவே ஸுந்தர காண்டம் அச்சிடப்பட்டிருக்கிறது. தினசரி பாராயண க்ரமத்துடன் பட்டாபிஷேக ஸர்கமும் அடங்கியது. அந்த காபிகள் இப்பொழுது கிடைக்கும்.

குறைக்கப்பட்ட விலை ரூ. 4/-
(தபால் செலவு தனி)

---

ஏழு காண்டங்களையும் மறு பதிப்பு மாதாந்திர ஸஞ்சிகைகளாய் ஒரு வருஷ காலத்தில் வெளியிட உத்தேசித்துள்ளோம். மாத ஸஞ்சிகை (டெமி ஆக்டேவோ) சுமார் 200 பக்கங்கள் கொண்டது. விலை ரூ. 2-8-0 (தபால்செலவு உள்பட). வாங்க விருப்பமுள்ளவர்கள் அடியிற்கண்ட விலாசத்திற்கு எழுதி தங்கள் பெயர்களைப் பதிவு செய்துகொள்ளவும்.

ஆர். நாராயண அய்யர்,
c/o "ஹிண்டு" ஆபீஸ், மவுண்ட் ரோட்,
மதராஸ்—2.

23—10—1954.

# ஸுந்தர காண்டம்.

## விஷய அட்டவணை.

பக்கம்.

# ராமாயண பாராயண ச்லோகங்கள்



1. சுக்லாம்பரதரம் விஷ்ணும் சசிவர்ணம் சதுர்புஜம் I
ப்ரஸன்னவதனம் த்யாயேத் ஸர்வவிக்னோபசாந்தயே II

2. யஸ்ய த்விரதவக்த்ராத்யா: பாரிஷத்யா: பர: சதம் I
விக்னம் நிக்னந்தி ஸததம் விஷ்வக்ஸேனம் தமாச்ரயே II

3. கூஜந்தம் ராமராமேதி மதுரம் மதுராக்ஷரம் I
ஆருஹ்ய கவிதாசாகாம் வந்தே வால்மீகிகோகிலம் II

4. வால்மீகேர் முனிஸிம்ஹஸ்ய கவிதாவனசாரிண: I
ச்ருண்வன் ராமகதாநாதம் கோ நயாதி பராம் கதிம் II

5. ய: பிபன் ஸததம் ராமசரிதாம்ருத ஸாகரம்
அத்ருப்தஸ்தம் முனிம் வந்தே ப்ராசேதஸ மகல்மஷம்

6. கோஷ்பதீகிருதவாராசிம் மசகீகிருதராக்ஷஸம் I
ராமாயணமஹாமாலாரத்னம் வந்தே னிலாத்மஜம் II

7. அஞ்ஜனாநந்தனம் வீரம் ஜானகீசோகநாசனம் I
கபீசமக்ஷஹந்தாரம் வந்தே லங்காபயங்கரம் II

8. ஆடீஷீகிருதமார்த்தாண்டம் கோஷ்பதீகிருதஸாகரம்
த்ருணீகிருததசக்ரீவம் ஆஞ்ஜனேயம் நமாம்யஹம் II

9. உல்லங்க்ய ஸிந்தோ: ஸலிலம் ஸலீலம்
ய: சோகவஹ்னிம் ஜனகாத்மஜாயா: I
ஆதாய தேனைவ ததாஹ லங்காம்
நமாமி தம் ப்ராஞ்ஜலிராஞ்ஜனேயம் II

10. மனோஜவம் மாருததுல்யவேகம்
ஜிதேந்த்ரியம் புத்திமதாம் வரிஷ்டம் I
வாதாத்மஜம் வானரயூதமுக்யம்
ஸ்ரீராமதூதம் சிரஸா நமாமி II

11. ஆஞ்ஜனேய மதிபாடலானனம்
காஞ்சநாத்ரி கமனீய விக்ரஹம் ।
பாரிஜாத தரு மூலவாஸினம்
பாவயாமி பவமான நந்தனம் ॥

12. யத்ர யத்ர ரகுநாத கீர்த்தனம்
தத்ர தத்ர க்ருதமஸ்தகாஞ்ஜலிம் ।
பாஷ்பவாரி பரிபூர்ணலோசனம்
மாருதிம் நமத ராக்ஷஸாந்தகம் ॥

13. புத்திர் பலம் யசோ தைர்யம் நிர்பயத்வ மரோகதா ।
அஜாட்யம் வாக்படுத்வஞ்ச ஹனூமத்ஸ்மரணாத் பவேத் ॥

14. வைதேஹீஸஹிதம் ஸுரத்ருமதலே ஹைமே மஹாமண்டபே
மத்யேபுஷ்பகமாஸனே மணிமயே வீராஸனே ஸுஸ்திதம் ।
அக்ரே வாசயதி ப்ரபஞ்ஜனஸுதே தத்வம் முனிப்ய: பரம்
வ்யாக்யாந்தம் பரதாதிபி: பரிவ்ருதம் ராமம் பஜே ச்யாமளம் ॥

15. நமோஸ்து ராமாய ஸலக்ஷ்மணாய
தேவ்யை ச தஸ்யை ஜனகாத்மஜாயை ।
நமோஸ்து ருத்ரேந்த்ர யமானிலேப்யோ
நமோஸ்து சந்த்ரார்க்க மருத்கணேப்ய: ॥

16. சரிதம் ரகுநாதஸ்ய சதகோடி ப்ரவிஸ்தரம் ।
ஏகைக மக்ஷரம் ப்ரோக்தம் மஹாபாதக நாசனம் ॥

17. தர்மாத்மா ஸத்யஸந்த: ச ராமோ தாசரதிர் யதி ।
பௌருஷே சாப்ரதித்வந்த்வ: சரைனம் ஜஹி ராவணிம் ॥

18. ராமாய ராமபத்ராய ராமசந்த்ராய வேதஸே ।
ரகுநாதாய நாதாய ஸீதாயா: பதயே நம: ॥

19. தருபகத ஸமாஸ ஸந்தியோகம்
ஸமமதுரோபனதார்த்த வாக்யபத்தம் ।
ரகுவரசரிதம் முனிப்ரணீதம்
தசசிரஸ: ச வதம் நிசாமயத்வம் ॥

20. வால்மீகி கிர்ஸம்பூதா ராமஸாகரகாமினீ ॥
புனாது புவனம் புண்யா ராமாயணமஹா நதீ ।

31. ச்லோகஸாரஸமாகீர்ணம் ஸர்க்ககல்லோல ஸங்குலம் I
காண்டக்ராஹம் மஹாமீனம் வந்தே ராமாயணார்ணவம் II

32. வேதவேத்யே பரே பும்ஸி ஜாதே தசரதாத்மஜே I
வேத: ப்ராசேதஸாதாஸீத் ஸாக்ஷாத் ராமாயணாத்மனா II

33. ச்ருண்வன் ராமாயணம் பக்த்யா ய: பாதம் பதமேவ வா I
ஸ யாதி ப்ரஹ்மண: ஸ்தானம் ப்ரஹ்மணா பூஜ்யதே ஸதா II

பிறகு ராமாயண புஸ்தகத்தைப் பூஜித்துப் படிக்கவேண்டியது. முடிவில் அடியிற்கண்ட ச்லோகங்களைச் சொல்லிப் பூஜைசெய்ய வேண்டியது.

1. ஏவமேதத் புராவிருத்த மாக்யானம் பத்ரமஸ்து வ: I
ப்ரவ்யாஹரத விஸ்ரப்தம் பலம் விஷ்ணோ: ப்ரவர்த்ததாம் II

2. ஸ்வஸ்தி ப்ரஜாப்ய: பரிபாலயந்தாம்
ந்யாய்யேன மார்க்கேண மஹீம் மஹீசா: I
கோப்ராஹ்மணேப்ய: சுபமஸ்து நித்யம்
லோகா: ஸமஸ்தா: ஸுகினோ பவந்து II

3. காலே வர்ஷது பர்ஜன்ய:
பிருதிவீ சஸ்ய சாலினீ I
தேசோயம் க்ஷோபாஹிதோ
ப்ராஹ்மணா: ஸந்து நிர்பயா: II

4. லாபஸ்தேஷாம் ஜயஸ்தேஷாம் குதஸ்தேஷாம் பராபவ:
யேஷா மிந்தீவரச்யாமோ ஹிருதயே ஸுப்ரதிஷ்டித: II

5. மங்களம் கோஸலேந்த்ராய மஹனீய குணாத்மனே I
சக்ரவர்த்தி தனூஜாய ஸார்வபௌமாய மங்களம் II

6. வேதவேதாந்தவேத்யாய மேகச்யாமளமூர்த்தயே I
பும்ஸாம் மோஹனரூபாய புண்யச்லோகாய மங்களம் II

7. விச்வாமித்ராந்தரங்காய மிதிலாநகரீபதே: I
பாக்யானாம் பரிபாகாய பவ்யரூபாய மங்களம் II

8. ராஜாதிராஜவேஷாய ராஜத்கோதண்டபாஹவே I
ராஜீவசாருநேத்ராய ராமபத்ராய மங்களம் II

9. காஞ்சனாத்ரிநிபாங்காய வாஞ்சிதார்த்தப்ரதாயினே I
அஞ்ஜனாபாக்யரூபாய ஆஞ்ஜனேயாய மங்களம் II

ஸ்ரீ ராமசந்த்ர பரப்ரஹ்மணே நம:

# ஸுந்தர காண்டம்.

## ஸர்க்கம் 1.

### முகவுரை.

பகவான் யாவற்றைக்காட்டிலும் மேலானவரென்றதற்கு அடையாளமான எண்ணிறந்த கல்யாண குணங்கள் அவரிடத்தில் விளங்குகின்றனவென்று கிஷ்கிந்தாகாண்டத்தில் சொல்லப்பட்டது. அவர் எல்லாவற்றையும் நாசஞ்செய்யும் சக்தியுடையவரென்று இந்தக் காண்டத்தில் உபதேசிக்கப்படுகிறது. 15-வது ஸர்க்கத்தில் "ராமனை விரோதித்துக்கொண்டவனை, ராமனால் கொல்லத் தகுந்தவனை, ப்ரஹ்மா ருத்ரன் இந்த்ரன் முதலியவர்களும் காப்பாற்ற முடியா" தென்றதால் இது நன்றாக விளங்குகிறது.

கிஷ்கிந்தாகாண்டத்தில் மித்ரர்களை எப்படியாவது ரக்ஷிக்கவேண்டுமென்ற தர்மமும், இந்தக் காண்டத்தில் தூதனும் பதிவ்ரதையும் நடந்துகொள்ளவேண்டிய தர்மமும் சொல்லப்படுகின்றன.

அல்லது, முன் காண்டத்தில் ஸகல லோகங்களையும் ரக்ஷிக்க அவதரித்த மஹாவிஷ்ணுவுக்கு ஆசார்ய ரூபமாக லக்ஷ்மியிடத்தில் புருஷகாரம் (மத்யஸ்தம்) கிடைத்ததென்பதையும், இந்தக் காண்டத்தில் ஆசார்யன் செய்யவேண்டிய கார்யத்தையும் வால்மீகி தெரிவிக்கிறார். அதில் முதலாவது ஸர்க்கத்தில், உபதேசம்பெறத்தகுந்த சிஷ்யனைக் குரு தேடிப்போவது சொல்லப்படுகிறது (கோவிந்தராஜீயம்.)

முன் காண்டத்தில் ஆஞ்ஜநேயர் மனஸால் லங்கைக்குச் சென்றாரென்று சொல்லப்பட்டது. இந்தக் காண்டத்தில் தேஹத்தாலும் அங்கே சென்றது வர்ணிக்கப் படுகிறது (தீர்த்தீயம்.)

கிஷ்கிந்தா காண்டத்துடன் 11000 ச்லோகங்கள் முடிந்தன. ஸுந்தரகாண்டம் முதல் ஸர்க்கம் முதல் ச்லோகத்தில் 'ததோ ராவண' என்ற பதங்களில் நான்காவது அக்ஷரமாகிய 'வ' வென்பது காயத்ரியின் பன்னிரண்டாவது அக்ஷரம்.

ராவண நீதாயா: (ராவணனால் கொண்டு போகப்பட்ட) என்ற விசேஷணத்தால் ஸீதையின் ஸாத்விகஸ்வரூபம் அக்னிகுடத்திலும் ராஜஸஸ்வரூபம் பகவானுடைய வலது புஜத்திலும் என்றும் பிரியாமலிருந்தனவென்றும், தாமஸ ரூபத்தையே ராவணன் எடுத்துப் போனனென்றும் உட்கருத்து குறிப்பிடப்படுகிறது.

ராமாயணத்தின் மற்ற காண்டங்களுக்கு அந்தந்தப் பெயர்களிட்டதற்குக் காரணங்களுண்டு. பாலகாண்டம் ராமனுடைய பால்ய விருத்தாந்தங்களையும், அயோத்யாகாண்டம் பன்னிரண்டாவது வயது முதல் இருபத்தைந்தாவது வயதுவரையில் அயோத்யையில் நடந்த விருத்தாந்தங்களையும், ஆரண்யகாண்டம் தண்டகாரண்யத்தில் நடந்த வரலாற்றையும், கிஷ்கிந்தாகாண்டம் கிஷ்கிந்தையில் நடந்த விசேஷங்களையும், யுத்தகாண்டத்தில் ராமலக்ஷ்மணர்கள் வானரஸைன்யங்களுக்கும் ராவணாதி ராக்ஷஸர்களுக்கும் நடந்த யுத்தவிஷயங்களையும், உத்தரகாண்டத்தில் ராமன் அயோத்யைக்கு வந்த பிறகு நடந்த கார்யங்களையும் வர்ணிப்பதால் அந்தந்தப் பெயர்கள் கிடைத்தன. ஆனால் இந்த காண்டத்திற்கு ஸுந்தரமென்ற பெயர் வாய்ந்ததேன்? ஸுந்தரமென்றால் அழகுபொருந்தினதென்று பொருள். ஆனால் மற்றக் காண்டங்களின் அமைப்பு அழகு வாய்ந்ததல்லவென்று எண்ணக் கூடுமா? ஆகையால் வேறு காரணம் வால்மீகியின் மனதிலிருக்கவேண்டும். ஆஞ்ஜநேயர் ஸமுத்ரத்தைத் தாண்டினது, லங்காநகரம், சந்த்ரோதயம், அசோகவனம், மதுவனம், முதலியவைகளின் வர்ணனை ஒப்பற்றவையென்று எல்லோராலும் ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறது. ஆனால் இந்தக் காரணமே போதுமா? ராமாயணத்தின் தத்வார்த்தத்தைக் கவனித்தவர்களுக்கு, ஞானபூமியான அயோத்யையிலிருந்து ஜீவன், இந்த்ரியங்கள் அந்தக்கரணம் முக்குணங்களென்றவைகளால் ஆக்ரமிக்கப்பட்டு ஸம்ஸாரத்தசையில் கட்டுண்டு கிடக்கையில், பரம காருணிகரான பகவான் அதைத் தேடிச் சென்று, மறுபடியும் தன்னடிச் சோதிக்குச் சேர்த்துக்கொள்ள விரும்பிப் பரம குருவை அனுப்புகிறார். அந்தக் குருவினுடைய தர்சனம் சிஷ்யனான ஜீவனுக்குக்

கிடைத்ததும், பகவானுடைய கல்யாணகுணங்களை அவர் ஜீவனுக்கு உபதேசித்ததும், அவர் தன்னைக் காப்பாற்றுவாரென்று ஜீவன் தைர்யமடைந்ததும், தன் நிலைமையையும் துக்கத்தையும் ஜீவன் ஆசார்யன் மூலமாக பகவானுடைய ஸந்நிதியில் தெரிவித்துக்கொண்டதும், ஆசார்யன் ஜீவனுடைய நிலைமையைப் பகவானிடத்தில் விண்ணப்பஞ்செய்து கொண்டதும் இந்தக் காண்டத்தில் சொல்லப்படுகின்றன. ஆகையால் அக்ஞானம் நீங்கி ஞானோதயமாகி மோக்ஷ ஸாம்ராஜ்யத்தை அடைவதற்கு இந்தக் காண்டத்தில் விதை விதைக்கப்பட்டது. ஆகையால் இது ஸுந்த்ரகாண்டமெனத் தகும்

“ராமாயணமென்ற மாலையில் நடுநாயகமான ரத்னம்போல் ஆஞ்ஜநேயர் விளங்குகிறாரென்”றபடி இந்தக் காண்டத்தில் ஆரம்பம் முதல் முடிவு வரையில் ஆஞ்ஜநேயரே கதாநாயகன். அவருடைய பலம் பராக்ரமம் புத்தி மஹிமை முதலியவைகளை வர்ணிக்கப்படுகின்றன. ஸர்வசக்தனான பகவானும் அவருடைய உதவியைத் தேடினாரென்றும் பராசக்திரூபமான ஸீதாப்பிராட்டிக்கே அவர் ப்ராணதானஞ்செய்தாரென்றும் சொல்லியிருப்பதாலும் ‘நீ செய்த உபகாரத்திற்கு நான் பதில் செய்யச் சக்தியற்றவ’னென்று பெருமாளும் பிராட்டியும் தெரிவிப்பதாலும், ஆஞ்ஜநேயருடைய மஹிமை மனோவாக்கிற்கெட்டாதது. அந்த மஹானுடைய சரித்ரத்தைச் சொல்லும் இந்தக் காண்டமே ஸுந்தரமானது.

ராமாயண பீடிகையில் இந்தக் காண்டத்தின் மஹிமையையும் மந்த்ரசக்தியையும் விஸ்தாரமாய்ச் சொல்லியிருப்பதைப் பார்க்கவும்.



## ஆஞ்ஜநேயர் ஸமுத்ரத்தைத் தாண்டி லங்கைக்குப் போனது.

இப்படி ஜாம்பவானால் தூண்டப்பட்ட ஆஞ்ஜநேயர், சாரணர்கள் ஸஞ்சரிக்கும் ஆகாசமார்க்கத்தில், ராவணனால் அபஹரித்துக் கொண்டு போகப்பட்ட ஸீதை இருக்குமிடத்தைத் தேடிக் கண்டு பிடிக்க விரும்பினார். அப்படித் தேடும் விஷயத்தில் நேரும் இடையூறுகளை நீக்க அவருக்குள்ள ஸாமர்த்யம் எவருக்கும் கிடையாது, (சிஷ்யனிருக்குமிடத்தைத் தேடிப் போகும் பரமகுருவின் ஸ்வரூபம் உபதேசிக்கப்படுகிறது. சிஷ்யன் தாபத்ரயத்தால் நொந்து, தன்னைத் தேடி வரும்வரையில் பொறுத்திருப்பவர் குரு. சிஷ்யனுடைய துக்கத்தையும் கஷ்டத்தையும் அவனைக் காட்டிலும் நன்குணர்ந்து மனமுருகித் தாங்காமல் அவனை வழியில் தேடிப்போய் ரக்ஷிக்கிறவர் பரகுரு. 'கு' என்ற அக்ஷரம் அஜ்ஞானமான இருட்டையும், 'ரு' என்ற அக்ஷரம் அவ்விருட்டைப் போக்கும் சக்தியையும் குறிக்கின்றது. அஜ்ஞானமென்ற இருட்டைப் போக்குவதால் குருவென்ற பெயர் கிடைத்தது, என்ற வாக்யப்படி அஜ்ஞானத்தைப் போக்கும் ஸ்வபாவத்தையுடைய குரு, புராதன தர்மங்களை லோகத்தார் அனுஷ்டிக்கும்படி செய்யும் பூர்வாசார்யர்கள் அனுஷ்டித்துவந்த மார்க்கத்தை அவலம்பித்தவராய், ஞானத்திற்கு விரோதமான பத்தியைக் கொடுக்கும் அவிவேகத்தால் வசப்படுத்தப் பட்டு அநாதியாய்ப் பகவானுக்குப் பாதந்த்ரனான ஜீவனிருக்கும் ஸம்ஸாரமண்டலத்தைத் தேடிச் சென்றார். ஸீதையென்ற சப்தத்தால் ஸ்த்ரீபுருஷஸம்பந்தமுமில்லாமல் உண்டானவென்றும், ஸ்த்ரீலிங்கத்தால் பாதந்த்ரமான ஸ்வபாவத்தை உடையவென்றும் தெரிகின்றது. பகவானைத் தவிர மற்றவர்கள் ஸ்த்ரீயைப்போலவென்பது. "ஸாத்விகமான ஸம்பாஷணம், ஸாத்விக ஸ்வபாவமுள்ளவர்களிடத்தில் ப்ரேமை, ஸர்வ ப்ராணிகளிடத்திலும் த்வேஷமில்லாமை, பகவானுடைய கடாக்ஷமென்ற இவ்வாறு குணங்களும் ஆசார்யனை அடைவதற்கு ஹேதுக்களென்றபடி, அவ்வுபாயங்களால் ஜீவனிருக்குமிடத்தைக் கண்டுபிடிக்க, அல்லது இந்த ஜீவனுக்குப் பகவானை அடைவதில் ஏற்படும் முயற்சியை அறிய விரும்பினார்" என்று அர்த்தமாகும்).

பிறரால் செய்ய முடியாத அபூர்வமான கார்யத்தைச் செய்ய நிச்சயங்கொண்டு, ஹநுமான் உயர்த்த தலையையும் கழுத்தையுமுடையவராய்ப், பசுக்கூட்டங்களுக்குத் தலைவனான காளையைப்போல் விளங்கினார். வைடூர்ய வர்ணமுடையதால் சுத்த ஜலத்தைப்போல் ப்ரகாசிக்கும் இளம்புல் நிறைந்த மஹேந்த்ரபர்வதத்தின் புறங்களில் ஸுகமாய் உலாவினார். சிறந்த புத்தியுடைய அந்த வானரச்ரேஷ்டன் பக்ஷிகளைப் பயமுறச் செய்து, விருக்ஷங்களை மார்பால் முறித்துக் கொண்டு, அநேக மிருகங்களை அடித்துத் தள்ளிப், பூர்ண பலத்தையுடைய ஸிம்ஹம்போல் ப்ரகாசித்தார். கறுப்பு சிவப்பு வெளுப்பு முதலிய நாநா வர்ணங்களையுடைய அநேக தாதுக்களால் அலங்கரிக்கப்பட்டு இஷ்டமான ரூபத்தை எடுக்கக்கூடிய யக்ஷகின்னரர்கள் அழகான கந்தர்வ பன்னக கணங்கள் அலங்கரித்துக்கொண்டு இஷ்டப்படி ஸஞ்சரிக்கப்பெற்றதாக், கணக்கில்லாத மதயானைகள் நிறைந்த அந்த பர்வதத்தில் ஆஞ்ஜநேயர் விஸ்தாரமான மடுவில் விளையாடும் கஜத்தைப்போல் காணப்பட்டார்.

பின்பு தனக்கு ஆசார்யரான ஸூர்யபகவானுக்கும், தான் கற்ற ஐந்த்ரவ்யாகரணத்தைச் செய்த மஹேந்த்ரனுக்கும், தன் பிதாவான வாயுபகவானுக்கும், தனக்கு அபூர்வமான வரங்களை அளித்த ப்ரஹ்ம தேவருக்கும், தேவயோனியில் பிறந்த பூதகணங்களுக்கும் கைகூப்பி வந்தனஞ்செய்து புறப்பட நிச்சயித்தார். கிழக்குமுகமாய் நின்று, தன் தகப்பனான வாயுபகவானைக்கைகூப்பி நமஸ்கரித்து, மிகுந்த ஸாமர்த்யமுள்ள மாருதி, தெற்கே திரும்பித் தன் ரூபத்தை வளரச் செய்தார். வானரச்ரேஷ்டர்கள் ஆச்சர்யத்துடன் பார்த்துக்கொண்டிருக்க, ஸமுத்ரத்தைத் தாண்ட நிச்சயித்து, ராமனுக்கு க்ஷேமம் விருத்தியாவதற்காகப், பர்வகாலங்களில் ஸமுத்ரம் பொங்குவது போல் வளர்ந்தார். அளவற்ற சரீரத்தை உடையவராய்க், கடலைக் கடக்க விரும்பிக், கைகளாலும் கால்களாலும் அந்த மலையை அழுத்தினார். அப்பொழுது அந்த மலை ஒரு முஹூர்த்தகாலம் வரையில் கிடுகிடென்று நடுங்கிற்று. அதிலுள்ள மரங்களிலிருந்த புஷ்பங்கள் பூமியில் சொரிந்தன. அந்தப் புஷ்பவர்ஷத்தால் அம்மலை மறைந்து மணம் வீசிப் புஷ்பமலைபோல் காணப்பட்டது. உத்தமமான வீர்யத்தையுடைய ஆஞ்ஜநேயரால் அழுத்தப்பட்ட அந்த மஹேந்த்ர பர்வதம், மதயானை மதஜலத்தைப் பெருக்குவதுபோல் நீர் தாரைகளைப் பெருக்கிற்று. மஹா பலவானான மாருதியால் பீடிக்கப்

பட்டுத், தங்கம் வெள்ளி மை முதலிய நிறங்களையுடைய ரேகைகளை வெளிப்படுத்திற்று. நடுவில் கொழுந்துவிட்டெரியும் அக்னியி லிருந்து புகை வரிசையாகக் கிளம்புவதுபோல், அம்மலையிலிருந்து மனச்சிலையென்னும் கற்களுடன் கூடின பாறைகள் தெறித்து விழுந்தன. இப்படி அழுத்தப்பட்ட அந்த மலையால் நசுங்கி, அதின் குஹைகளிலுள்ள ஜந்துக்கள் நான்கு புறங்களிலிருந்தும் விகாரமாகக் கத்தின. அந்த ஒசை பூமியிலும் திக்குகளிலும் தோப்பு களிலும் பரவிநிறைந்தது. அங்குள்ள கொடிய ஸர்ப்பங்கள் விஷ்ணு பாதம்போன்ற ரேகைகளால் அலங்கரிக்கப்பட்ட பெரிய படங்களை யெடுத்துக் கோபாவேசத்துடன் க்ரூரமான விஷங்களைக் கக்கிக் கொண்டு பாறைகளைக் கடிக்க, அவை விஷத் தீயால் ஜ்வலித்து ஆயிரம் துண்டுகளாகப் பிளந்தன. அந்த மலையிலுள்ள விஷத்தைப் போக்கும் ஒஷதிகள் அந்த ஸர்ப்பங்களின் விஷத்தைப் போக்க முடியவில்லை. இந்த மலையைப் பூதங்கள் பிளக்கின்றன வென்றெண்ணி, அங்கே வஸித்த தபஸ்விகள் அங்கிருந்து போனார்கள். அங்குள்ள வித்யா தார்கள் பானபூமியில் மதுவால் நிறைந்த தங்கப்பாத்ரங்களையும் விலை யுயர்ந்த தங்கமயமான போஜன பாத்ரங்களையும் லேஹ்யம் பக்ஷ்யம் பலவித மாம்ஸங்கள், எருமைத்தோலால் செய்யப்பட்ட கேடயங்கள், தங்கப்பிடி போட்ட கத்திகள் முதலியவைகளையும் விட்டு, வெண்தாமரை யைப் போன்ற கண்கள் மதுபானத்தால் செந்தாமரையைப்போல் சிவ ந்து, சிவந்த மலர்கள் சிறந்த சந்தனங்களால் அலங்கரிக்கப்பட்டு மயங்கி, ஸ்த்ரீகளுடன் ஆகாசத்தில் கிளம்பிப் போனார்கள். ஹாரங்கள் சிவப்புத் தோள்வளை கைவளைகளால் அலங்கரிக்கப்பட்ட ஸ்த்ரீகள் தங்கள் நாயகர்களுடனும், வித்யாதர ச்ரேஷ்டர்கள் அணிமாதி அஷ்டமஹாஸித்திகளைக் காட்டிக்கொண்டும், ஆகாசத்திலிருந்து ஆச்சர்யத்துடன் கூட்டங் கூட்டமாக அந்த மலையைப் பார்த்துக் கொண்டிருந்தார்கள். அப்பொழுது களங்கமற்ற ஆகாசத்தில் நிற்கும் மஹர்ஷிகளும் சாரணர்களும் ஸித்தர்களும் "வாயுபுத்ரனை ஆஞ்ஜநேயர் மலையைப்போன்ற தேஹத்துடன் ஒருவராலும் தாண்டமுடியாத இந்த ஸமுத்ரத்தைத் தாண்டி அக்கரைக்குப் போய், ராமனையும் வானரர்களையும் உத்தேசித்துப், பிறரால் ஸாத்யமில்லாத கார்யத்தைச் செய்ய விரும்புகிற" ரென்று சொல்லக்கேட்டு, வித்யாதார்கள் மஹேந்த்ர பர்வதத்தில் ஒப்பில்லாத வீர்யத்துடன் நிற்கும் மாருதியைப் பார்த்தார்கள்.

அவர் மயிர்களைச் சிலிர்த்தார்; பெரிய மலையைப்போல் அசைந்தார்; நீருண்ட மேகத்தைப்போல் கர்ஜித்தார். அடிமுதல் நுனிவரையில் நீண்டு உருண்டு மயிர்களடர்ந்த வாலைக் கருடன் மஹாநாகத்தைப் பற்றிச் சுழற்றுவதுபோல் சுழற்றி உதறினார். ஆகாசத்தில் செல்வதற்கு வேண்டிய வேகத்தை வளர்க்கும் ஆஞ்ஜநேயருடைய வால், ஸமுத்திரத்திலிருந்து கருடனால் கொத்திக் கொண்டுபோகப் படும் பெரிய ஸர்ப்பத்தைப்போல் காணப்பட்டது.

அளவற்ற காந்தியையும் வீர்யத்தையுமுடைய வாயுபுத்ரர், கோட்டை வாசல் தாப்பாளைப் போன்ற புஜங்களைப் பூமியில் பலமாக ஊன்றி, இடுப்பைச் சுருக்கிக், கால்களைமடக்கிப், புஜங்களையும் கழுத்தையும் வளைத்துத், தேஜஸையும் ஸத்வத்தையும் வீர்யத்தையும் விருத்தி செய்தார். வெகு தூரம்வரையில் தான் போகும் வழியை நிமிர்ந்து உற்றுப் பார்த்து ஆகாசத்தை நோக்கி, ப்ராணவாயுக்களை ஹ்ருதயத்தில் நிறுத்தினார். கால்களை உறுதியாக ஊன்றிக், காதுகளை மடக்கிக்கொண்டு அந்த மஹாபலசாலியான வானரச்ரேஷ்டன் ஆகாசத்தில் தாவும் ஸமயத்தில் வானரவீரர்களைப் பார்த்து,

"வாயுவேகமுள்ள ராமபாணம் தடையில்லாமல் எப்படிப் போகுமோ அப்படி ராவணனால் ஆளப்பட்ட லங்கைக்குப் போவேன். அங்கே ஜானகியைக் காணாவிட்டால் அந்த வேகத்துடன் தேவலோகத்திற்குப் போவேன். அங்கேயும் அவளைக் காணாவிட்டால் கொஞ்சங்கூட ச்ரமமில்லாமல் ராக்ஷஸ ராஜனான ராவணனைப் பிடித்துக் கட்டி இங்கே கொண்டுவருவேன். உத்தேசித்த கார்யத்தை எப்படியாவது முடித்துக்கொண்டு ஸீதையுடன் திரும்பி வருவேன். அல்லது ராவணனுடைய லங்கையையும் வேருடன் பெயர்த்து இங்கே கொண்டு வருவே"னென்று அவர்களுக்குத் தைர்யஞ்சொல்லிக் கவலையில்லாமல் அதிவேகமாக ஆகாசத்தில் கிளம்பித், தன்னைப் பக்ஷிராஜனான கருடனுக்கு ஸமமாக எண்ணினார். அப்பொழுது அந்த வேகத்தால் மலையிலுள்ள மரங்கள் யாவும் இலைகளுடன் நான்கு புறங்களிலிருந்தும் மேலே கிளம்பின. மதங்கொண்ட நாரைகளுடன் மலர்ந்த புஷ்பங்களால் விளங்கும் அந்த மரங்களைத் தன் துடையின் வேகத்தால் இழுத்துக்கொண்டு ஆகாசத்தில் போனார். நெடுந்தூரம் ப்ரயாணம் போகும் ஒருவனை அவனுடைய ப்ரியமான பந்துக்கள் கொஞ்சதூரம் வரையில் வழிவிடுவது போல், அந்த மரங்கள் கொஞ்சதூரம் அவரைத் தொடர்ந்தன. ஸேனைகள் அரசனைத் தொடர்வதுபோல் அவருடைய

வேகத்தால் முறிக்கப்பட்ட ஆச்சா முதலிய மரங்கள் அவரைப் பின் தொடர்ந்தன. மஹா பர்வதம் போன்ற மாருதி புஷ்பங்களால் விளங்கும் அந்த மரங்களால் சூழப்பட்டு ஆச்சர்யமாகக் காணப் பட்டார். மஹேந்த்ரனைக் கண்டு பயந்து, மலைகள் கடலில் விழுந்து ஒளிந்ததுபோல், வைரமுள்ள மரங்கள் கடலில் விழுந்து முழுகின. மஹாமேகம்போன்ற ஆஞ்ஜநேயர் பல வர்ணங்களுள்ள புஷ்பங் களாலும் குருத்துகளாலும் மொட்டுகளாலும் சூழப்பட்டு, மின்மினுப் பூச்சிகள் மொய்த்த பெரிய மலையைப் போல் தோன்றினர். அவ ருடைய வேகத்தாலுண்டான சக்தி அடங்கி, அந்த மரங்கள் புஷ்பங் களை உதிர்த்துக் கொண்டு ஸமுத்திரத்தில் விழுவதைப் பார்க்கும் பொழுது, ப்ரயாணியை வழியனுப்பி விட்டுக், கண்ணீர் சொரிந்து கொண்டு திரும்பும் மித்ரர்களைப் போல் காணப்பட்டன. அவருடைய வேகத்தால் அந்த லேசான புஷ்பங்கள் நானு வர்ணங்களுடன் ஸமுத் ரத்தில் தூற்றப்பட்டு, நக்ஷத்ரங்களால் நிறைந்த ஆகாசத்தைப் போல் அந்தக் கடலை விளங்கச்செய்தன. நானுவர்ணங்களுள்ள அந்தப் புஷ்பங்களால் சூழப்பட்ட வாயுபுத்ரன், மின்னற் கொடிகளுடன் ஆகாசத்தில் கிளம்பும் மேகத்தைப் போல் ப்ரகாசித்தார். அவர் போகும் வேகத்தால்-நாற்புறங்களிலும் இறைக்கப்பட்ட புஷ்பங்களால் நிறைந்த ஸமுத்ரம் அழகான நக்ஷத்ரக் கூட்டங்கள் உதித்த ஆகாச வீதிபோல் காணப்பட்டது.

இரு கைகளையும் நீட்டிக்கொண்டு அவர் வாயுமார்க்கத்தில் போகும்பொழுது, மலைச் சிகரத்திலிருந்து கிளம்பும் ஐந்துதலை நாகங் களைப் போல் தோன்றினர். தாண்டும் வேகத்தால் வரவரக் குறை யும் கடலைக் குடித்து, ஆகாசத்தை விழுங்கப் பார்ப்பவர்போல் காண ப்பட்டார். ஆகாசமார்க்கத்தில் போகும்போது அந்த வானரச்ரே ஷ்டனுடைய மஞ்சள்வர்ணமுள்ள வட்டமான இரண்டு கண்களும் மின்னலைப் போலும் மலைச்சிகரங்களில் கொழுந்துவிட்டெரியும் நெரு ப்பு ஜ்வாலைகளைப் போலும் ஒரே காலத்தில் சந்த்ரஸூர்யர்கள் உதித் தது போலும் ப்ரகாசித்தன. அவருடைய சிவந்த முகம் சிவந்த மூக்கின் காந்தியால், ஸந்த்யாகாலத்துச் சிவப்பால் பரவப்பட்ட ஸூர்ய மண்டலத்தைப் போல் விளங்கிற்று.

உயர்ந்து வளர்ந்தவால், அவர் ஆகாசத்தில் போகும்பொழுது மேலே இந்த்ரத்வஜம் தூக்கிக் காட்டப்பட்டதுபோல் தோன்றிற்று. வெளுத்த பல்லுகளையுடைய மாருதி, சக்ரம்போல் தன்னைச் சுற்றி

வளைந்த வாலால், மண்டலஞ்சூழ்ந்தஸூர்யனைப்போல் ப்ரகாசித்தார். வாலின் அடிப் பாகம் சிவந்து, பிளந்த மலையில் சிவந்த தாதுக்கள் விளங்குவதுபோல் தோன்றிற்று. அந்த வானர ச்ரேஷ்டன் ஸமுத்ரத்தைத் தாண்டும் பொழுது விலாச் சந்துக்களிலிருந்து கிளம்பும் காற்று, மஹா மேகம் போல் கர்ஜித்தது. ஆகாசத்தில் வடக்கிலிருந்து தெற்கு முகமாக வாலுடன் கூடின உல்காவென்ற எரிகொள்ளி வேகமாக விழுவதுபோல் ஆஞ்ஜநேயர் அப்பொழுது காணப்பட்டார். நீண்ட தேஹத்தையுடைய அஞ்சனுபுத்ரன் வடக்கிலிருந்து தெற்கே போகும் ஸூர்யனைப் போலவும், இறுக்கிக் கட்டப்பட்ட கச்சுப்பட்டையால் நீண்ட மதயானையைப் போலவும் தோன்றினர். கப்பலில் அடிப்பாகம் ஜலத்தில் மூழ்கி மேல்பாகம் ஆகாசத்தில் காணப்பட்டுப் பாய்களில் காற்று தாக்கி ஓடுவதுபோல் அவருடைய நிழல் ஸமுத்ரத்தில் அழுந்தித் தேஹம் ஆகாசத்தில் தோன்றிற்று. ஸமுத்ரத்தில் போகுமிடமெல்லாம் அவருடைய துடை வேகத்தால் ஜலம் காக்கை வலிப்புக் கொண்டது போல் சுழன்று கதறி நுரையுடன் காணப்பட்டது. மார்பின் காற்று வேகத்தால் மலை போன்ற அலைகளை அடித்துத் தள்ளிக் கொண்டு அந்த வானரச்ரேஷ்டன் அதிவேகமாகக் கடலைத் தாண்டினர். மேகத்தின் மழைக்காற்றும் அவருடைய வேகக் காற்றும் சேர்ந்து பயங்கரமாகச் சப்திக்கும் ஸமுத்ரத்தைக் கலக்கி நடுங்கச் செய்தது. மலைகளைப் போன்ற அலைகளை இழுத்துக்கொண்டு போகும் அந்த ராமதூதன், ஆகாசத்தையும் பூமியையும் பிரிப்பவரைப்போல் தாவினர். மேருமந்த்ரம் முதலிய மஹாபர்வதங்களைப் போல் எழும்பும் அலைகளை ஒவ்வொன்ருக எண்ணுகிறவரைப் போல் தாண்டிப்போனர். அவருடைய வேகத்தால் மேலே கிளப்பப்பட்ட கடல் ஆகாசத்தில் சரத்காலத்தில் விளங்கும் நீருண்ட மேகத்தைப் போல் காணப்பட்டது. மனிதர்கள் உடுக்கும் வஸ்த்ரங்களை அவிழ்த்தெறிந்தால் அவர்களுடைய தேஹம் காணப்படுவது போல், ஸமுத்ரத்தில் வாழும் திமிங்கலம் முதலை சிறு மீன் ஆமை முதலிய ஜந்துக்கள், தங்களை மூடியிருந்த ஜலம் மேலே கிளம்பினதால் வெளியில் காணப்பட்டன. கடலில் வஸிக்கும் மஹாஸர்ப்பங்கள் ஆகாசத்தில் அதிவேகமாகப் போகும் அந்த வானர ச்ரேஷ்டனைப் பார்த்துக் கருடனென்றெண்ணிப் பயந்தன. பத்து யோஜனை அகலமும் முப்பது யோஜனை நீளமுமுள்ள அவருடைய நிழல் அந்த ஸமுத்ர ஜலத்தில் அழகாக விளங்கிற்று. (காலையில் புறப்பட்டு ஸூர்யாஸ்தமனத்திற்கு ஒரு முஹூர்த்தத்திற்கு முந்தியே அக்கரைக்குப்

போயிருக்க வேண்டும்). அந்த நிழல் ஸமுத்ரத்தில் அவரைத்தொடர்ந்து செல்லும்பொழுது வெளுத்த மேகக் கூட்டங்களைப் போல் காணப்பட்டது. (இது நடுப் பகலில் தோன்றும்). யாதொரு பற்றுமில்லாத வாயுமார்க்கத்தில் அந்த மஹா தேஜஸ்வி பெரிய சரீரத்துடன் போகும்பொழுது இறக்கைகளையுடைய மலை ஆகாசத்தில் பறப்பதுபோலிருந்தது. வேகத்தால் அவர் போகும் வழியிலுள்ள ஸமுத்ர ஜலம் பெரிய மலையைப் போல் சேர்க்கப்பட்டு நின்றது. பக்ஷிகள் பறக்கும் ஆகாசத்தில் பக்ஷிராஜனைப்போலும் வாயுபகவான் மேகக்கூட்டங்களை அடித்துக்கொண்டு போவது போலும் ஹனுமான் அதிவேகமாகப் போனார். அந்த மேகங்கள் வெளுப்பு சிவப்பு நீலம் மஞ்சள் முதலிய வர்ணங்களுடன் அதிவிசித்ரமாக விளங்கின. மேகக் கூட்டங்களுக்கு நடுவில் அடிக்கடி புகுந்து வெளிப்படும்பொழுது அவர் சந்த்ரனைப் போல் தோன்றினார்.

இப்படி அதிவேகமாய் அவர் ஸமுத்ரத்தைத் தாண்டிச் செல்வதைக்கண்டு, தேவர்களும் தானவர்களும் கந்தர்வர்களும் புஷ்பமாரி பெய்தார்கள். ராமகார்யத்தின் பொருட்டுச் செல்லும் அந்த வானர ச்ரேஷ்டனை ஸூர்யன் உஷ்ணமான கிரணங்களால் ச்ரமப்படுத்தவில்லை. வாயுபகவானும் அவர்மேல்குளிர்ச்சியாய் வீசி ச்ரமத்தைப் போக்கினார். மஹர்ஷிகள் ஸ்தோத்ரஞ்செய்தார்கள். தேவர்களும் கந்தர்வர்களும் அந்த மஹா வீர்யசாலியைக் கொண்டாடினார்கள். அந்த வானர ச்ரேஷ்டன் ச்ரமமில்லாமல் மஹாவேகமாய் ஆகாசத்தில் செல்வதைக் கண்டு நாகர்களும் யக்ஷர்களும திக்பாலர்களான ராக்ஷஸர்களும் விபுதர்களும் கருடர்களும் அவரைப் புகழ்ந்தார்கள். அப்பொழுது ஸமுத்ர ராஜன் இக்ஷ்வாகு குலத்தை மர்யாதை செய்ய விரும்பி "இந்த வானர ச்ரேஷ்டனை ஹனுமானுக்கு நான் ஒத்தாசை செய்யாவிட்டால் லோகத்தில் எல்லோரும் என்னை நிந்திப்பார்கள். இக்ஷ்வாகு வம்சத்தரசனை ஸகர மஹாராஜனால் வளர்க்கப்பட்டேன். இவர் இக்ஷ்வாகு குலதிலகரான ராமனுடைய தூதன். இவர் ச்ரமப்படும்படி விடுவது எனக்கு அழகல்ல. ஆகையால் இவர் சற்று நேரம் இங்கே இளைப்பாறிப் பிறகு அதி சீக்ரமாய் ஸமுத்ரத்தைத் தாண்டும்படி செய்யவேண்டும்" என்று ஹிதமான யோசனை செய்து, ஸமுத்ர ஜலத்தில் தங்கச் சிகரங்களுடன் மறைந்திருக்கும் மைநாக பர்வதத்தைப் பார்த்துத், "தோழா! பாதாளத்திலுள்ள அஸுரர்கள் மேலே வாரதபடி இந்த்ரன் உன்னைக் கோட்டைவாசல் தாப்பாளைப் போல் இங்கே வைத்திருக்கிறானல்லவா? அந்த மஹா பலசாலிகள் மேலே வர யத்னஞ்செய்கையில் அவர்களை விடாமல் பாதாள த்வாரத்தை

மறைத்துக்கொண்டு நிற்கிறாயல்லவா? மேலும் கீழும் நான்கு பக்கங்களிலும் வளரும் சக்தி உனக்குண்டு. ஆகையால் உன்னை ஏவினேன். பர்வதராஜ! சீக்ரம் எழுந்திரு. வானரச்ரேஷ்டரான ஹனுமான் ராமகார்யத்தின் பொருட்டு ஆகாசமார்க்கமாய் உனக்கு நேராக வருகிறார். இக்ஷ்வாகு குலத்திற்குப் பணிவிடைசெய்ய ஆசைகொண்ட நான் இவருக்கு என்னால் கூடிய ஒத்தாசை செய்யவேண்டியது. அந்த அரசர்களை நான் பூஜிக்க வேண்டியதல்லவா? அதே காரணத்தால் நீயும் அவர்களை விசேஷமாய்ப் பூஜிக்கவேண்டியது. அவர்களால் வெட்டப்பட்ட இந்த ஸமுத்ரத்தில் ஒளிந்துகொண்டு உன் ப்ராணனைக் காப்பாற்றி வருகிறாயல்லவா? மேலும், உன்னை இங்கே கொண்டுவந்து சேர்த்த வாயுவின் புத்ரனான இந்த ஆஞ்ஜநேயருக்கு ஸஹாயஞ்செய்வது உன் கடமையல்லவா? ஆகையால் இவருக்குத் தகுந்த உபகாரம் செய். நாம் உத்தேசித்த கார்யம் காலதாமஸமாகக்கூடாது. செய்யவேண்டிய கார்யத்தை தகுந்த காலத்தில் செய்யாவிட்டால் ஸாதுக்கள் கோபிப்பார்கள். ஆகையால் மேலே வா; ஆஞ்ஜநேயர் உன்னிடத்தில் இளைப்பாறட்டும்; இவர் நமக்கு உத்தமமான அதிதி; பூஜிக்கத் தகுந்தவர்; வானரச்ரேஷ்டர். தேவர்களால் பூஜிக்கப்பட்டு ஸ்வர்ண சிகரங்களுடன் ப்ரகாசிக்கும் பர்வதராஜ! இவர் உன்னிடத்தில் கொஞ்சம் ச்ரம பரிஹாரஞ் செய்துகொண்டு பிறகு அதிசீக்ரமாய் அக்கரை சேர்வார். ஹனுமானுக்கு ஸீதையினிடத்திலுள்ள தயையையும், ஸீதை நாயகனைப் பிரிந்து லங்கையில் துக்கிப்பதையும், ஆஞ்ஜநேயருடைய ச்ரமத்தையும் யோசித்து நான் சொன்னபடி செய்''யென்றார்.

இதைக் கேட்டு அந்தப் பர்வத ராஜனும் மரம் செடி கொடிகளுடன், ப்ரகாசமான கிரணங்களுடன் ஸூர்யன் மேகங்களின் நடுவிலிருந்து புறப்படுவதுபோல் அதிவேகமாகக் கிளம்பினான். ஸமுத்ர ஜலத்தால் சூழப்பட்ட அந்த மலை, உரகர் கின்னரர் முதலிய கணங்களால் நிறைந்த தன் தங்கச் சிகரங்களைச் சீக்ரத்தில் வெளியில் காட்ட, நிர்மலமான ஆகாசத்தில் ஸூர்யன் உதிப்பதுபோல், அவை மேக மண்டலத்தைப் பிளந்து கொண்டு மேலே கிளம்பின. ஸ்வபாவமாகவே அதிக காந்தியுள்ள அந்தத் தங்கக் கொடிமுடிகளால் மைநாக மலை பல ஸூர்யர்களுடன் ப்ரகாசிப்பது போல் தோன்றிற்று. இப்படித் தனக்கு எதிரில் தடையில்லாமல் எழுந்த அந்த மலையைப் பார்த்து மாருதி, "இது நமக்கு நேர்ந்த முதலாவது தடை" யென்று நினைத்தார். அதிவேகமாகச் சென்று கொண்டிருந்த வாயுபுத்ரன், அளவில்லாமல் வர வர வளரும் அந்த மலையை, வாயுபகவான் மேகங்

களைச் சிதறவடிப்பது போல், தன் மார்பால் விளையாட்டாக அடித்துத் தள்ளினர். அதைக் கண்டு மைநாகம் அவருடைய வேகத்தையும் சக்தியையும் அறிந்து ஆச்சர்யப்பட்டு ஸந்தோஷித்தான். பிறகு மனுஷ்ய ரூபத்துடன் அவன் ஆகாசமார்க்கத்தில் நின்றுகொண்டு அந்த வழியாகச் செல்லும் வானர வீரனைப் பார்த்து, மிகுந்த ப்ரீதியுடன் "வானர ச்ரேஷ்ட! ஒருவரும் செய்யத் துணியாத கார்யத்தை செய்யப் புகுந்திருக்கிறீர். என் சிகரங்களில் சற்றுநேரம் இளைப்பாறும். ராமனுடைய முன்னோர்கள் இந்த ஸமுத்ரத்தை வெட்டினர்கள். ராமகார்யத்திற்காகச் செல்லும் உமக்கு ஸமுத்திரராஜன் பூஜை செய்கிறார். உபகாரஞ் செய்தவனுக்கு பதில் உபகாரம்செய்வது புராதனமான தர்மம், அப்படி செய்ய விரும்பும் நாங்கள் உமக்குக் கொடுக்கும் அதிதி பூஜையை நீர் பெற்றுக் கொள்ளவேண்டும். இந்த வானர ச்ரேஷ்டர் நூறு யோஜனை தூரம் தாண்ட உத்தேசித்துப் புறப்பட்டு வருகிறார். உன் தாழ்வரைகளில் சற்று இளைப்பாற்றிப் பிறகு அக்கரைக்குப் போவார் என்று ஸமுத்ர ராஜன் என்னை விசேஷ மர்யாதையுடன் உம்மிடத்தில் அனுப்பியிருக்கிறார். ஆகையால் சற்று நில்லும். என்னிடத்தில் இளைப்பாறிப் போம். என்னிடத்திலுள்ள கந்தமூலங்கள் அதிக ருசியாயும் மணத்துடனுமிருக்கின்றன. அவைகளை அங்கீகரித்து ச்ரமந் தீர்த்துக்கொண்டு பிறகு செல்வீர் நம்மிருவர்க்கும் வேறு விதமான ஸம்பந்தமுமுண்டு. அது மூன்று லோகங்களிலும் ப்ரஸித்தி பெற்றுப் பெரியோர்களால் ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறது. அதிவேகமாகத் தாண்டிப்போகும் வானரர்களுக்குள் உம்மை முதல்வனாக மதித்திருக்கிறேன். சாதாரணமான அதிதியையும் விவேகி பூஜிக்க வேண்டும். உம்மைப் போன்ற மஹானைத், தர்மரஹஸ்யத்தை அறிந்தவன் விசேஷமாகப் பூஜிக்க வேண்டியதென்றுசொல்லவும் வேண்டுமோ? நீர் தேவ ச்ரேஷ்டனான வாயு பகவானுடைய புத்ரன்; வேகத்தில் அவரைப் போன்றவர். உம்மைப் பூஜித்தால் அவரைப் பூஜித்ததாகுமென்றதைத் தர்மம் தெரிந்த உமக்குச்சொல்ல வேண்டியதில்லை. ஆகையால் நான் உம்மை பூஜிக்கவேண்டும். வேறொரு காரணமுமுண்டு.

"முன்பு கிருதயுகத்தில் மலைகளுக்கு இறக்கைகளுண்டு. அவை வாயுவேக கருட வேகத்துடன் ஸகல திக்குகளிலும் அதிவேகமாகப் பறந்துபோகும். அதைக் கண்ட தேவகணங்களும் ரிஷிகளும் ஸகல பூதங்களும் எங்கே இவை மேலே விழுந்து நம்மை நாசஞ் செய்யுமோவென்று பயந்தார்கள். அப்பொழுது தேவேந்திரன்

அவைகளிடத்தில் கோபங்கொண்டு வஜ்ராயுதத்தால் அவைகளின் இறக்கைகளைத் துண்டு துண்டாய் வெட்டினன். பயங்கரமான வஜ்ராயுதத்தைத் தூக்கிக்கொண்டு கோபாவேசத்துடன் அவன் என்னை சிக்ஷிக்கும் பொழுது, மஹாத்மாவான வாயுபகவான் என்னை இந்த ஸமுத்ரத்தில் அடித்துக் கொண்டு வந்து தள்ளினர். என் இறக்கைகளுக்கு யாதொரு அபாயமுமின்றி என்னைக் காப்பாற்றினர். அவரை நான் பூஜிக்கவேண்டியதல்லவா? ஆகையால் உம்மையும் பூஜிக்க விரும்புகிறேன். நமக்கு இவ்விதமான ஸம்பந்தம் ஏற்பட்டிருக்கிறது. இப்படி விசேஷ உபகாரம் பெற்ற நானும் ஸமுத்திர ராஜனும் செய்யும் உபசாரத்தைப் பெற்றுக் கொண்டு எங்களை ஸந்தோஷப்படுத்த வேண்டும். சற்று இளைப்பாறும்; நாங்கள் செய்யும் உபகாரத்தையும் அதிதி பூஜையையும் பெற்றுக் கொள்ளும்; எங்களுக்கு உம்மிடத்திலுள்ள ப்ரீதியைக் கௌரதை செய்யும். உம்மைப் பார்த்தால் எங்களுக்கு அளவற்ற ஆனந்த முண்டாயிருக்கிறது" என்றார்.

அதைக் கேட்டு மாருதி "பர்வதராஜ! நீர் இப்படிச் சொல்வதாலேயே நான் மிகுந்த ப்ரீதியடைந்தேன். உம்மைத் தர்சித்ததே எனக்குப் போதும். நீர் எனக்குச் செய்யும் அதிதி பூஜை இதே. உம்மிஷ்டப்படி நான் இங்கே தங்கவில்லையென்று கோபிக்கக் கூடாது. நான் உத்தேசித்த கார்யத்தைச் செய்ய வேண்டிய காலம் என்னைச் சீக்ரப்படுத்துகிறது. இங்கே தங்கினல் இன்று பகலுக்குள் லங்கைக்குப் போகமுடியாது. மேலும் வழியில் எவ்விடத்திலும் தங்காமல் போக வேண்டுமென்று வானரர்களிடத்தில் ப்ரதிக்ஞை செய்திருக்கிறேன்" என்று கையால் அந்த மலையைத் தொட்டு, அவரால் செய்யப்பட்ட அதிதி பூஜையை அங்கீகரித்து, மனமகிழ்ந்து, புன்சிரிப்புடன் ஆகாசமார்க்கமாகச் சென்றார். ஸமுத்ராஜனும் மைநாகமும் மிகுந்த ப்ரீதியுடன் அவரைப் பார்த்து ஆசீர்வதித்தார்கள். பிறகு ஆஞ்ஜநேயர் அவர்களை விட்டு வெகு தூரம் உயரக் கிளம்பித், தன் பிதாவான வாயுபகவான் ஸஞ்சரிக்கும் மார்க்கத்தில் வந்தார். அங்கிருந்து மேலே போய்ப் பர்வத ராஜனை ஒரு தடவை ப்ரீதியுடன் பார்த்து, நிர்மலமான ஆகாசமார்க்கத்தில் சென்றார். ஆஞ்ஜநேயர் ஸமுத்ரத்தைத் தாண்டிப்போவது அவருடைய அபூர்வச் செயல்களில் முதலாவது; மைநாக பர்வதத்தை ஜயித்தது இரண்டாவது; இதைப் பார்த்துக் கொண்டிருந்த தேவர்களும் ஸித்தர்களும் மஹர்ஷிகளும் மகிழ்ந்து மாருதியைக் கொண்டாடினர்கள். தேவராஜன் மைநாகனிடத்தில் அளவற்ற ஸந்தோஷமடைந்து "தங்கக் கொடிமுடிகளுடன்

விளங்கும் பர்வத ச்ரேஷ்டா! இன்று நீ செய்த கார்யம் அதிக ஆனந்தத்தை எனக்கு உண்டுபண்ணுகிறது. இன்றுமுதல் உனக்கு யாதொரு பயமுமில்லை. உன்னிஷ்டப்படி ஸுகமாகவிரு. விஸ்தாரமான ஸமுத்ரத்தைத் தாண்டி ஆகாசமார்க்கமாகப் போகும்பொழுது ஹனுமான் கீழே விழுவாரோவென்று பயந்தோம். ஆனால் அந்த மஹாவீரன் சற்றும் பயமில்லாமல் அலக்ஷ்யமாகப் போகிறான். நீ அவனுக்கு நல்ல உதவிசெய்தாய். ராமதூதனான ஹனுமானுக்கு நீ செய்த உபசாரம் எனக்கு எல்லையற்ற ஆனந்தத்தைக் கொடுக்கிற" தென்றார். தன்னிடத்தில் ஸந்தோஷித்ததைப் பார்த்து மைநாகனுக்கு விசேஷ மகிழ்ச்சியுண்டாயிற்று. பிறகு இந்த்ரனிடத்தில் மேலான வரங்களைப் பெற்று ஸுகமாக வஸித்தான். ஹனுமான் அங்கிருந்து ஒரு முஹூர்த்தத்தில் அப்புறம் சென்றார்.

அப்பொழுது தேவ கந்தர்வ ஸித்தர் மஹரிஷிகணங்கள், நாகங்களுக்குத் தாயாகிய ஸூர்யனைப் போல் விளங்கும் ஸுரஸையைப் பார்த்து, "இந்த வானர வீரன் வாயுபுத்திரன், மஹாகாந்தியையுடையவன். இந்த ஹனுமான் ஸமுத்திரத்தைத் தாண்டி ஆகாசவீதியில் போகிறான். நீ சற்று நேரம் இவனுக்கு இடையூறாக விரு. கோரப் பல்லுகளாலும் நெருப்புப் பொறிகளைப் போன்ற கண்களாலும் ஆகாசம்போல் திறந்த வாயாலும் மலைபோன்ற சரீரத்தாலும் பயங்கரமான ராக்ஷஸ ரூபத்துடன் இவருக்கெதிரில் நில். இவருடைய பலத்தையும் பராக்ரமத்தையும் மறுபடியும் பரீக்ஷிக்க வேண்டும். உன்னை உபாயத்தால் ஜயிக்கிறாரா? தைர்யமற்று மயங்குகிறாரா?" வென்றார்கள். இப்படித் தேவதைகளால் வேண்டப்பட்டு ஸுரஸை, ஸகல ப்ராணிகளும் கண்டு நடுங்கும் கோரராக்ஷஸ ரூபத்துடன் கடலில் நடுவில் நின்று, அந்த வழியாகவரும் மாருதியை மறித்து, "தேவர்கள் எனக்கு ஆஹாரமாக இங்கே உன்னை அனுப்பியிருக்கிறார்கள். உன்னை விழுங்கப் போகிறேன். என் வாயில் நுழை" யென்றாள். அதைக்கேட்டு அந்த மஹாதேஜஸ்வி கைகூப்பி வணக்கமாகத் "தசரத புத்ரனான ராமன் தம்பி லக்ஷ்மணனோடும் பார்யை ஜானகியோடும் தண்டகாரண்யத்தில் ஸஞ்சரித்துக் கொண்டிருக்கும்பொழுது, அவருக்கு விரோதியான ராவணனென்ற ராக்ஷஸராஜன், அவர் வேறு வேலையாகப் போயிருக்கையில் அவருடைய பார்யையை எடுத்துப் போனான். கீர்த்திவாய்ந்த அந்த ஸீதையிடத்தில் என்னைத் தூதனாக ராமன் அனுப்பியிருக்கிறார். அவருடைய ராஜ்யத்தில்

எப்படிப் பொருந்தும்?) அல்லது ஸீதையைக் கண்டு அவளுடைய வரலாற்றை ராமனுக்குத் தெரிவித்தபிறகு உனக்கு ஆஹாரமாகிறேன். இது நான் செய்யும் ப்ரதிக்ஞை" யென்றார்.

அப்பொழுது ஸுரஸை "என்னைத் தாண்டி ஒருவரும் செல்லக் கூடாது. இது நான் பெற்ற வரம். என் வாயில் புகுந்து செல்வதைத் தவிர வேறு வழியில்லை" யென்று சொல்லிக்கொண்டிருக்கையில், அதை லக்ஷ்யஞ் செய்யாமல் ஆஞ்ஜநேயர் போய்க்கொண்டிருந்தார். ஸுரஸை அதைக் கண்டு, அவருடைய பலத்தை அறிய விரும்பி, "இன்று நீ என் வாயில் நுழைந்தே அப்புறம் போகவேண்டும். இப்படி ப்ரஹ்மா எனக்கு வரங்கொடுத்திருக்கிறார்" என்று தன் வாயை விஸ்தாரமாகத் திறந்து வாயுபுத்ரனுக்கெதிரில் நின்றாள். அப்பொழுது ஆஞ்ஜநேயர் கோபங்கொண்டு "என்னை விழுங்கும்படி வாயை விஸ்தாரமாகத் திற" வென்று பத்து யோஜனை தூரம் வளர்ந்தார்; ஸுரஸை தன் வாயை இருபது யோஜனை யளவு திறந்தாள் பிறகு ஹனுமான் முப்பது யோஜனை உயரம் வளர்ந்தார்; ஸுரஸை நாற்பது யோஜனை தூரம் வாயைத்திறந்தாள். பிறகு ஹனுமான் ஐம்பது யோஜனை தூரம் வளர்ந்தார்; ஸுரஸை அறுபது யோஜனை தூரம் வாயைத் திறந்தாள். ஹனுமார் எழுபது யோஜனை உயரம் வளர்ந்தார்; ஸுரஸை எண்பது யோஜனை தூரம் வாயைத் திறந்தாள். ஹனுமார் பிறகு தொண்ணூறு யோஜனை உயரம் வளர்ந்தார்; அப்பொழுதும் ஸுரஸை நூறு யோஜனை தூரம் வாயைத் திறந்தாள். ஹனுமான் மஹாபுத்திமானனதால் மிகவும் விஸ்தாரமான வாயில் ஸூக்ஷ்ம ரூபத்துடன் புகுந்து வெளியில் வர இதே ஸமயமென்று நிச்சயித்து, நீண்டநாக்குடன் கோரமான நாகம் போன்ற அவளுடையவாயில் கட்டை விரலளவு தன் சரீரத்தைச் சுருக்கிகொண்டு சீக்ரமாகப் புகுந்து வெளியில் வந்து, ஜயலக்ஷ்மி ஜ்வலிக்க ஆகாசத்தில் நின்று, "தக்ஷப்ரஜா பதியின் புத்ரி! உன்னை நமஸ்கரிக்கிறேன். உன் வாயில் புகுந்து வெளிப்பட்டேன். உன் வரமும் நிஜமாயிற்று; ஸீதையிருக்கு மிடத்திற்குப் போகிறேன்" என்றார்.

ராஹுவின் வாயிலிருந்து வெளிப்பட்ட சந்த்ரனைப்போல் ப்ரகாசிக்கும் ஆஞ்ஜநேயரைப் பார்த்து ஸுரஸை தன் உண்மையான ரூபத்துடன் "குழந்தாய்! உன் கார்யம் கைகூடட்டும், ஸுகமாகப் போய்வா, ராமனையும் ஸீதையையும் சேர்த்துவை" யென்று ஆசீர்வதித்தாள். ஸகல ப்ராணிகளும் ஆஞ்ஜநேயருடைய மூன்றாவது அத்புதமான செயலைக் கண்டு அவரைக் கொண்டாடின.

பிறகு ஹனுமான் மற்ற எவராலும் தாண்ட முடியாத வருணனுக்கு இருப்பிடமான ஸமுத்ரத்தைக் கடந்து ஆகாச மார்க்கத்தில் கருடனைப் போல் அதிவேகமாகப் போனார். அங்கே நீருண்ட மேகங்கள் ஓடிக்கொண்டிருந்தன. பக்ஷிகளும் வித்யாதரர்களும் ஐராவதமென்ற திக்கஜமும் உலாவிக் கொண்டிருந்தார்கள். அது பக்ஷிகளுக்கும் ஊர்களுக்கும் வாஹனங்களான ஸிம்ஹம் யானை புலி முதலியவைகளாலும் நிர்மலமான விமானங்களாலும் அலங்கரிக்கப்பட்டிருந்தது. வஜ்ராயுதம் இடி முதலியவைகளைப்போன்ற அக்னிகளால் ப்ரகாசித்தது. புண்யகர்மங்களால் ஸ்வர்க்கலோகத்தை யடைந்த மஹான்களால் விளங்கிற்று. இவ்வுலகத்தில் ஹோமஞ் செய்யப்பட்ட ஹவிஸை தேவதைகளுக்குக் கொண்டு போய்க் கொடுக்கும் சித்ரபானுவென்ற அக்னிபகவான் ஸஞ்சரிக்கும் வழி அதே. க்ரஹங்கள் நக்ஷத்ரங்கள் சந்த்ரன் முதலியவைகளால் ப்ரகாசித்தது. மஹர்ஷிக் கூட்டங்களும் கந்தர்வர்களும் நாகர்களும் யக்ஷர்களும் கூடுமிடம். தனித்தனியாக வகுக்கப்பட்டது, நிர்மலமானது; எங்கும் வ்யாபித்தது. விச்வாவஸு முதலிய கந்தர்வர்களுக்கு இருப்பிடம்; மற்றத் திசை யானைகள் விளையாடுமிடம், சந்த்ர ஸூர்யர்கள் செல்லும் வழி; புண்யஸ்தலம்; இந்தப் பூலோகத்திற்கு மேல்மெத்தையைப் போன்றது, விஸ்தாரமானது, ப்ரஹ்மாவால் நிர்மிக்கப்பட்டது. வீரர்களாலும் வித்யாதர கணங்களாலும் நிறைந்தது. யாதொரு பற்றுமில்லாமல் இந்த வாயுமார்க்கத்தில் ஸகல பொருள்களையும் கவனித்துப் பார்த்துக்கொண்டு கருடனைப்போலவும் இறக்கையுள்ள மலையைப்போலவும் வாயுபுத்ரன் போனார்.

அப்பொழுது அந்த வழியிலிருந்த ஸிம்ஹிகையென்ற ராக்ஷஸி அவர் ஆகாசத்தில் போவதைக் கண்டு, நினைத்த ரூபத்தை எடுக்கக் கூடியவளானதால் தன் தேஹத்தை வளரச் செய்து, "இவ்வளவு நாளாக ஆஹாரமில்லாத எனக்கு இந்தப் பெரிய ஜந்து வலுவில் வந்து கிடைக்கிறது" என்று நினைத்து மாருதியின் நிழலைப் பிடித்திழுத்தாள். அதைப் பார்த்து வாயுபுத்ரன், "திடீரென்று யாரோ என்னைத் தடுக்கிறார்கள்; என் பராக்ரமம் குறைகிறது. ஸமுத்ரத்தில் போகும் பெருங் கப்பலைப் பலமான எதிர்காற்று தாக்கி நிறுத்துவது போல் அசைய முடியவில்லை" யென்று மேலும் கீழும் நான்குப் புறங்களிலும் கவனித்துப் பார்த்தார். ஸமுத்ரத்திலிருந்து ஒரு பெரிய ஜந்து எழுந்து நிற்பதைக் கண்டார். உடனே "ஸுக்ரீவனால் சொல்லப்பட்ட அத்புதமான ப்ராணி அதே; இந்த விஸ்தாரமுள்ள ஜந்து மஹா வீர்யமுள்ளது;

இதில் ஸந்தேஹமில்லை" யென்று நிச்சயித்து மஹாபுத்திமானை மாருதி அவள் ஸிம்ஹிகையென்றறிந்து மழைக் காலத்து மேகத்தைப் போல் தன் சரீரத்தை வளரச் செய்தார். அதைப்பார்த்து அவள் தன் வாயைப் பாதாளத்தைப் போல் திறந்து மேகக்கூட்டங்களைப் போல் கர்ஜித்து, ஆஞ்ஜநேயரை விழுங்க வாயைத் திறந்து ஓடிவந்தாள். அவர் அவளுடைய தேஹப்ரமாணத்தையும் பெரிய முகத்தையும் திறந்த வாயையும் உயிர்நிலையையும் உற்றுப் பார்த்து மஹா பலவானும் வஜ்ராயுதத்தைப் போன்ற வலிமையுடையவருமானதால் தன் தேஹத்தைச் சுருக்கிக்கொண்டு அவளுடைய வாயில் புகுந்தார். பர்வ காலத்தில் பூர்ணசந்த்ரனை ராஹு விழுங்குவதுபோல் அவளுடைய வாயில் ஹனுமான் நுழைந், ததை ஸித்தசாரணர்கள் ஆச்சர்யத்துடன் பார்த்துக்கொண்டிருந்தார்கள், மனோ வேகத்தையுடைய மாருதி, அவளுடைய உயிர்நிலையைத் தன் கூரான நகங்களால் பிளந்துவிட்டு அவள் வாயை மூடுவதற்குள் அதிவேகமாக வெளிப்பட்டார். தன் பார்வையாலும் தைர்யத்தாலும் சாதுர்யத்தாலும் இப்படி அவளை வென்று மறுபடியும் முன்போல் தேஹத்தை வளர்த்தார். அந்த ஸிம்ஹிகை ஹ்ருதயம் பிளந்து, கதறிக்கொண்டு ஸமுத்ரத்தில் விழுந்ததைப்பார்த்து ஆகாசத்தில் ஸஞ்சரிக்கும் பூதங்கள் "மாருதே! பயங்ரமான கார்யத்தைச் செய்தீர்; இந்த மஹாபலமுள்ள ஜந்துவை அலக்ஷயமாகக் கொன்றீர் நீர் உத்தேசித்த கார்யத்தை க்ஷேமமாக முடித்துவாரும். உம்மைப் போல் நுட்பமான பார்வையும் தைர்யமும் வஸ்துக்களின் உண்மையையறியும் புத்தியும் திறமையும் யாருக்குண்டோ அவனே தன் கார்யங்களில் வருத்தப்படமாட்டான்" என்று கொண்டாடினார்கள். ஸுரஸையையும் ஸிம்ஹிகையையும் ஜயித்த சுபசகுனத்தால், தான் உத்தேசித்துப் போகும் கார்யம் கைகூடுமென்று ஸந்தோஷமடைந்து, ஹனுமான் கருடனைப்போல் ஆகாசவீதியில் போனார்,

அக்கரைக்கு ஸமீபத்தில் போய் நான்கு பக்கங்களிலும் பார்க்கையில் நூறு யோஜனை தூரத்தில் முடிவில் காடுகள் தோன்றின. ஆகாச மார்க்கத்தில் போய்க்கொண்டிருக்கையில் மரங்களடர்ந்து அழகான லங்கைத் தீவையும் மலய பர்வதத்தைச் சேர்ந்த காடுகளையும் கடலையும் அதின் கரையிலுள்ள சதுப்பு நிலங்களையும் அங்கே வளரும் மரங்களையும், த்ரிகூட மலையிலிருந்து ஆறுகள் ஸமுத்ரத்தில் விழுமிடங்களையும் பார்த்தார். பிறகு பெரிய மேகத்தைப்போல் ஆகாசத்தை மறைக்கும் தன் தேஹத்தைப் பார்த்து, "நான் இப்ப

டிப் போனல் என் பெரிய தேஹத்தையும் வேகத்தையும் ராக்ஷஸர்கள் கண்டு ஆச்சர்யமடைந்து என்னை யாரென்றறிய முயல்வார்கள்'' என்று யோசித்து, மோஹந்தீர்ந்த ஆத்மஞானியைப்போல் தன் தேஹத்தைச் சுருக்கிக்கொண்டு, முன் ரூபத்தை எடுத்தார். அப்பொழுது மஹாவிஷ்ணு த்ரிவிக்ரமாவதாரமெடுத்து, பலிசக்ரவர்த்தியின் வீர்யத்தை அபஹரித்து மறுபடியும் வாமனரூபியாகி நின்றதுபோல் ஹனுமான் விளங்கினர். அழகிய அநேக ரூபங்களை எடுக்கக்கூடிய ஆஞ்ஜநேயர் சத்ருக்களால் ஜயிக்கப்படாமல் நூறு யோஜனை தூரமுள்ள ஸமுத்ரத்தைத் தாண்டி, தன் பெரிய ரூபத்தையும் தான் செய்ய வேண்டிய கார்யத்தையும் ஆலோசித்துத், தன் உண்மையான ரூபத்தை அடைந்தார். பெரிய மலைச்சிகரத்தைப் போன்ற அந்த மஹாத்மா சிகரங்களால் சூழப்பட்டு, துணி காணப்படாமல் தொங்கிக்கொண்டிருப்பது போல் தோன்றி, அநேக அழகான விருக்ஷங்களால் விளங்கும் ஸுவேல மலையின் சிகரத்தில் இறங்கினர்.

அக்கரை சேர்ந்து ஆகாச வீதியிலிருந்துகொண்டு ஆஞ்ஜநேயர் த்ரிகூடபர்வத சிகரத்தில் அமைக்கப்பட்ட லங்கையைக்கண்டு, அதுவரையில் தரித்த ரூபத்தைமாற்றி அந்த மலையிலிறங்கி, அதில் வஸிக்கும் மிருகங்களையும் பக்ஷிகளையும் பயமுறச் செய்தார். தானவர்களாலும் பன்னகர்களாலும் நிறைந்த மலைபோன்ற அலைகளையுடைய ஸமுத்ரத்தைத் தன்பலத்தால் தாண்டி, அக்கரையில் இறங்கி, அமராவதியைப் போல் விளங்கும் லங்கையைக் கண்டார்.



## ஸர்க்கம் 2,

## லங்கையின் வளப்பம்.

மஹாபலசாலியான வாயுபுத்ரன் ஒருவராலும் தாண்டமுடியாத ஸமுத்ரத்தைக் கடந்து, கொஞ்சங்கூட ச்ரமமடையாமல், த்ரிகூட பர்வத சிகரத்தில் கட்டப்பட்ட லங்காபுரியைக் கவனித்துப் பார்த்தார். பிறகு அங்குள்ள மரங்களிலிருந்து விழுந்த புஷ்பங்களால் தூவப்பட்டு, அந்த மஹாவீரன் புஷ்பத்தால் செய்யப்பட்ட வானர விக்ரஹத்தைப்போல் விளங்கினார்.

ஒப்பில்லாத பராக்ரமத்தையுடைய அந்தத் தேஜஸ்வி நூறு யோஜனை தூரம் அதிவேகமாய்த் தாண்டியும் பெருமூச்சுவிடவுமில்லை; கொஞ்சமாவது களைக்கவுமில்லை. "இதைப்போல் அநேக நூறு யோஜனை தூரம் தாண்டுவேன்; கேவலம் ஒரு நூறு யோஜனை தூரமுள்ள இந்த ஸமுத்ரத்தைத் தாண்டுவது எனக்கு ஒரு பொருட்டா" வென்று நினைத்துக்கொண்டு, வீர்யத்திலும் தாண்டுவதிலும் ஒப்பில்லாத ஹனுமான், கடலைத் தாண்டின பிறகு, வேகமாய் லங்கையை நோக்கிச் சென்றார். பசுமையாய்ச் செழித்து வளரும் இளம்புல் தரைகளையும், பரிமளமுள்ள அநேக மரங்களுடன் பெரும் பாறைகள் நிறைந்த காடுகளையும் பார்த்துக்கொண்டு அவைகளுக்கு நடுவே சென்றார்; பலவித விருக்ஷங்களால் மறைந்த மலைகளையும் புஷ்பங்களால் விளங்கும் வனவரிசைகளையும் தாண்டிப் போனார். அந்த மலையில் நின்றுகொண்டே வனங்களையும் சிறு காடுகளையும் த்ரிகூடத்தின்மேல் கட்டப்பட்ட லங்காபுரியையும் பார்த்தார். மலர்ந்த புஷ்பங்கள் நிறைந்த சிவிதை கோங்குமலை மல்லிகை தாழை முதலிய மரங்களையும் புஷ்பங்களாலும் அரும்புகளாலும் மறைக்கப்பட்ட கடம்பு ஏழிலைப்பாலை மலைபத்தி அலரி முதலிய மரங்களையும், சில விருக்ஷங்கள் இனிமையாய்ப் பாடும் பக்ஷிகளால் நிறைந்து காற்றால் ஆட்டப்படும் நுனிகளுடன் விளங்குவதையும், அன்னம் நீர்க்காக்கை முதலிய நீர் பறவைகளாலும் வெண்தாமரை செங்கமலம் கருநெய்தல் முதலிய மலர்களாலும் ப்ரகாசிக்கும் நீரோடைகளையும், ஸாதாரண ஜனங்கள் விளையாடும் ஸ்தலங்களையும், ஜலக்ரீடை செய்யும் மடுக்களையும், எந்தக் காலத்திலும் புஷ்பங்களாலும் பழங்களாலும் விளங்கும்

விருக்ஷங்களுள்ள அரசர்கள் விளையாடும் தோட்டங்களையும் பார்த்துக்கொண்டே சென்று, லங்கா நகரத்தருகில் வந்தார்.

அது ராவணனுடைய ராஜதானி; தாமரை கருநெய்தல் முதலிய புஷ்பங்கள் நிறைந்த அகிழ்களால் சூழப்பட்டது; ஸீதையை எடுத்துக்கொண்டு போய் வைத்திருப்பதால் ராவணன் முன்னை விட அதிக ஜாக்ரதையாய் அதைக் காப்பாற்றிவந்தான். பயங்கரமான வில்லுகளைத் தரித்த ராக்ஷஸர்கள் எப்போழுதும் நான்கு திக்குகளிலும் பாராகொடுத்துக் கொண்டிருந்தார்கள். தங்கமயமான உயர்ந்த மதிள்சுவர்களால் சூழப்பட்ட விஸ்தாரமான நகரம்; அதிலுள்ள வீடுகள் நக்ஷத்ரங்கள்போலும், சரத்காலத்து மேகங்கள் போலும் விளங்கி உயர்ந்தும் நற்சாந்தும் போட்டு வெண்மையாயுமிருந்தன. கோட்டைச் சுவர்களின்மேல் அங்கங்கே யுத்தஞ் செய்வதற்காக அனேக ஸ்தானங்கள் அமைக்கப்பட்டிருந்தன. கொடி செடிகளெழுதப்பட்ட அநேக வஸ்த்ரங்கள் சிலவிடங்களில் கட்டித் தொங்கவிடப் பட்டிருந்தன; சிலவிடங்களில் மீன் மகரம் முதலிய ஜந்துக்களைப்போல் அமைக்கப்பட்ட கொடிகள் நாட்டப்பட்டிருந்தன. விசித்ரமான கொடிகள் வரிசையாய் எழுதப்பட்ட தங்கமயமான தோரணங்கள் கண்ணைப் பறித்தன. தேவலோகத்தில் விளங்கும் அமராவதிபோவென்று ப்ரமிக்கும்படியிருந்தது. பர்வத சிகரத்தில் கட்டப்பட்ட வெண்மையான வீடுகளுடன் விளங்கும் லங்கையைப் பார்க்கையில் ஆஞ்ஜநேயருக்கு அது ஆகாசத்தில் பறந்து செல்லும் நகரம் போல் தோன்றிற்று; அதை அமைத்தவன் விச்வகர்மா; அதில் அரசுசெலுத்துகிறவனோ ராவணேச்வரன். லங்கையென்ற பெண்ணிற்குக் கோட்டைச் சுவர்களைத் தாங்கும் கட்டடங்களே பின் தட்டுகள்; சுத்த ஜலத்தால் நிறைந்த அகிழ்களே புது வஸ்த்ரம்; மதிள்களில் வைத்திருக்கும் பீரங்கி சூலம் முதலிய ஆயுதங்களே தலைமயிர்; மதிள்களில் கட்டப்பட்ட யுத்தஸ்தானங்களே காதில் அணியும் ஆபரணங்கள்; அந்நகரம் விச்வகர்மாவால் அமைக்கப்பட்டது. ஆனால் பார்க்கையில் மனஸால் ஸ்ருஷ்டிக்கப்பட்டதோ வென்று எண்ணும்படியிருந்தது.

பிறகு ஹனுமான் வடக்கு வாசலுக்கருகில் சென்று அந்தப் பட்டணத்தை உற்றுப்பார்த்தார். கைலாஸ சிகரத்தைப்போல் வெண்மையாய் ஆகாசத்தை அளாவியிருந்தது. உயர்ந்த வீடுகளைப் பார்க்கையில் ஆகாசத்தில் பறந்து போவதுபோல் காணப்பட்டது. போகவதியென்ற நகரம் நாகர்களால் காக்கப்படுவதுபோலும்

மலைக்குஹை ஸர்ப்பங்களால் ரக்ஷிக்கப்படுவதுபோலும் கணக்கில்லாத ராக்ஷஸர்கள் கோரைப்பல்லுடன் பயங்கரமான ரூபந்தரித்து, ஆயுதபாணிகளாய் எப்பொழுதும் அதைப் பாதுகாத்துவந்தார்கள். பூர்வத்தில் குபேரனுடைய ராஜதானியான அந்நகரம் அழகாகக் கட்டப்பட்டு, இப்படிப்பட்டதென்று மனஸாலும் நினைக்கமுடியாததாயிருந்தது. அதற்கு ஏற்பட்ட அரண்களோ வெகு ஆச்சர்யகரமானவை. மேலும் ஒருவராலும் தாண்டமுடியாத ஸமுத்ரம் அதை நான்குபுறங்களிலும் பாதுகாக்கிறது; அதை ஆளும் ராஜனோ பெயரைக் கேட்டவுடனே எல்லோரும் நடுங்கும்படியான ராவணனைச் வரன். இதையெல்லாம் யோசித்து ஹனுமான் "வானர ஸைன்யங்கள் இங்கே வருவது அரிது; அப்படி வந்தாலும் ப்ரயோஜனப்படாது. தேவதைகள் ஒன்றுசேர்ந்தாலும் இந்த லங்கையை முற்றுகையிட்டுப் பிடிப்பது அஸாத்யம். சத்ருக்கள் ஜயிப்பதற்கரிய அரண்களையுடையதாய், ப்ரதாப லங்கேச்வரனால் ரக்ஷிக்கப்பட்ட இந்த நகரத்திற்கு ஒருவேளை ராகவன் எப்படியாவது வந்தாலும் அவரால் என்ன முடியும்? அஸுரஸ்வபாவமுள்ள இந்த ராக்ஷஸர்களை ஸாமமென்ற உபாயத்தால் வசப்படுத்தமுடியாது; அளவற்ற ஐச்வர்யத்தையுடையவர்களை த்ரவ்யத்தைக் கொடுத்து வசப்படுத்த முடியுமோ? பலபராக்ரமங்களால் இறுமாப்புகொண்டிருப்பவர்களுக்குள் கலஹஞ்செய்து அவர்களைக் கெடுக்கமுடியாதே. புத்தியிலும் பராக்ரமத்திலும் ச்ரேஷ்டர்களானதால் யுத்தத்தில் தோல்வியடையார்கள். அங்கதன் நீலன் ஸுக்ரீவன் நான் இவர்களைத் தவிர மற்ற வானரர்கள் இங்கே வரமுடியாது. இருக்கட்டும்; ஜானகி உயிரோடிருக்கிறாளா இல்லையாவென்று தெரிந்துகொள்வோம். பிழைத்திருந்தால் அப்போது இதைப்பற்றி யோசித்துக்கொள்ளலா" மென்று, ஒரு முஹூர்த்தகாலம் அந்த மலைச் சிகரத்தில் உட்கார்ந்து ராமனுடைய க்ஷேமத்தில் கவலைகொண்டவராய் ஸீதையைக் காணும் உபாயத்தை ஆலோசித்தார்.

"எப்பொழுது லங்கைக்குள் ப்ரவேசிக்கலாம்? எந்த ரூபத்தை எடுக்கலாம்? இந்த ரூபத்துடன் ப்ரவேசிப்பதில் ப்ரயோஜனமில்லை. பலசாலிகளான ராக்ஷஸர்கள் எங்கும் காவலிருக்கிறார்கள்; வெகு க்ரூரர்கள்; உக்ரமான தேஜஸுடையவர்கள்; மஹாவீரர்கள்; இவர்களை வஞ்சித்துப் பிறகு ஸீதையைத் தேடவேண்டும். நான் எடுக்கும் ரூபத்தைப் பிறர் ஸுலபமாய்க் கண்டுபிடிக்கக்கூடாது. ஆனால் நான் செய்யவேண்டிய கார்யத்திற்கு அது அனுகூலமாயிருக்கவேண்

டும். பெரிய ரூபத்தை எடுத்தால் ராக்ஷஸர்கள் கண்டுபிடிப்பார்கள். கண்ணிற்குத் தெரியாத ரூபத்தை எடுத்தால் லங்கை முழுவதை யும் தேடமுடியாது. ராத்ரியில் உள்ளே சென்றால் நான் உத்தேசித்த பெரிய கார்யத்தை முடிக்கலா"மென்று, தேவர்களும் நெருங்கமுடி யாத அந்த நகரத்தைப் பார்த்து, ஸீதையைத் தேடும் வழியை அடிக்கடி ஆலோசித்தார்.

"துராத்மாவான ராவணனுடைய கண்ணில் படாமல் எப் படி ஜானகியைப் பார்க்கமுடியும்? ஸகலமுமறிந்த ராமனுடைய கார்யம் கெடாமலிருப்பதற்கு வழி என்ன? ஒருவருமில்லாமல் தனியாயிருக்கையில் ஸீதையைப் பார்க்கும் உபாயமெது? ஹித மாய் முடியப்போகிற கார்யங்களும், விவேகமில்லாத தூதனிடத் தில் அகப்படாமல், தேச காலத்திற்குத் தகுந்த ப்ரயத்னஞ்செய் யப்படாமல், ஸூர்யனைக் கண்ட பனிபோல் நாசமடைகின்றன. இது மாத்ரமா? அரசன் மந்த்ரிகளுடன் கார்யா கார்யங்களையும் ஸாதன விரோதங்களையும் தீர்க்காலோசனை செய்து முடித்துப் பிறகு பகுத் தறிவில்லாத தூதனிடத்தில் ஒப்புவித்தால், அவனுக்குப் புத்திக் குறைவும் அபகீர்த்தியும் நேருமே யொழியக் கார்யம் கைகூடாது. தூதர்கள் தங்களை மஹாபுத்திமான்களென்று நினைத்துக்கொண்டு தங்களை நம்பிவிட்ட கார்யங்களைக் கெடுத்துவிடுகிறார்கள். ராம கார் யம் கெடக்கூடாது; இப்பொழுதே பகலில் லங்கையில் போக லாமா? ராத்ரியில் போவது நலமா? இந்தப் பெரிய ரூபத் துடன் செல்லலாமா? சிறிய ரூபத்தை எடுப்பது நலமா? நான் புத்தி ஹீனனென்று பெயர் வாங்கக்கூடாது. நான் ஸமுத்ரத்தைத் தாண்டிவந்தது வீணாகக்கூடாது. ராக்ஷஸ ராஜனான ராவணனை நாசஞ்செய்ய வேண்டுமென்று எல்லாமறிந்த ராமனுடைய கருத்து; நான் தேடும்போது, ராக்ஷஸர்கள் என்னைக் கண்டுவிட்டால் அந்தக் கார்யம் கெடும். வானர ரூபத்தையாவது ராக்ஷஸ ரூபத்தையாவது தரித்துக்கொண்டு இங்கிருக்கும் ராக்ஷஸர்களுக்குத் தெரியாமல் ஒரு நிமிஷமாவது இருக்கமுடியாது. மற்ற ரூபங்களைப்பற்றிச் சொல்ல வேண்டுமோ? ஆகையால் இந்தப் பெரிய ரூபத்துடன் லங்கையில் செல்வது பிசகு. வாயுபகவானும் இவர்களுக்குத் தெரியாமல் இங்கே ஸஞ்சரிக்கமுடியாதென்று எண்ணுகிறேன். பலவான்க ளான ராக்ஷஸர்களுக்குத் தெரியாததுமுண்டோ? இந்த ரூபத்து டன் இங்கே நான் தங்கியிருந்தால் நிச்சயமாய்க் கொல்லப்படுவேன்; அப்பொழுது என் ப்ரபுவின் கார்யமும் கெடும். அவருண்டாய உத்

தேசம் கைகூடும்பொருட்டு ராத்ரிகாலத்தில் என் ஸ்வரூபத்தை மிகவும் சுருக்கிகொண்டு லங்கைக்குள் செல்லவேண்டும். அதுவரையில் எங்கேயாவது மலைக்குஹையில் ஒளிந்திருப்பேன். அஸ்தமித்த பிறகு பிறர் நெருங்கமுடியாத இந்த ராவணனுடைய ராஜதானியில் புகுந்து ஸகல வீடுகளிலும் தேடி ஸீதையைக் கண்டுபிடிக்கிறே"னென்று நிச்சயித்து அந்த வானர வீரன், ஸீதையைக் காண ஆவல்கொண்டு ஸூர்யாஸ்தமனத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்.

ஸூர்யன் அஸ்தமித்து ராத்ரியானவுடன், மாருதி தன்தேஹத்தைப் பூனையளவு சுருக்கிக்கொண்டார். அது பார்ப்பதற்கு ஆச்சர்யகரமாயிருந்தது. பிறகு ப்ரதோஷகாலத்தில் ஹனுமான் அங்கிருந்து கிளம்பி, அழகாய் அமைக்கப்பட்ட வீதிகளுள்ள அந்த லங்கையில் வேகமாய் புகுந்தார். அது வெள்ளி தங்கம் இவைகளால் செய்யப்பட்ட தூண்களாலும், தங்கமயமான ஜன்னல்களாலும் அலங்கரிக்கப்பட்ட அரண்மனைக் கூட்டங்களால் கந்தர்வநகரம் போல் தோன்றிற்று; (நானு ரத்னங்களிழைத்த கோபுரங்களாலும் அரண்மனைகளாலும் விளங்கும் நகரத்தைப்போல் ஆகாசத்தில் காணப்படும் மேகக்கூட்டம் கந்தர்வநகரமெனப்படும். அது தோன்றினல் யானை குதிரை மனிதர்கள் கணக்கில்லாமல் மடிந்து, பூமி அவர்களின் ரத்தத்தைக் குடிக்குமென்று சாஸ்த்ரம்). ஏழெட்ட்டு உப்பரிகைகளுள்ள வீடுகள் ஸ்படிகக் கல்லுகளால் அமைக்கப்பட்டுத், தங்கவேலை செய்யப்பட்ட தரைகளுடனும் வைடூர்யம் முதலிய ரத்னங்களும் முத்துகளும் கலந்த மாலைகளுடனும் ப்ரகாசித்தன. எங்கே பார்த்தாலும் ராக்ஷஸர்களின் வீட்டுவாசல்கள் தங்கத்தால் அலங்கரிக்கப்பட்டு லங்கையை ஜ்வலிக்கச்செய்தன. ஸீதையைக் கண்டுபிடிக்க ஆவல்கொண்ட மாருதி, மனஸாலும் நினைக்கமுடியாததாய், ஆச்சர்யகரமாய் விளங்கும் அந்த நகரத்தைக் கண்டு, அதில் ப்ரவேசிப்பதிலுள்ள கஷ்டத்தால் துக்கத்தையும், அதின் அழகைப் பார்த்து ஆச்சர்யத்தையும் அடைந்தார். ஆகாசத்தையளாவும் வெண்மையான விமானங்களாலும், விலையற்ற ஸுவர்ணத்தால் செய்யப்பட்ட ஜன்னல்கள், வாசற்படிகளாலும் மேன்மை பெற்றுப் பயங்கரமான பலமுள்ள ராக்ஷஸர்களால் சூழப்பட்டு ராவணேச்வரனல் ரக்ஷிக்கப்பட்ட அந்த நகரத்தைப் பார்க்க மாருதிக்கு ஆச்சர்யமுண்டாயிற்று. அந்த ஸமயத்தில் சந்த்ரனும் ஆஞ்ஜநேயருக்கு உதவி செய்பவன்போல், நிலவென்ற மேல்கட்டால் லோகத்தை வ்யாபித்து, நக்ஷத்ரக் கூட்டங்களுக்கு நடுவில் அனேக

மாயிரம் கிரணங்களுடன் உதித்தான். வலம்புரிச் சங்கின் காந்தியுடன், பாலையும் தாமரைத்தண்டையும்போன்ற சந்த்ரனைப் பார்த்து ஹநுமான், "இவ்வளவு காந்தியுடன் உதிக்கும் இவன் நிர்மலமான தடாகத்தில் ஆனந்தமாய் நீந்தும் ராஜஹம்ஸமோ" வென்று நினைத்தார்.

---

## ஸர்க்கம் 3.

### மாருதி லங்காதேவதையை ஜயித்தது.

நீருண்ட மேகம் ஆகாச வீதியில் தொங்குவதுபோலத் தோன்றும் லம்பமென்ற பெயர்பெற்ற ஸுவேல மலையின் மேலிருந்து மஹாபுத்திமானான ஹநுமான், லங்கையில் ப்ரவேசித்துத் தேடுவதற்கு வேண்டிய திறமையை அடைந்து, ராத்ரிகாலத்தில் அந்த நகரத்தில் புகுந்தார். அது அழகிய பூஞ்சோலைகள் சூழ்ந்து நீர்வளம் மிகுந்து, சரத்காலத்து மேகங்களையொத்த வீடுகளால் விளங்கிற்று. ஜனங்களுடைய கோஷம் ஸமுத்ரம் கர்ஜிப்பதுபோலிருந்தது. ஸமுத்ரக்காற்று ஸுகமாய் எப்பொழுதும் வீசிக்கொண்டிருந்தது. குபேரனுடைய அளகாபுரியைப்போல் நன்றாய் போஷிக்கப்பட்ட சதுரங்கபலத்தை உடையது. அழகிய தோரணவாசல்களில் மதயானைகள் கட்டப்பட்டிருந்தன. வெண்மையான தோரணங்கள் வாசலில் அமைக்கப்பட்டிருந்தன. ஸர்ப்பங்களுடைய ராஜதானியான போகவதீயைப் போல் நன்றாய் ரக்ஷிக்கப்பட்டது. உயர்ந்த வீடுகளின் உச்சிகளில் மின்னற்கொடிகள் பாய்ந்துகொண்டிருந்தன. அவை நக்ஷத்ரமண்டலத்தை அளாவியிருந்தனவன்றோ? காற்று மிருதுவாயும் ஸுகமாயும் வீசிக்கொண்டிருந்தது. இந்த்ரனுடைய அமராவதீயோவென்று மலைக்கும்படியிருந்தது. பொன்னால் செய்த பெரிய மதிள்சுவரால் சூழப்பட்டிருந்தது. கொடிகளிலும் த்வஜங்களிலும் கட்டப்பட்டிருந்த கிங்கிணிகள் மதுரமாய்ச் சப்தித்துக்கொண்டிருந்தன. இவைகளைப் பார்த்து அடங்காத ஆச்சர்யங்கொண்டு, ஹநுமான் தங்கப்ராகாரத்திற்கு ஸமீபத்தில் சென்றார். தங்கமயமான கதவுகளும், வைடூர்யங்களிழைத்த மேடைகளும், நவரத்னங்களாலும் ஸ்படிகத்தாலும் முத்துக்களாலும் விசித்ரமாய் வேலை செய்யப்பட்ட தரைகளும், உருக்கி ஓடவிட்ட தங்கத்தால் அடைக்கப்பட்ட மதயானைகளும், வைடூர்யப் படிக்கட்டு

களுடனும் ஸ்படிகப் புழுதியுடனும் ப்ரகாசிக்கும் வெள்ளியால் செய்யப்பட்ட மேல் மாடங்களும் ஆகாசத்தையளாவும் அழகிய ஸபைகளும், க்ரௌஞ்சம் மயில் ராஜஹம்ஸம் முதலிய பக்ஷிகளும் வாத்யங்களும் பாட்டும் ஆபரணங்களும் இனிமையாய்ச் சப்திப்பதும் அமராவதிபோவென்று பார்ப்பவர்கள் மயங்கும்படி அந்த நகரம் ஆகாசத்தில் பறந்துபோவதுபோலிருப்பதும் ஆஞ்ஜநேயருக்கு மென்மேலும் ஸந்தோஷத்தையும் ஆச்சர்யத்தையும் விருத்தி செய்தன.

விருப்பக்கூடிய ஸகல ஐச்வர்யத்தாலும் விளங்கும் அந்த ராக்ஷஸ ராஜதானியைப் பார்த்து "என்ன ஆச்சர்யம்! இந்த லங்கையை எந்தச் சத்ருவாவது கண்ணெடுத்துப் பார்க்கக்கூடுமா? எக்காலத்திலும் ஆயுதபாணிகளாக இதை ரக்ஷிக்கும் ராவணனையன்யங்கள் ஸாமான்யமா? குமுதன் அங்கதன் ஸுஷேணன் மைந்தன் த்விவிதன் இவர்களுக்கே இந்த நகரம் தெரிந்திருக்கும்; ஆனல் ஸுக்ரீவனும் குசபர்வனும் கேதுமாலனும் நானுமே இதில் ப்ரவேசிக்க முடியு"மென்று கவலைகொண்டார். பிறகு ராமனுடைய பராக்ரமத்தையும் லக்ஷ்மணனுடைய வீர்யத்தையும் நினைத்து அளவற்ற ஸந்தோஷமடைந்தார். லங்கையென்ற ஸ்த்ரீக்கு ரத்னங்களிழைத்த ப்ராகாரம் வஸ்த்ரம், யானை குதிரை பசுக்களிருக்கும் சாலைகளே செவிக்கு ஆபரணங்கள்; மதிள்களிலுள்ள ஆயுத சாலைகளே ஸ்தனங்கள்; அந் நகரத்தில் ரத்னதீபங்களாலும் ஜ்வலிக்கும் வீடுகளாலும் இருட்டென்பதே தெரியாது.

இப்படி அநேக அற்புதமான காக்ஷிகளைப் பார்த்துக்கொண்டு மாருதி போகையில், அந்த நகரத்தைக் காக்கும் தேவதை, ஹனுமான் அந்த நகரத்தில் ப்ரவேசிக்க முயல்வதைக் கவனித்து, விகாரமான ஸ்த்ரீ ரூபத்துடன் அவருக்கெதிரே தோன்றி கோரமான குரலுடன் "நீ யார்? காட்டில் வஸிக்கும் குரங்கு இங்கே வந்த காரணமென்ன? உன் ப்ராணன் போவதற்குமுன் உண்மையைச் சொல். மூடா! க்ரூரராக்ஷஸர்கள் இடைவிடாமல் இதைக் காத்து வருகிறார்கள்; ராவணேச்வரன் இதைத் தன்னுயிரைப்போல் ரக்ஷிக்கிறான். நானே இந்த நகரத்தைக் காக்கும் தேவதை; நீ இதற்குள் ஸுலபமாக ப்ரவேசிக்கலாமென்று வந்தாயோ?"வென்று அதட்டினாள். அதற்கு மாருதி "பெண்ணே! நீ கேட்டதற்கு உண்மையான மறுமொழி சொல்லுகிறேன். ஆனல் நீ யார்? விகார ரூபத்துடன் இந்த நகரத்து வாசலில் நின்றுகொண்டு என்னைத் தடுத்து அதட்டு

கிறு"ரென்ருர். லங்காதேவதை, தன் கேள்விக்குப் பதில் சொல்லாமல் தன்னை எதிர்த்துக் கேட்ட ஹனுமானிடத்தில் கோபங்கொண்டு "கேளடா துர்க்கே! ராக்ஷஸ ராஜனுன ராவணேச்வரனுடைய கட்டளைப்படி இந்த நகரத்தைக் காக்கிறேன். என்னை எவரும் எதிர்க்க முடியாது. என்னை அலக்ஷ்யஞ்செய்து நீயும் இந்த நகரத்தில் ப்ரவேசிக்க முடியுமோ? இதோ உன்னுயிரை வாங்குகிறேன் பார். நானே லங்காபுரி; எந்தத் திக்கிலும் இதைக் காத்து வருகிறே"னென்ருள். அதைக் கேட்டு ஹனுமான் அவளை ஜயிக்கப் போதுமான சக்தியை மேற்கொண்டு, பெரிய மலையைப்போல் அசையாமல் நின்று, விகாரமான ஸ்த்ரீரூபத்தையுடைய அந்தத் தேவதையைப் பார்த்து, "இந்த லங்கையையும் இதிலுள்ள வீடுகளையும் அரண்மனைகளையும் கோட்டைகளையும் வனங்களையும் தோட்டங்களையும் சோலைகளையும் நன்ருகப் பார்க்கவேண்டுமென்று எனக்கு மிகுந்த ஆசையுண்டு. என்னிஷ்டப்படி ஸகல ஆச்சர்யங்களையும் பார்க்க வந்திருக்கிறே"னென்று அதிசாதுர்யமாகப் பதில் சொன்னர். உடனே லங்காதேவதை, 'மூடா! என்னை ஜயித்தபிறகல்லவா நீ இந்த நகரத்தில் அடிவைக்கப் போகிருய். பிறகு ராவணேச்வரன் பார்த்துக்கொள்வா'ரென்று கடுமையாக அதட்டினுள். அதற்கு ஹனுமான் "பெண்ணே! இருக்கட்டும்; இந்த நகரத்தை நன்ருகச் சுற்றிப் பார்த்துவிட்டுத் திரும்பிப்போக நிச்சயித்திருக்கிறே"னென்று சாந்தமாகப் பதில் சென்னர்.

உடனே அந்த நகரதேவதை பயங்கரமாகக் கர்ஜித்து, அவரை ஓங்கி அறைந்தாள். அந்த வானரவீரன் கோபங்கொண்டு இடிபோல் சிரித்து, ஸ்த்ரீயை வலதுகையால் அடிப்பது தனக்குக் குறைவாகையால் இடதுகைவிரல்களை மடக்கி அவளைக் குத்தினர். அதே காரணத்தால் அவளிடத்தில் மிகவும் கோபிக்கவில்லை. அந்தக் குத்தைத் தாங்கமுடியாமல் அந்த ராக்ஷஸி தேஹம் கலங்கி, விகாரமான முகத்தையும் கண்களையுமுடையவளாகப் பூமியில் விழுந்தாள். ஹனுமான் அதைப் பார்த்து அவள் ஸ்த்ரீயென்பதை நினைத்து இரங்கினர். அப்பொழுது லங்காதேவதை, பயத்தால் நடுங்கி, வார்த்தைகள் குழறக் கர்வமழிந்து, "வானர ச்ரேஷ்டா! கிருபைசெய்யும். மஹானுபாவ! என்னைக் காப்பாற்றும்; தைர்யம் பலம் முதலிய உத்தம குணங்களையுடைய வீரர்கள் ஸ்த்ரீகளைக் கொல்லார்கள். நானே இந்த லங்காபுரி. உமது பராக்ரமத்தால் இன்று ஜயிக்கப்பட்டேன்; வேறொரு விஷயத்தையும் சொல்லுகிறேன், கேளும்; இது ஸத்யம்,

முன்காலத்தில் ப்ரஹ்மதேவர் என்னைப்பார்த்து. எந்த ஸமயத்தில் ஒரு வானரன் பராக்ரமத்தால் உன்னை ஜயிப்பானோ அப்பொழுது ராக்ஷஸ குலத்திற்குப் பெரும் பயம் நேரு'மென்று வரங்கொடுத்திருக்கிறார். இன்று உம்மைப் பார்த்தால் அந்த ஸமயம் வந்துவிட்டதென்று தெரிகிறது. ப்ரஹ்மாவின் வார்த்தை இரண்டுண்டோ? துராத்மாவான ராவணனும் ஸகல ராக்ஷஸர்களும் ஸீதையின் பொருட்டு மடிவதற்கு காலம் நெருங்கியிருக்கிறது. வானரோத்தம! ராவணனால் காக்கப்பட்ட இந்த லங்கையில் உன்னிஷ்டப்படி ப்ரவேசித்து, வேண்டிய கார்யங்களைச் செய்யும். அநேக சாபங்களால் கொல்லத்தப்பட்ட இந்த நகரத்தில் ப்ரவேசியும்; இந்த ராக்ஷஸ ராஜதானியில் உமது இஷ்டப்படி எல்லாவிடங்களிலும் ஸீதையைத் தேடு''மென்றாள்.

ஸர்க்கம் 4.

## மாருதி ஸீதையைத் தேடினது.

மஹாதேஜஸுள்ள அந்த வானர வீரன், எல்லா ரூபங்களையும் எடுக்கக்கூடிய அந்த லங்காதேவதையை தன் பராக்ரமத்தால் வென்று, ''சத்ருக்களை ஜயிக்க விரும்புகிறவன், அவனுடைய நகரத்திலாவது க்ராமத்திலாவது வீட்டிலாவது நுழையும்பொழுது, வழியில்லாதவிடத்தில் ப்ரவேசிக்கவேண்டிய'' தென்ற நீதிசாஸ்த்ரத்தின்படி, மதிள் சுவரில் வாசலில்லாதவிடத்தில் தாண்டிச் சென்று, ''ப்ரயாணம் செய்யும் பொழுதும் தன் வீட்டில் ப்ரவேசிக்கும்பொழுதும்; விவாஹ ஸமயத்திலும் சத்ருநகரத்தில் புகும்பொழுதும் வலதுகாலை முந்தி வைக்கவேண்டு'' மென்ற பிருஹஸ்பதி நீதிப்படி ராக்ஷஸர்களுடைய தலையில் அடிவைத்து மிதித்ததுபோல், தனக்கு அளவற்ற ஜயம் கிடைக்கவேண்டியதென்று தன வலது காலை முதலில் வைத்து லங்கையில் புகுந்தார்.

பரிமளமுள்ள புஷ்பங்கள் தூவிய ராஜவீதிவழியாக அந்த நகரத்தை நான்கு புறங்களிலும் சுற்றிப்பார்க்கையில், ஜனங்கள் ஸந்தோஷமாகச் சிரிக்கும் சப்தமும் வாத்ய கோஷமும் எங்கும் நிறைந்திருந்தது. வஜ்ரத்தைப்போலும் மாவெட்டியைப் போலும் கட்டப்பட்ட வீடுகள் வைமணிகளிழைத்த ஜன்னல்களுடன் ஆகாசத்

தில் மேசக்கூட்டங்களைப்போல் ப்ரகாசித்தன; பத்மம் ஸ்வஸ்திகம் வர்த்தமானமென்ற பலவித வீடுகள் ஸகல அலங்காரங்களுடன் வெளுத்த மேகங்களைப்போல் லங்கையை விளங்கச் செய்தன. ஸுக்ரீவனுக்கும் ராமனுக்கும் ஹிதத்தைச் செய்யப்புகுந்த வானரவீரன் விசித்ரமான மாலைகளால் அலங்கரிக்கப்பட்ட லங்கையைச் சுற்றிப் பார்த்து, "எவரும் ப்ரவேசிக்கமுடியாத இந்த நகரத்தில் ஸுலபமாக நுழைந்து, எங்கும் தாராளமாக நான் ஸஞ்சரிக்கிறபடியால், என் ப்ரபுக்களின் கார்யம் நிச்சயமாகக் கைகூடுமென்பதற்கு இதே சகுன''மென்று ஸந்தோஷித்தார். வீடுவீடாகத் தேடிக்கொண்டு போகையில் பலவிதமாக அமைக்கப்பட்ட மாடமாளிகைகளைக் கண்டார். மார்பு கழுத்து தலையென்ற மூன்று ஸ்தானங்களிலுண்டான மந்த்ர மத்ய தாரமென்ற ஸ்வரங்களால் விளங்கும் மதுரமான கானத்தை மதங்கொண்ட ஸ்த்ரீகள் பாடிக்கொண்டிருந்தார்கள்; அதைக் கேட்ட மாருதி, ஸ்வர்க்கத்தில் அப்ஸரஸ்கள் பாடுகிறார்களோவென்று ப்ரமித்தார். ப்ரபுக்களின் வீடுகளில் ஸ்த்ரீகளின் கால்சிலம்புகளும் அரைநூல்மாலைகளும் மதுரமாகச் சப்திப்பதும், காலில் தரிக்கும் ஆபரணங்கள் மாடிப்படிகளில் படுவதாலுண்டாகும் சப்தமும் கேட்கப்பட்டன. சில வீடுகளில் வீரர்கள் தோள்தட்டி ஸிம்ஹநாதஞ் செய்தார்கள். சில வீடுகளில் ராக்ஷஸர்கள் வேதமோதிக் கொண்டிருந்தார்கள். சிலர் மந்த்ரங்களை ஜபித்துக்கொண்டிருந்தார்கள். சிலர் ராவணனுடைய கீர்த்தியைப் புகழ்ந்து கர்ஜித்தார்கள். அளவற்ற ராக்ஷஸ ஸைன்யங்கள் ராஜ மார்க்கத்தைச் சுற்றித் தங்கியிருந்தன. மந்த்ரி ப்ரதானிகள், நகரத்திலுள்ளவர்களின் ரஹஸ்ய விருத்தாந்தங்களை அறிய அனுப்பின பல தூதர்கள் லங்கையின் நடுவிலிருந்த ஸைன்யங்களுக்குள் நடமாடிக்கொண்டிருந்தார்கள். யாகதீக்ஷை பூண்டவர்களும் நீண்ட ஜடைகளைத் தரித்த தபஸ்விகளும், வ்ரதங்களை முடித்து க்ஷவரஞ்செய்து கொண்டவர்களும், அல்பமந்த்ரங்களை ஸித்திசெய்யப் பசுவின் தோலைத் தரித்தவர்களும், வஸ்த்ரமில்லாத திகம்பர ஸந்யாஸிகளும், ஸகல சத்ருக்களையும் இடையூறுகளையும் நாசஞ்செய்ய தர்ப்பைக்கட்டுகளையே ஆயுதமாகவுடையவர்களும், கோரமான க்ருத்யை சக்தி முதலியவைகளை ஸ்ருஷ்டித்துச் சத்ருக்களைக் கொல்வதற்கு எப்பொழுதும் ஹோமங்களைச் செய்துகொண்டிருப்பதால் ஹோமகுண்டத்தையே ஆயுதமாகவுடையவர்களும் அங்கங்கே காணப்பட்டார்கள், எல்லா ஆயுதங்களையுந் தரித்தவர்களும், ஒற்றைக் கண்ணுள்ளவர்களும், ஒற்றைக் காதுள்ளவர்களும், பெரும் தொந்திக்காரர்

களும், ஸ்தனமுள்ளவர்களும், கோர ரூபமுள்ளவர்களும், வளைந்த முகமுடையவர்களும், நெட்டையானவர்களும் குள்ளர்களும், வில் கத்தி பீரங்கி இரும்புலக்கை முதலிய ஆயுதங்களையுடையவர்களும், விசித்ரமான கவசமுடையவர்களும், மிகவும் பருக்காதவர்களும், மிகவும் இளைக்காதவர்களும், அதிக நீளமும் அதிக குட்டையுமில்லாதவர்களும், அதிக வெளுப்பும் அதிகக் கறுப்புமில்லாதவர்களும், அதிகக் கூனலும் அதிகக் குள்ளமுமில்லாதவர்களும், விகார ரூபிகளும் அநேக ரூபிகளும், அழகிய ரூபமுள்ளவர்களும் மேன்மையான காந்தியுள்ளவர்களும், த்வஜம் கொடி சக்தி கத்தி பாசம் முதலியவைகளைத் தரித்தவர்களும், திவ்ய சந்தனம் மாலைகள் ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்டுப் பல வேஷங்களுடன் ஸ்வேச்சையாகத் திரிபவர்களும் கூர்மையான சூலங்களையும் வஜ்ரங்களையுமே ஆயுதமாகவுடையவர்களும், ஆயுதமில்லாமலேயே யுத்தஞ் செய்யும் மஹாபலவான்களும், நடுக்கோட்டையில் எண்ணிருந்து அணிவகுத்திருக்கும் ராவணனுடைய மூல்பல ஸைன்யமும் ஆஞ்ஜநேயருடைய கண்ணில் பட்டார்கள்.

பிறகு விலையற்ற ஸ்வர்ணத்தால் அலங்கரிக்கப்பட்ட தோரணத்தையுடைய ராவணனுடைய அரண்மனை காணப்பட்டது. அது த்ரிகூட சிகரத்தில் கட்டப்பட்டு, தாமரைகள் நிறைந்த ஆழமான அகிழ்களாலும், ஆகாசத்தில் மறைந்த மதில்களாலும் சூழப்பட்டது. தேவலோகத்தைப்போல் தேவர்கள் வஸிக்கத் தகுந்ததாய் திவ்ய நாதங்களாலும், குதிரைகள் கனைப்பதாலும், யானைகள் வீறிடுவதாலும், ஆபரண சப்தங்களாலும், பல்லக்கு முதலிய வாஹனங்களாலும், விமானங்களாலும், லக்ஷணங்கள் பொருந்திய உத்தம அச்வங்களாலும், வெண்மையான மேகங்களையொத்த நான்கு தந்தங்களுள்ள கஜங்களாலும் மதங்கொண்ட மிருகங்களாலும பக்ஷிகளாலும் விளங்கிற்று. அநேகமாயிரம் கோரமான ராக்ஷஸர்கள் வாசல்களில் ஜாக்ரதையாய்ப் பாரு கொடுத்திருந்தார்கள். இவ்விதமான ராக்ஷஸாதிபதியின் வீட்டில் வாயுபுத்ரன் பயமில்லாமல் நுழைந்தார். விலையற்ற பொன் தங்கம் ஸ்வர்ணம் முதலியவைகளால் செய்யப்பட்ட உன்னதமான சுவர்களாலும், நவரத்னங்களிழைத்த விடுதிகளாலும், வைரமேறின அகில்-சந்தனம் முதலிய பரிமளங்களாலும் விளங்கும் ராவணனுடைய அந்தப்புரத்தில் மாருதி புகுந்தார்.

---

ஸர்கம் 5

## சந்த்ரோதய வர்ணனை.

பிறகு அளவற்ற காந்தியுள்ள சந்த்ரன் ஸகல திக்குகளிலும் நிலவைப் பரவச்செய்துகொண்டு, பசு மந்தையில் யதேச்சை யாக உலாவும் மதங்கொண்ட காளையைப்போல் ஆகாசத்தின் நடுவில் ப்ரகாசிப்பதை மஹாபுத்திமானான மாருதி பார்த்தார். ஸகல ப்ராணிகளுக்கும் ஆனந்தத்தைக் கொடுப்பதால் சந்த்ரன் பாபங்களின் பலமான துக்கத்தை அழிப்பவர்; கடலைப் பொங்கச்செய்பவர். ஸகல ப்ராணிகளையும் விளங்கச்செய்பவர்; இவ்விதமான சந்த்ரன் ஆகாசவீதியில் போய்க்கொண்டிருப்பதை ஹனுமான் கண்டார். லோகத்தில் மந்திர பர்வதமும், ப்ரதோஷகாலத்தில் ஸமுத் ரமும், தடாகங்களில் சொந்தாமரையும் மிகுந்த காந்திபெற்று விளங் குவது போல், சந்த்ரனிடத்தில் காந்தியும் தேஜஸும் விசேஷமாக விளங்கின. நிலவால் வெளுத்த ஆகாசத்தில் ஸஞ்சரிப்பதால் வெண் மையான காட்டில் விளையாடும் ராஜ ஹம்ஸத்தைப்போலும், வெண் மையான மந்தாகிரியின் குஹையிலிருக்கும் ஸிம்ஹத்தைப் போலும், கறுத்த மதயானையின் மேலிருக்கும் யுத்தவீரனைப்போ லும், சந்த்ரன் ஆகாசத்தில் ப்ரகாசித்தார். கூர்மையான கொம்புகளை யுடைய காளையையும், பெரிய மலையின் வெளுத்த சிகரத்தையும் தங் கப் பூண்கட்டின தந்தங்களையுடைய மதயானையைப் போல் சந்த்ரன் ஸகலகலைகளுடன் விளங்கினான். பனித்துளிகளான சேறு நீங்கித், தன் தேஜஸால் சுக்ரன் ப்ருஹஸ்பதி முதலிய க்ரஹங்களை மறைத் ததால் சுத்தமாக ப்ரகாசித்து, மிகவும் வெளுத்திருப்பதால் தன் கள ங்கம் நன்றாக வெளிப்பட்டுச் சந்திரன் ஒப்பில்லாத மஹிமையுடன் காணப்பட்டான். குகைக்கு வெளியிலுள்ள கற்பாறையில் உட்கார ந்திருக்கும் ஸிம்ஹத்தைப் போலும், பெரிய யுத்தகளத்தில் ஸஞ்சரி க்கும் மதயானையைப் போலும் ராஜ்யாபிஷேகம் பெற்ற அரசனைப் போலும் சந்த்ரன் ப்ரகாசிதான்.

மிகுந்த காந்தியுடன் சந்த்ரன் உதித்ததால் இருள் நீங்கிற்று; மாம்ஸத்தைப் புஜிக்கும் ராக்ஷஸர்கள் வெளியில் ஸஞ்சரிக்கவாரம் பித்தார்கள்; அழகிய ஸ்த்ரீகள் கோபமும் கர்வமும் ...

விட்டார்கள்; ஸ்வர்க்கத்தைப்போல ஸகலவிதமான ஆநந்தத்திற்குக் காரணமான காலம் நெருங்கிற்று. வீணை முதலிய வாத்யங்களின் நாதம் மதுரமாகக் கேட்கப்பட்டது; பதிவ்ரதைகள் தங்கள் நாயகர்களுடன் தூங்கினார்கள்; ராத்ரியில் ஸஞ்சரிக்கும் ஜந்துக்களும் ராக்ஷஸர்களும் ஆச்சர்யகரமான க்ரூர ஸ்வபாவத்துடன் விளையாட ஆரம்பித்தார்கள். ராக்ஷஸர்களின் வீடுகளிலுள்ள ஜனங்கள் மது பானத்தால் மயங்கிச், செய்யும் தொழில்களை மறந்தார்கள். யானை குதிரை ரதம் முதலிய வாஹனங்களும் ஆஸனங்களும் நிறைந்திருந்தன. வீரலக்ஷ்மி எங்கும் விளங்கிற்று.

வீடுகளில் சிலர் ஒருவரை யொருவர் பரிஹாஸஞ்செய்து கொண்டிருந்தார்கள்; சிலர் நீண்டு பருத்த கைகளை ஒருவர் மேலொருவர் போட்டார்கள்; குடிமயக்கத்தால் சிலர் பிதற்றினார்கள்; சிலர் ஒருவரையொருவர் அதட்டினார்கள்; சிலர் வீராவாதஞ்செய்து மார்பு தட்டினார்கள்; சிலர் கைகால்களைத் தங்கள் நாயகிகளின் மேல் போட்டார்கள்; சிலர் அவர்களின் ப்ரீதியை ஸம்பாதிக்கப் பல வேஷங்களைத் தரித்தார்கள்; சிலர் பெரிய வில்லுகளை எடுத்து நாணேற்றுகிறார்கள்; சில ஸ்த்ரீகள் நேர்த்தியான பரிமளத்ரவ்யங்களைப் பூசிக்கொள்ளுகிறார்கள்; சிலர் அயர்ந்து நித்திரை செய்து விழித்துக் கொண்டு நாயகனுடன் கூடி மறுபடியும் தூங்குகிறார்கள்; சில ரூபவதிகள் நாயகர்களுடன் ஸுகத்தை அனுபவித்து ஸந்தோஷமாகச் சிரித்து விளையாடிக்கொண்டிருக்கிறார்கள்; சிலர் புருஷனிடத்தில் கோபங்கொண்டு பெருமூச்சு விடுகிறார்கள். மேகங்களைப்போல் கர்ஜிக்கும் யானைகளாலும், பிறரால் கொண்டாடப்பட்ட நல்லொழுக்கமுள்ளவர்களாலும், தங்களுக்கெதிரிகள் கிடைக்காததால் பெருமூச்சுவிடும் வீரர்களாலும் அந்த லங்காபுரி, மஹா ஸர்ப்பங்கள் சீறிக்கொண்டிருக்கும் பெரிய மடுவைப்போல் விளங்கிற்று.

மேன்மையான புத்தியுடையவர்களையும் ப்ரியமாகப் பேசுகிறவர்களையும், ஆஸ்திக புத்தியுள்ளவர்களையும், லோகத்தில் விசேஷ கீர்த்தி பெற்றவர்களையும், பலவித ரூபங்களையும் ஆசாரங்களையுமுடையவர்களையும், அழகான பெயரையுடைய அநேக ராக்ஷஸர்களையும் மாருதி பார்த்துக்கொண்டே போனார். அழகிய ரூபமுடையவர்களையும் பலவித குணங்களை யுடையவர்களையும், தங்களுடைய குணங்களுக்குத் தகுந்த ரூபத்தையுடையவர்களையும், சில ஸ்திரீ

கள் தேஹ காந்தியால் எங்கும் விளங்கச் செய்வதையும், சிலர் அழ கில்லாமல் க்ருபிகளாயிருப்பதையும் கண்டார். விவாஹ பருவத்தை யடைந்தவர்களேயும் மஹா பதிவ்ரதைகளேயும், நாயகனிடத்திலும் மதுபானத்திலும் ஆசைகொண்டவர்களேயும், மஹிமையுள்ள நக்ஷத்ர கணங்களேப் போன்ற ராக்ஷஸ ஸ்திரீகளேயும் கண்டார். தேஹ காந்தியால் ஜ்வலிப்பவர்களேயும், வெட்கம் மேற்கொண்டவர்களேயும், ஸந்தோஷம் மேலிட்டவர்களேயும் ராத்ரி காலத்தில் புஷ்பத்தால் மூடப்பட்ட பெண் பக்ஷியைப்போல் நாயகனே அணேந்துகொண்டு தூங்குகிறவர்களேயும் பார்த்தார். வேறு சில தர்ம புத்தியுள்ள பத்னிகள் பர்த்தாக்களின் ப்ரீதிக்குப் பாத்ரமாகி, அவர்களிடத்தில் ஆசைகொண்டு, மாளிகைகளின் மேல் நிலவில் அவர்களுடைய மடியில் உட்கார்ந்திருப்பதையும் கண்டார். மேற் போர்வை விலகித் தூங்கும் சில பெண்கள் தங்கக் கொடிகளேப் போலும், சிலர் உருக்கியோடவிட்ட உத்தமமான தங்கம்போலும், கணவனே விட்டுப் பிரிந்த சிலர் வெளுத்த சந்த்ரனேப்போலும் காணப்பட்டார்கள். சிலர் தங்கள் ஆசை நாயகர்களேத் தேடிப்போய், அவர்களுடன் ஆனந்தமாக அனுபவிப்பதையும் பார்த்தார். பூர்ண சந்த்ரனேப்போல் ப்ரகாசிக்கும் முகங்களேயும், வளேந்த இமை மயிர்களால் அலங்கரிக்கப்பட்ட நேத்ரங்களேயும், மின்னற் கொடிகள் போன்ற ஆபரணங்களேயும் உற்றுப் பார்த்தார். ஆனல் நிகரில்லாத ரூபவதியாகித் தர்ம மார்க்கத்தை விட்டு நழுவாத ஜனக மஹாராஜனுக்குப் புத்ரியாகப் பிறந்து, நன்ருக வளர்ந்து புஷ்பங்களால் விளங்கும் கொடியைப்போல் லாவண்யமுடையவளாகி, லோகநாதனன் ராமனுக்குத் தகுந்த அத்புதமான ரூபத்துடன் அவதரித்த ஸீதையை மாத்ரம் காணவில்லே. அனுதி காலமாகவுள்ள பதிவ்ரதா தர்மத்தை யனுஷ்டித்து, ராமனேப் பார்க்காமல் உயிர் வைத்துக்கொள்வதில்லே யென்று நிச்சயித்து, அவரிடத்தில் நீங்காத ஆசைகொண்டவளாகி, லக்ஷ்மீ ஸமேதரான அவருடைய மனஸிலேயே குடிபுகுந்தவளாகி, உத்தம ஸ்திரீகளுக்குச் சிரோமணியாக விளங்கும் ஜானகியை மாத்ரம் காணவில்லே. விரகாக்னியால் கொளுத்தப்பட்டு, இடைவிடாமல் பெருகும் கண்ணீர் நெஞ்சை யடைக்க, முன்பு ராமனுடன் ஸுகமாக வஸிக்கும் பொழுது விலேயற்ற ச்ரேஷ்டமான ஹாரங்களே அணிந்து, ஸந்தோஷத்தால் இமைமயிர் மலர்ந்து, குயில் போன்ற இனிமையான குரலுடன், வனத்தில் மேகத்தைக்கண்டு ஆனந்தத்தால் தோகையை விரித்தாடும் மயிலேப்போன்ற ஜானகியை மாத்ரம் காணவில்லே.

மங்கின கிரணங்களையுடைய சந்த்ரனைப்போல் இளைத்து, புழுதி படிந்த தங்கப்ரதிமையைப்போல் அழுக்கடைந்து அம்பு பாய்ந்த காயம் மேலே மாத்ரம் ஆறி உள்ளே அம்பும் புண்ணு மிருந்து உபத்ரவிப்பதுபோல் துக்கமென்ற நெருப்பு ஹ்ருதயத்தி லெரிக்கப் பெருங்காற்றாலடிக்கப்பட்டுச் சிதறின மேகங்களைப்போல், தன்னெண்ணங்களெல்லாம் பாழான ஸீதையை மாத்ரம்பார்க்கவில்லை. நெடுநேரம் தேடியும், லோகநாதனும் பேசும்திறமையுள்ளவர்களுக்குள் ச்ரேஷ்டனுமான ராமனுடைய தர்ம பத்னியைக் காணாமல் புத்திமயங்கினவனைப்போல் மிருந்த கவலை கொண்டார்.

---

## ஸர்க்கம் 6.

## வீடுகளில் தேடினது

தேஜஸ்வியான மாருதி ஒன்றும் தோன்றாமல் சற்றுநேரம் விமானங்களின்மேல் உட்கார்ந்திருந்து, பிறகு தைர்யங்கொண்டு காமரூபியாகி, மறுபடியும் லங்காபுரியை ஜாக்ரதையாகத் தேட வாரம்பித்து, ராவணேச்வரனுடைய அரண்மனைக்கு வந்து சேர்ந்தார். அது ஸூர்யகாந்தியுள்ள மதிள்சுவர்களால் சூழப்பட்டு, ஸிம்ஹங்கள் பெருங் காட்டைக் காப்பதுபோல் கோரராக்ஷஸர்களால் ரக்ஷிக்கப்பட்டிருந்தது. விசித்ரமான வெள்ளித் தோரணங்கள், தங்கவேலை செய்யப்பட்டு வாசல்களில் விளங்கின. அழகிய அறைகளும் வாசற்படிகளும் அமைக்கப்பட்டிருந்தன. கணக்கில்லாத யானைகளும், சோர்வில்லாத காலாள் வீரர்களும், கொல்லமுடியாத உத்தமமான போர்க் குதிரைகளும், ரதவீரர்களும், அதை இமைகொட்டாமல் காத்துக்கொண்டிருந்தார்கள். தங்கம் வெள்ளி தந்தம் முதலியவைகளால் அலங்கரிக்கப்பட்டு, ஸிம்ஹம் புலி முதலியவைகளின் தோல்களால் பரப்பப்பட்டு, மேகங்களைப்போல் சப்தம் செய்யும் உத்தம ரதங்கள் எப்பொழுதும் ஸஞ்சரித்துக்கொண்டேயிருந்தன. நாநாரத்னங்களாலும் உத்தமமான ஆஸனங்களாலும் பாத்ரங்களாலும் அதுநிறைந்திருந்தது. சிறந்த மஹாரதர்களாலும் மஹாரதர்களின் சப்தத்தாலும் விளங்கிற்று. அநேகமாயிரம் அபூர்வமான அழகிய மிருகங்க

ளும் பக்ஷிகளும் அவைகளுக்குத்தகுந்தபடி வளர்க்கப்பட்டு நாற்புறங்களிலும் ஸஞ்சரித்துக்கொண்டிருந்தன. நன்றாகப் பழக்கப்பட்ட எல்லைகாப்பவர்களும் ராக்ஷஸர்களும் அதைத் தங்களுயிரைப்போல் பாதுகாத்துக்கொண்டிருந்தார்கள். அழகிய ஸ்த்ரீகளால் எங்கும் நிறைந்து, அவர்களுடைய ஸந்தோஷத்வனியாலும், அவர்களணிந்த ச்ரேஷ்டமான ஆபரணங்களின் ஓசையாலும் ஸமுத்ரம் பொங்கிக் கர்ஜிப்பதுபோலிருந்தது. ஆசர்களும் தகுந்த ஸகல பொருள்களும் நிறைந்து, சந்தனம் அகில் முதலிய வாஸனைச் சரக்குகளால் மணம் வீசி, ஸிம்ஹங்கள் நிறைந்த பெருங்காட்டைப்போல் மஹாஜனங்களால் அலங்கரிக்கப்பட்டிருந்தது. அங்கே பேரீ மிருதங்கம் சங்கம் முதலிய வாத்யங்கள் எப்பொழுதும் முழங்கிக்கொண்டிருந்தன; ஒவ்வொரு நாளும் கந்தம் புஷ்பம் தூபம் முதலியவைகளால் பூஜைசெய்யப்பட்டது; அமாவாஸ்யை பௌர்ணிமை முதலிய பர்வகாலங்களில் அங்கே ஹோமங்கள் விதிப்படி நடக்கும். ராக்ஷஸர்கள் தங்கள் ப்ரபுவின் வீடென்று அதைப் பூஜித்து வந்தார்கள். ஸமுத்ரத்தைப் போல் கம்பீரமாகக் கோஷித்துக்கொண்டிருந்தது. விலையற்ற ரத்னங்களிழைத்த பாத்ரங்களும் ஆபரணங்களும் எங்கும் காணப்பட்டன. இப்படிக் காந்திமிகுந்த யானை குதிரை ரதங்களால் நிறைந்து ப்ரகாசிக்கும் அந்த அரண்மனையைப் பார்த்து ஆஞ்ஜநேயர், இது லங்கைக்குப் பூஷணமென்றே நினைத்து ஆச்சர்யமடைந்தார். ராவணனுடைய அரண்மனையின் ஸமீபத்தில் போய் ராக்ஷஸர்கள் வஸிக்கும் வீடுகளையும் தோட்டங்களையும் ஒவ்வொன்றாகப் பார்த்துக்கொண்டே கொஞ்சமேனும் பயமில்லாமல் உப்பரிகைகளில் ஸஞ்சரித்தார்.

இப்படி வெளிப்ராகாரத்திற்குள் ப்ரதானமான ராக்ஷஸர்களும் ராவணனுடைய புத்ரர்களும் ஸஹோதரர்களும் வஸிக்கும் வீடுகளில் தேடிப்பார்த்து, ப்ரஹஸ்தன் மஹாபார்ச்வன் கும்பகர்ணன் விபீஷணன் மஹோதரன் விருபாக்ஷன் வித்யுத்ஜிஹ்வன் வித்யுன்மாலி வஜ்ரதம்ஷ்ட்ரன் சுகன் ஸாரணன் இந்த்ரஜித் ஜம்புமாலி ஸுமாலி ரச்மிகேது ஸூர்யசத்ரு, வஜ்ரகாயன் தூம்ராக்ஷன் ஸம்பாதி வித்யுத்ரூபன் கனன் விகனன் சுகநாஸன் வக்ரன் சடன் விகடன் ஹ்ரஸ்வகர்ணன் தம்ஷ்ட்ரன் ரோமசன் யுத்தோன்மத்தன், மத்தன் த்வஜக்ரீவன் நாதி வித்யுத் ஜிஹ்வன், இதாஜிஹ்வன், ஹஸ்திமுகன், காாளன் பிசாசன் சோணிதாக்ஷனென்று பெயருள்ள பல ராக்ஷஸர்க

ளின் வீடுகளை ஒவ்வொன்ருகத் தேடினர். அங்கங்கே அந்தப் பாக்ய சாலிகள் அனுபவிக்கும் அளவற்ற ஐச்வர்யங்களைக் கண்டு ஆச்சர்யப் பட்டார்.

அவைகளைத் தாண்டி ராவணனுடைய அரண்மனைக்கு வந்து பார்க்கையில் அங்கே அந்தப்புரத்து வாசலைக் காக்கும் கோரதிருஷ்டியுள்ள ராக்ஷஸிகள் அரசனுக்கருகில் தூங்கிக்கொண்டிருந்தார்கள். சில ராக்ஷஸிகள் சூலம் சக்தி முதலிய ஆயுதங்களைத் தரித்து நின்ருர்கள்; அங்கங்கே பல ராக்ஷஸ ஸைன்யங்கள் அணிவகுக்கப் பட்டிருந்தன. பருத்த சரீரமுள்ள அநேக ராக்ஷஸர்கள் எல்லா ஆயுதங்களையுந் தரித்துக் காத்துக்கொண்டிருந்தார்கள். வாயு வேகமுள்ள பல சிவப்புக் குதிரைகளும் வெள்ளைக்குதிரைகளும் அங்கே கட்டப்பட்டிருந்தன. அநேக உத்தம ஜாதி யானைகள் மழை பொழியும் மேகங்களைப்போலும், நீர்த்தாரைகள் நிறைந்த மலைகளைப்போலும் மதஜலம் பெருக, ஸகல லக்ஷணங்களும் அழகும் பொருந்தி அங்கே நடமாடிக் கொண்டிருந்தன. அவை சத்ரு ஸைன்யங்களை நாசஞ்செய்யும்; அவைகளிலுள்ள யானைகளை ஹிம்ஸிக்கும்; கஜவித்யையில் நன்ருகப் பழக்கப்பட்டவை; யுத்தத்தில் ஐராவதத்திற்கு ஸமம்; நீருண்ட மேகங்களைப்போல் கர்ஜிக்கும். காலாட்படைகள் ஆயிரக்கணக்காக தேஹம் முழுவதும் ஸாதாரணமான தங்கத்தாலும் ஜம்பூநதியில் கிடைக்கும் தங்கத்தாலும் செய்யப்பட்ட ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்டுப் பாலஸூர்யர்களைப்போல் ப்ரகாசித்தார்கள். நானாரூபமுள்ள அழகிய பல்லக்குகளுக்கோ கணக்கில்லை. விசித்ரமான லதாக்ருஹங்களும், நேர்த்தியான சித்ரங்களால் அலங்கரிக்கப்பட்ட வீடுகளும், மரத்தால் செய்யப்பட்ட க்ரீடாபர்வதங்களும், இரவிலும் பகலிலும் ஸ்த்ரீகளுடன் அனுபவிப்பதற்காக ஏற்பட்ட பல கட்டடங்களும் எங்கும் காணப்பட்டன. மயில்களுக்காகப் பல கூடுகள் கட்டப்பட்டிருந்தன. ராவணனுடைய ப்ராஸாதங்களுக்கு அடையாளமாகப் பல கொடிகள் கட்டப்பட்டிருந்தன. நவரத்னம் முத்து பவழம் தங்க நாணயம் வெள்ளி நாணயம் முதலிய ஸகல ஐச்வர்யங்களால் பொக்கிஷங்கள் நிறைந்திருந்தன. மஹாபுத்திமான்களும் ஸமர்த்தர்களுமான சில்பிகளால் அமைக்கப்பட்டு, மந்தரகிரியைப் போல் உன்னதமாகி, ஸகல தாதுக்களாலும் மிருகங்களாலும் நிறைந்து, பரமசிவன் வசிக்கும் கைலாஸகிரியைப்போல் ஆகாசத்தை யளாவி வெண்மையாகி பூத ராக்ஷஸகணங்களுக்கு இருப்பிடமாகி

விளக்கும் அந்த தசக்ரீவனுடைய அரண்மனையைப் பார்த்து மாருதி ஆச்சர்யமடைந்தார். ஸூர்யன் தன் கிரணங்களால் ப்ரகாசிப்பது போல் அது ரத்னங்களின் காந்தியாலும் ராவணனுடைய தேஜஸாலும் ஜ்வலித்தது. உயர்ந்த தங்கத்தால் விசித்ரமாக அமைக்கப்பட்ட படுக்கைகளும் ஆஸனங்களும் முக்யமான பானபாத்ரங்களும் போஜன பாத்ரங்களும் அங்கங்கே காணப்பட்டன. நெருங்கியிராமல் விஸ்தாரமான இடைவெளியுடன் கட்டப்பட்ட உன்னதமான பல உப்பரிகைகளையும், மிகவும் நீண்ட கட்டுகளையுடைய பல கிருஹங்களையும் கண்டார். குடித்து மிகுந்த பானங்கள் அங்கங்கே அநேக ரத்ன பாத்ரங்களில் வைக்கப்பட்டிருந்தன. குடிவெறியால் கூத்தாடும் ஸ்த்ரீகளின் சிலம்புகளும் ஒட்டியாணச் சலங்கைகளும் ஓசைப்படுவதும், பேரி மத்தளம் மிருதங்கம் முதலிய வாத்யங்களின் சப்தமும் மதுரமாகக் காதில் விழுந்தன. ஸகல லக்ஷணங்களும் பொருந்தின ஸ்த்ரீ ரத்னங்களால் ப்ரகாசித்து அழகிலும் காந்தியிலும் ஐச்வர்யத்திலும் குபேரனுடைய கிருஹத்தைப்போன்ற ராவணனுடைய அரண்மனையில் ஆஞ்ஜநேயர் புகுந்தார்.

———

## ஸர்க்கம் 7.

### ராவணனுடைய அரண்மனை.



பிறகு பலவானான ஹனுமான், மின்னற்கொடிகளோடும் பக்ஷிக் கூட்டங்களோடும் கூடின மழைக்காலத்து மேகத்தைப்போல், நவரத்னங்களிழைத்த தங்க ஜன்னல்களுடன் விளங்கும் வீடுகளின் வரிசைகளைப் பார்த்தார். உத்தமமான சங்கம் வில் முதலிய ஆயுதங்களால் ப்ரகாசிக்கும் அநேக கட்டடங்களையும் வீடுகளின்மேல் கட்டப்பட்டிருக்கும் உப்பரிகைகளையும் கண்டார். ராவணனுடைய அரண்மனை சிற்ப சாஸ்த்ரத்தின்படி யாதொரு தோஷமுமில்லாமல் கட்டப்பட்டது; அதிலுள்ள பலவித ஐச்வர்யங்களால் ஜ்வலித்துக் கொண்டிருந்தது; தேவர்களும் அஸுரர்களும் ராவணனிடத்திலுள்ள பயத்தால் அதைப்பார்த்துத் தேவாலயத்தைப்போல் வணங்கினார்கள்.

அதைக் குபோனிடத்திலிருந்து ராவணன் தன் பலத்தால் அப ஹரித்தான். லங்கையிலுள்ள மற்றவீடுகளை விச்வகர்மா அமைத் தான். இவைகளை மயன் அமைத்தானென்ற பெயரேயொழிய, ஸகலவித யுக்திகளையும் யோசனைகளையும் சொல்லி கட்டுவித்தவன் ராவணனே; அதுவும் ஸாமான்யமான கார்யமல்ல. பூமியிலுள்ள அரண்மனைகளில் ஸகல குணங்களும் இவைகளுக்கே அதிகமாகப் பொருந்தியிருந்தன.

மாருதி அங்கே ஸீதையைத் தேடிக்கொண்டு போகையில் ராவணனுடைய புஷ்பக விமானத்தைப் பார்த்தார். அது வேகமாக ஆகாசத்தில் கிளம்பும் மேகத்தைப் போல் விஸ்தாரமாக சுத்தமான ஸ்வர்ணத்தால் செய்யப்பட்டு, பார்ப்பவர்களை மயக்கும் அழகுடன், ராவணனுடைய பலத்திற்கும் ப்ரதாபத்திற்கும் தகுந்த வாஹனமாயிருந்தது. ஸ்வர்க்கமே ஸகல வைபவங்களுடன் அகஸ்மாத்தாக பூலோகத்திற்கு வந்ததென்று சொல்லத்தகும். உத்தமமான ரத்னங்களிழைக்கப்பட்டுக் காந்தியால் ஜொலித்தது. மலைச் சிகரத்தைப் போல் நானா விருக்ஷங்களின் புஷ்பங்களாலும் புஷ்பத் தூளிகளாலும் மூடப்பட்டிருந்தது. புஷ்பகமென்று பெயர் வந்ததற்கு இதே காரணம். மேகங்களுக்கு நடுவில் மின்னற்கொடிகள் பாய்வதுபோல் உத்தம ஸ்திரீகள் அங்குமிங்கும் போய்க்கொண்டிருந்தார்கள். ராஜ ஹம்ஸங்களால் சுமக்கப்பட்டு ஸகல ஐச்வர்யங்களும் நிறைந்த புண்ய புருஷர்களின் தேவ விமானங்களைப்போலிருந்தது. அநேக தாதுக்களால் விளங்கும் மலைச் சிகரத்தைப்போலும், நவக்ரஹங்களாலும் நக்ஷத்ரங்களாலும் சந்த்ரனாலும் நானா வர்ணமுள்ள மேகக் கூட்டங்களாலும் ப்ரகாசிக்கும் ஆகாசத்தைப்போலும், கணக்கில்லாத ரத்னங்களாலும் ஜ்வலித்தது. அதில் மலைகள் நிறைந்த தேசங்களும், மரங்கள் நிறைந்த மலைகளும், புஷ்பங்கள் நிறைந்த மரங்களும், சிறு இதழ்கள் நிறைந்த புஷ்பங்களும் விசித்ரமாக எழுதப்பட்டிருந்தன. வெளுத்த வீடுகளும், அழகிய புஷ்பங்களால் விளங்கும் தடாகங்களும், மெல்லிய தாதுக்களுடன் கூடின தாமரைகளுடன், ச்ரேஷ்டமான நானா வனங்களும் அங்கே எழுதப்பட்டிருந்தன. ரத்னங்களின் காந்தியால் ஜ்வலித்துக்கொண்டு, லங்கையிலுள்ள மற்ற உத்தம க்ருஹங்களைக் காட்டிலும் மிகவும் பெரிதாக விளங்கிற்று.

அங்கே அன்னம் மயில் முதலிய பறவைகள் பவழங்களால் செய்யப்பட்ட மூக்குகளோடும் கால்களோடும் வெள்ளியால் அமைக்கப்பட்டு, வைடூர்யம் முதலிய ரத்னங்களாலிழைக்கப்பட்டிருந்தன. இன்னும் பலபக்ஷிகள் புஷ்பத்தைப்போல் மெல்லிய சிறகுகளுடனும், விளையாடும்பொழுது தொங்கி வளைந்திருக்கும் இறக்கைகளுடனும், பார்க்கையிலேயே ஆசையை உண்டுபண்ணக்கூடிய அழகுடனும் தங்கத்தாலும் பவழத்தாலும் செய்யப்பட்டிருந்தன. பலவகை ஸர்ப்பங்கள் தங்கத்தாலும் வெள்ளியாலும் ரத்னங்களாலும் செய்யப்பட்டிருந்தன. உத்தம லக்ஷணங்கள் பொருந்தின குதிரைகள் ஜாதிக்குத் தகுந்த ரூபங்களோடும் சேஷ்டைகளோடும் செய்து வைக்கப்பட்டிருந்தன. அழகிய துதிக்கைகளையுடைய யானைகள் நீரோடைகளிலிறங்கி, தாமரைத் தூளிகள் படிந்த தேஹத்துடன், கருநெய்தல் இலைகளைத் துதிக்கைகளால் தானே பொழியும்படி செய்யப்பட்ட ப்ரதிமைகளும், அவைகளால் அபிஷேகஞ் செய்யப்பட்டு மங்களகரமான திருக்கைகளுடன், ஒரு கையில் தாமரை மலரைத் தரித்துக் கொண்டிருக்கும் ஜகன் மாதாவான மஹாலக்ஷ்மியின் விக்ரஹமும் வெகு சாதுர்யமாக அமைக்கப்பட்டிருந்தன். அழகிய புஷ்பங்களாலும் தளிர்களாலும் தழைத்துப் பரிமளம் வீசும் பெரிய மரத்தைப் போலும், மனோஹரமான குகைகளால் விளங்கும் பெரியமலை பனியும் குளிரும் நீங்கிய வஸந்த காலத்தைப் புஷ்பங்களாலும் பழங்களாலும் தளிர்களாலும் ப்ரகாசிப்பதுபோலுமிருக்கும் அந்த மங்களகரமான விமானத்தை ஆஞ்ஜநேயர் அடிக்கடி சுற்றிப் பார்த்து அடங்காத ஆச்சர்யத்தை அடைந்தார். எல்லோராலும் பூஜிக்கப்பட்டு ராவணனைச் வரனால் பரிபாலிக்கப்பட்ட அந்த லங்காபுரியை நன்றாக தேடியும், ராமசந்திரனுடைய அனந்த கல்யாண குணங்களில் ஈடுபட்டு எப்பொழுதும் அவரையே த்யானித்துக்கொண்டு ஸகல லோகங்களாலும் கொண்டாடப்படும் ஜானகியைக் காணாமல் மாருதி மிகுந்த துக்கமடைந்தார். ஆத்மஸ்வரூபத்தை நன்றாக அறிந்தவர்; ஸன்மார்க்கத்தில் நிலைபெற்றவர்; மஹானுபாவர்; பிறர் அறியமுடியாத விஷயங்களையும் நேரில் பார்க்கும் திறமையையுடையவர்; லங்கை முழுவதையும் வெகுஜாக்ரதையாகச் சுற்றிப்பார்த்தும் ஸீதையைக் காணாமல் பல பல யோசனைசெய்து, மிகுந்த மனக்கலக்கத்தை அடைந்தார்.

---

## ஸர்க்கம் 8.

## புஷ்பக விமானம்.

ராவணனுடைய வீடுகளுக்கு நடுவில் நவமணிகளிழைத்து உருக்கியோடவிட்ட தங்கத்தால் செய்யப்பட்ட பக்ஷிகளுடன் விளங்கும் ஒரு பெரிய விமானத்தை ஹனுமான் கண்டார். அது அளவிற்கடங்காதது; ஒப்பில்லாதது; விச்வகர்மா அதை நிர்மித்து "நான் செய்த வஸ்துக்களுக்குள் இதே மிகவும் ச்லாக்யமான" தென்று மெச்சினன்; ஸகல திக்குகளிலும் தடையில்லாமல் செல்லக்கூடியது; தேவ விமானமானதால் பூமியில் படாமல் ஆகாசமார்க்கத்தில் நின்று கொண்டிருந்தது; காந்தியால் ஸூர்யமார்க்கத்தைக் குறிக்கும் அடையாளம் போலிருந்தது. அதில் ஒவ்வொரு வேலையும் மிகுந்த ப்ரயத்னத்தால் செய்யப்பட்டது; அதில் இழைக்கப்பட்ட ரத்னங்கள் ஸகலவிதத்திலும் ஒப்பில்லாதவை; அதிலுள்ள விசித்ர விசேஷங்கள் தேவர்களுடைய விமானங்களிலுமில்லை, அதைப்பற்றின ஒவ்வொரு விஷயமும் அபூர்வமானது. பூர்வ காலத்தில் ராவணன் கோகர்ண க்ஷேத்ரத்தில் ப்ரஹ்மாவைக்குறித்துப் பதினாயிரம் வர்ஷங்கள் கோரமான தவஞ்செய்து, தன் பராக்ரமத்தால் குபேரனை ஜயித்து இந்த விமானத்தை அடைந்தான். அது ப்ரபுவின் அபிப்ராயத்தை அறிந்து, போகவேண்டிய விடத்திற்கு வாயு வேகமாய்ச் செல்லும். அதில் பல விசித்ரமான மாளிகைகள் அமைக்கப்பட்டிருந்தன. லோகத்தில் அழகான பதார்த்தங்கள் யாவற்றிற்கும் உபமானமாயிருந்தது. பிறரால் தடுக்கமுடியாத வேகத்தையுடையது. மஹாத்மாக்களான பெரியோர்களுடைய ஆச்ரமம்போல் பரிசுத்தமாயும், புண்ய கர்மங்களால் ஸம்பாதிக்கப்பட்ட ஸ்வர்க்கத்தைப் போல் ஸகல போகங்களுக்கிருப்பிடமாயும், லக்ஷ்மிகடாக்ஷம்பெற்ற பாக்யவான்களுடைய க்ருஹங்களைப்போல் ஸகல ஸம்பத்துகளுடன் கூடினதாயும், அபூர்வமான செய்கைகளால் அழிவற்ற கீர்த்தியை ஸம்பாதித்த புண்யசாலிகளுடைய இருப்பிடங்களைப்போல் ஸகல லோகங்களும் கொண்டாடும்படியும், மதுரமான கானம் ந்ருத்தனம் ரூபவதிகளான ஸ்த்ரீகள் திவ்ய போகங்கள் அழகிய வாஸஸ்தலங்கள் முதலியவைகளால் தேவேந்த்ரனுடைய அமராவதியைப்போலும்

விளங்கிற்று. ஒப்பற்ற வேகத்துடன் ஆகாசத்தில் தங்கியிருந்தது. விசித்ரமான கொடி முடிகளையுடைய மலைச்சிகரத்தைப்போல் விசித்ரமான பதார்த்தங்களுக்கிருப்பிடமாயும் விஸ்தாரமான கட்டுகளுடையதாயும் மனோஹரமாயும் சரத் காலத்துச் சந்த்ரனைப்போல் நிர்மலமாயுமிருந்தது. குண்டலங்களால் அலங்கரிக்கப்பட்ட முகங்களுடனும் பருத்த சரீரங்களுடனும் ஆகாசத்தில் அதிவேகமாய் ஸஞ்சரிக்கும் ராக்ஷஸர்களைப்போலும், வட்டமும் கோணலும் அகலமுமான கண்களையுடைய பூதகணங்களைப்போலும், அநேகமாயிரம் பொம்மைகள் வெகு சாதுர்யமாய் அதில் செய்து வைக்கப்பட்டிருந்தன. மஹா விருக்ஷங்களடர்ந்த வனத்தில் நானாவர்ணமுள்ள புஷ்பங்களாலும் பழங்களாலும் துளிர்களாலும் விளங்கும் வஸந்த காலத்திற்குரிய நதிகள் நீரோடைகள் தென்றல் வண்டுகள் மயில்கள் குயில்கள் மான் முதலிய மிருகங்கள் அழகிய ஸ்திரீ புருஷர்கள் முதலியவைகளால் வஸந்த ருதுவைக்காட்டிலும் அழகாய் ப்ரகாசிக்கும் அந்த புஷ்பக விமானத்தை வானரவீரனான ஹனுமார் கண்டு ஆச்சர்யமடைந்தார்.

---

## ஸர்க்கம் 9.

### ராவணனுடைய அந்தப்புரம்.

அந்த உத்தமமான விமானத்தின் நடுவில் மாருதி ஒரு சிறந்த மாளிகையைக் கண்டார். அது ராவணன் வஸிக்குமிடம். ஒரு யோஜனை நீளம், அரை யோஜனை அகலம் விஸ்தீர்ணமுள்ளதாய் அநேக உப்பரிகைகளுடன் விளங்கிற்று. அங்கெல்லாம் ஒப்பில்லாத அழகையுடைய ஜனகபுத்ரியைத் தேடிக்கொண்டு மாருதி திரிந்து, பிறகு ராக்ஷஸர்களுடைய நேர்த்தியான வீடுகளைப் பார்த்துக்கொண்டே ராவணனுடைய க்ருஹத்திற்கு வந்துசேர்ந்தார். மூன்று நான்கு தந்தங்களையுடைய உத்தமமான யானைகள் அங்கங்கே கட்டப்பட்டிருந்தன. ஆயுதபாணிகளான ஸேவகர்கள், நெருங்கியிராமல் நான்கு புறத்திலும் அதைச் சூழ்ந்து காத்துக்கொண்டிருந்தார்கள். அங்கே ராவணனுடைய பத்னிகளான ராக்ஷஸ ஸ்த்ரீகளும் திக்விஜயம் செய்தபோது ஜயித்த அரசர்களின் க்ருஹங்களிலிருந்து பலாத்காரமாய்க் கொண்டுவரப்பட்ட ராஜகன்யை

களும் தூங்கிக்கொண்டிருந்தார்கள். இப்படித் திமிங்கலம், முதலை மீன்களும் முதலிய ஜல ஜந்துக்களால் நிறைந்து மலைகளைப்போன்ற அலைகள் பெருங்காற்றால் அகப்பட்டுக் கொந்தளிக்க, நீருண்ட மேகங்களைப் போல் கர்ஜித்துப் பொங்கிக் கொதிக்கும் மஹா ஸமுத்ரத்தைப்போலிருக்கும் அந்த ராவணகிருஹம், கோரரூபிகளாய் ஸஹிக்க முடியாத தேஜஸையுடைய ராக்ஷஸர்களால் நிறைந்திருப்பதை அஞ்ஜநேயர் கண்டார். ஸகல ஐச்வர்யங்களுக்கும் அதிபதியான குபேரனுடைய செல்வமும், தேவராஜனை மஹேந்த்ரனுடைய வைபவமும், பகவானுக்கு நித்யவாஹனமாயிருக்கப் பெற்ற கருடனுடைய அபார தேஜஸும் சேர்ந்து எப்பொழுதும் ராவணனுடைய மாளிகையில் குறையாமலிருந்தன. லங்கையில் வஸிக்கும் ராக்ஷஸர்களின் வீடுகளில் குபேரன் யமன் வருணன் முதலியவர்கள் அனுபவிக்கும் செல்வமும் ஐச்வர்யமும் போகங்களும் அவைகளுக்கு மேலானவைகளும் காணப்பட்டன. பூர்வத்தில் விச்வகர்மா ப்ரஹ்மாவிற்காக அந்த விமானத்தை தைவலோகத்தில் ஸிருஷ்டித்தான். பிறகு குபேரன் ப்ரஹ்மாவை கோரமான தபஸால் ஸந்தோஷப்படுத்தி அதை அடைந்தான், ஸகல ரத்னங்களாலும் அலங்கரிக்கப்பட்ட அந்த விமானத்தை ராவணன் குபேரனைத் தன் பராக்ரமத்தால் ஜயித்து அவனிடமிருந்து அபஹரித்தான். தங்கத்தாலும் வெள்ளியாலும் விசித்ரமாய்ச் செய்யப்பட்ட ஸ்தம்பங்களில் செந்நாய்களைப்போன்ற ப்ரதிமைகள் அமைக்கப்பட்டிருந்தன. அந்த விமானம் காந்தியால் ஜ்வலிப்பது போல், மேருமந்தரம் முதலிய பர்வதங்களுக்கு ஸமானமாய் ஆகாசத்தை அளாவிற்று. சிறு கட்டடங்கள் மங்களகரமான ரூபங்களுடன் மறைவாய்க் கட்டப்பட்டிருந்தன. ஸூர்யன் அக்னி முதலியவர்களின் காந்தியும் அதன் காந்திக்கு ஈடல்ல. விச்வகர்மா செய்த அநேக வஸ்துக்களில் இதே ஸகல விதத்திலும் ச்ரேஷ்டமானது. தங்கப் படிக்கட்டுகளையுடைய அநேக அழகான மேடைகளாலும், தங்கம் ஸ்படிகம் முதலிய அபூர்வ வஸ்துக்களால் நிர்மிக்கப்பட்ட ஜன்னல்களாலும் நிலைக்கதவு ஜன்னல்களாலும் இந்த்ரநீலம் மஹா நீலம் முதலிய அபூர்வமான மணிகளால் இழைக்கப்பட்ட திண்ணைகளாலும் பவழம் ஒப்பில்லாத முத்துகள் விலையற்ற ரத்னங்கள் முதலியவைகளால் அலங்கரிக்கப்பட்ட தரைகளாலும் நேர்த்தியான பரிமளத்துடன் பாலஸூர்யனைப்போல் சிவந்த சந்தனத்தாலும் உதய பர்வதத்திலிருந்து கிளம்பும் ஆதித்யனைப் போல் ஜ்வலிக்கும் அந்தப்

புஷ்பக விமானத்தில் ஆஞ்ஜநேயர் ஸீதையைத் தேட உத்தேசித்து ஏறினார். (மஹா நீலமென்பது ஸிம்ஹளத்வீபத்தில் உண்டாகுமென்று ரத்னசாஸ்திரம் கூறுகிறது).

அங்குள்ள பலவித பானங்களிலிருந்தும் புஷ்பங்களிலிருந்தும் அன்னங்களிலிருந்தும் கிளம்பும் வாஸனை நாற்புறங்களிலும் பரவிற்று. வாயுபகவான் மனுஷ்ய ரூபமெடுத்து வந்ததுபோல், ஆஞ்ஜநேயர் அதை முகர்ந்தார். தூரதேசத்திலிருந்து வந்தவனை அவனுடைய ப்ரியமான பந்துக்கள் அன்புடன் அழைப்பது போல் ராவணனுடைய போஜன க்ருஹத்திலிருந்து வீசும் பரிமளம் ஆஞ்ஜநேயரை ராவணனிருக்குமிடத்திற்கு வாவென்று அழைப்பதுபோலிருந்தது. அந்த வழியாகவே சென்று ராவணேச்வரனுடைய பானசாலையைக் கண்டார். அது அதிக ப்ரியமான உத்தம ஸ்த்ரீயைப்போல் ராவணனுக்கு ஸந்தோஷத்தைக் கொடுத்தது. நவரத்னங்களிழைத்த படிகட்டுகளிருந்தன. சிலவிடங்கள் ஸ்படிகத்தாலும் தந்தத்தாலும் இழைக்கப்பட்டிருந்தன. சில விடங்களில் பொன் வெள்ளி முதலிய வஸ்துக்களால் அலங்கரிக்கப்பட்ட ரத்ன ஸ்தம்பங்கள் அமைக்கப்பட்டிருந்தன. மேடுபள்ளமில்லாமல் இழைக்கப்பட்டுச் சித்ர வேலைகளால் அலங்கரிக்கப்பட்ட மிகவும் உயரமான இன்னும் அநேக ஸ்தம்பங்களால் அந்த விமானம், இறகுகளை விரித்துக்கொண்டு ஆகாசத்தில் பறப்பதுபோலிருந்தது. தரையில் விரிக்கப்பட்ட கம்பளத்தில், மலை ஸமுத்ரம் நதி பள்ளத்தாக்கு மைதானம் விருக்ஷம் வனம் நகரம் க்ராமம் முதலியவைகளுடன் பூலோகம் சித்ரரூபமாய் வேலை செய்யப்பட்டிருந்தது; அதைப் பார்க்கையில் அநேக ராஜாக்களாலும சக்ரவர்த்திகளாலும் ஆளப்பட்ட ராஜ்யங்களெல்லாம் அந்த விமானத்திலிருப்பதுபோல் தோன்றிற்று. அநேக உத்தம ஜாதி பக்ஷிகள் கொழுப்படைந்து கூவிக்கொண்டிருந்தன. சந்தனம் அகில் பன்னீர் புனுகு ஜவ்வாது குங்குமம் அத்தர் முதலியவைகளின் பரிமளம் வீசிக்கொண்டிருந்தது. விலையற்ற ஆஸனங்களும் விரிப்புகளும் நிறைந்திருந்தன. சிலவிடங்கள் அகிற்கட்டையின் தூபத்தால் கறுத்திருந்தன. சில விடங்கள் ராஜஹம்ஸங்களைப்போல் வெண்மையாயிருந்தன. பலவித புஷ்பங்கள் எங்கும் வாரி இறைக்கப்பட்டிருந்தன. வஸிஷ்ட மஹர்ஷியிடத்திலிருக்கும் தோஷமற்ற காமதேனுவைப்போல் அந்த விமானம் ஸகல மனோரதங்களையும் பூர்த்திசெய்தது. மனஸிற்கு அள

வற்ற ஸந்தோஷத்தைக் கொடுத்துத் துக்கத்தை நாசஞ்செய்து ஸகல ஸம்பத்தையும் தேஹகாந்தியையும் உண்டுபண்ணிற்று. பஞ்சேந்த்ரியங்களுக்கும் அவைகளுக்கு ப்ரியமான போகங்களைக் கொடுத்துப் பெற்ற தாயைப்போல் திருப்திசெய்யும் அந்த விமானத்தைக் கண்டு, ஹனுமான் ப்ரமித்து, "இது யாகயக்ஞங்களை ஸம்பூர்ணமாய் நடத்தின புண்யவான்கள் அடையும் ஸ்வர்க்கலோகமோ? தேவ கணங்கள் வஸிக்கும் தேவ லோகமோ! தேவராஜாவான மஹேந்த்ரனுடைய ராஜதானியான அமராவதியோ! கடினதபஸால் மஹாத்மாக்களடையும் ப்ரஹ்மலோகமோ" வென்று திகைத்து நின்றார். அங்கே தங்கஸ்தம்பங்களில் ப்ரகாசிக்கும் ரத்னதீபங்கள் சுத்தமான வர்த்திகளுடனும் தெளிவான தைலங்களுடனும் அசையாமல் கொழுந்து விட்டெரிந்தன. அதைப் பார்க்கையில் கைதேர்ந்த சூதர்களால் ஜயிக்கப்பட்ட ஸாமான்ய சூதர்கள், அவர்களை மறுபடியும் ஜயித்துத் தாங்களிழந்த திரவ்யங்களை அடைவதற்கு ஆழ்ந்த யோசனை செய்துகொண்டிருப்பதுபோல் தோன்றிற்று. கணக்கில்லாத தீபங்களின் ப்ரகாசத்தையும், பிறரால் அஸாத்யமான தபஸைச் செய்து வேத வேதாந்தங்களைக் கரைகடந்து நித்ய நைமித்திக கர்மங்களைக் குறைவில்லாமல் நடத்திவந்து, ஸகல லோகங்களும் பெயரைக் கேட்டவுடன் நடுங்கும் ப்ரதாபசாலியான ராவணேச்வரனுடைய ஸஹஜமான தேஜஸையும், அவன் பத்னிகள் அணிந்திருக்கும் ஆபரணங்களுடைய காந்தியையும் கண்டு, ஹனுமான் "இந்த விமானம் நெருப்புப் பிடித்து எரிகிறதோ" வென்று ஸந்தேஹித்தார்.

அங்கே விரித்திருக்கும் கம்பளங்களில் அநேக உத்தம ஸ்த்ரீகள் நானு வர்ணமுள்ள வஸ்த்ரங்களையும் மாலைகளையும் தரித்துக் கொண்டு பற்பல வேஷங்களால் அலங்கரிக்கப்பட்டு, க்ரீடை செய்ததாலும் மத்யபானத்தாலும் அர்த்தராத்ரியில் அயர்ந்து நித்திரை செய்வதைக் கண்டார். பகற்காலங்களில் அந்தப்புரத்தில் ஸப்திக்கும் ஆபரணங்கள், அர்த்த ராத்ரியில் ஸகல ஸ்த்ரீகளும் சேர்ந்து தூங்குவதால் கொஞ்சமும் சப்தமற்றிருப்பதைக் கண்டு மாருதி, "இது ராத்ரி காலத்தில் தூங்கும் ஹம்ஸங்களாலும் அவைகளின் மேலிருக்கும் வண்டுகளாலும் ப்ரகாசிக்கும் தாமரையோடையோ" வென்று நினைத்தார். அந்த ஸ்த்ரீகள் தாமரை மலரின் பரிமளத்தைப்போல் ஸுகந்தம் வீசும் முகங்களுடனும் மறைக்கப்பட்ட பல்லுகளுடனும் மூடின கண்களுடனும் நித்ரை செய்தார்கள் (நான்கு

ஜாதி ஸ்த்ரீகளில் இவர்கள் உத்தமமான பத்மினீ ஜாதியைச் சேர்ந்த வர்கள்.) (தூங்கும் போது பற்கள் வெளிப்படுவதும், கண்கள் பாதி திறந்திருப்பதும், குறட்டை விடுவதும், வாயிலிருந்து துர்க்கந்தமான காற்று வீசுவதும் தாழ்ந்த ஜாதி ஸ்த்ரீகளின் லக்ஷணம்; தூங்கும் பொழுது அங்கங்கள் அசையாமலிருப்பதும், வாய் மூடியிருப்பதும் முகம் ப்ரஸன்னமாயிருப்பதும், மிருதுவாய் மூச்சுவிடுவதும், ச்வா ஸம் ஸுகந்தமாயிருப்பதும், ஸ்வப்னாவஸ்தையில் பிதற்றுமலிருப்ப தும், உத்தம ஸ்த்ரீகளின் லக்ஷணங்கள்.) உதய காலத்தில் தாம ரைப் புஷ்பங்கள், ஸூர்ய கிரணங்களால் எழுப்பப்பட்டு மலர்ந்து எல்லோருக்கும் ஆனந்தத்தைக் கொடுத்து ஸூர்யன் அஸ்தமித்த வுடன் இதழ்கள் மூடி நித்ரைசெய்வதுபோல், அந்த ஸ்த்ரீகள் தங் கள் நாயகனுடைய கடாக்ஷம் தங்களுக்குக் கிடைக்கவேண்டுமென்று காலையில் அவனுக்கு முன்பே எழுந்து காத்துக்கொண்டிருந்து, பகலெல்லாம் அவனுடன் ஆனந்தமாய்க் காலங்கழித்து ராத்ரியில் அவன் நித்ரைசெய்தபிறகு களைப்பால் தாங்களும் அயர்ந்து நித்ரை செய்தார்கள். ச்ரமத்தால் வஸ்த்ரங்கள் நழுவ, ஸ்வேச்சையாய் நித்ரை செய்யும் அந்த ரூபவதிகளைக் கண்டும், ஆஞ்ஜநேயருடைய இந்த்ரியங்கள் கொஞ்சங்கூடக் கலங்காமல் அவர் விசேஷகாந்தியுடன் விளங்கினார். "அழகிலும் நிறத்திலும் பரிமளத்திலும் ஆனந்தத் தைக் கொடுப்பதிலும் இந்த ஸ்த்ரீகளின் முகங்கள் கமலங்களைப் போலிருக்கின்றன. தேனைக் குடித்து மதங்கொண்ட வண்டுகள் இவைகளைப் புஷ்பமென்றெண்ணி அடிக்கடி வந்து மொய்க்குமென்ப தற்கு ஸந்தேஹமில்லை" யென்று மாருதி எண்ணினார். கறுத்துச் சுருண்ட மயிர்களுடனும் மின்னற்கொடிபோல் விளங்கும் அங்கங்க ளுடனும் நித்ரைசெய்யும் ஸ்த்ரீகளால் நிறைந்த ராவணனுடைய அந்தப்புரம், சரத்காலத்தில் நக்ஷத்ரங்கள் நிறைந்த நிர்மலமான ஆகாசம்போல் ப்ரகாசித்தது. அவர்களுக்கு நடுவில் நித்ரைசெய்யும் ராவணன் நக்ஷத்ரமண்டலங்களுக்கு நடுவில் பௌர்ணிமையில் பூர்ண கலைகளுடன் விளங்கும் சந்த்ரனைப்போல் தோன்றினன். ஒப்பில்லாத புண்ய கர்மங்களால் நக்ஷத்ரங்களாய்ப் ப்ரகாசித்துத், தாங்கள் செய்த புண்யம் முடியும்போது மிகுந்த ஸ்வல்ப புண்யத்தால் பூமியில் நழுவி விழுந்த பாக்யசாலிகளோவென்று ஆஞ்ஜநேயர் அந்த ஸ்த்ரீக ளைக் கண்டு ப்ரமித்தார். மங்களகரமான ப்ரகாசத்தையுடைய பெரிய நக்ஷத்ரங்களைப்போல் அந்த ஸ்த்ரீகளின் தேஹகாந்தியும் ரூபமும் தெளிவும் ஸ்பஷ்டமாய் விளங்கின. மதுபானத்தாலும் விளையாட்டு

களாலும் ரதிக்ரீடையாலும் பருத்த புஷ்ப மாலைகளும் ஹாரங்களும் கலைந்து நழுவி, ஆபரணங்கள் சிதறி, ச்ரமத்தால் களைத்து முகம் வாடி அயர்ந்து தூங்கினார்கள்.

சில உத்தம ஸ்த்ரீகளுடைய நெற்றிகளில் திலகங்கள் அழிந்திருந்தன. சில ஸ்த்ரீகளின் சிலம்புகள் கழன்றிருந்தன. சிலருடைய முத்து ஹாரங்கள் பக்கங்களில் நழுவிக் கிடந்தன. முத்து ஹாரங்களும் அரைநூல் மாலைகளும் அறுந்து வஸ்த்ரங்கள் நழுவி ரதிச்ரமத்தால் ப்ரக்ஞையற்று நித்ரைசெய்யும் அந்தப் பெண்கள், வெகுதூரம் ஓடிக் களைத்து ச்ரம நிவர்த்திக்காகப் பூமியில் மணலில் விழுந்து புரளும் பெண்குதிரைகளைப்போல் காணப்பட்டார்கள். சிலர் நேர்த்தியான குண்டலங்களைத் தரித்திருந்தார்கள்; சிலருடைய மாலைகள் வாடி அறுந்திருந்தன. மஹா பலவானான ராவணனால் அனுபவிக்கப்பட்டு, அவர்கள் வனத்திலுள்ள புஷ்பக்கொடிகள் மதயானையால் மிதிக்கப்பட்டதுபோல் காணப்பட்டார்கள். சிலருடைய ஸ்தனங்களுக்கு நடுவில் ஸூர்யசந்தரர்களைப்போல் ஜ்வலிக்கும் முத்து ஹாரங்கள், தாமரை ஓடையில் இரண்டு புஷ்பங்களுக்கு நடுவில் நித்ரை செய்யும் ராஜஹம்ஸத்தைப்போல் ப்ரகாசித்தன. சிலருடைய மார்பில் விளங்கும் வைடூர்ய மாலைகள் ஹம்ஸங்களைப்போலும் தங்கச் சரடுகள் சக்ரவாகபக்ஷிகளைப்போலும் தோன்றின. சரத்காலத்தில் தெளிவாய் ஓடும் நதிகளைப்போன்ற அந்த ஸ்த்ரீகளின் பின்பாகங்களே மணற்குன்றுகள்; ஹாரங்களே ஹம்ஸங்கள்; ஸ்தனங்களே சக்ரவாகங்கள்; நேத்ரங்களே கருநெய்தல் புஷ்பங்கள்; உதடுகளே இனந்துளிர்கள்; பாதங்களே தாமரைகள்! கழுத்துகளே சங்குகள்! கண்களே மீன்கள்; நாபிகளே சுழல்கள்; கீர்த்திக்குக் காரணமான தேஹகாந்தியே இருகரைகள்; சிருங்கார சேஷ்டைகளே முதலைகள்; ஆபரணங்களே மலர்ந்த தாமரைகள்; சதங்கைகளே மொட்டுகள். சிலருடைய மிருதுவான அங்கங்களிலும் ஸ்தனங்களின் நுனிகளிலுமுள்ள சுபமான ஆபரணங்கள் அவர்களிடத்தில் ஆசைகொண்ட காமுகர்களைப்போல் தோன்றின. சிலருடைய முகங்களிலிருந்து வீசும் ச்வாஸக்காற்றால் அசைக்கப்பட்ட வஸ்த்ரங்களின் நுனிகள் அடிக்கடி முகங்களில் தாக்கின. அவை மேலே எழும்பி விழும்போழுது விசித்ர வர்ணங்களுடைய கொடிகளைப்போல் காணப்பட்டன. அங்கே நித்ரைசெய்துகொண்டிருந்த சில காந்திமதிகளின் மூச்சுக்காற்றின் வேகத்தால் அவர்கள்

தரித்த குண்டலங்கள் மெள்ள மெள்ள அசைந்தன. ஸ்வபாவமாக
வே அவர்களுடைய ச்வாஸம் ஸுகந்தமாயிருக்கும். சர்க்கரை கல
ந்த மதுவின் வாஸனையால் அது இன்னும் பரிமளமாயும் ஸுகமாக
யும் ராவணன்மேல் வீசிற்று. சிலர் பான மயக்கத்தாலும் நித்திரையா
லும் தேஹஸ்வாதீனமற்றுத் தூங்கும்பொழுது, தங்களுக்கருகில்
படுத்திருக்கும் ஸக்களத்திகளின் முகங்களைத் தங்கள் ப்ரியநாயகனான
ராவணனுடைய முகமென்றெண்ணிக் காமபரவசர்களாய் அடிக்கடி
முத்தமிட்டார்கள். அந்த ஸ்த்ரீகளும் ராவணனிடத்திலுள்ள ஆசை
யால் அவன் முத்தமிடுகிறானென்றெண்ணி மறுபடியும் முத்தங்கொ
டுத்தார்கள். இப்படி நாயகனிடத்திலுள்ள ஆசையால் ஸக்களத்தி
கள் ஒருவர்க்கொருவர் தெரியாமல் தங்களிஷ்டத்தையே பூர்த்திசெ
ய்துகொண்டார்கள்; சிலர் ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்ட கை
களையும், சிலர் பீதாம்பரங்களையும் தலையணையாக வைத்துக்கொண்டு
தூங்குகிறார்கள். பான மயக்கத்தாலும் ஒருவர்க்கொருவர் ஸ்நேஹ
விசேஷத்தாலும் ஒரு ஸ்த்ரீ மற்றொரு ஸ்த்ரீயின் மார்பில் தலையை
வைத்துத் தூங்குகிறாள். அவளுடைய தோளில் மற்றொருத்தி தலை
வைத்துத் தூங்குகிறாள். ஒருத்தி தன் தோழியின் மடியில் தலை
வைத்துத் தூங்குகிறாள். அவளுடைய புஜங்களில் தலைவைத்து இர
ண்டு ஸ்த்ரீகள் தூங்குகிறார்கள். துடைபக்கம் இடுப்பு பின் பாகம்
முதலிய அங்கங்கள் ஒன்றோடொன்று பற்றி அப்படித் தூங்கும்
அந்தப் பெண்கள் புஜங்களென்ற நூலால் கோர்க்கப்பட்டு மதுவின்
பரிமளத்துடன் சுருண்ட தலைமயிரென்ற வண்டுகள் மொய்க்கும்
புஷ்பமாலையைப்போல் விளங்குகிறார்கள்; ராவணனுடைய பத்னிக
ளால் நிறைந்த அந்தப்புரம், வஸந்தருதுவில் ஓர் புஷ்பவனத்தைப்
போல் தோன்றிற்று. அவர்களுடைய கைகளே கொடிகள், தோள்
களே தண்டுகள், விரல்களே தளிர்கள்; இடுப்பில் வஸ்த்ரத்தின்
முடிகளே புஷ்பக்கொத்துகள், கறுத்து சுருண்ட தலைமயிரே வண்டு
கள், மூச்சுக்காற்றே தென்றல். இப்படித் தூக்கமயக்கத்தால் ஒரு
வர்மேலொருவர் கைகால்களைப் போட்டுக்கொண்டு காற்றால் ஒன்று
சேர்க்கப்பட்ட புஷ்பக் கொடிகளைப் போல் விளங்குகிறார்கள். அந்
தக்கூட்டத்தில் ஒவ்வொருத்தியின் ஆபரணங்களையும் அவயவங்களை
யும் தனித்தனியாக அறிவது அஸாத்யம்.

ராவணன் விழித்துக்கொண்டிருக்கையில் அவர்களைப் பிறர்
பார்ப்பது ஸாத்யமல்ல. அங்குள்ள ரத்ன ஸ்தம்பங்களில் வைக்கப்
பட்ட நாலுவர்ணமுள்ள ரத்னதீபங்களும், அவன் தூங்கின பிறகு

மஹாபானத்தாலும் ச்ரமத்தாலும் தூக்கத்தாலும் வஸ்த்ரங்கள், ஆபரணங்கள் நழுவினதறியாமல் தூங்கும் ராவணபத்னிகளை இமைகொட்டாமல் ஆசையுடன் பார்ப்பதுபோல் அசைவற்றுக் கொழுந்துவிட்டெரிந்தன. ராஜர்ஷிகள் பித்ருக்கள் தைத்யர்கள் கந்தர்வர்கள் ராக்ஷஸர்கள் முதலியவர்களின் கன்யைகள், ராவணனிடத்தில் ஆசைவைத்து வந்தவர்களே. யுத்தத்தில் ப்ரியமுள்ள ராவணனால் சிலர் தங்களுடைய பந்துக்களை ஜயித்துக் கொண்டுவரப்பட்டார்கள். சிலர் அவனுடைய அழகிலும் தேஜஸிலும் ஐச்வர்யத்திலும் பராக்ரமத்திலும் ஈடுபட்டு வலுவில் ஆசைமீறி அவனை வந்தடைந்தவர்கள். அவர்களில் ராவணனுடைய பராக்ரமத்தால் மாத்ரம் கட்டுப்பட்டிருந்தவர்கள் ஒருவருமில்லை. எல்லோரும் அவனிடத்தில் மோஹித்தவர்களே. ஒருவளும் பிறந்ததுமுதல் வேறு புருஷனை இச்சித்தவளல்ல; வேறொருவனால் விவாஹஞ் செய்யப்பட்டவளல்ல; உத்தம குலத்தில் பிறந்து உத்தமமான பத்மினீ ஜாதி ஸ்த்ரீகளல்லாதவர்கள் அங்கில்லை; ஸகல கலைகளிலும் அமைந்திராதவர்கள் அங்கில்லை. ராவணனுக்கு ஸமஸ்த உபசாரங்களையும் பரமப்ரீதியுடன் செய்யாதவர்கள் அங்கில்லை. அவனுக்குத் தகுந்த தேஹபலமில்லாதவர்கள் அங்கில்லை. அவனுடைய ப்ரியத்திற்குப் பாத்ரமில்லாதவர்கள் அங்கில்லை.

ஹநுமான் மஹா புத்திமானாயிருந்தாலும், அவர்களைப் பார்த்து ஜாதிஸ்வபாவத்திற்குத் தகுந்த விபரீத புத்தியை அடைந்து, "இந்தப் பெண்களெல்லாம் கன்யைகளாயிருக்கும் பொழுதே ராவணன் கொண்டுவந்து மணம்செய்தது போல், ஸீதையையும் ராமன் பாணிக்ரஹணஞ் செய்வதற்குமுன் கொண்டுவந்து மணம்புரிந்திருந்தால் அவனுக்கு க்ஷேமமுண்டாயிருக்குமே" யென்று அகஸ்மாத்தாக எண்ணினார்.

பிறகு ஹநுமான் "ஸீதையைப்போன்ற பதிவ்ரதை எந்த லோகத்திலுமுண்டோ? இந்த ராவணன் ப்ரம்ம தேவருடைய குலத்தில் பிறந்தும் அவளை அபஹரித்து மஹா பாபத்தைச் ஸம்பாதித்தான்" என்று மிகுந்த துக்கத்தை அடைந்து "அக்னியையும் கொளுத்தும் ஸீதையின் பதிவ்ரதா தர்மத்திற்கு என்ன குறைவு நேரிடுமோ? வீணான அபவாதத்தைச் சுமத்தினதேயொழிய வேறென்ன" வென்று எண்ணினார்.

## ஸர்க்கம் 10

### அந்தப்புரம்.



அங்கே ஸ்படிகத்தால் செய்யப்பட்டு ரத்னங்களிழைத்துத் தேவேந்த்ரனுடைய சயனம்போன்ற ஓர் மஞ்சத்தைக் கண்டார். அதற்கு நான்கு புறத்திலும் தந்தத்தாலும் தங்கத்தாலும் அலங்கரிக்கப்பட்ட கால்களுடன் வைடூர்யங்கள் பதித்து விலையற்ற விரிப்புகளால் மூடப்பட்ட அநேக ஆஸனங்கள் போடப்பட்டிருந்தன. அங்கே ஓர் பக்கத்தில் முத்துஹாரங்களாலும் ரத்னமாலைகளாலும் அலங்கரிக்கப்பட்டுப் பூர்ணசந்த்ரனைப்போல் வெண்மையான ஓர் பூசக்ரகுடையைக் கண்டார். உருக்கியோடவிட்ட ஆயிரத்தெட்டு மாற்று அபரஞ்சித் தங்கத்தால் செய்யப்பட்ட அந்த மஞ்சம் ஸூர்யனைப் போல் ஜ்வலித்தது. அசோகம் முதலிய மாலைகள் கட்டித் தொங்கவிடப்பட்டிருந்தன. மெல்லிய ரோமங்களையுடைய ஆடு முதலியமிருகங்களின் தோல்களும், விலையற்ற சால்வைகளும் விரிப்புகளும் பஞ்சணை மெத்தைகளும் பரப்பப்பட்டிருந்தன. நாறு வர்ணமுள்ள புஷ்பங்கள் வாரி இறைக்கப்பட்டிருந்தன. குங்குமம் கஸ்தூரி ஜவ்வாது புனுகு அத்தர் அகில் சந்தனக் கட்டை முதலிய வாஸனை த்ரவ்யங்களின் பரிமளம் நிறைந்திருந்தது. வெண்சாமரங்களைக் கையிலேந்தி வீசிக்கொண்டிருக்கும் பெண்ப்ரதிமைகளால் அலங்கரிக்கப்பட்டிருந்தது.

அதில் மழைக்காலத்தில் நீருண்ட மேகம்போல் கறுத்த தேஹத்துடனும், யானைத் துதிக்கைகளைப்போல் பருத்த நீண்டு உருண்டகைகளுடனும், நெருப்புப் பொறிபோல் சிவந்த நேத்ரங்களுடனும் ஸூர்யனைப் போல் ஜ்வலிக்கிற குண்டலங்களால் விளங்கும் முகத்துடனும், ப்ரதாப லங்கேச்வரன் நித்திரைசெய்து கொண்டிருந்தான். அவன் தரித்த ஒப்பற்ற பீதாம்பரம் கறுத்த மேகங்களுக்கு நடுவில் பாயும் மின்னற் கொடிபோல் ப்ரகாசித்தது. மார்பிலும் கைகளிலும் பூசப்பட்ட உத்தமமான சிவப்பு சந்தனம் ஸந்த்யாகாலத்தில் மின்னற்கொடிகளுடன் விளங்கும் சிவந்த மேகம்போல் காணப்பட்டது. ச்ரேஷ்டமான ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்டிருந்

தான். இஷ்டமான ரூபத்தை எடுக்கக்கூடியவனானதால் தன் பத்னிகள் கண்டு மோஹிக்கும்படி மன்மதனைப்போல் ரூபந் தரித்திருந்தான். ராத்ரியில் நெடுநேரம் க்ரீடித்ததாலும் மது பானத்தாலும் களைத்து அயர்ந்து தூங்கிக்கொண்டிருந்தான். ராக்ஷஸ ஸ்த்ரீகளுக்கு ப்ரியநாயகனும் ராக்ஷஸர்களுக்கு ஸகல க்ஷேமங்களையும் கொடுப்பவனுமாயிருக்கும் ராவணனைப் பார்த்து, "மரங்கள் புதர்கள் காடுகள் நிறைந்த மந்த்ர பர்வதம் அசைவற்று நித்ரைசெய்கிறதோ" வென்று மாருதி நினைத்தார். இப்படி ஸூர்யனைப்போலும் அக்னியைப்போலும் ப்ரகாசிக்கும் அந்த மஞ்சத்தில் மஹா ஸர்ப்பத்தைப்போல் பெருமூச்சு விட்டுக்கொண்டு நித்ரைசெய்யும் ராவணனைப் பார்த்து, "ராம பத்னியைத் தேடிவந்த நான் அவளைப் பார்ப்பதற்கு முன் அவளை அபஹரித்த மஹாபாபியைப் பார்க்கும்படி நேரிட்டதே"யென்று துக்கமடைந்தார். பயங்கொண்டவன் பிசாசம் முதலிய துஷ்டஜெந்துக்களுக்கெதிரில் நிற்க முடியாமல் ஒதுங்குவதுபோல், இந்த மஹாபாபியின் ஸமீபத்திலிருப்பது தகாதென்று சற்றுப் பின்வாங்கினார். பிறகு படிக்கட்டுகளின் வழியாய் வேறொரு பக்கத்திலுள்ள ஓர் மேடையின்மேலேறி அந்த ராக்ஷஸேச்வரனை உற்றுப் பார்த்தார். யானைத் துதிக்கைகளைப்போன்ற புஜங்களுடனும் பரிமளம் வீசுகிற சந்தனப்பூச்சுகளுடனும் விளங்கும் அந்தத் தசமுகன் படுத்திருக்கும் மஞ்சமானது மதஜலத்தை பெருகவிட்டுக்கொண்டிருக்கும் யானையுடன் கூடின மலையருவிபோல் தோன்றிற்று. அவனுடைய புஜங்கள் முழங்கால்வரையில் நீண்டு தைவலோகத்தில் நாட்டிய இந்த்ரத்வஜங்கள்போல் விளங்கின. உருக்கி அடித்த இருப்புலக்கைகள்போல் கடினமாய் யானைகளின் துதிக்கைகளைப்போல் அடிபெருத்து வரவரச் சிறுத்திருந்தன. ஒன்றிற்கொன்று பதமில்லாமல் மஹா பலமுள்ளவைகளாய் கெட்டியாய்ப்

பொருத்தப்பட்ட சந்துகளுடன் உத்தம லக்ஷணங்களமைந்த நகங்களாலும் கட்டை விரல்களாலும் அலங்கரிக்கப்பட்டிருந்தன. விலையற்ற மோதிரங்களணிந்த விரல்களுடன் இரண்டு ஐந்து தலை மஹாநாகங்கள் படுத்திருப்பதுபோல் காணப்பட்டன. தங்கத் தோள்வளைகள் அணிந்த புஜங்களில் இந்த்ரனுடன் யுத்தஞ்செய்யுங்காலத்தில் ஐராவதத்தின் தந்தங்களாலும் விஷ்ணுவுடன் யுத்தஞ்செய்யுங் காலத்தில் சக்ராயுதத்தாலும் உண்டான காயங்களின் வடுக்கள் கறுத்த ஆகாசத்தில் சந்தரர்களைப்போல் ப்ரகாசித்தன. முயலின் ரக்தத்தைப்போல் சிவந்து ச்ரேஷ்டமான பரிமளமும் மிகுந்த குளிர்ச்சியுமுள்ள சந்தனத்தால் நன்றாய்ப் பூசப்பட்டு விசித்

ரமாய் அலங்கரிக்கப்பட்டிருந்தன. நேர்த்தியான கந்தங்களால் வாஸனையேறினவை. உத்தம ஸ்த்ரீகளால் பிடிக்கப்பட்டவை. யக்ஷர், பன்னகர், கந்தர்வர் தேவர், அஸுரர் முதலியவர்களைக் கதற வடித்தவை. மிருகங்களையும் பக்ஷிகளையும் தின்று மயங்கிக் கோபத்தால் சீறிக்கொண்டு மந்தாகிரியின் நடுவில் தூங்கும் மலைப்பாம்புகளைப்போல் அந்தப் புஜங்கள் படுக்கையில் கிடப்பதைக் கண்டார்; பர்வதத்தைப்போன்ற சரீரத்தையுடைய ராவணனுக்கு உத்தம லக்ஷணங்கள் பொருந்தின இரண்டு புஜங்களும் மந்தரகிரியின் இரண்டு சிகரங்களைப்போல் விளங்கின. அவனுடைய மூச்சுக்காற்று மாங்கனி புன்னை மகிழம்பூ முதலியவைகளிலிருந்து இறங்கின மதுவின் வாஸனையாலும், ஷட்ரஸங்களுடன் புஜித்த அன்னத்தின் வாஸனையாலும், ச்ரேஷ்டமான பானங்களின் வாஸனையாலும் அந்தப் படுக்கையறை முழுவதையும் மணக்கும்படி செய்தது; நவரத்னங்களாலும் முத்துகளாலும் அலங்கரிக்கப்பட்ட தங்க கிரீடம் கொஞ்சம் நழுவியிருந்தது. குண்டலங்களுடைய காந்தி முகமெங்கும் வ்யாபித்தது. பருத்து நீண்டு அகன்ற மார்பில் சிவந்த சந்தனம் பூசப்படடிருந்தது. ஹாரங்கள் ஜ்வலித்தன. ச்ரேஷ்டமான பட்டு உத்தரீயங்கள் கொஞ்சம் நழுவியிருந்தன. இடுப்பில் பீதாம்பரத்தைத் தரித்திருந்தான். சிவந்த கண்களுடனும் உளுந்துமலையைப்போன்ற தேஹத்துடனும், மஹா ஸர்ப்பத்தைப்போல் மூச்சுவிட்டுக்கொண்டு, கங்காப்ரவாஹத்தின் நடுவில் அயர்ந்து தூங்கும் மதயானையைப்போல் தோன்றினன். நான்கு பக்கங்களிலுமுள்ள தங்க ஸ்தம்பங்களில் ஏற்றிய தீபகாந்தியால் ஸகல திக்குகளும் ப்ரகாசித்தன.

ஆகையால் ஸகல பாகங்களையும் நன்ருகத் தெரியச்செய்யும் மின்னற்கொடிகள் பாயும் மேகத்தைப்போல் மஹாசரீரத்தையுடைய, ராவணனையும் அவனிடத்தில் பரம ப்ரீதி வைத்த ஸ்த்ரீகள் அவனுடைய பாதத்தடியில் தூங்குவதையும் ஹனுமான் கண்டார். பூர்ணசந்த்ரனுக்கு ஸமமான காந்திபொருந்தின முகங்களுடன் அழகிய குண்டலங்களாலும் வாடாத மாலைகளாலும் அலங்கரிக்கப்பட்ட அனேக ஸ்த்ரீகளைக் கண்டார். சிலர் ஆட்டத்தாலும் வாத்யங்களாலும் ராவணனை ஸந்தோஷப்படுத்தி அவனால் ச்ரேஷ்டமான ஆபரணங்களைப் பஹுமானமாகக் கொடுக்கப்பட்டு, அவனுடைய புஜங்களிலும் மடியிலும் கொஞ்சி விளையாடி, அப்படியே தூங்கிவிட்டார்கள். சிலர் வஜ்ர வைடூர்யங்களால் இழைக்கப்பட்ட தோள்வளைகளணிந்த புஜங்களையே தலையணையாய் வைத்துத் தூங்

னதால், தோள்வளைகளும் காதில் தரித்த குண்டலங்களும் கலந்து ப்ரகாசித்தன. சந்த்ரனையொத்த முகங்களாலும், நக்ஷத்ரங்களைப் போன்ற குண்டலங்களாலும் அந்த விமானம் ஆகாசத்தைப்போல் விளங்கிற்று. யௌவனக் கொழுப்பால் ராவணனுடன் வெகு நேரம் க்ரீடித்துக் களைத்து, அவர்கள் இருந்த விடத்திலேயே தூங்கிவிட்டார்கள். ஒரு ஸுந்தரி பரதசாஸ்த்ரத்தில் மிகவும் திறமையுள்ளவள்; நர்த்தனத்தாலும் அபிநயத்தாலும் ராவணனை ஸந்தோஷப்படுத்தி அயர்ந்து தூங்கும்போதும் அவயவங்களை நாட்ய லக்ஷணங்களுக்கிசைந்தபடியே வைத்துக்கொண்டு தூங்கிவிட்டாள். ஒரு பெண்மணி அற்புதமாய் வீணை வாசித்து ராவணனை மகிழச் செய்து; அந்த வீணையை அணைத்துக்கொண்டே தூங்குகையில், புஷ்பங்களாலும் இலைகளாலும் விளங்கும் தாமரைக்கொடி ஆற்றுவெள்ளத்தில் அடித்துக்கொண்டு போகப்படும் பொழுது அகஸ்மாத்தாய் ஸந்தித்த ஒரு திட்டத்தைப் பற்றிக்கொண்டு நிற்பதுபோல் தோன்றினாள். கைக்குழந்தையை மிகுந்த ப்ரேமையுடன் இடுப்பில் வைத்துக்கொண்டிருப்பவளைப்போல், ஒருத்தி மட்டுகமென்ற வாத்யத்தை அணைத்துக்கொண்டே தூங்கிவிட்டாள். வெகுநாளாய்க் காணாத நாயகனைச் சேர்ந்து ஆசையுடன் அணைவதுபோல், ஒருத்தி படஹமென்ற வாத்யத்தை அணைத்துக்கொண்டே நித்ரைசெய்தாள். தன் ப்ரிய நாயகனை அணைவதற்கு ஸமயம் நேராமல் தபித்துக்கொண்டிருந்த காதலி, அகஸ்மாத்தாய் நாதனை ஏகாந்தத்தில் ஸந்தித்து, ஆசைமீறி இறுகத் தழுவுவதுபோல், ஒருத்தி புல்லாங்குழலை இறுகத் தழுவிக்கொண்டே உறங்கினாள். நாயகனுடன் ஸ்வேச்சையாய்ப் படுத்திருக்கும் கமலாக்ஷியைப் போல், நாட்யத்தில் தேர்ந்தவளும் மிருதுவாய்ப்பேசுகிறவளுமான ஒரு ஸ்த்ரீரத்னம் விபஞ்சியை அணைத்துகொண்டே தூங்கினாள். ஒருத்தி மதத்தால் கண்கள் சுழலப் பருத்து மிருதுவாய்த் தங்கக்கொடி போன்ற அவயவங்களால் மிருதங்கத்தை ஆலிங்கனஞ் செய்துகொண்டே தூங்கிவிட்டாள். சிறுத்த இடையுள்ள ஒருத்தி மதுபானத்தால் களைத்துப் பணவத்தைப் புஜங்களுக்கும் விலாவிற்கும் நடுவில் அணைத்துக்கொண்டே தூங்கினாள். ஒருத்தி ஒரு டிண்டிமத்தை மார்பிலும் வேறொரு டிண்டிமத்தைப் புஜத்திலும் அணைத்துக்கொண்டு தூங்கும்போது, ப்ரியநாயகனை மார்புடன் ஆலிங்கனஞ் செய்துகொண்டு, குழந்தையையும் கட்டிக் கொண்டவளைப்போல் தோன்றினாள். ஒருத்தி ஆடம்பரத்தைப் புஜங்களால் இறுகத் தழுவிக்கொண்டே தூங்கிவிட்டாள். ஒருத்தி கலசத்தைக் கவிழ்த்துத் தலையணையாய் வைத்துக்கொண்டு தூங்கு

கையில் அதில் மிகுந்திருந்த குங்குமம் சந்தனங்கலந்த ஜலம் அவளுடைய தேஹத்தில் பெருகக், கோடைகாலத்தில் வாடாமலிருப்பதற்காக ஜலந்தெளித்து வைக்கப்பட்ட புஷ்பமாலையைப் போல் காணப்பட்டாள். ஒருத்தி தூக்கம் தாங்கமுடியாமல், தங்கக் கலசங்களைப் போன்ற ஸ்தனங்களைக் கைகளால் மறைத்துக்கொண்டே தூங்கிவிட்டாள். ஒருத்தி மதத்தால் மெய்மறந்து, தன் ஸமீபத்தில் படுத்திருந்த தோழியை நாயகனென்றெண்ணி இறுகத் தழுவிக்கொண்டே தூங்கினள். காதலிகள் நாயகர்களை இறுகத் தழுவுவது போல், உத்தம ஸ்த்ரீகள் அனேகர் விசித்ரமான வாத்யங்களைப் புஜங்களாலும் ஸ்தனங்களாலும் அணைத்துக்கொண்டே தூங்கினர்கள். அவர்களைப் பார்த்துக்கொண்டு போகையில் ஹனுமான் ஓரிடத்தில் தனியாய் திவ்யாலங்காரங்களுடன் ஒரு படுக்கையையும் அதில் அழகே உருவெடுத்து வந்ததுபோலிருக்கும் ஒரு ஸ்த்ரீ நித்ரை செய்வதையும் கண்டார். முத்துகளாலும் நவமணிகளாலும் இழைக்கப்பட்ட ஆபரணங்களை அணிந்துகொண்டு, உருக்கிபோடவிட்ட ஆபரத்தெட்டு மாற்றுத் தங்கத்தைப்போல் ஜ்வலிக்கும் தேஹ காந்தியுடன், தன் தேஜஸாலும் கலைகளாலும் அந்த விமானத்திற்கு ஒரு ச்ரேஷ்டமான ஆபரணம் போல் விளங்கும் அந்தப் பெண்மணி மந்தோதரியென்று கீர்த்திபெற்ற ராவணனுடைய பட்டமஹிஷி; அவனுக்கு உயிருக்குயிரானவள்; அந்தப்புரத்திற்கு அதிபதி. ஆஞ்ஜநேயர் அவளுடைய அபூர்வமான ரூபத்தையும் யௌவனத்தையும் கவனித்து, இவள் ஸீதையாயிருக்கலாமென்று நினைத்து ஸந்தோஷந் தாங்காமல், தோள் தட்டி வாலை முத்தமிட்டு ஆனந்தமடைந்தார், குதித்து விளையாடினர், பாடினர், ஆடினர், உலாவினர், ஸ்தம்பங்களில் ஏறி குதித்தார். இப்படி வானரர்களுக்கு ஸ்வபாவமான சேஷ்டைகளையெல்லாம் செய்தார்.

---

## ஸர்க்கம் 11.

### பானசாலை.

பிறகு கொஞ்சம்யோசித்து அவள் ஸீதையல்லவென்று தெளிந்து, எங்கே ஜானகி இருக்கக்கூடுமென்று மறுபடியும் கவலைகொண்டார். ராமனை விட்டுப் பிரிந்து அவர் படும் கஷ்டங்களை அறிந்தும் ஜானகிக்குத் தூக்கம் வருமோ? அன்னம் வேண்டியிருக்குமோ? அல

ங்காரஞ் செய்து கொள்ளவும் தோன்றுமோ? பானங்களேயும் பக்ஷ யங்களேயும் அனுபவிக்கப் புத்தியுண்டோ? தேவேந்த்ரனுயிருந்தாலும் ராமனைத் தவிர வேறு புருஷனை ஸ்வப்னத்தில் நினைப்பாளோ? ஸகல லோகங்களிலும் ராமனைப் போன்ற வேறொருவருமுண்டோ? ஆகையால் இவள் ஸீதையல்ல, வேறு யாரோ வென்று முடிவு செய்து பானசாலையில் மறுபடியும் தேடினர். அங்கே சிலர் சொக்கட்டான், சோழி, அம்மானை, சூது, சதுரங்கம் முதலியவிளையாட்டுகளால் களைத்தும், சிலர் பாட்டால் ச்ரமமடைந்தும், சிலர் நாட்யத்தால் அலுத்தும், சிலர் மதுபானஞ் செய்து மயங்கியும், சிலர் முரவம் மிருதங்கம் முதலிய வாத்யங்களைத் தலையணையாய் வைத்துக்கொண்டும், சிலர் பீடங்களின் மேலும், சிலர் நேர்த்தியான விரிப்புகளின் மேலும் ப்ரக்ஞையற்றுத் தூங்கினர்கள். அவர்களிலும் ஸீதையைக் காணுமல் மறுபடியும் ராவணன் படுத்திருக்குமிடத்திற்கு வந்தார். அவனுடைய ஸ்த்ரீகளெல்லாம் மஹா பக்தியுடன் தங்களுடைய பர்த்தாவின் ரூபத்தையும் குணங்களேயும் எப்பொழுதும் புகழ்பவர்கள்; தகுந்தபடி பாடவும் அதன் தாத்பர்யத்தைத் தெளிவாய் எடுத்துச் சொல்லவும் ஸாமர்த்யமுடையவர்கள்; தேச காலங்களை அறிந்து நடப்பவர்கள்; ஸமயோசிதமாய்ப் பேசுகிறவர்கள்; ராவணன் அவர்களுடன் காமசாஸ்த்ரபடி ஸகல போகங்களையும் அனுபவித்து, அயர்ந்து தூங்குவதைக் கண்டார். அவர்களுக்கு நடுவில் அந்த ராக்ஷஸேச்வரன் ச்ரேஷ்டமான பசுக்களுக்கு நடுவில் விளங்கும் காளையைப்போலும் வனத்தில் பெண்யானைகளால் சூழப்பட்ட மதயானையைப்போலும் விளங்கினன்.

பிறகு விரும்பக்கூடிய ஸகல பதார்த்தங்களாலும் நிறைந்த பானபூமிக்கு மாருதி வந்தார். அங்கே மான் எருமை பன்றி முதலிய மிருகங்களின் மாம்ஸங்கள் குப்பல் குப்பல்களாய் வைக்கப்பட்டிருந்தன. விசாலமான தங்கத் தட்டுகளில் தின்று மிகுந்த மயில் கோழி மான் பன்றி சல்யம் வார்த்ராணஸம் முதலிய மிருகங்களின் மாம்ஸங்கள் தயிரிலும் ருசகமென்ற உப்பிலும் பக்வஞ் செய்து வைத்திருந்ததைக் கண்டார். வெகு சாதுர்யமாய்ப் பக்வஞ் செய்யப்பட்ட க்ரிகாம் சகோரமென்ற பக்ஷிகள் எருமைகள் ஆடுகள் ஏகசால்யமென்ற மீன் முதலியவைகளின் மாம்ஸங்களும் நானு விதமான துவையல்களும் பானங்களும் தின்பண்டங்களும் புஜிக்கப்பட்டு மிகுந்திருப்பதைக் கண்டார். உப்புப் புளிப்பேற்றிய அனேக வ்யஞ்ஜனங்களாலும் வெள்ளைக்கடுகு கலந்த ஆறுவகை

சலங்கள் பொருந்தின பக்ஷ்யங்களாலும், ஸ்த்ரீ புருஷர்கள் குடிமயக்கத்தில் கழற்றி எறிந்த ஹாரம் சிலம்பு முதலிய பூஷணங்களாலும் பானபாத்ரங்களில் ஊறும் பலவகைப் பழங்களாலும் அந்தப் பானசாலை புஷ்பங்களால் பூமிதேவியை அர்ச்சிப்பதுபோல் விளங்கிற்று. அங்கங்கே போட்டிருக்கும் படுக்கைகளாலும் ஆஸனங்களாலும் அந்த வீடு நெருப்பில்லாமலேயே கொழுந்துவிட்டெரிவது போலிருந்தது. வெகு நிபுணர்களான சமையற்காரர்களால் விதம் விதமாய்ப் பக்வஞ்செய்து தனித்தனியாய் வைக்கப்பட்ட மாம்ஸங்களைக் கண்டார்; பாற்கடலைக் கடையும்பொழுது உண்டான வாருணி யென்ற பானத்தின் வகைகளும், சர்க்கரை தேன் புஷ்பங்கள் பழங்கள் முதலியவைகளிலிருந்து இறக்கின பானங்களும், சாதுர்யமாகச் செய்யப்பட்ட பானங்களும், வாஸனைப் பொடிகளும் ஏராளமாய் வைக்கப்பட்டிருந்தன. தங்கத்தாலும் ஸ்படிகத்தாலும் செய்யப்பட்ட போஜன பாத்ரங்களாலும், தங்கக் கூஜாக்களாலும் அந்தப் பான பூமி நிறைந்திருந்தது. தங்கக் குடங்களிலும் வெள்ளிக் குடங்களிலும் ச்ரேஷ்டமான பானங்கள் ஊற்றி வைக்கப்பட்டிருந்தன. தங்கத்தாலும் வெள்ளியாலும் செய்யப்பட்டு ரத்னங்களிழைத்த அனேக பானபாத்ரங்கள் சாராயங் குடிப்பதற்காக வித்தமாயிருந்தன. சில விடங்களில் பாத்ரங்களில் வைக்கப்பட்ட பானங்கள் குடிக்கப்படாமலேயேயிருந்தன; சில விடங்களில் பாதி குடிக்கப்பட்டிருந்தன; சிலவிடங்களில் முழுதும் குடிக்கப்பட்டிருந்தன. ஓரிடத்தில் பலவித பக்ஷ்யங்களும், ஓரிடத்தில் பானங்களின் மிகுதியும்; ஓரிடத்தில் புஜித்த அன்னத்தின் மிகுதியும் காணப்பட்டது; ஓரிடத்தில் கிண்டிகள் உடைந்து கிடந்தன; ஓரிடத்தில் குடங்கள் உருண்டு கிடந்தன; ஓரிடத்தில் ஸ்த்ரீகளுக்காக அனேக படுக்கைகள் போடப்பட்டிருந்தன.

சில ஸ்த்ரீகள் ஒருவரையொருவர் இறுகத் தழுவிக்கொண்டும், சிலர் தூங்குகிறவர்களுடைய வஸ்த்ரங்களை உடுத்துக்கொண்டும் நித்ரை மேலிட்டுத் தூங்கினார்கள். ம்ருதுவான தென்றலைப்போல் அவர்களுடைய ச்வாஸக்காற்று அவர்கள் அணிந்த வஸ்த்ரங்களையும் மாலைகளையும் சற்று அசைத்தது. அந்தப்பானசாலையில் வீசும்காற்று, குளிர்ந்த சந்தனம் தேனின் ரஸம் சாராயம் நானாவித புஷ்பமாலைகள் பலவகைத் தூபங்கள் முதலியவைகளில் தாக்கி, அவைகளின் குளிர்ச்சியையும் பரிமளத்தையும் ராவணன் படுத்திருந்த புஷ்பகவிமானத்தில் வீசிற்று. அங்கேயிருந்த சில ஸ்த்ரீகள் கறுப்பும் வெளுப்புங் கலந்த வர்ணமுடையவர்கள்; சிலர் கறுத்தவர்கள்; சிலர் தங்கக்கொடி

போன்ற அவயவங்களையுடையவர்கள். நாயகனுடன்கூடின ச்ரமத்தாலும் தூக்கத்தாலும் ப்ரக்ஞையற்றிருக்கும் அந்தப் பெண்கள் ஸூர்யாஸ்தமன காலத்தில் மூடியிருக்கும் தாமரைகளைப்போல் விளங்கினார்கள். மஹாதேஜஸ்வியான ஹநுமான் இப்படி ராவணனுடைய அந்தப்புரம் முழுவதையும் வெகு ஜாக்ரதையாய்த் தேடியும் ஜானகியைக் காணவில்லை. "பரஸ்த்ரீகள் பர்த்தாவுடன் ஸ்வேச்சையாய்த் தூங்கும்போது பார்த்துவிட்டேனே. என் ப்ரஹ்மசர்ய தர்மத்திற்குக் குறைவு நேருமே. இவர்களைக் கண்டதால் என் மனஸில் யாதொரு விகாரமுமில்லாவிட்டாலும், பரஸ்த்ரீகளைப் பார்ப்பது பாபமல்லவா"வென்று சற்றுநேரம் நினைத்துப், பிறகு "இந்தக் கவலை நமது கார்யத்தைக் கெடுத்துவிடு"மென்று அதை ஒழித்துத் தனக்கு ஸ்வபாவமான தைர்யத்தையும் புத்திக்கூர்மையையும் கைக்கொண்டு, நடக்கவேண்டிய கார்யத்தின் குணதோஷங்களை யோசித்தார். "ராவண பத்னீகள் ஸ்வேச்சையாய்த் தூங்கும்போது என்னால் நன்றாய்ப் பார்க்கப்பட்டார்கள். ஆனால் என் மனஸில் யாதொரு காமவிகாரமும் உண்டாகவில்லை. ஸகல புண்ய பாப கர்மங்களைச் செய்வதிலும் இந்த்ரியங்களை ஏவுகிறது மனஸல்லவா? என் மனஸிலோ கொஞ்சமாவது களங்கமில்லை. இவர்களைப் பார்க்காமலேயே இருக்கலாமேவென்றால், ஜானகியை ஸ்த்ரீகளிருக்குமிடத்தில் தேடாமல் வேறெங்கே தேடமுடியும்? ஒவ்வொரு வஸ்துவையும் அந்த ஜாதிவஸ்துக்களிருக்குமிடத்தில் தேடினால் காணலாமேயொழிய, மான்களுக்கு நடுவில் ஸ்த்ரீயைத் தேடுவார்களோ? சுத்தமான மனஸுடன் ராவணனுடைய அந்தப்புரம் முழுவதிலும் தேடிப் பார்த்தும், ஜானகியைக் காணவில்லையே! தேவகன்யைகளையும் கந்தர்வ கன்யைகளையும் நாக கன்யைகளையுமல்லவா கண்டேன்; ராகவ பத்னீயான ஜானகியைக் காணக்கிடைக்கவில்லையே" யென்று சற்று நேரம் கவலை கொண்டார். மறுபடியும் தைர்யமடைந்து அந்தப் பானசாலையைவிட்டு ராவணனுடைய படுக்கை வீட்டில் தேட ஆரம்பித்தார்.

---

## ஸர்க்கம் 12.

## ஸீதையைக் காணாமல் மாருதி துக்கித்தது.

---

ஆஞ்ஜநேயர் ஸீதையைக் கண்டுபிடிப்பதிலேயே நோக்கமுள்ளவராய், அந்த வீட்டில் தேடிக்கொண்டு போகையில், கொடிகளால் செய்யப்பட்ட வீடுகளையும், விசித்ர ரூபங்களுடன் கட்

டப்பட்ட வீடுகளையும், ராத்ரியில் வஸிக்கத்தகுந்த வீடுகளையும் கண்டு அங்கெல்லாம் ஜாக்ரதையாய்த் தேடினார். அழகிய பார்வையுடைய ஸீதையை மாத்ரம் காணவில்லை. "ஐயோ! இந்த லங்காநகரத்தில் எல்லாவிடங்களிலும் வெகு ஜாக்ரதையாய்த் தேடியும் ரகுநாதனுடைய ப்ரியபார்யையைக் காணேனே. ப்ராணநாயகனை விட்டுப் பிரிந்திருக்க முடியாமல் உயிரை விட்டாளோ? ஸாதுக்களுடைய மார்க்கத்திலிருந்து நழுவாத ஜனக புத்ரி தன் கற்பை ரக்ஷிப்பதில் நோக்கமுள்ளவளாய், இந்த க்ரூர ராக்ஷஸனுக்கு இணங்காமல் அவனால் கொல்லப்பட்டாளோ? ராகவனுடைய திவ்ய மங்கள விக்ரஹத்தைக் கண்டு ஆனந்தித்த ஸீதை, தனக்குக் காவலாய் வைக்கப்பட்ட ராக்ஷஸிகளின் ஏறக் குறைவான சரீரங்களையும் அவயவங்களையும் விகார வேஷத்தையும் தேஜஸற்ற முகங்களையும் க்ரூர கார்யங்களையும் கண்டு பயத்தால் உயிரை விட்டாளோ? ஸுக்ரீவனோ மஹாபலவான்; மிகவும் கடுமையாய்த் தண்டிப்பவன். அவன் குறிப்பிட்ட ஒருமாஸ காலத்தையும் வானரர்களுடன் விளையாட்டில் கழித்தேன்; ஸீதையையும் கண்டுபிடிக்கவில்லை; சத்ருவின் பல பராக்ரமங்களையும் அறியவில்லை; இந்த ஸ்திதியில் மஹாராஜாவிற் கெதிரில் போவதற்கும் யோக்யதையுண்டோ? ராவணனுடைய அந்தப்புரத்தில் ஓரிடமும் விடாமல் தேடினேன்; அவனுடைய பத்னிகளைக் கண்டேனேயொழிய மஹா பதிவ்ரதையான ஸீதையைக் காணவில்லையே! நூறு யோஜனை விஸ்தீரணமுள்ள மஹா ஸமுத்ரத்தைத் தாண்டினதும், நடுவில் நேர்ந்த தடைகளை ஜயித்ததும், ஸூக்ஷ்மரூபத்துடன் இந்த நகரத்தில் எங்கும் தேடினதும் வீணாயிற்றே!

வந்த கார்யத்தை முடிக்காமல் திரும்பிப்போனால், "ஹனுமான் ஸமுத்ரத்தைத் தாண்டி லங்கைக்குப் போயிருக்கிறான். நமது ஸகல உத்தேசங்களையும் நிறைவேற்றிக்கொண்டே வருவான். நாம் விசாரப்படவேண்டியதில்லை. நமது கஷ்டங்கள் தீர்ந்தன" வென்று என் வரவை ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருக்கும் வானர வீரர்களெல்லாம் என்னைச் சூழ்ந்துகொண்டு என்ன சொல்லுவார்கள்? 'வீரசிகாமணியே! எங்களால் முடியாத கார்யத்தைச் செய்தாய். ராகவ பத்தினியைக் கண்டாயா? ராவணனுடைய பல பராக்ரமங்களைப் பூர்ணமாய் அறிந்து வந்தாயா? நீ அங்கே செய்த ஸகல கார்யங்களையும் விஸ்தாரமாய் எங்களுக்குச் சொல்'லென்று கேட்பார்களே. என்ன பதில் சொல்வேன்? லங்காநகரத்தில் எவ்வளவு தேடியும் ஜானகியைக் காணவில்லை யென்று சொல்வேனோ? மற்ற வானர வீரர்கள் அங்கதனிடத்தில் தங்களுடைய பலத்தைச்

சொல்லித் தப்புவித்துக் கொண்டார்கள். நான் மாத்ரம் வாயை மூடிக்கொண்டிருந்து, ஜாம்புவான் என்னை ஸ்தோத்ரஞ்செய்யும் பொழுது மனமகிழ்ந்து, அசட்டுத்தனமாய் பிதற்றிவிட்டேனே. செய்ய வேண்டிய கார்யத்தின் ஸ்வபாவத்தை ஆராய்ந்து பாராமல் செய்து முடிக்கிறேனென்று ஒப்புக்கொண்டேன். புறப்படுகையில் மௌனமாயிராமல் "ராகவனுடைய கோதண்டத்திலிருந்து ப்ரயோகிக்கப்பட்ட பாணத்தைப்போல் ஒரு க்ஷணத்தில் லங்கைக்குப்போவேன். அங்கே ஸீதையைத் தேடிக்கண்டுபிடிப்பேன். காணவிட்டால் பதினலு லோகங்களில் எங்கிருந்தாலும் போய்க் கண்டு பிடிப்பேன். அங்கும் காணவிட்டால், மறுபடியும் லங்கைக்கு வந்து ராவணனைக் கட்டி இழுத்துக்கொண்டு வருவேன். அவனையும் காணவிட்டால் லங்கையை வேருடன் பெயர்த்து இங்கே கொண்டுவருவேனென்று வீர வாதம் பேசினேனே! என்னைப் புகழ்ந்த வயஸ் சென்ற ஜாம்பவானும் அவரை அனுஸரித்துப் பேசின அங்கதனும், மற்ற வானர வீரர்களும் இப்பொழுது என்னைப் பலவிதமாய் நிந்திப்பார்களே! திரும்பிப்போகாமல் இங்கேயே இருந்து விடுவோமென்றால், நான் குறிப்பிட்ட காலம் தாண்டினவுடன், வானரர்களெல்லோரும் "ஹனுமான் களைத்து ஸமுத்ரத்தில் விழுந்திருப்பான்! அல்லது சத்ருக்களால் கொல்லப்பட்டிருப்பா"னென்று நிச்சயித்து ப்ராயோபவேசஞ்செய்து (பட்டினி கிடந்து) உயிரை விடுவார்களேயென்று சற்று நேரம் கவலைகொண்டு பிறகு,

"என்ன புத்தி, மோசம் போனேன்! கவலை உயிரை வாங்குமே! கார்யங்களைக் கெடுக்குமே! ஸகல ஸம்பத்திற்கு உத்ஸாஹமல்லவா காரணம்? உத்ஸாஹமே ச்ரேஷ்டமான ஸுகத்தைக் கொடுக்கும். எந்தக் கார்யத்தையும் செய்யும்படி மனிதனைத் தூண்டிவிடுகிறது உத்ஸாஹமல்லவா? மனிதன் செய்யும் ஸகல கார்யங்களையும் ஸபலமாகச் செய்வது உத்ஸாஹமே. ஆகையால் உத்ஸாஹத்துடன் மறுபடியும் ப்ரயத்னம்செய்கிறேன். ராவணனால் ஆளப்பட்ட ஸ்தலங்களையும் பானசாலைகளையும் புஷ்ப கிருஹங்களையும் சித்ரசாலைகளையும் க்ரீடா கிருஹங்களையும் வீடுகளைச் சேர்ந்த தோட்டங்களிலுள்ள பாதைகளையும் புஷ்பகம் முதலிய விமானங்களையும் சுரங்கங்களையும் நாற்சந்திகளிலுள்ள கிருஹங்களையும் வீடுகளுக்குத் தூரமாய் ஸ்வேச்சையாய் விளையாடுவதற்காகக் கட்டப்பட்ட கிருஹங்களையும் மறுபடியும் தேடுகிறே"னென்று மேலேறியும் இறங்கியும் நின்றுகொண்டும் நடந்துகொண்டும் வாசல்களையும் கதவுகளையும் திறந்துகொண்டும் உள்ளே நுழைந்தும் வெளியில் வந்தும் குஹைகளில் ப்ரவேசித்தும்

வெளிக்கிளம்பியும் தேடிக்கொண்டே போனார்; ராவணனுடைய அந்தப்புரத்தில் அவரால் பரிசோதிக்கப்படாதவிடமில்லை. கோட்டைக்குள்ளிருக்கும் வீதிகளையும் நாற்சந்திமரங்களுக் கடியிலுள்ள மேடைகளையும் தூவுகளையும் குளங்களையும் நன்றாய்த் தேடிப்பார்த்தார். நானாருபமுள்ளவர்களும் குரூபிகளும் விகார வேஷமுள்ளவர்களுமான ராக்ஷஸிகளைக் கண்டார்; ஜானகியைக் காணவில்லை. நிகரற்ற ஸௌந்தர்யத்தையுடைய வித்யாதர ஸ்த்ரீகளைக் கண்டார்; ராகவனுக்கு ஆனந்தகாரணமான ஸீதையைக் காணவில்லை. பூர்ணசந்த்ரனையொத்த முகங்களையுடைய உத்தமமான நாககன்யைகளைக் கண்டார், லாவண்ய நிதியான வைதேஹியைக் காணவில்லை. யுத்தத்தில் ஜயித்த நாகர்களுடைய கன்யைகளைப் பலவந்தமாய் அபஹரித்து வந்து வைத்திருப்பதைக் கண்டார்; ஜனக மஹாராஜனுக்கு அருமையான ஸீதையைக் காணவில்லை.

வாயு புத்ரனும், ஸூர்யனை அலக்ஷ்யமாய்த் தாவிப் பிடித்தவரும், புத்தியிலும் யோசனையிலும் ஒப்பில்லாதவருமான ஆஞ்ஜநேயர் மற்ற ஸ்த்ரீ ரத்னங்களைக் கண்டு ஸீதையை மாத்ரம் காணாமல் சொல்லமுடியாத துக்கத்தை அடைந்தார். அளவற்ற பராக்ரமசாலியானாலும் வானர வீரர்களுடைய ப்ரயத்னங்களும் தான் ஸமுத்ரத்தைத் தாண்டினதும் வீணானதைக் கண்டு, மறுபடியும் கவலைகொண்டு புஷ்பகத்திலிருந்த இறங்கி, துக்கத்தால் மனம் நொந்து மறுபடியும் ஆலோசிக்கலானார்.

## ஸர்க்கம் 13.

(தொடர்ச்சி)

பிறகு மஹாவேகமுள்ள ஹனுமான் இந்த்ரநீலக் கல்லால் அலங்கரிக்கப்பட்ட கோட்டை மதிள்மேலேறி நிற்கையில் கறுத்த மேகங்களுக்கு நடுவில் ப்ரகாசிக்கும் மின்னலைப்போல் தோன்றினார். ராவணன் வீட்டில் எங்கும் தேடியும் ஸீதையைக் காணாமல் பின் வருமாறு யோசித்தார். "ராமனுடைய ஆக்ஞையை நிறைவேற்ற முயன்ற நான் இந்த லங்காநகரத்தை வேண்டியவரையில் தேடினேன். உத்தம லக்ஷணங்கள் பொருந்தின அவயவங்களையுடைய ஸீதையை மாத்ரம் காணவில்லை. குட்டைகள் குளங்கள் ஏரிகள் வாய்க்கால்கள் நதிகள் சதுப்புநிலங்கள் நிறைந்த வனங்கள் புதர்கள்

மலைகள் ஒன்றுவிடாமல் தேடிப் பார்த்தேன்; ஜானகி மாத்ரம் காணப்படவில்லையே! ராவணன் வீட்டில் ஸீதையிருக்கிறாள்; அதோ பாருங்களென்று ஸம்பாதி சொன்னபடி இங்கே அவளைக் காணேனே!

எது எப்படியிருந்தாலும், ஜானகி காமபரவசமாய், துஷ்ட நடத்தையுள்ள ராவணனிடத்தில் மோஹித்து அவனுக்குட்பட்டிருப்பாளோ? அவள் ஸாமான்ய ஸ்த்ரீயா? யாகயக்ஞங்களுக்கும் ப்ராஹ்ம வித்யைக்கும் வாஸஸ்தலமான விதேஹ வம்சத்தில் பிறந்தவளல்லவா? சதானந்தர் யாக்ஞவல்க்யர் முதலிய ப்ரஹ்ம ஞானிகளால் பரிசுத்தமான மிதிலாநகரத்தில் அவதரித்தவளல்லவா? மஹர்ஷிகளும் உபதேசத்திற்காக வந்து அடுக்கும்படியான ஜனகரென்ற ப்ரஹ்மவித்திற்குப் புத்ரியல்லவா? மற்ற ஜீவகோடிகளைப்போல் ஸ்த்ரீபுருஷ ஸம்பந்தத்தால் பிறக்காமல், யாககாலத்தில் யாகபூமியை உழும்பொழுது கலப்பை நுனியால் வெளிப்படுத்தப்பட்டவளன்றோ?

ஒருவேளை ராவணன் ஸீதையை எடுத்துக்கொண்டு ஆகாசமார்க்கமாய்ப் போகையில் "இதற்குள் ராமன் பர்ணசாலைக்கு வந்து ஸீதையைக் காணாமல் தேடி ஜடாயுஸ் முதலியவர்களால் நான் கொண்டுபோகிறேனென்றறிந்து, பாணத்தை விட்டால் என்ன செய்வேன்? அது எங்கிருந்தாலும் விடாதே! மாரீசனைப் படுத்தினபாடு தெரியாதா" வென்று நினைத்து நடுங்கி, ஸீதையை நழுவவிட்டிருக்கலாம். அவள் மலைகளைப்போன்ற அலைகள் கொந்தளிக்கும் ஸமுத்ரத்தை ஒருநாளும் காணாதவள்; தேவகணங்கள் ஸஞ்சரிக்கும் ஆகாசவீதியில் அதிகவேகமாய்ச் செல்லும்போது முதலை திமிங்கலம் நீர்ப்பாம்பு முதலிய ஜலஜந்துக்களைக் கண்டு பயத்தால் ப்ரக்ஞையற்றுக் கீழே விழுந்திறந்தாளோ? மிகுந்த செல்வமாய் வளர்க்கப்பட்டவளாகையால் மஹா பலவானான ராவணனுடைய புஜங்களால் பீடிக்கப்பட்டு அவன் போகும் அதிவேகத்தை ஸஹிக்காமல் உயிரை விட்டிருப்பாளோ? அல்லது, மஹா பதிவ்ரதையாகையால் பரபுருஷனால் தொடப்பட்ட தேஹத்தைச் சுருக்கிக்கொண்டு ராவணன் ஸமுத்ரத்திற்கு மேல் வர வர உயரக் கிளம்பிப் போகையில் ஸமுத்ரத்தில் விழுந்திருப்பாளோ? அல்லது, ராவணன் தன் இஷ்டத்திற்கிணங்கும்படி அவளைப் பலாத்காரஞ் செய்திருப்பான்; உயிரை விட்டாலும் விடுவாளேயன்றி ஸம்மதிப்பாளா? அதைக் கண்டு ராவணன் கோபபரவசனாய் ஒண்டியாயும் அநாதையாயுமிருக்கும் ஜானகியைத் தின்றிருப்பான்; அல்லது ராவண பத்னிகள் சக்களத்தி த்வேஷத்தால் ஸாது

வான ஜானகியைப் பங்கிட்டுத் தின்றுவிட்டார்களோ? அல்லது ராமமூர்த்தியின் மங்கள விக்ரஹத்தையும், கோடி மன்மத ஸௌந்தர்யத்தையும் பூர்ணசந்த்ரனைப்போன்ற முகத்தையும் மலர்ந்த செந்தாமரையைப்போன்ற நேத்ரங்களையும் நினைத்து நினைத்துருகி, "இனி அவரைப் நான் பார்க்கப்போகிறதில்லை" யென்று மனந்தளர்ந்து உயிரைவிட்டாளோ? 'ஹா ராம! லக்ஷ்மண! ஹ! அயோத்யா!'. வென்று கதறிக்கொண்டே ப்ராணனை விட்டாளோ?

"சீ! இப்படி எண்ணுவதெல்லாம் புத்திஹீனம். ஸீதையைக் கொஞ்சங்கூட அபாயமில்லாமல் லங்கையில் கொண்டுபோய் வைப்பது ராவணனுக்குப் பெரிய காரியமா? ஹிமயமலையைப்போல் கலங்காத தைர்யத்தையுடைய வீரச்ரேஷ்டர்களின் வம்சத்தில் பிறந்த ஜானகிக்குப் பயமென்பதுமுண்டோ? பதிவ்ரதா தர்மமென்ற நெருப்புக் கொழுந்தால் சூழப்பட்ட ஜானகியை ராவணன் ஹிம்ஸைசெய்யவும் முடியுமா? தான் ஆசைகொண்டு ஸகல அபாயங்களையும் லக்ஷ்யஞ் செய்யாமல் மஹா பாதகத்தைச் செய்யத் துணிந்த ராவணன் ஸீதையைத் தின்றிருப்பானென்று எண்ணவும் முடியுமா? ராக்ஷஸேச்வரனுக்கு மிகவும் ப்ரியமான ஸீதையை அவனுடைய பார்யைகள் கண்ணெடுத்துப் பார்க்கவும் துணிவார்களோ? ராமனுடைய நிஜஸ்வரூபத்தையும் தேஜஸையும் பலத்தையும் பராக்ரமத்தையும் வீர்யத்தையும் பூர்ணமாக அறிந்த ஸீதை, அவர் தன்னை மறந்துவிடுவாரென்றும் அவருக்கு ராவணனை ஜயிப்பது அஸாத்யமென்றும் எண்ணி நம்பிக்கையற்று உயிரை விடுவாளோ?

ஆகையால் உயிரோடிருக்கிறாள்! லங்கையிலேயேயிருக்கிறாள். ஆனால் பஞ்சவர்ணக்கிளியைக் கூட்டில் அடைத்துவைப்பதுபோல் எங்கேயோ ரஹஸ்யமான விடத்தில் ராவணனால் ஒளித்து வைக்கப்பட்டு கஷ்டப்பட்டுக்கொண்டிருக்கிறாளென்பது நிச்சயம். ஸ்திரீ புருஷ ஸம்பந்தமில்லாமல் யாகபூமியில் பிறந்து, ஜனகராஜர்ஷியால் வளர்க்கப்பட்டு, ஸகல லோகநாதனான ராமமூர்த்தியைப் பர்த்தாவாக அடைந்து, ப்ரபஞ்சத்தை மயக்கவந்த மாயையைப்போல் அழகால் எல்லா ப்ராணிகளையும் மோஹிக்கச் செய்யும் ஜானகீ, எவ்விதத்திலும் தனக்குத் தகாத மஹாபாபிக்கு ஸ்வாதீனப்பட்டிருப்பாளோ? ராவணன் எங்கேயாவது பூமிக்குள் ஒளித்து வைத்திருப்பானோ? வரும் வழியில் மயங்கி ஸமுத்ரத்தில் விழுந்தாளோ? ராகவனைப் பிரிந்திருக்க முடியாமல் உயிரைவிட்டாளோ? ஸீதையிடத்தில் எல்லையற்ற ப்ரியமுள்ள ராமனிடத்தில் இதைத்

தெரிவிப்பது ஸரியல்ல; சொன்னால் பெருங்கெடுதிநேரும்; சொல்லாவிட்டால் ஸ்வாமித்ரோஹம் செய்தவனுவேன்; ஒன்றிற்கொன்று விரோதம், என்ன செய்யலாம்? இந்த ஸங்கட நிலைமையில் காலதேசத்திற்கொத்தபடி செய்வேண்டியதென்ன'' வென்று ஆஞ்ஜனேயர் யோசித்தார். ஸீதையைக் காணுமல் இங்கிருந்து கிஷ்கிந்தைக்குப் போனதால் பயனென்ன? ஸமுத்ரத்தைத் தாண்டினதும் லங்கைக்குள் சென்றதும் ராவணனைப் பார்த்ததும் வீணுகும். ஸுக்ரீவ மஹாராஜாவும் கிஷ்கிந்தையிலுள்ள வானரர்களும் ராமலக்ஷ்மணர்களும் என்னை என்ன சொல்லமாட்டார்கள்?

"எப்படித் தேடியும் ஸீதையைக் காணவில்லையென்ற கோரமான வார்த்தையை ராமனிடத்தில் சொன்னால் அந்த நிமிஷத்திலேயே உயிரை விடுவாரே- என் கடுமையான வாக்யங்கள் நாராசங்களைப்போல் அவருடைய ஹிருதயத்தை க்ரூரமாகத் துளைத்து, இந்த்ரியங்களை வேரறுக்கும். அதற்குப் பிறகும் உயிர் தரிக்குமோ? பொறுக்கமுடியாத துக்கத்தால் ராமன் உயிர்விடுவதைக் கண்டு, தன் தேஹம் உயிர் ஆவியை அவருக்கு கொடுத்த லக்ஷ்மணன் பிழைத்துமிருப்பாரோ? மஹா புத்திமானல்லவா? ராமலக்ஷ்மணர்கள் இறந்ததைக் கேட்டவுடன் பரதன் உயிரை விடுவார். அவருடைய நிழலைப்போன்ற சத்ருக்னன் ஒரு நிமிஷமாவது அவரை விட்டிருப்பாரோ? லோகபாலர்களைப்போன்ற புத்ரர்களைப் பறிகொடுத்து கௌஸல்யை ஸுமித்ரை கைகேயீ யென்ற ராஜபத்னிகள் பிழைத்துமிருப்பார்களோ? ஸுக்ரீவ மஹாராஜ சொன்னசொல் தவறாதவர்; ராமனால் அடைந்த பரமோபகாரத்திற்குத் தன்னால் ப்ரத்யுபகாரஞ் செய்யமுடியாமல் அவர் துக்கத்தால் இறப்பதைப் பார்க்கப் பொறுப்பாரோ? வெகுகாலம் கஷ்டங்களை அனுபவித்துப் பலவிதமாக அவமானஞ் செய்யப்பட்டு, தன் பர்த்தாவுக்கு க்ஷேமம் பிறக்குமாவென்று தைவங்களை வேண்டின ருமை, ஸுக்ரீவனுமிறந்து வித்வையாகக் காலங்கழிக்க நினைப்பாளோ? உத்தம பதிவ்ரதையல்லவா? வாலியைப் பறிகொடுத்து நடை பிணம்போலிருக்கும் தீக்ஷ்ண புத்தியுள்ள தாரை ஸுக்ரீவனையுமிழந்து உயிரோடிருப்பாளா? நிகரற்ற மாதா பிதாக்களுமின்றி தகப்பனுக்குத் தகப்பனுகவிருந்த ஸுக்ரீவனும் இறந்து குழந்தை அங்கதன் அகால மரணமடைவானென்பதில் ஸந்தேஹமுண்டோ? தங்களுக்கு ஸகலவிதத்திலும் கதியான அரசர்கள் மடிந்தபிறகு வானரர்கள் கைகளாலும் முஷ்டிகளாலும் தலைகளில் அறைந்துகொண்டு இறப்பார்கள். மஹாராஜாவால் மிருதுவான வார்த்தைகளாலும் பஹுமானங்களாலும் கௌர

வத்தாலும் பெருமைப்படுத்தப்பட்ட வானர ச்ரேஷ்டர்கள் அவர் இறந்தபிறகு மஹா ஹீனமாகப் பிழைப்பார்களா? வீடுகளிலும் வனங்களிலும் மலைகளிலும் கூடி ஸந்தோஷமாக விளையாடுவார்களா? ஸுக்ரீவனுக்கு நேர்ந்த கஷ்டத்தை நினைத்து நினைத்து மந்த்ரி ப்ரதானிகளுடனும் பெண்டு பிள்ளைகளுடனும் மலைச்சிகரங்களிலிருந்து விழுந்து மடிவார்கள்; விஷத்தைத் தின்றோ, நெருப்பில் விழுந்தோ, தூக்குப்போட்டுக்கொண்டோ, பட்டினி கிடந்தோ, ஆயுதங்களாலோ எவ்விதத்தாலாவது தற்கொலைசெய்துகொள்வார்கள். நான் போனவுடன் பெருங் கூச்சலும் அழுகையும் கிளம்பும். இக்ஷ்வாகு வம்சம் மடியும். வானரர்களும் நிர்மூலமாவார்கள். இப்படி எல்லோரையும் கொல்லும் நான் இங்கிருந்து கிஷ்கிந்தைக்குப் போக நினைப்பேனோ? ஸீதையைக் காணமல் மஹாராஜாவின் முகத்தில் எப்படி விழிப்பேன்?

“நான் போகாமல் இங்கேயே இருந்து விட்டால், தர்மாத்மாக்களும் பராக்கமசாலிகளுமான ராமலக்ஷ்மணர்களும் ஸமுத்ரக்கரையில் என்னை எதிர்பார்த்திருக்கும் வானரவீரர்களும் “கார்யத்தை எப்படியாவது முடித்துக்கொண்டே மாருதி வருவா” னென்ற நம்பிக்கையால் உயிரை வைத்துக்கொண்டிருப்பார்கள். நான் பழம் கிழங்கு ஜலம் நிறைந்த ஸமுத்ரக்கரையோரங்களில் வானப்ரஸ்த வ்ரதத்தை அனுஷ்டித்துக்கொண்டு தானகவே என் கைகளிலும் வாயிலும் விழும் பதார்த்தங்களைத் தின்று காலங் கழிப்பேன். அல்லது கட்டைகளை அடுக்கி நெருப்பில் விழுந்திறப்பேன்; ஸமுத்ரத்தில் குதித்து உயிரை விடுவேன். உபவாஸஞ் செய்து தேஹத்திலிருந்து ஆத்மாவைப் பிரிக்க யத்னஞ்செய்துகொண்டிருக்கையில் காக்கைகளும் நாற்கால் ஜந்துக்களும் என் தேஹத்தைத் தின்றுவிடும். இவ்வித மரணம் மஹர்ஷிகளால் மெச்சப்பட்டது. இந்த ராத்ரி நன்றாக ஆரம்பித்தது; முதலில் லங்கா தேவதையை ஜயித்தேன்; சந்த்ரனும் எனக்கு விசேஷ உபகாரஞ் செய்தான்; ஸீதையைத் தேடும் உத்தம கார்யத்தில் ஸஹாயஞ் செய்ததென்றும், ஹனுமான் ஸீதையைக் கண்டுபிடித்த ராத்ரியென்றும் வெகு கீர்த்தியால் அலங்கரிக்கப்படுமென்று எண்ணியிருந்தேன்; ஸீதையைக் காணமல் இதெல்லாம் வீணயிற்று. தபஸ்வியாயிருந்து மரத்தடிகளில் காலங்கழிப்பேனேயொழிய ஸீதையைக் காணமல் திரும்பிப்போக மாட்டேன். போனல் என்னை ஆவலுடன் எதிர்பார்த்துக்கொண்டிருக்கும் அங்கதனும் மற்ற வானரர்களும்

உடனே ப்ராணனை விடுவார்கள். நான் இறப்பதில் அநேக கெடுதிகளுண்டு; உயிரோடிருந்தால் என்றைக்காவது க்ஷேமம் நேரும். ஆகையால் உயிரை வைத்துக்கொள்வதே நல மென்று."

இப்படிப் பலவிதமாய் யோசித்தும் ஆஞ்ஜநேயருக்குத் துக்கம் தீரவில்லை- "அல்லது, மஹாபலவானான லங்காபதியைக் கொல்லட்டுமா? அதனால் வேறு ப்ரயோஜனமில்லாவிட்டாலும் அந்த பாபி செய்த அக்ரமத்திற்குப் பழிவாங்கின திருப்தியாவதுண்டாகும். அல்லது, யாகபசுவை அக்னிதேவதைக்குப் பஹுமானமாய்க் கொடுப்பதுபோல் ராவணனைக் கட்டி ஆகாசமார்க்கமாய்க் கொண்டு போய் ராமனுடைய பாதத்தில் போடட்டுமா" வென்று ஹநுமான் துக்கத்தாலும் கவலையாலும் பீடிக்கப்பட்டு மறுபடியும் ஆலோசித்தார். "ஸீதையைக் காணும்வரையில் இங்கேயிருந்து லங்கையில் அடிக்கடி தேடுவேன். அல்லது, ஸம்பாதி சொன்ன வார்த்தையை நம்பி, "ஸீதை லங்கையில் இருக்கிறாளென்று சொல்லி ராமனை அழைத்து வந்தாலென்ன? ஐயோ! ஸீதை இங்கில்லாவிட்டால் வானர குலத்தை சாம்பலாக்குவாரே! ஆகையால் இங்கேயே இந்த்ரியங்களை அடக்கிக் கொண்டு உபவாஸஞ் செய்வேன். பாபம்! என்னால் வானரர்களெல்லாம் நாசமடையவேண்டுமா" வென்று நான்கு புறங்களிலும் கவனித்துப் பார்த்து,

"மோசம் போனேனே! என்ன புத்திஹீனம்! இதோ ஆகாசத்தை அளாவும் அசோக மரங்களடர்ந்த சோலையை நான் இதுவரையிலும் தேடவில்லையே; ஜானகியை இங்கே ஏன் வைத்திருக்கக்கூடாது? இந்த க்ஷணமே தேடுகிறேன். வஸுக்கள் ருத்ரர்கள் ஆதித்யர்கள் அச்வினீகள் மருத்துகள் முதலிய தேவகணங்களை நமஸ்கரிக்கிறேன். எனக்கு ஸஹாயஞ்செய்து நான் ராக்ஷஸகுல காலனாகும்படி ஆசீர்வதிக்கட்டும். வெகுகாலம் கடுந்தபஸ் செய்தவனுக்கு ஸித்தியைக் கொடுக்கும் தேவதையைப் போல் ரகுகுல கீர்த்தியை விளங்கச்செய்யும் ஸீதையை ராமனிடத்தில் கொண்டுபோய் ஒப்புவிப்பே" னென்று மஹாதேஜஸ்வியான ஆஞ்ஜநேயர் சற்று நேரம் யோசித்துக் கவலையால் இந்த்ரியங்கள் கலங்கி, "இப்பொழுதாவது கார்யம் கைகூடுமா?" வென்றெண்ணிக்கொண்டு எழுந்தார். "ராமலக்ஷ்மணர்களுக்கும் ஜானகிக்கும் ருத்ரன் இந்த்ரன் யமன் வாயு சந்த்ரன் ஸூர்யன் மருத்துகள் முதலிய தேவதைகளுக்கும் நமஸ்கார" மென்று ஸூர்யபுத்ரனும் தன் ப்ரபுவுமான ஸுக்ரீவனை மனஸால் வந்தனஞ் செய்து ஸகல திக்குகளையும் நன்றாய்ப் பரிசோதித்துப் பார்த்து, ஒருவருமில்லையென்று அறிந்து

அசோக வனத்தை உற்றுப் பார்த்தார். அங்கே போய்த் தேட நிச்சியித்து மேலே செய்பவேண்டிய கார்யங்களை ஆலோசித்தார். "அசோக வனத்தில் அநேக காடுகளிருக்கும்; கணக்கில்லாத ராக்ஷஸர்கள் ஸஞ்சரித்துக் கொண்டிருப்பார்கள். எருவாய்க்கால் முதலிய ஸகலவித ஸாதனங்களாலும் பரிஷ்காரமாயிருக்கும். மாங்களைகப் பாதுகாக்க அநேகர் ஏற்படுத்தப்பட்டிருப்பார்கள், ஸர்வ ஜகத்திற்கும் ப்ராணுதாரமான என் பிதாவும் கடுமையாய் வீசக்காணேன். ராவணனைச் சேர்ந்தவர்கள் காணுமலிருப்பதற்கும் ராமகார்யம் ஸித்திப்பதற்கும் என் தேஹத்தைச் சுருக்கியிருக்கிறேன். மஹார்ஷிகளும் தேவதைகளும் நான் ஸீதையைப் பார்க்கும்படி ஆசீர்வதிக்கட்டும். ஸ்வயம்புவான ப்ரஹ்மதேவரும் அக்னி வாயு வருணன் மஹேந்த்ரன் ஸூர்ய சந்த்ரர்கள் அச்வினீகள் மருத்துகள் ருத்ரன் முதலியவர்களும் என் கார்யம் ஸித்திக்குபடி அனுக்ரஹிக்கட்டும். ஸகல பூதங்களும் அவைகளுக்கு நாதனுன விஷ்ணுவும், நான் போகும் வழியில் என் கண்ணில் படுகிறவர்களும் படாதவர்களும் என் கார்யம் கைகூடும்படி ஆசீர்வதிக்கட்டும். உயர்ந்த மூக்கையும் வெண்மையான பற்களையும், நிலவு போன்ற சிரிப்பையும், செந்தாமரை யிதழ்போன்ற கண்களையுமுடையதாய்ப் பூரணசந்திரனைப்போல் ஸகல ப்ரபஞ்சத்திற்கும் ஆனந்தத்தைக் கொடுக்கும் ஸீதாதேவியின் திருமுகமண்டலத்தை இந்தத் தேவதைகளின் கிருபையால் எப்பொழுது பார்ப்பேன்? மஹாநீசன், பாபத்திற்கு அஞ்சாதவன், ஸகல லோகங்களும் நடுங்கும்படியான க்ரூர கார்யங்களைச் செய்கிறவன், கோரரூபியானுலும் எல்லோரும் மோஹிக்கும்படியான வேஷத்தைத் தரிக்கிறவன், தன் ஜனங்களைவிட்டுத் தனியாய் தபிக்கும் மஹா பதிவ்ரதையான ஜானகியைப் பலாத்காரஞ் செய்து கொண்டு வந்திருக்கிறுனே! அவனை இப்பொழுது பார்ப்பதெப்படி". யென்று சிந்தித்தார்.



ஸர்க்கம் 14.

## அசோக வனம்.



இப்படிச் சற்றுநேரம் ஆலோசித்து அசோகவனத்திற்குப் போக நிச்சயித்து மஹா தேஜஸ்வியான ஹனுமான் அதின் மதிள் சுவரைத் தாண்டினுர். ப்ராகாரத்தின் மேலிருந்து பார்க்கையில் ஆனந்தத்தால் அவருடைய ஸகல அவயங்களும் பூரித்தன. வஸ

ந்த ருதுவில் முதலில் புஷ்பித்த ஆச்சா அசோகம் சம்பகம் மா முதலிய பலவித விருக்ஷங்களைக் கண்டார். பிறகு வில்லிலிருந்து ப்ரயோகிக்கப்பட்ட நாராசத்தைப்போல், மாந்தோப்புகளால் மறைக்கப்பட்டுக் கொடிகளால் சூழப்பட்ட மாச்சோலைகளில் பாய்ந்தார். அங்கே குயில்களும் மயில்களும் வண்டுகளும் இன்னும் பலவகைப் பக்ஷிகளும் மதுரமாய்ச் சப்தித்துக்கொண்டிருந்தன; மான் முதலிய மிருகங்கள் கூட்டங் கூட்டமாய் ஸஞ்சரித்தன; வெள்ளிமயமாயும் தங்கமயமாயும் விளங்கும் அநேக விருக்ஷங்கள் பாலஸூர்யர்களைப்போல் புஷ்பங்களாலும் பழங்களாலும் பிரகாசித்தன. விசித்ரமான காடுகளில் ஸகல ப்ராணிகளும் ஆனந்தமாய் விளையாடிக்கொண்டிருந்தன. அழகிலும் சீலத்திலும் நிகரில்லாத ஜானகியைத் தேடிக்கொண்டு போகையில் ஸுகமாய்த் தூங்கிக் கொண்டிருந்த பக்ஷிகளை எழுப்பினர்; அவை நான்கு புறங்களிலும் பறந்து, இறக்கைகளால் மரங்களை அடித்து நாலுவர்ணமுள்ள புஷ்பங்களை உதிர்த்தன. அவைகளால் இறைக்கப்பட்ட தேஹத்தையுடைய ஹனுமான் புஷ்பத்தால் செய்யப்பட்ட மலையைப்போல் தோன்றினர். மாச்சோலைகளிலிருந்து ஸகல திக்குகளிலும் பாயும் ஆஞ்ஜநேயரை வஸந்த ருதுவின் தேவதையென்று அங்கிருந்த ஸகல ப்ராணிகளும் நினைத்தன. மரங்களிலிருந்து உதிர்ந்த புஷ்பங்களால் அலங்கரிக்கப்பட்ட பூமியானது ஆபரணங்களணிந்த ஸுந்தரியைப்போல் விளங்கிற்று. மஹா பலவானான ஹனுமான் அந்த மரங்களை வேகமாய் அசைக்கையில் அவை விசித்ரமான புஷ்பங்களைச் சொரிந்தன. சூதாட்டத்தில் தோர்த்துப் பந்தயம் வைத்த ஆடையாபரணங்களைக் கழற்றிவைத்த சூதர்களைப்போல், புஷ்பங்களையும் பழங்களையும் இலைகளையும் உதிர்த்த அந்த விருக்ஷங்கள் அழகு குறைந்து நின்றன. பெருங்காற்றில் அடிப்பட்டவைபோல், புஷ்பங்களும் பழங்களும் இலைகளும் பக்ஷிகளுமில்லாமல் வஸிக்கத் தகாதவையாயின. நாயகனுடன் ரதிகேளி அனுபவித்த யௌவனஸ்த்ரீ தூற்றப்பட்ட தலைமயிருடனும், சந்தனப்பூச்சுகளும் மகரிகாபத்ரங்களும் திலகமும் அழிந்தும், ஆசையுடன் அதரபானஞ்செய்யப்பட்டதால் பல்லுகளைப்போல் வெண்மையான உதடுகளுடனும், நகங்களாலும் பல்லுகளாலும் காயம்பட்ட தேஹத்துடனும் விளங்குவதுபோல், அசோகவனம் ஹனுமானுடைய கால்களாலும் கைகளாலும் வாலாலும் குலைக்கப்பட்டுக் சின்னபின்னமான மரங்களுடன் விளங்கிற்று. மழைக்காலத்தில் வாயுபகவான், விந்த்யமலையில் தங்கியிருக்கும் மேகக் கூட்டங்களைச் சிதற வடிப்பதுபோல், அந்த வானரவீரன் பெருங்கொடிகளை அறுத்தெறிந்தார்.

அங்கே தங்கம் வெள்ளி நவமணிகள் முதலியவைகளால் இழைத்த தரையைக் கண்டார். விசித்ரமான ரூபங்களுடன் அனேக குளங்கள் வெட்டப்பட்டிருந்தன. படிகளில் நவரத்னங்கள் ப்ரகாசித்தன; ஸ்படிகத்தால் தளவரிசை போட்டிருந்தது. முத்து பவழம் முதலிய விலையற்ற வஸ்துக்களின் பொடிகளே மணல்கள்; அமிருதத்தைப்போல் ருசியுள்ள ஜலத்தால் நிறைந்திருந்தது; அதில் தாமரை கருநெய்தல் அலரி முதலிய புஷ்பங்கள் அழகாய் மலர்ந்திருந்தன; அவைகளின் மேல் நீர்ப்பறவைகள் மதுரமாய்க் கூவிக்கொண்டிருந்தன. நான்கு புறங்களிலிருந்தும் ஆறுகள் வந்து விழுந்தன. கரைகளில் பொன்மயமான விருக்ஷங்களும், ஸந்தானம் முதலிய ஸ்வர்க்கலோகத்து விருக்ஷங்களும், புதர்களும் இடைவெளியில்லாமல் செழித்து வளர்ந்தன. கொஞ்சதூரத்திற்கப்பால் மண்ணால் செய்யப்பட்ட ஒரு க்ரீடாபர்வதத்தைக் கண்டார். அது மேகத்தைப்போல் கறுத்து, உன்னதமான சிகரத்தையும் விசித்ரமான கொடிமுடிகளையுடையதாய்க், கற்பாறைகளால் அமைக்கப்பட்ட அறைகளுடன் நானா விருக்ஷங்களால் நிறைந்து வெகு மனோஹரமாய் விளங்கிற்று. நாயகனுடன் கோபித்துக்கொண்டு திடீரென்று அவன் மடியிலிருந்து குதித்தோடும் பெண்ணைப்போல் ஒரு நதி அந்தப் பர்வதத்திலிருந்து கீழே விழுந்தது. அவளுடைய தோழிகளும் பந்துக்களும் போகவேண்டாமென்று தடுப்பது போல், அதின் ஜலத்தில் நனைந்த நுனிகளுடன் அனேக மரங்கள் இருகரைகளிலும் செழித்து வளர்ந்தன. நாயகனிடத்தில் கோபந் தணிந்து திரும்பி வரும் நாயகியைப்போல் மரங்களால் தடுக்கப்பட்ட ஜலம் எதிர்த்து வந்தது. அந்த நதிக்கு ஸமீபத்தில் நானாபக்ஷிகணங்களால் அலங்கரிக்கப்பட்ட தாமரை ஓடைகளிருந்தன. வெகு நீளமாய் அமைக்கப்பட்ட அனேக நடைவாபிகள் குளிர்ந்த ஜலத்தால் நிறைந்து, நவமணிகளிழைத்த படிகளுடனும் முத்துப் பொடியால் செய்த மணல்களுடனும் காணப்பட்டன. கரைகளில் விசித்ரமான மாடிவீடுகளும் பலவகை மிருகங்களால் நிறைந்த ஆச்சர்யகரமான வனங்களும் காடுகளும், விச்வகர்மாவால் அமைக்கப்பட்டிருந்தன.

புஷ்பங்களாலும் பழங்களாலும் தழைத்த சில பெரிய விருக்ஷங்களுக்கு நான்கு புறங்களிலும் விஸ்தாரமான மேடைகள் கட்டப்பட்டிருந்தன. அதன்மேல் தங்க மேடைகளும் வெயில் மழை

முதலியவைகளைத் தடுப்பதற்காகப் பந்தல்களும் போடப்பட்டிருந்தன. அங்கே ஒரு ஸம்ஸுபா விருக்ஷம் கொடிகளாலும் இலைகளாலும் சூழப்பட்டுத் தங்கமயமாய் ப்ரகாசித்தது. அதைச்சுற்றிலும் தங்க மேடைகள் போடப்பட்டிருந்தன. இன்னும் அநேக விசித்ரமான ப்ரதேசங்களையும், பூமி பிளப்புகளையும், மலையருவிகளையும், நெருப்புக் கொழுந்துபோல் ஜ்வலிக்கும் தங்கமயமான விருக்ஷங்களையும் கண்டார். "ஸ்வர்ணமயமான மேருபர்வதத்தின் காந்தியால் ஸூர்யன் தங்கமயமாய்த் தோன்றுவதுபோல், இந்த விருக்ஷங்களின் தேஜஸால் என் தேஹம் முழுவதும் தங்கமயமாய்த் தோன்றுகின்ற" தென்றார். அநேகமாயிரம் விருக்ஷங்களால் சூழப்பட்ட அந்த ஸிம்ஸுபா விருக்ஷத்தில் விசித்ரமான த்வனியுள்ள அநேக சிறுமணிகள் கட்டப்பட்டிருந்தன. அவைகள் காற்றால் அசைக்கப்படும்பொழுது மதுரமான சப்தமுண்டாயிற்று.

பிறகு இலைகளாலும் புஷ்பங்களாலும் தளிர்களாலும் அரும்புகளாலும் விளங்கும் அந்த மரத்திலேறி ஆஞ்ஜநேயர் இப்படி ஆலோசித்தார். "ராமனை எப்போது காண்பேனென்று ஆவலுடன் எதிர் பார்க்கும் ஜானகியை இங்கிருந்து காணலாம். கவலையால் தூக்கம் பிடிக்காமல் அங்குமிங்கும் அலைந்துகொண்டு ஒரு வேளை இவ்விடத்திற்கு வரக்கூடாதா? சம்பகம் சந்தனம் முதலிய ச்ரேஷ்டமான விருக்ஷங்களால் விளங்கும் இந்த அசோகவனத்தில் அவளுக்கு ப்ரியமிருக்கும். இந்தத் தாமரை ஓடையில் பக்ஷிகள் இன்பமாய்க் கூவுகின்றன; வனங்களில் ஸஞ்சரிப்பதில் ஸீதைக்கு விசேஷ ஆனந்தம்; ராமனை விட்டுப் பிரிந்து இளைத்து அந்தத் தாபத்தைப் போக்குவதற்காக இங்கே வருவாள்; வனத்தில் ஸஞ்சரிக்கும் ப்ராணிகளுடைய க்ஷேமத்தில் அவளுக்கு மிகுந்த கவலையுண்டு; அனேக வர்ஷங்களாய் வனங்களில் திரிந்துபழகினவள்; யௌவனப்பருவத்திலிருப்பவள்; ஜனங்களுடைய கூட்டத்தை நீக்கித் தனியாய் ராமனை த்யானிக்கவும் அவருடன் ஆனந்தமாய்க் கழித்த காலத்தை ஞாபகஞ் செய்யக்கூடிய இந்த வனங்களைப் பார்க்கவும் இங்கே நிச்சயமாய் வருவாள்; அல்லது தெளிந்த ஜலத்தையுடைய இந்த நதியில் காலை ஸந்த்யா தேவதையை உபாஸிக்க வருவாள்; இது அவள் ஸஞ்சரிக்கத் தகுந்தவனம்; அவளும் இந்த வனத்திற்குத் தகுந்த ஆபரணம்; அவள் உயிரோடு மாத்ரமிருந்தால் இந்த நதிக்கரைக்கு வாராமலிருக்

க்ஷமாட்டா" ளென்று மஹா மேதாவியான மாருதி அந்த சிம்சுபாவிருக்ஷத்தில் மறைந்திருந்து, நான்கு புறங்களிலிருந்து ஸீதையின் வரவை எதிர்பார்த்துக்கொண்டு நான்கு திக்குகளையும் கவனித்தார்.

---

## ஸர்க்கம் 15.

### ஹநுமான் ஸீதையைக் கண்டது.

ஹநுமான் அந்த மரத்தின் மேலிருந்து நான்கு பக்கங்களிலும் ஸீதையைத் தேடிக்கொண்டு, பூமியையும் மாச்சோலையையும் உற்றுப் பார்த்தார். கல்பகம் முதலிய தேவவிருக்ஷங்களின் ஜ்யோதியால் திக்குகள் ப்ரகாசித்தன. குயில்கள் மதுரமாய்க் கூவின; அசோக மரங்கள் புஷ்பங்களாலும் பழங்களாலும் பாலஸூர்யனைப்போலும் நெருப்பைப்போலும் ஜ்வலித்தன; ஸகல ருதுக்களிலுண்டாகும் புஷ்பங்களும் அங்கே காணப்பட்டன; விசித்ர ரூபமுள்ள புஷ்பங்கள் ஆபரணங்களைப்போல் காணப்பட்டன; பழங்களாலும் புஷ்பங்களாலும் இலைகளாலும் அடிமுதல் நுனிவரையில் மறைக்கப்பட்டுப் பாரந்தாங்காமல் பூமியில் புரளும் அசோகம் முதலிய அநேக விருக்ஷங்களைக் கண்டார். பக்ஷிக்கூட்டங்கள் கணக்கில்லாமல் வந்து விழுந்து, கிளைகளில் இலைகளேயில்லாமல் செய்வதுபோலிருந்தன. நடவாபிகளில் தங்கமயமான தாமரை முதலிய புஷ்பங்கள் ப்ரகாசித்தன. திவ்யமான வாஸனையாலும் ரஸத்தாலும் அந்தவனம் மனதை அபஹரித்தது. மனிதர் பார்த்து ஸந்தோஷிக்கும் ஸகலவிதமான பக்ஷிகளும் மிருகங்களும் அங்கே காணப்பட்டன. உப்பரிகைகளாலும் அரசர் அரண்மனைகளாலும் பலவகை ஆஸனங்களாலும் கம்பளங்களாலும் அலங்கரிக்கப்பட்ட அநேக சுரங்கங்களாலும் நெருக்கமாயிருந்தது. எவ்விடத்திலும் அழகாய் அலங்கரிக்கப்பட்டு இந்த்ரனுடைய நந்தனமென்ற வனத்தை ஒத்திருந்தது. அந்த விருக்ஷங்களின் காந்தியால் அந்த ப்ரதேசம் முழுவதும் நெருப்புப் பிடித்தெரிவதுபோல் தோன்றிற்று; ஆழமாய் வேரூன்றிச்செழிக்கும் புன்னை எழிலைப்பாலை சம்பகம் முதலிய மரங்களும் தங்கம் நெருப்பு மை முதலியவைகளைப் போல் வர்ணமுள்ள அசோக மரங்களும் அங்கே காணப்பட்டன அதிமனோஹரமாய் வர்ணிக்க முடியாததாய் விசேஷ காந்தியுடன் இந்த்ரனுடைய நந்தனத்தை ஒத்துக் குபேரனுடைய சைத்ரத

த்தைப் பரிஹாஸஞ்செய்வதுபோலிருந்தது புஷ்பங்களாகிற நக்ஷத்ரங்களால் ஆகாசத்தைப்போலவும், புஷ்பங்களாகிற ரத்னங்களால் ஸமுத்ரத்தைப் போலவும் ஸகல ருதுக்களிலும் புஷ்பிக்கும் மரங்களாலும் தேன் மணம் வீசும் மரங்களாலும் பலவகைப் பக்ஷிகளாலும் மிருகங்களாலும் அவைகளின் விசித்ரமான த்வனிகளாலும் வாசனைகளாலும் அந்த அசோகவனம் பரிசுத்தமான கந்தமாதனபர்வதத்தைப்போலும் தோன்றிற்று.

அந்த வனத்தில் சற்று தூரத்திற்கப்பால் புத்தரின் ஆலயம் போல் கட்டப்பட்ட ஒரு உப்பரிகையைக் கண்டார். அது வெகு உயரமாய் ஆயிரம் ஸ்தம்பங்களுடன் வெண்மையாய்க் கைலாஸ பர்வதத்தைப்போலிருந்தது. அதின் பவழப்படிகளும் தங்க மேடைகளும் கண்ணைப்பறித்தன. பிறகு அந்த சிம்சுபாவிருக்ஷத்திற்கருகிலுள்ள உப்பரிகையில் ஒரு ஸ்திரீ இருக்கக்கண்டார். அவளைச்சுற்றிலும் ராக்ஷஸிகள் கண்கொட்டாமல் காத்துக்கொண்டிருந்தார்கள். நெடுநாளாய் ஆஹாரமில்லாமல் துரும்புபோல் இளைத்திருந்தாள்; புழுதிபடிந்த தேஹத்தில் அழுக்குப் படிந்து கிழிந்த தங்கமயமான ஒற்றை வஸ்த்ரம் சுற்றப்பட்டிருந்தது; பெண்களுக்கு உசிதமான ஆபரணங்களில்லை; கண்ணீர் தாரைதாரையாய்ப்பெருகிக்கொண்டிருந்தது; சரத் காலத்தில் கறுத்த வனவரிசைகளால் விளங்கும் பூமியைப்போன்ற சுருண்டு நீண்ட தலைமயிர் கருநாகத்தைப்போல் ஒற்றைப் பின்னலாய் இடுப்பிற்குக் கீழ்வரையில் தொங்கிக்கொண்டிருந்தது. தைரியமற்று அடிக்கடி பெருமூச்சு விட்டுக்கொண்டிருந்தாள்; மிகுந்த வெட்கத்துடன் தன்பர்த்தாவைவிட்டுப் பிரிந்த துக்கத்தால் வாடித் தவித்துக்கொண்டிருந்தாள். ஆனால் ஸகல ப்ரபஞ்சத்தையும் பதிவ்ரதாக்னியால் கொளுத்தக்கூடியவள்; அவள் படும்பாட்டைப் பார்த்துக் கருங்கல்லும் உருகும்; ராம த்யானத்தாலும் அவரைப் பிரிந்த சோகத்தாலும் மெய்மறந்தவள்; மனங்குன்றித் துக்கத்தைத் தவிர வேறு கதியில்லாதவள்; தன் ப்ரிய ஜனங்களை விட்டு ராக்ஷஸிகளின் நடுவிலிருக்கையில் தன் இனத்தை விட்டுப்பிரிந்த பெண்மான் நாய்களால் சூழப்பட்டதுபோலிருந்தது; கஷ்டத்தையே அறியாதவள்; பரமஸௌக்யத்தையே அனுபவிக்கத் தகுந்தவள், சொல்லமுடியாத துக்கத்தால் கொளுத்தப்படுகிறவள்; அவளுடைய ரூபத்தையும் அழகையும் சற்று யோசித்த பிறகு மாத்திரம் இவள் ஜானகியென்று அறியமுடியும்; சுக்லபக்ஷத்தின் ஆரம்பத்தில் நிர்மலமான சந்த்ர ரேகையைப் போலும் புகையால் மூடப்பட்ட அக்னிஜ்வாலையைப்

போலும், தாமரையற்ற ஓடையைப்போலும், ப்ரியநாயகனான சந்த்
ரனை அடையவேண்டிய ரோஹிணியை அங்காரகனென்ற க்ரூர க்ர
ஹம் பிடித்தபோலும் தோன்றினாள்.

அழுக்கடைந்து இளைத்த தேஹத்தையும் விசாலமான நேத்
ரங்களையுமுடைய அந்தப்பெண்ணை நன்றாய்க் கவனிக்கையில் தகு
ந்த காரணங்களால் இவளே ஸீதையென்று மாருதி நிச்சயித்
தார். "இஷ்டமான ரூபத்தை எடுக்கக்கூடிய ராவணன் எடுத்
துக்கொண்டு போகையில் எவளைக் கண்டேனோ அவளுக்கும்
இவளுக்கும் ரூபத்தில் பேதமில்லை. பூர்ணசந்த்ரனைப்போன்ற
முகமண்டலத்தையும், மன்மதனுடைய வில்லைப்போன்ற புருவங்
களையும், தாமரை இதழ்களைப்போல் மலர்ந்து செவ்வரிபடர்ந்து
மான் குட்டியைப்போல் மிரண்டிருக்கும் நேத்ரங்களையும், கறுத்த
தலைமயிரையும், கறுத்துக் கோணலாயிருக்கும் இமைகளையும்
கோவைக்கனி போன்ற உதடுகளையும், வட்டமிட்ட அழகான ஸ்த
னங்களையும் சிறுத்த இடையையும் கவனிக்கையில் அவளென்றே
தோன்றுகிறது. தேஹ காந்தியால் ஸகல திக்குகளும் இருள் நீங்கி
ப்ரகாசிக்கின்றன; அங்கங்கள் பொருத்தமாய் அமைக்கப்பட்டிருக்
கின்றன; மன்மத பத்நியான ரதியைப்போல அழகுள்ளவள்;
பூர்ணிமா சந்திரனைப்போல் ஸகல ப்ராணிகளும் பார்க்க விரும்பக்
கூடியவள்; அவயவங்களில் உத்தம லக்ஷணங்கள் பொருந்தியிருக்கின்
றன; பூமியில் உட்கார்ந்து பெருமூச்சு விடுவதால் தபஸ்செய்ப
வளைப் போல் தோன்றுகிறாள்; ஆனால் நாகராஜனுடைய பத்னி
யைப் போல் நெருங்கமுடியாதவள்; புகைக்கூட்டத்தால் மறைக்
கப்பட்ட அக்னிஜ்வாலையைப்போல் பெரும் துக்கத்தால் மறைந்த
ப்ரகாசத்தையுடையவள். ஸந்தேஹமான அர்த்தங்களையுடைய
மனு முதலிய மஹர்ஷிகளின் ஸ்ம்ருதிவாக்யங்களைப்போலும், க்ஷீண
மான ஸம்பத்தைப்போலும், நம்பிக்கையில்லாத ச்ரத்தையைப்
போலும், நிறைவேறாத ஆசையைப்போலும், விக்னங்களால் தடை
பட்ட கார்ய ஸித்தியைப்போலும், கலங்கின புத்தியைப்போலும்,
அந்யாயமான அபவாதத்தால் கெடுக்கப்பட்ட கீர்த்தியைப்போலும்,
நீருண்ட மேகங்களால் மறைக்கப்பட்ட சந்த்ர காந்தியைப்போலும்,
வேதச்ருதிகளின் ஆதாரமில்லாமையால் ப்ரஸித்தியற்ற வேத விரோ
தமான வித்யையைப்போலும், மறந்து போன வித்யையைப்
போலும் காணப்படுகிறாள். தன் ப்ரியநாயகனை ராமனைப் பிரிந்து
அவனை அடைவேனோ என்று ஏக்கம் பிடித்து, ராவணன் தொட்

டெடுத்ததால் தேஹங்குன்றி, அநாதையாய் என்ன ஆபத்து நேருமோ
வென்று நான்கு புறங்களிலும் பயத்துடன் பார்த்துக்கொண்டிருக்கி
ருள். கண்ணீரால் முகங்கறுத்து, உத்தம பூஷணங்களை அணிந்து
கொள்ளத் தகுந்தவளானாலும் ஆபரணங்களில்லாமலிருக்கிறு'' வெ
ன்று யோசித்தார். ஹனுமான் அவளை அடிக்கடி பார்த்தும் அவரு
க்கு ஸந்தேஹம் தீரவில்லை. பாஷாஞானமும் சாஸ்த்ர பரிச்சயமுமி
ல்லாதவன் ஒரு வாக்யத்திற்கு விபரீதமான அர்த்தத்தைச் செய்து
தனக்கு ஞானம் வந்த பிறகு வெகு கஷ்டப்பட்டு ஸரியான அர்த்த
த்தை அறிவதுபோல், யாதொரு அலங்காரமில்லாத ஸ்திதியில்
ஜானகி இவள் தானேயென்று கண்டுபிடிப்பது கஷ்டமாயிருந்தது.

பிறகு, விசாலமான நேத்ரங்களையும் சுத்தமான நடத்தையை
யுமுடைய ஸீதையை வேறு சில காரணங்களால் அடையாளங்கண்டு
பிடித்தார். அவள் இருக்கு மிடத்தைச் சுற்றிலும் கவனித்துப்,
பார்க்கையில அவள் எந்த ஆபரணங்களை அணிந்திருந்ததாக ராமன்
தனக்குச் சொல்லியிருந்தாரோ அவையெல்லாம் மரக்கிளைகளில் தொ
ங்கவிடப்பட்டிருந்தன; விசித்ரமாய்ச்செய்யப்பட்ட கம்மல் காலைப்பூ
முதலிய காதில் பூணும் நகைகளும், பழத்தாலும் நவமணிகளாலும்
ப்ரகாசிக்கும் கடகம் சங்கிலி மோதிரம் முதலிய நகைகளும் பர்த்
தாவைப் பிரிந்த விரஹாக்னியால் கறுத்திருந்தன. வெகு காலம்
அணிந்தபடியால் அவைகளைக் கழற்றின பிறகு அந்த அடையாளங்
களிருந்தன. ஆகையால் "ராமன் எனக்குச் சொன்ன ஆபரணங்
கள் இவையே" யென்று நிச்சயித்தார். "ஜானகியின் தேஹத்திலிரு
ந்து எந்த ஆபரணங்கள் கழன்று விழுந்தனவோ, அவை இங்கே
யில்லை; எவை விழவில்லையோ அவை இங்கேயிருக்கின்றன. ஸீதை
யை அபஹரித்துக்கொண்டு போகையில் ரிச்யமூக பர்வதத்தில் பார்க்
கப்பட்ட வஸ்த்ரத்திலும் வர்ணத்திலும் காந்தியிலும் பேதமில்லை.
ராமனுடைய ப்ரியமான மஹிஷியும் பதிவ்ரதையும் ஸௌந்தர்ய காந்
தியுடையவளுமான இவள் நாசமடைந்தாலும் ராமனுடைய மனதில்
எப்போதும் குடியிருக்கின்றாளன்றோ? அவளே இவளென்பதில் ஸந்
தேஹமில்லை. எவளைக்குறித்து ராமன் அநேக காரணங்களால்
பரிதபிக்கிறாரோ அவள் இவளே. "ஒவ்வொருவனும் தன்னைச் சேர்
ந்த ஸ்த்ரீகளுக்கு ஆபத் நேரும்பொழுது அவர்களை ரக்ஷிப்பது ஸஹ
ஜம்; நான் அப்படிச் செய்யமுடியாமல் போயிற்றே'' யென்று இரக்
கத்தாலும்; "அண்டினவர்களைக் கைவிடுவதில்லை யென்பது நமது
ப்ரதிக்ஞையன்றோ? எல்லோரும் தடுக்கும்போது என்னையே ரக்ஷக

ளுய் நம்பி வனத்திற்கு வந்து என்னுடன் ஸகல கஷ்டங்களையும் அனுபவிக்கவிட்டு விட்டேனே" யென்ற உருக்கத்தாலும்; "புருஷனில் ஸ்த்ரீ பாதியென்ற ச்ருதிப்படி அக்னிஸாக்ஷியாய் நம்மைப் பர்த்தாவாய் அடைந்தவளை இழந்தேனே" யென்ற சோகத்தாலும்; "என் அன்பிற்குரிய நாயகியைப் பிரிந்தும் இன்னமும் இந்தப்பாழும் ப்ராணன் போகவில்லையே" யென்ற விரஹாக்னியாலும் தஹிக்கிறார். இவ்விருவர்களுடைய சரீரமும் கால் அவயவங்களுடைய மேன்மையையும் ஒரேவிதமாயிருக்கின்றன.

ஆகையால் இந்தப் பெண்மணி அவருக்குத் தகுந்தவளே. இவளுடைய மனஸ் அவரிடத்திலேயே வேரூன்றியிருக்கிறது; அவருடைய மனஸும் இவளிடத்திலேயே நாடியிருக்கிறது. இல்லாவிட்டால் ஒரு முஹூர்த்தமாவது உயிரை வைத்துக்கொண்டிருப்பார்களோ? மால்யவானென்ற பர்வதத்தில் ராகவன் ஸீதையின் பிரிவை ஸஹிக்காமல் புலம்பினபொழுது "இதென்ன விபரீதம்! வஸிஷ்ட மஹர்ஷியின் சிஷ்யராம்! வேத வேதாந்தங்களைக் கரைகடந்தவராம்! ஸகல கஷ்டங்களையும் ஸஹிக்கவல்ல க்ஷத்ரியவீரராம்! யாரோ ஒரு ஸ்த்ரீயைவிட்டுப் பிரிந்ததற்காக இவ்வளவு பாடுபடுகிறாரே!" யென்று நான் நித்யப்ரஹ்மசாரியானதாலும் இந்த்ரிய ஸுகங்களில் வெறுப்படைந்தவனானதாலும் பரிஹாஸஞ்செய்தேன். இப்பொழுது இவளுடைய ஸௌந்தர்யத்தையும் மனஸ்திதியையும் கண்டபிறகு எனக்குப் புத்தி வந்தது. இந்த ஸமுத்ரத்தைத் தாண்டினது ஒரு பெரிய கார்யமென்று எண்ணியிருந்தேன். இவளைப் பிரிந்தும் இன்னும் ராமன் தேஹத்தை வைத்துக்கொண்டிருப்பது ஒருவராலும் ஸாத்யமன்று. அவருடைய சோகமே அவரை அழிக்கவில்லையே! இந்த உத்தம ஸ்த்ரீயைப் பிரிந்து ஒரு முஹூர்த்தமாவது அவர் பிழைத்திருப்பது அஸாத்யமான கார்யம். அவருக்கென்ன ? மஹாப்ரபு; ராஜ்யத்தை ஆளவும் குதிரைகளைப் பழக்கவும் யுத்தஞ் செய்யவும் மாத்ரம் தெரியுமேயொழிய உத்தமஸ்த்ரீயின் ப்ரீதியைக் கொஞ்சமாவது அனுபவித்தவரல்ல. என்ன ப்ரபு! தனக்குக் கீர்த்தியையும் தேஜஸையும் விருத்திசெய்யும் இவளைப் பிரிந்தும் ப்ரபுத்வமுண்டோ ? தன்னை அண்டினவர்களைக் கைவிடும் ப்ரபுவுமுண்டோ? ஸீதையோ பர்த்தாவிற்கு உட்பட்டவள்; அவருடைய ஆக்ஞையில்லாமல் தன் தேஹத்தை விடக்கூடாது; ராமனோ ஸ்வதந்த்ரர்; இந்தத் தேஹம் தானல்ல; ஒரு கார்யத்திற்காக எடுத்துக் கொண்டதல்லவோ ? போகங்களை அனுபவிப்பதற்காக தேஹத்தை வைத்துக்கொள்ளுகிறதோ ? துக்கத்தை அனுபவிப்பதற்காக வைத்

துக்கொள்ளுகிறதோ ? பலவந்தமாய் ப்ராணனை விடலாமோவென்றால், ப்ராணனை வாங்கச் சோகம் ஒன்றே போதாதோ'' வென்று, அழுக்கடைந்த வஸ்த்ரத்துடன் உபவாஸத்தால் இளைத்து நாயகனையே த்யானித்துக்கொண்டிருக்கும் ஸீதையைப் பார்த்து ஹநுமான் ஸந்தோஷித்தார். தன் புத்தியில் குடிகொண்டிருக்கும் ராமமூர்த்தியை த்யானித்து "உம்மை அடையும்படி தன் பதிவ்ரதாதர்மத்தைக் காப்பாற்றிக்கொண்டிருக்கும் உத்தமியைப் பத்னியாயடைந்த நீரன்றோ பாக்யசாலி''யென்று ஸ்தோத்ரம் செய்தார்.

---

## ஸர்க்கம் 16.

## ஸீதையைக் கண்டு ஹநுமான் வருந்தினது.

அனந்த கல்யாண குணபூர்ணரான ராமனையும் எல்லோரும் கொண்டாடத் தகுந்த ஸீதையையும் புகழ்ந்து மாருதி மறுபடியும் கவலையுடன் யோசித்தார். இப்படிக் கொஞ்சநேரமிருந்து கண்ணீர்சொரிய ஸீதையின் நிலைமையை நினைத்து ப்ரலாபித்தார். "வஸிஷ்டர் முதலிய மஹர்ஷிகளால் பழக்கப்பட்ட லக்ஷ்மணரும் பூஜிக்கத்தகுந்தவள்; லோக குருவான ரகுநாதனுடைய பார்யை; இவளையே துக்கம் பீடிக்குமானல், காலகதியே பெரிது, அதை மீறமுடியாதென்று சொல்ல வேண்டியிருக்கிறது. ராமலக்ஷ்மணர்களுடைய நடத்தை இவளுக்கு நன்றாய்த் தெரியுமாகையால், மழைக் காலத்தில் கங்காநதி கலங்காததுபோல், மஹா கஷ்டங்கள் நேர்ந்த பொழுதும் அதைரியப்படவில்லை. ஒரே வயஸும் ஸ்வபாவமும் நடத்தையும் வம்சமும் லக்ஷணங்களுமுடைய இவ்விருவரும் ஒருவர்க்கொருவர் தகுந்தவர்களே.''

இப்படிப் புதிதாய் உருக்கின தங்கத்தையொத்த தேஹகாந்தியுடன், ஸகல ப்ராணிகளுக்கும் ஆனந்தத்தைக் கொடுத்துக்கொண்டு மஹாலக்ஷ்மியைப்போல் விளங்கும் ஸீதையைப் பார்த்து ஆஞ்ஜநேயர் ராமமூர்த்தியை ஸ்மரித்துப் பின்வருமாறு சொன்னர். "ராம! இவளுக்காகவல்லவா மஹா பலவானன வாலியையும் ராவணனுக்கு ஸமமான பராக்ரமமுள்ள கபந்தனையும் ஸம்ஹரித்தீர்? தேவேந்த்ரன் சம்பராஸுரனைக் கொன்றதுபோல் பயங்கரமான பராக்ரமமுள்ள விராதனை அழித்தீர்? நெருப்புக்கொழுந்துகள்போன்ற பாணங்களால் பதினாலாயிரம் கொடிய ராக்ஷஸர்களை ஜனஸ்தானத்தில் வினை

யாட்டாக நாசஞ் செய்தீர்? கரனையும் தூஷணனையும் த்ரிசிரஸையும் யுத்தகளத்தில் மடித்தீர்? வாலியால் அனுபவிக்கப்பட்ட வானரராஜ்யமும் ஐச்வர்யமும் ஸாமான்யமா? பிறருக்குக் கிடைக்குமோ? ஸகலஜனங்களும் கொண்டாடக்கூடியதன்றோ? இவளுக்காகவல்லவா அவற்றையெல்லாம் ஸுக்ரீவனுக்குக் கொடுத்தீர்? விசாலமான நேத்ரங்களையுடைய இவளுக்காகவன்றோ நானும் மஹா ஸமுத்ரத்தைத் தாண்டி இந்த லங்காபுரியைப் பார்த்தேன்? ஸமுத்ரத்தை மாலையாகத்தரித்த இந்தப் பூமியையும் மற்ற லோகங்களையும் இவளுக்காக ராமன் தலைகீழாகப் பிடித்தாலும் தகுமென்றெண்ணுகிறேன். பூலோகம் புவர்லோகம் ஸ்வர்க்கமென்ற த்ரிலோகங்களுக்கும் ஏகசக்ராதிபதியாயிருப்பது பெரிதா? ஜானகியை அடைவது பெரிதா? த்ரிலோகமும் ஜானகியின் காலில் ஒட்டின தூசு பெறுமோ? ஸகல தர்மங்களையும் குறைவில்லாமல் அனுஷ்டிக்கும் மஹாத்மாவான ஜனகராஜர்ஷி யாகத்திற்காக பூமியை உழும்போது அதைப் பிளந்துகொண்டு தாமரைத்தூள்களைப் போன்ற மங்களகரமான யக்ஞபூமியின் புழுதிபடிந்த தேஹத்துடன் கலப்பையின் நுனியிலிருந்து கிளம்பின புண்யவதியல்லவோ? பதிவ்ரதாதர்மமே உருவெடுத்து வந்ததல்லவா? ச்ரேஷ்டமான ஆசாரத்தையுடையவரும் கீர்த்திபெற்றவரும் யுத்தகளத்தில் பின்வாங்காதவருமான தசரதசக்ரவர்த்திக்கு இந்தக் கீர்த்திசாலி மூத்தநாட்டுப் பெண்ணல்லவா ? எல்லாத் தர்மங்களையும் அவைகளை நடத்தும் விதத்தையும் பதார்த்தங்களின் தத்வத்தையும் பூரணமாய் அறிந்த ராமனுக்கு இவள் ப்ரிய பார்யையன்றோ? இப்போழுது கோர ராக்ஷஸிகளின் வசத்தில் அகப்பட்டிருப்பது என்ன கொடுமை? பர்த்தாவிடத்தில் தனக்குள்ள ப்ரீதியையே பெரிதாயெண்ணி, ஸகல ராஜபோகங்களையும் விட்டு, வனவாஸ துக்கங்களைக் கொஞ்சமாவது நினையாமல் மனுஷ்ய ஸஞ்சாரமற்ற கோரமான வனத்திற்கு வந்தாளல்லவா? பழங்களையும் கிழங்குகளையும் ஸந்தோஷமாய்ப் புஜித்துக்கொண்டு, பர்த்தாவின் சுச்ரூஷையிலேயே ப்ரீதி வைத்து, அயோத்யையில் தன் அந்தப்புரத்திலிருக்கும்போழுது அடைந்த ஆனந்தத்தைவிட அதிகமாக அடைந்தவளல்லவா? யாதொரு கஷ்டத்தையும் அனுபவிக்கத்தகாதவள்; உத்தமமான ஸுவர்ணத்தைப்போன்ற தேஹகாந்தியுள்ளவள்; எப்பொழுதும் புன்சிரிப்பும் நல்ல வார்த்தையுமுடையவள்; இந்தக் கொடுமையையும் பொறுமையுடன் ஸஹித்துக்கொண்டிருக்கிறாள். ராவணனால் பலாத்காரஞ் செய்யப்பட்டும், ச்ரேஷ்டமான ஆசாரத்தை கைவிடாமலிருக்கும் இந்த உத்தமியைத்,

தாஹத்தால் தபிப்பவன் தண்ணீர்ப்பந்தலைக் கண்டு களிப்பது போல், ஸ்ரீராமன் அவச்யம் பார்க்கவேண்டியது. ராஜ்யலக்ஷ்மியை இழந்த அரசனுக்குப் பூமண்டலாதிகாரம் கிடைத்ததுபோல், ராமன் இவளை மறுபடியும் அடைந்தால் பரமஸந்தோஷத்தை அடைவார். தனக்கு ஸஹஜமான ஸகல போக போக்யங்களையிழந்தும் தன் இஷ்டமித்ர பந்து ஜனங்களை விட்டுப் பிரிந்தும், 'எப்படியும் ராமன் இங்கே வருவார். அவரை அடைவே'னென்ற ஆசையால் இன்னும் உயிரை வைத்துக்கொண்டிருக்கிறாள். ராகவனிடத்தில் ஸகல ப்ரக்ஞையையும் நாட்டி அவரையே த்யானித்துக்கொண்டு இந்த ராக்ஷஸிகளும் இந்த வனங்களும் மரங்களுமிருப்பதாய் இவளுக்கு ஞாபகமேயில்லை. ஸ்த்ரீகளுக்கு ஸகல ஆபரணங்களைக் காட்டிலும் பர்த்தாவே ச்ரேஷ்டமான ஆபரணம். அதைத் தரிக்கத் தகுந்த இவள் ராமனைப் பிரிந்ததால் காந்தியற்றிருக்கிறாள். ஜகத்ப்ரபுவான ராமன் இவளைப் பிரிந்து இன்னும் தேஹத்தை வைத்துக்கொண்டிருக்கிறாரே! துக்கத்தால் நசிக்கவில்லை! இது யாருக்கு ஸாத்யம்! ஸ்த்ரீகளுக்குத் தலைமயிரின் நுனி கறுத்திருப்பது அபூர்வம்; அந்த உத்தம லக்ஷணம் பொருந்தின இவள் சுருண்ட தலைமயிரை உடைய ராமனையும் மயக்குகிறாள். இவளுடைய நேத்ரங்கள் மலர்ந்த செந்தாமரையைப் பழிக்கின்றன; ராமனுடைய மடியில் விளையாடத்தகுந்தவள்; ராக்ஷஸிகளுக்கு நடுவில் அகப்பட்டுக்கொண்டு தபிக்கிறாள். இதைக் கண்டு கேவலம் குரங்கான எனக்கும் மனஸ் கலங்குகிறது; பரம தயாளுவான ராமமூர்த்திக்கு எப்படியிருக்கும்! ஸுகதுக்கங்களைத் துறந்த எனக்கே இப்படியிருந்தால் காமஸுகங்களை அனுபவிக்கத் தகுந்த ராமனுக்கு எப்படியிருக்கும்! இவ்வளவு அபராதஞ்செய்த ராவணனைப் பதிவ்ர தாக்னியால் சாம்பலாக்காமலிருக்கும் இவளுடைய பொறுமை பூமிதேவிக்கும் வருமோ? ராம லக்ஷ்மணர்களால் காப்பாற்றப்பட்டிருக்கையில் இவளுடைய நேத்ரங்கள் எவ்வளவு அழகாயிருக்குமோ? அந்தப் பாக்யசாலி கோரமான நேத்ரங்களையுடைய ராக்ஷஸிகளால் ரக்ஷிக்கப்படுகிறாள். இவள் மரத்தடியில் உட்கார்ந்திருப்பதும் விதியோ! வெகுகாலமாய் அழகாக விளங்கின தாமரை ஓடை பனிக்காலத்தில் புஷ்பங்கள் கருகிப் பார்க்க விகாரமாயிருப்பதுபோல், பன்னிரண்டு வருஷகாலம் ராமனுடன் ஏகாந்தமாய் ஸகல ஸுகங்களையும் அனுபவித்துத் திடீரென்று இந்தக் கஷ்டம் நேர்ந்ததால் காந்தியற்றிருக்கிறாள்; கஷ்டஸுகங்கள் மாறி மாறி வந்தால் ஒருவித

மாய்ப் பொறுக்க முடியும்; இவளுக்குக் கஷ்டத்தைத் தவிர வேறு அனுபவம் கிடையாது. சக்ரவாக பக்ஷிகள் பகலில் பிரிந்திருந்தும், ராத்ரி வந்தவுடன் சேருவோமென்ற நிச்சயத்தால் துக்கத்தைப் பொறுத்துக்கொண்டிருக்கின்றன; இவளுக்கு மறுபடியும் ராமனைச் சேருங்காலம் தெரிந்திருந்தால் இந்தக் கஷ்டத்தைப் பொறுத்திருப் பாள்; அதோ தெரியவில்லை. என்ன செய்வாள்? இப்படிப்பட்ட கஷ் டங்களை அனுபவிக்கும் விதமாய் வளர்க்கப்பட்டவளுமில்லை; ஜனக மஹாராஜனால் வெகு செல்வமாய் வளர்க்கப்பட்டாள். வஸந்தருது வால் புஷ்பித்திருக்கும் இந்த அசோக மரங்கள் இவளுக்குச் சோக த்தையே விருத்தி செய்கின்றன. ஸகல லோகங்களுக்கும் ஆனந் தத்தைக் கொடுக்கும் சந்த்ரனும் ஒரே காலத்தில் நெருப்புப் பொறி போன்ற ஆயிரம் கிரணங்களை உடையவனாய்ச் சோகத்தைப் பெருக் குகிறு"னென்று இப்படி அநேக காரணங்களால் இவளே ஸீதை யென்று நிச்சயித்துப், பலத்திலும் வேகத்திலும் ஒப்பில்லாத ஆஞ்ஜ நேயர் அந்த சிம்சுபா விருக்ஷத்திலேயே மறைந்திருந்தார்.



## ஸர்க்கம் 17.

### ராக்ஷஸிகள்.

---

கறுத்த ஜலத்தில் அன்னம் விளையாடுவதுபோல் களங்கமற்ற ஆகாசத்தில் தெளிவாக யாதொரு மறுவில்லாமல், ஆம்பல் கொத் துகளைப்போல் காந்தியை யுடைய சந்த்ரன் ப்ரகாசித்தான். ராம கார்யத்தில் தானும் கூடிய ஸஹாயத்தைச் செய்யவந்ததுபோல் தன் காந்தியால் ஸகல பதார்த்தங்களையும் ஆஞ்ஜநேயருக்கு ஸ்பஷ் டமாய்த் தெரிவித்துக்கொண்டும், குளிர்ந்த கிரணங்களால் அவரு டைய ச்ரமத்தைப் போக்கிக்கொண்டுமிருந்தான். பிறகு ஹனு மான் அதிக பாரத்தால் ஜலத்தில் முழுகும் கப்பலைப்போல் துக்கந்தாங் காமல் சோகஸமுத்ரத்தில் முழுகும் பூர்ணசந்த்ரனையொத்த முகத் தை யுடைய ஸீதையைக் கண்டார். ஸீதையை நன்றாய் உற்றுப் பார்க்கையில் அவளுக்கு ஸமீபத்திலிருந்த ராக்ஷஸிகளைப் பார்த்தார். ஒரே கண்ணுடையவளையும், ஒரே காதுடையவளையும், தலையை மூடிக்கொண்டிருக்கும் காதுடையவளையும், காதில்லாதவளையும்,

முறம்போன்ற காதுடையவளையும், மேல் நோக்கியிருக்கும் மூக்கை யுடையவளையும், தலை பெருத்தவளையும் நீண்ட கழுத்துடையவளை யும், குறுகின கழுத்துடையவளையும் கொஞ்சம் தலைமயிருடைய வளையும், தலைமயிர் முளைக்காதவளையும், கம்பளியைப்போன்ற மயிரால் மூடப்பட்டவளையும், தொங்குகிற காதையும் முகத்தையும் வயிற்றை யும் ஸ்தனங்களையும் உதடுகளையுமுடையவளையும், மோவாய்க்கட்டை யில் உதடுள்ளவளையும், தொங்கும் முழங்காலை உடையவளையும், ஏற் றக் குறைவான அங்கங்களையுடையவளையும், கூனியையும் குள்ள மானவளையும், விஸ்தாரமான பின்பாகத்தையுடையவளையும், கோரப் பல்லுடையவளையும், மஞ்சள் வர்ணமான கண்களையுடைவளையும், வளைந்த முகத்தையுடையவளையும் பயங்கரமான ரூபமுடையவர்களை யும் கண்டார். மேலும் விகார வேஷமுள்ளவர்களையும், மஞ்சள் வர்ணமுடையவர்களையும், கறுத்தவர்களையும், எப்பொழுதும் கோப முடையவர்களையும், கலகத்தில் ப்ரியமுடையவர்களையும் இரும்புத் தடி சூலம் உலக்கை முதலிய ஆயுதங்களைத் தரித்தவர்களையும் பன்றி மான் எருமை புலி ஆடு நரி யானை பசு குதிரை கழுதை இவைகளைப்போல் முகமுடையவர்களையும், யானை குதிரை ஒட்டகம் இவைகளைப்போல் பாதங்களையுடையவர்களையும்; கழுத்தில் அழுந் தின தலையையுடையவர்களையும்; ஒரு கை ஒரு காலுடையவர்களையும்; கழுதை குதிரை பசு யானை குரங்கு இவைகளைப்போல் காது களையுடைவர்களையும், மூக்கில்லாதவர்களையும், மூக்குப்பெருத்த வர்களையும், குறுக்காயிருக்கும் மூக்குடையவர்களையும், முகத் திற்கு மேலுள்ள மூக்குள்ளவர்களையும் கால் பெருத்தவர்களை யும், காலில் மயிர் வளர்ந்தவர்களையும் யானை பசு இவைகளைப்போல் கால்களையுடையவர்களையும்; அளவுக்கு மிஞ்சின ஸ்தனம் கழுத்து தலை வயிறு முகம் கண்களையுடையவர்களையும், நீண்ட நாக்கு நகங் களையுடையவர்களையும், புகைபோன்ற தலைமயிருடையவர்களையும் கண்டார். அவர்கள் எப்பொழுதும் மாம்ஸங்களைப் புஜித்து, மது வைக் குடிப்பதிலேயே ஆசையுடையவர்கள்; ரக்தத்தை ப்ரியமாய்க் குடிப்பவர்கள். சரீரமெங்கும் மாம்ஸமும் ரக்தமும் பூசியிருக்கும். பார்ப்பவர்களுக்கு மயிர்க்கூச்சலுண்டாகும். இவர்கள், அந்த விரு க்ஷத்தைச் சுற்றிலும் உட்கார்ந்திருந்தார்கள்.

கறுத்த மேகங்களுக்கு நடுவில் தோன்றி மறையும் பூர்ணசந்தி ரனைப் போல அவர்களுக்கு நடுவில் ஸீதை காணப்பட்டாள். அதிக

மாய்ப் பொறுக்க முடியும்; இவளுக்குக் கஷ்டத்தைத் தவிர வேறு அனுபவம் கிடையாது. சக்ரவாக பக்ஷிகள் பகலில் பிரிந்திருந்தும், ராத்ரி வந்தவுடன் சேருவோமென்ற நிச்சயத்தால் துக்கத்தைப் பொறுத்துக்கொண்டிருக்கின்றன; இவளுக்கு மறுபடியும் ராமனைச் சேருங்காலம் தெரிந்திருந்தால் இந்தக் கஷ்டத்தைப் பொறுத்திருப் பாள்; அதோ தெரியவில்லை. என்ன செய்வாள்? இப்படிப்பட்ட கஷ் டங்களை அனுபவிக்கும் விதமாய் வளர்க்கப்பட்டவளுமில்லை; ஜனக மஹாராஜனால் வெகு செல்வமாய் வளர்க்கப்பட்டாள். வஸந்தருது வால் புஷ்பித்திருக்கும் இந்த அசோக மரங்கள் இவளுக்குச் சோக த்தையே விருத்தி செய்கின்றன. ஸகல லோகங்களுக்கும் ஆனந் தத்தைக் கொடுக்கும் சந்த்ரனும் ஒரே காலத்தில் நெருப்புப் பொறி போன்ற ஆயிரம் கிரணங்களை உடையவனாய்ச் சோகத்தைப் பெருக் குகிறா"னென்று இப்படி அநேக காரணங்களால் இவளே ஸீதை யென்று நிச்சயித்துப், பலத்திலும் வேகத்திலும் ஒப்பில்லாத ஆஞ்ஜ நேயர் அந்த சிம்சுபா விருக்ஷத்திலேயே மறைந்திருந்தார்.

ஸர்க்கம் 17.

## ராக்ஷஸிகள்.

கறுத்த ஜலத்தில் அன்னம் விளையாடுவதுபோல் களங்கமற்ற ஆகாசத்தில் தெளிவாக யாதொரு மறுவில்லாமல், ஆம்பல் கொத் துகளைப்போல் காந்தியை யுடைய சந்த்ரன் ப்ரகாசித்தான். ராம கார்யத்தில் தானும் கூடிய ஸஹாயத்தைச் செய்யவந்ததுபோல் தன் காந்தியால் ஸகல பதார்த்தங்களையும் ஆஞ்ஜநேயருக்கு ஸ்பஷ் டமாய்த் தெரிவித்துக்கொண்டும், குளிர்ந்த கிரணங்களால் அவரு டைய ச்ரமத்தைப் போக்கிக்கொண்டுமிருந்தான். பிறகு ஹனு மான் அதிக பாரத்தால் ஜலத்தில் முழுகும் கப்பலைப்போல் துக்கந்தாங் காமல் சோகஸமுத்ரத்தில் முழுகும் பூர்ணசந்த்ரனையொத்த முகத் தை யுடைய ஸீதையைக் கண்டார். ஸீதையை நன்றாய் உற்றுப் பார்க்கையில் அவளுக்கு ஸமீபத்திலிருந்த ராக்ஷஸிகளைப் பார்த்தார். ஒரே கண்ணுடையவளையும், ஒரே காதுடையவளையும், தலையை மூடிக்கொண்டிருக்கும் காதுடையவளையும், காதில்லாதவளையும்,

முறம்போன்ற காதுடையவளையும், மேல் நோக்கியிருக்கும் மூக்கை யுடையவளையும், தலை பெருத்தவளையும் நீண்ட கழுத்துடையவளை யும், குறுகின கழுத்துடையவளையும் கொஞ்சம் தலைமயிருடைய வளையும், தலைமயிர் முளைக்காதவளையும், கம்பளியைப்போன்ற மயிரால் மூடப்பட்டவளையும், தொங்குகிற காதையும் முகத்தையும் வயிற்றை யும் ஸ்தனங்களையும் உதடுகளையுமுடையவளையும், மோவாய்க்கட்டை யில் உதடுள்ளவளையும், தொங்கும் முழங்காலை உடையவளையும், ஏற் றக் குறைவான அங்கங்களையுடையவளையும், கூனியையும் குள்ள மானவளையும், விஸ்தாரமான பின்பாகத்தையுடையவளையும், கோரப் பல்லுடையவளையும், மஞ்சள் வர்ணமான கண்களையுடைவளையும், வளைந்த முகத்தையுடையவளையும் பயங்கரமான ரூபமுடையவர்களை யும் கண்டார். மேலும் விகார வேஷமுள்ளவர்களையும், மஞ்சள் வர்ணமுடையவர்களையும், கறுத்தவர்களையும், எப்பொழுதும் கோப முடையவர்களையும், கலகத்தில் ப்ரியமுடையவர்களையும் இரும்புத் தடி சூலம் உலக்கை முதலிய ஆயுதங்களைத் தரித்தவர்களையும் பன்றி மான் எருமை புலி ஆடு நரி யானை பசு குதிரை கழுதை இவைகளைப்போல் முகமுடையவர்களையும், யானை குதிரை ஒட்டகம் இவைகளைப்போல் பாதங்களையுடையவர்களையும்; கழுத்தில் அழுந் தின தலையையுடையவர்களையும்; ஒரு கை ஒரு காலுடையவர்களையும்; கழுதை குதிரை பசு யானை குரங்கு இவைகளைப்போல் காது களையுடைவர்களையும், மூக்கில்லாதவர்களையும், மூக்குப்பெருத்த வர்களையும், குறுக்காயிருக்கும் மூக்குடையவர்களையும், முகத் திற்கு மேலுள்ள மூக்குள்ளவர்களையும் கால் பெருத்தவர்களை யும், காலில் மயிர் வளர்ந்தவர்களையும் யானை பசு இவைகளைப்போல் கால்களையுடையவர்களையும்; அளவுக்கு மிஞ்சின ஸ்தனம் கழுத்து தலை வயிறு முகம் கண்களையுடையவர்களையும், நீண்ட நாக்கு நகங் களையுடையவர்களையும், புகைபோன்ற தலைமயிருடையவர்களையும் கண்டார். அவர்கள் எப்பொழுதும் மாம்ஸங்களைப் புஜித்து, மது வைக் குடிப்பதிலேயே ஆசையுடையவர்கள்; ரக்தத்தை ப்ரியமாய்க் குடிப்பவர்கள். சரீரமெங்கும் மாம்ஸமும் ரக்தமும் பூசியிருக்கும். பார்ப்பவர்களுக்கு மயிர்க்கூச்சலுண்டாகும். இவர்கள், அந்த விரு க்ஷத்தைச் சுற்றிலும் உட்கார்ந்திருந்தார்கள்.

கறுத்த மேகங்களுக்கு நடுவில் தோன்றி மறையும் பூர்ணசந்தி ரனைப் போல அவர்களுக்கு நடுவில் ஸீதை காணப்பட்டாள். அதிக

செல்வாக்குள்ள விதேஹ ராஜ வம்சத்தில் பிறந்தவள்; எல்லோரும் கொண்டாடும்படியான நடத்தையுடையவள்; ப்ரஹ்மஞானியான ஜனகருடைய புத்ரி; சோகத்தால் பீடிக்கப்பட்டுக் காந்தியற்றவள்; அழுக்கடைந்த தலைமயிருடன், புண்யம் நசித்து ஆகாசத்திலிருந்து பூமியில் விழும் நக்ஷத்திரத்தைப்போன்றவள்; பதிவ்ரதா தர்மத்தை அனுஷ்டிப்பதில் பெயர் பெற்றவள்; பர்த்தாவைப் பார்க்க அதிருஷ்டமில்லாதவள் ச்ரேஷ்டமான ஆபரணங்களால் அலங்கரிக்கப் படாவிட்டாலும், பர்த்தாவின் ஸ்நேஹமென்ற ஆபரணத்தாலேயே ப்ரகாசிப்பவள்; தன் இனத்திலிருந்து பிரிக்கப்பட்டு ஸிம்ஹத்தால் பீடிக்கப்பட்ட பெண் யானையைப்போல் தன் ஜனங்களை விட்டுப் பிரிந்து ராவணனால் சிறையில் வைக்கப்பட்டவள். மழைக்காலத்தின் முடிவில் மேகங்களால் சூழப்பட்டு ப்ரகாசமற்றிருக்கும் சந்த்ரனுடைய ரேகையைப்போன்றவள்; மங்களஸ்நானமில்லாததால் தேஹம் அழுக்கடைந்து அழகு குறைந்திருப்பவள். தந்திகள் பூட்டாத வீணையைப்போன்றவள்; பர்த்தாவான ராமமூர்த்தியுடன் வஸிக்கத்தக்கவள்; ராக்ஷஸிகளுக்கு நடுவில் இருக்கத்தகாதவள்; அசோகவனமென்ற சோகஸமுத்ரத்தின் நடுவில் மிதப்பவள்; க்ரூர க்ரஹங்களால் பீடிக்கப்படும் ரோஹிணி நக்ஷத்ரத்தைப் போன்றவள்; புஷ்பங்கள் உதிர்ந்த கொடியைப் போன்றவள்; தேஹமெங்கும் அழுக்கடைந்தும் ஸஹஜமான அழகால் விளங்குகிறவள்; சேற்றால் மூடப்பட்ட தாமரைக் கொடிபோல் ப்ரகாசிப்பவள்; கிழிந்த அழுக்கு வஸ்த்ரத்தை உடுத்திருந்தும் காந்தியால் ஜ்வலிப்பவள். முகத்திலோ ஸந்தோஷக் குறியில்லை; தன் பர்த்தாவின் தேஜஸ்ஸையும் பராக்ரமத்தையும் நினைக்க நினைக்கத் தைர்யமடைகிறாள். கண்ணீரால் கலங்கி கறுத்த நேத்ரங்களையுடையவள். தன் பதிவ்ரதாக்னியையே காவலாயுடையவள். மான்குட்டிபோல் பயத்தால் அங்குமிங்கும் பார்ப்பவள். அவளுடைய உஷ்ணமான பெருமூச்சு சுற்றிலுமிருக்கும் மரங்களிலுள்ள தளிர்களைக் கொளுத்துவது போலிருந்தது. சோகங்கள் ஒன்றுசேர்ந்து உருவெடுத்தது போலும், துக்க ஸமுத்ரத்தின் அலைகளைப்போலுமிருப்பவள்; மிகுந்த பொறுமையுடையவள்; உத்தம லக்ஷணப்படி அமைக்கப்பட்ட அங்கங்களுடன் ஆபரணங்களில்லாமலேயே ப்ரகாசிப்பவள். இப்படிப்பட்ட கஷ்டதசையிலும் காந்தியை கைவிடாமலிருக்கும் ஜானகியைக் கண்டு ஹனுமான் ஸந்தோஷத்தால் கண்ணீர்விட்டு, “ராமலக்ஷ்மணர்களுடைய அனுக்ரஹத்தாலல்லவா இந்த மஹா புண்யவதியைத் தர்சிக்க

கிடைத்த"தென்று அவர்களை மனஸால் அடிக்கடி நமஸ்கரித்தார். பிறகு ஸீதையைப் பார்த்துப் பார்த்து ஆனந்தம் பொங்கி அந்த விருக்ஷத்திலேயே மறைந்திருந்தார்.

---

## ஸர்க்கம் 18,

## ராவணன் அசோக வனத்திற்கு வந்தது.

---

இப்படி அந்த மரத்திலிருந்து ஸீதையைத் தேடிக்கொண்டிருப்பதிலும், அவளை அடையாளம் கண்டுபிடிப்பதிலும் ராத்ரிகாலம் கழிந்து கொஞ்சம் பாக்கியிருந்தது. அப்பொழுது காதுக்கினிய மங்கள வாத்யங்களால், அபார பலபராக்ரமமுள்ள ராக்ஷஸேச்வரன் விழித்துக்கொண்டான். பூமாலை வஸ்த்ரங்கள் ஆபரணங்கள் நழுவ, எப்பொழுதும் தன் மனஸில் குடிகொண்டிருக்கும் ஸீதையிடத்தில் ஆசை சென்று அவளை நினைத்தான். ஸ்வபாவத்திலேயே கொழுப்படைந்தவன்; ஸீதையிடத்தில் மிகுந்த ஆசைவைத்தவன். ஆகையால், அதை அடக்க முடியவில்லை. பிறகு, ஸகல அலங்காரங்களுடன் அங்கிருந்து புறப்பட்டுத், தங்கத்தாலும் நவமணிகளாலும் அலங்கரிக்கப்பட்ட தோட்டத்திலுள்ள வீதிகளின் வழியாய் அசோக வனத்திற்கு வந்தான். அது ஸகல புஷ்பங்களாலும் பழங்களாலும் எக்காலத்திலும் விளங்கும் மரங்களையுடையது. பலவித புஷ்பங்களால் நிறைந்த ஓடைகளுள்ளது. விசித்ரவர்ணமுள்ள பக்ஷிகளும் செந்நாய் முதலிய மிருகங்களும் ஸஞ்சரிக்குமிடம். அந்த அத்புதங்களைப் பார்த்துக்கொண்டே ராவணன் வருகையில், தேவேந்த்ரன் புறப்படும்பொழுது தேவஸ்த்ரீகள் சூழ்ந்து வருவதுபோல், அவனுடைய பார்யைகளில் பலர் அவனைப் பின்தொடர்ந்தார்கள். சிலர் தங்கத்தீபங்களையும், சிலர் சாமரங்களையும் சிலர் விசிறிகளையும்; சிலர் தங்கக் கூஜாக்களையும், சிலர் கத்திகளையும், சிலர் ஆஸனங்களையும் எடுத்துக்கொண்டு வந்தார்கள். ஒருத்தி ரத்னங்களிழைத்த தங்கப் பாத்ரத்தில் ருசியுள்ள பானத்தை எடுதது வந்தாள். மற்றொருத்தி ராஜஹம்ஸத்தைப்போலும் பூர்ணசந்த்ரனைப்போலும் காந்தியுள்ள தங்கக் காம்புடைய வெண்குடையை எடுத்துக் கொண்டு பின்னே வந்தாள். மின்னற் கொடிகள் மேகங்களுடன் போவது

போல் ராவணனுடைய பத்னிகள் தூக்கத்தால் கண்கள் சுழல அவனைப் பின்தொடர்ந்தார்கள். சந்தனம் முதலியவைகளை நன்றாய்ப் பூசிக்கொண்டு, தாறுமாறாய்ப் போடப்பட்ட ஆபரணங்களுடன், தலைமயிர் அவிழ்ந்து தேஹத்தில் புரள, முகத்தில் வியர்வையுடன், குடி மயக்கத்தாலும் தூக்கத்தாலும் சுழன்றுகொண்டு சென்றார்கள். மதுபானத்தால் கண்கள் சிவந்து, புஷ்பமாலைகளாலும் அலங்கரிக்கப்பட்ட தலைமயிருடன், கழுத்தில் தரித்த ஹாரங்கள் வியர்வையால் வாடத், தங்களுடைய நாயகன் போகும்பொழுது அவனிடத்தில் வைத்த ப்ரியத்தாலும் கௌரவதையாலும் அவனைப் பின்தொடர்ந்தார்கள். அவர்களுக்குப் பர்த்தாவும் மஹாபலவானுமான ராவணனோ, காமபரவசனாய் ஸீதையிடத்திலேயே மனதை வைத்து, வேறொன்றும் தோன்றாமல், மதத்தால் அழகிய நடையுடன் அங்கே வந்தான். அப்பொழுது காலில் அணிந்த சலங்கைகளும் அரைநூல் மாலைகளிலுள்ள சலங்கைகளும் மதுரமாய்ச் சப்திப்பது ஹனுமானுடைய காதில் விழுந்தது.

பரிமளமுள்ள தைலங்கள் நிறைந்த தீபங்களைப் பிடித்துக்கொண்டு சில ஸ்திரீகள் முன்னே சென்றார்கள். தாம்ரத்தைப் போல் சிவந்து கோணலான கண்களுடன், கொழுப்பு கர்வம் காமம் முதலியவைகளால் நிறைந்த ராவணன் கரும்புவில்லைத் தரிக்காத மன்மதனைப்போல் தோன்றினான். அப்பொழுது சூழப்பட்ட பாலின் நுரையைப்போல் வர்ணமுள்ள சுத்தமான அவனுடைய உத்தரீயம், கழன்றிருந்த தோள்வளையில் மாட்டிக்கொண்டது; அதை விளையாட்டாய் இழுத்துக்கொண்டே நடந்தான். இப்படிப் பல பராக்ரமம் முதலிய குணங்களில் ஒப்பற்றவனும், பிறரால் செய்யக்கூடாத கார்யங்களைச் செய்து முடித்தவனும், தூரத்தில் வந்துகொண்டிருந்தாலும் விசேஷ தேஜஸால் அதிஸமீபத்தில் வருகிறவனைப் போல் தோன்றுகிறவனுமான ராக்ஷஸனை ஆஞ்ஜநேயர் இலைகளாலும் புஷ்பங்களாலும் நிறைந்த மரத்தில் உட்கார்ந்துகொண்டு உற்றுப்பார்த்தார். அவனுக்குப் பின்னால் அவனுடைய பத்னிகள் ரூபத்திலும் அழகிலும் காந்தியிலும் சிறந்தவர்களாய் விலாஸமாய் நடந்துவந்தார்கள். அவர்களால் சூழப்பட்டு அந்த ப்ரதாபலங்கேச்வரன் அசோகவனத்தில் நுழைந்தான். விச்ரவஸ் என்ற ரிஷியின் புத்ரன்; ராக்ஷஸர்களுக்கு அரசன்; அளவற்ற பலசாலி; கர்வத்தால் நிமிர்ந்து நிற்கும் காதுகளையுடையவன்; விசித்ரமான ஆப

ரணங்களுடன். நக்ஷத்ரங்களால் சூழப்பட்ட சந்த்ரனைப்போல் அந்தப் பெண்மணிகளால் சூழப்பட்டு அவள் வருவதைக் கண்டு ஆஞ்ஜநேயர், "மஹாவீரனான ராவணன் இவனே" யென்று நிச்சயித்து, மேல் நடக்கும் கார்யங்களை நன்றாய்ப் பார்க்கவேண்டுமென்று கீழ்க்கிளையில் இறங்கினார். வாயுபுத்ரனும் பலத்திலும் வேகத்திலும் காந்தியிலும் ச்ரேஷ்டமானவரும் கருடனைப்போன்றவருமான ஆஞ்ஜநேயரும், அவனுடைய தேஜஸுக்கெதிரில் நிற்கமுடியவில்லை. ஆகையால் "ஸகல மாயைகளுக்கும் நிதியான ராவணனுக்கெதிரில் நமது ஸூக்ஷ்ம ரூபமும் ப்ரயோஜனமில்லை" யென்று இலைகளும் புஷ்பங்களுமடர்ந்த மாக்கிளைகளில் மறைந்திருந்தார். மயிர்நுனி கறுத்து, நெருங்கின அழகான ஸ்தனங்களுடன் கறுத்த நேத்ரங்களால் விளங்கும் ஸீதையைப் பார்க்க இச்சைகொண்டவனாய், ராவணன் அதற்குள் கிட்டவந்தான்.

## ஸர்க்கம் 19.

### ஸீதை.

ஸகல ஆபரணங்களாலும் அலங்கரிக்கப்பட்டு ரூபத்திலும் யௌவனத்திலும் நிகரில்லாத ராவணன் தன்னிடத்தில் ஆசைகொண்டு தன்னைப் பார்க்க வருவதைப் பதிவ்ரதைகளுக்குள் மேலான ஜானகியென்ற ராஜபுத்ரி கண்டு, பெருங்காற்றிலடிபட்ட இளம் வாழையைப்போல் நடுங்கினாள். உடனே, துடைகளால் வயிற்றையும் கைகளால் ஸ்தனங்களையும் மறைத்துக்கொண்டு, என்ன நேருமோவென்று கண்ணீர் சொரிய உட்கார்ந்திருந்தாள். ராவணனும் ஸமீபத்தில் வந்து, ராக்ஷஸிகளுக்கு நடுவில் ஸீதை உட்கார்ந்திருப்பதையும், ஸமுத்ரத்தில் முழுகும் கப்பலைப்போல் அவள் துக்கத்தால் பீடிக்கப்படுவதையும் கண்டான். வெறுந்தரையில் ஆஸனமில்லாமல், ஸகல பூஷணங்களையும் தரிக்கத்தகுந்தவளாயிருந்தும் யாதொரு ஆபரணமுமில்லாமல், அழுக்கையே ஆபரணமாய் அணிந்துகொண்டு, பூமியில் வெட்டித் தள்ளப்பட்ட மரங்களைப்போலவும், சேற்றால் பூசப்பட்ட தாமரை கொடிபோலும், சற்று ப்ரகாசித்தும் சற்று ப்ரகாசிக்காமலுமிருந்தாள். ஆத்மஞானியான ராமமூர்த்தியை

ல்லால் தேஹத்தால் அடைய முடியாமல் எண்ணங்களாகிய குதிரைகளை மனமென்ற ரதத்தில் பூட்டி அதிவேகமாய் அவருடைய ஸமீபத்தில் சென்றாள். முகம் வாடி அழுதுகொண்டு, ஒண்டியாய், ராமனைக்குறித்துக் கவலைப்படுவதும் அவரை த்யானிப்பதுமே தொழிலாயிருந்தாள். அவளுடைய துக்கம் எப்பொழுது முடியுமென்று அவளுக்குத் தெரியாது. ராகவனே கதியென்று நம்பியிருந்தாள். மந்த்ரத்தால் தடைப்பட்டுப் புரண்டுக்கொண்டிருக்கிற நாகராஜனுடைய ஸ்த்ரீபோலும், கேதுவால் பீடிக்கப்பட்ட ரோஹிணீ நக்ஷத்ரம்போலும், நல்ல ஆசாரமுள்ள தர்மவான்களுடைய குலத்தில் பிறந்து ஹீனமான குலத்தில் விவாஹஞ் செய்யப்பட்டவளைப்போலும் (ஸ்த்ரீகளுக்கு விவாஹமும் புருஷர்களுக்கு உபநயனமும் இரண்டாவது ஜன்மம்), வீணாப் அபவாதத்தைச் சுமத்திக் கெடுத்த கீர்த்தியைப்போலும், அடிக்கடி அப்யாஸஞ் செய்யாததால் மறந்துபோன வேதவித்யைபோலும், அழிந்த புகழைப்போலும், அவமானத்தை அடைந்த ச்ரத்தையைப்போலும், வரவாக்குறைந்த தேவபூஜையைப்போலும், ப்ரயோஜனத்தை அடையாத ஆசையைப்போலும், உத்தேசத்திற்கு மிகவும் குறைந்த தன லாபத்தைப்போலும், அலக்ஷ்யஞ் செய்து தடுக்கப்பட்ட ப்ரபுக்களுடைய உத்திரவைப்போலும், கெட்ட காலங்களில் திக்குகள் நெருப்புப்பட்டு எரிவதுபோலும், பூஜா த்ரவ்யங்கள் அபஹரிக்கப்பட்டதுபோலும், பனி முதலியவைகளால் எரிக்கப்பட்ட தாமரையோடையைப்போலும், வீரர்களையிழந்த ஸேனையைப்போலும், இருள் சூழ்ந்த வெளிச்சத்தைப்போலும், ஜலம் வற்றின நதியைப்போலும், அசுத்த பதார்த்தங்கள் தொட்ட அக்னிகுண்டத்தைப்போலும், அணைந்துபோன அக்னிஜ்வாலையைப்போலும், ராஹுவால் பீடிக்கப்பட்ட சந்த்ரனையுடைய பௌர்ணிமா ராத்ரியைப்போலும், யானைகள் இறங்கித் தாமரைத் தண்டுகளைப்பிடுங்கி எறிந்து புஷ்பங்களை மிதித்துப் பக்ஷிகளைத் துரத்தி அழித்த தாமரையோடையைப்போலும், வெள்ளத்தால் அடித்துக்கொண்டு போகப்பட்ட ஜலத்தையுடைய நதியைப்போலும், கரையில் பிடுங்கிப் போட்டவுடன் உஷ்ணத்தால் வாடும் தாமரைக் கொடியைப்போலும், தன் நாயகனை விட்டுத் தன்னைப் பிரித்து ஸ்தம்பத்தில் இறுக்கிக் கட்டித் துக்கத்தால் பெருமூச்சுவிட்டுக்கொண்டிருக்கும் பெண் யானையைப்போலும், கறுத்து நீண்ட பின்னலால் சரத்காலத்தில் கறுத்த வனங்களால் விளங்கும் பூமியைப்போலும் தோன்றினாள். ஸ்நானம் அலங்காரம் முதலியவை

யில்லாததால் க்ருஷ்ணபக்ஷ ராத்ரியைப்போல் விளங்கவில்லை; மிகவும் செல்வமாய் வளர்க்கப்பட்டு ஸுந்தரமான அவயவங்களை உடையவளாகையால் நவமணிகளிழைத்த உத்தமமான அரண்மனையில் வஸிக்கத்தகுந்தவள். உபவாஸத்தாலும் கவலையாலும் பயத்தாலும் எப்போதும் பர்த்தாவையே த்யானித்துக்கொண்டிருந்ததாலும் மிகவும் இளைத்திருந்தாள். ஸந்தோஷமற்று ஜலத்தையே ஆஹாரமாய்க்கொண்டு, ராமன் ராவணனை சீக்ரமாய் வதஞ்செய்ய வேண்டுமென்று தன் இஷ்ட தேவதையைக் கைகூப்பி மனஸால் ப்ரார்த்திப்பவள்போலிருந்தாள். தோஷமற்ற நடத்தையுடையவள்; அழகிய கண்களையும் இமைகளையுமுடையவள்; தன்னை ரக்ஷிப்பவர்கள் இன்னும் வரவில்லையேயென்று அழுதுகொண்டிருந்தாள்.

தன் பர்த்தா அனுஷ்டிக்கும் தர்மத்தையே தானும் அனுஷ்டித்துக்கொண்டு அவரைப் பிரிந்த துக்கத்தால் தபித்துக்கொண்டிருக்கும் ஸீதையை ராவணன் கபட வார்த்தைகளால் பலவிதமாய் மயக்கப்பார்த்தான். அதனால் தன் நாசத்தையும் தேடிகொண்டான்.

---

## ஸர்க்கம் 20.

## ராவணன் ஸீதையை வேண்டினது.

---

பர்த்தாவையே தைவமாயுடையவளாய், அவரை விட்டுப் பிரிந்ததால் மனம் வாடித் துக்கமடைந்து, ஸந்தோஷ மற்றிருக்கும் ஸீதையைத் தனக்கு இணங்கும்படி மதுரமான வார்த்தைகளால் ராவணன் தன் அபிப்ராயத்தை ஜாடையாய் வெளியிட்டான். அவளோ மஹா பதிவ்ரதை: ஸகல லோகங்களையும் தன் தபஸின் மஹிமையால் நாசஞ் செய்யக்கூடியவள்.

"யானைத்துதிக்கையைப்போன்ற துடைகளையுடையவளே! என்னைப் பார்த்தவுடன் உன் வயிற்றையும் ஸ்தனங்களையும் மறைத்துக்கொண்டு என் கண்ணில் படாமலிருக்கவேண்டுமென்று தேஹத்தைச் சுருக்கிக்கொள்வதுபோலிருக்கிறது. விசாலமான நேத்ரங்களையுடையவளே! ஸகல உத்தம லக்ஷணங்களும் பொருந்தின அங்கங்களையுடையவளே! எல்லா ப்ராணிகளுடைய மனஸையும் கவர்கிறவளே! உன்மேல் ஆசைவைத்தேன். என்னிடத்தில் தயவுசெய். நீ ஏன் என்னைக் கண்டு பயப்படுகிறாய்? இங்கேமனு

ஷர்களாவது இஷ்டமான ரூபத்தை எடுக்கக்கூடிய ராக்ஷஸர்களா வது உனக்குப் பயத்தை உண்டுபண்ணக்கூடியவர்கள் ஒருவரு மில்லை. பரஸ்த்ரீகளைப் பலாத்காரமாய்க் கொண்டுவருவதும் அவர் களைச் சேர்வதும் ராக்ஷஸர்களுக்கு ஏற்ற செய்கை. இதில் ஸந்தேஹ முண்டோ? அப்படியிருந்தும் என்னிடத்தில் உனக்கு ப்ரியமுண் டாகாதவரையில் உன்னைத் தொடமாட்டேன். என்னிடத்தில் நீ அளவற்ற ஆசை வைக்கவேண்டும். ஸுந்தரீ! இவ்விடத்தில் உன க்குப் பயமுண்டோ? என்னை நம்பு; என்னிடத்தில் உனக்கு நிஜமான ப்ரேமையுண்டாகட்டும். வீணாய்த் துக்கத்திற்கு இடங்கொடுத்துத் தேஹத்தைக் கெடுத்துக்கொள்ளாதே.

உன் அழகான தலைமயிரை ஒரே பின்னலாய் தொங்கவிட்டி ருப்பதும், வெறுந்தரையில் படுப்பதும், அழுக்கடைந்த ஒற்றை வஸ்திரத்தைத் தரித்திருப்பதும், காரணமில்லாமல் உபவாஸமிருப்ப தும் உனக்குத் தகாது. என்னைப் புருஷனையடைந்து உத்தமமான புஷ்பமாலைகளையும் சந்தனம் முதலிய பூச்சுகளையும் விசித்ரமான வஸ் திரங்களையும் அழகான ஆபரணங்களையும் அகில் முதலிய தூபங்களை யும் படுக்கைகளையும் ஆஸனங்களையும், பாட்டு ஆட்டம் வாத்யம் முத லியவைகளையும் உயர்ந்த அன்னபானங்களையும் அனுபவிக்கக் கூடா தா? ஸ்த்ரீரத்னமே! ஸகல லக்ஷணங்களும் பொருந்தின உன் அவ யவங்களில் அவைகளுக்குத் தகுந்த ஆபரணங்களைத் தரிக்கக்கூடா தா? என்னிடத்தில் வந்து சேர்ந்த பிறகும் அலங்காரஞ்செய்துகொ ள்வதற்குத் தகாதவளாய் எப்படியாவாய்? ஆற்றில் ஓடும் ஜலப்ரவா ஹம் எப்படித் திரும்பி வராதோ அப்படி உன் யௌவனம் அதிசீக்ர மாய்க் கழிந்துவிடும். அதற்குள் என்னை அடைந்து ஸுகமாயிரு.

ஸகல ப்ரபஞ்சத்தையும் ஸிருஷ்டித்த ப்ரஹ்மா உன்னை ஸிருஷ் டித்த பிறகு "இனி இதைக்காட்டிலும் உத்தமமான ரூபத்தை என் னால் ஸிருஷ்டிக்கமுடியா" தென்று தொழிலை விட்டு விட்டதுபோலி ருக்கிறது. உன்னைப்போன்ற அழகுள்ள ஸ்த்ரீ எங்குமில்லாமலி ருப்பதே இதற்கு அடையாளம். ரூபத்தாலும் யௌவனத்தாலும் ப்ரகாசிக்கும் உன்னை அடைந்து உன் அழகில் ஈடுபட்டு மயங் காதவனுமுண்டோ? உன்னை ஸிருஷ்டித்த ப்ரஹ்மாவே உன்னைக் கண்டு மோஹிப்பதில் ஸந்தேஹமில்லை.

பூர்ணசந்த்ரனைப்போன்ற முகத்தையுடையவளே! உன் தேஹத் தில் எந்தப் பாகத்தில் என் பார்வை விழுகிறதோ அங்கேயிருந்து அதைத் திருப்பமுடியவில்லை. ஸீதை! என்னைப் புருஷனாக அடை

ஏன் மயங்குகிறாய்? நான் அநேக லோகங்களிலுமிருந்து கொண்டு வந்த ஸகல ஸ்த்ரீகளுக்கும் நீ பட்டமஹிஷியாயிரு. உனக்கு ஸகல மங்களங்களுமுண்டாகட்டும். நான் திக்விஜயஞ்செய்து அந்தந்த லோகங்களிலிருக்கும் அபூர்வமான வஸ்துக்களைக் கொண்டு வந்திருக்கிறேன். அவைகளும் நானும் இந்த லங்காபுரியும் உன்னுடையவை. உனக்காக இந்தப் பூமி முழுவதையும் ஜயித்து உன் பிதாவான ஜனக மஹாராஜாவிற்குக் கொடுக்கிறேன்.

பலத்திலும் பராக்ரமத்திலும் வீர்யத்திலும் தைர்யத்திலும் என்னைப்போன்றவனுண்டோ? தேவர்களையும் அஸுரர்களையும் யுத்தத்தில் அடிக்கடி தோற்கடித்து, அவர்களுடைய ஸைன்யங்களை நாசஞ்செய்து, கொடிகளையும் த்வஜங்களையும் அறுத்து, எனக்கெதிரில் நிற்கமுடியாமல் துரத்தியிருக்கிறேன். உன் ரூபத்திற்கும் அழகிற்கும் தகுந்தபடி ஸாமர்த்யமுள்ள ஸ்த்ரீகள் வஸ்த்ரங்களாலும் ஆபரணங்களாலும் உன்னை அலங்கரிக்கட்டும். நான் பார்த்து அளவற்ற ஆனந்தமடைவேன். இங்கிருக்கும் ஸமஸ்த போக பதார்த்தங்களில் வஸ்த்ரம் ஆபரணம் மது மாம்ஸம் ஆஸனம் வாஹனம் இன்னும் எது உனக்கு ப்ரியமோ அவைகளையெல்லாம் உன் இஷ்டப்படி அனுபவி. பூமியையும் தனங்களையும் தடையில்லாமல் வேண்டியவர்களுக்குக் கொடு. உன் கண்ணில் பட்ட ஸகல ப்ராணிகளும் உனக்கு அடிமைகளே. நீ அவர்களை இஷ்டப்படி அதிகாரஞ்செய்யலாம். என்னிடத்தில் அந்தரங்கமான ப்ரீதி வை. உன் மூலமாய் உன் பந்துக்களும் என் அனுக்ரஹத்தால் க்ஷேமத்தை அடையட்டும்.

என் ஐச்வர்யத்தையும் செல்வத்தையும் கீர்த்தியையும் கவனித்துப் பார். உடுக்கத் துணியில்லாமல், உண்ணச் சோறில்லாமல், படுக்க இடமில்லாமல் பரதையாய்க் காட்டில் அலையும் ராமனால் என்ன ப்ரயோஜனம்? தபஸ்விகளைப்போல் ஆஹாரநியமத்துடன் மாவுரி மான்தோல் முதலியவைகளைத் தரித்து, வெறுந்தரையில் படுத்து வனத்தில் மிருகங்களுடன் திரிகிறவன் உனக்குத் தகுந்தவனா? ராஜ்யலக்ஷ்மீயும் ஜயலக்ஷ்மீயும் அவனைக் கைவிட்டன. அவன் இதுவரையில் பிழைத்திருக்கிறானோ இல்லையோ? மழைக்காலத்தில் கறுத்த மேகங்களுக்குமுன் கொக்குகள் கூட்டங்கூட்டமாய்ப் பறந்துகொண்டு நிலவை மறைப்பதுபோல், என்னால் இங்கே கொண்டு வந்து வைக்கப்பட்ட உன்னை ராமன் பார்க்கவும் முடியுமோ? முன்காலத்

தில் ஹிரண்யகசிபு வனத்தில் தபஸ்செய்துகொண்டிருக்கையில் அவனுடைய பார்யை கர்ப்பிணியாயிருந்தாள் அவளுக்குப் பிறக்கும் புத்ரன் தகப்பனைவிடக் கொடியவனுயிருப்பானென்று இந்த்ரன் அவளைக் கொல்லப் பார்த்தான். அப்பொழுது நாரதர் தடுக்க அவளை விட்டுவிட்டான். அப்படி என் வசத்திலிருக்கும் உன்னை ராமன் திரும்பி அடையவும் முடியுமோ?

கருடனிடத்தில் அகப்பட்ட மஹா ஸர்ப்பத்தைப்போல் உன் நேத்ரங்களையும் பல்வரிசையையும் புன்சிரிப்பையும் லீலாவிநோதங்களையும்பார்த்து என் மனஸ் மயங்குகிறது. அழுக்கடைந்த பட்டு வஸ்த்ரத்தைத் தரித்துக்கொண்டு, உபவாஸத்தால் இளைத்திருக்கும் தேஹத்துடன், யாதொரு அலங்காரமுமில்லாமல் காந்தி குறைந்திருக்கும் உன்னைப் பார்த்து என் பார்யைகளிடத்தில் ஸுகத்தை அனுபவிக்க மனஸ் வரவில்லை. என் அந்தப்புரத்தில் கணக்கில்லாத ஸ்த்ரீரத்னங்களிருக்கிறார்கள். அவர்களுக்கெல்லாம் நீயே ப்ரபு. அப்ஸரஸ்கள் மஹாலக்ஷ்மிக்கும் கைங்கர்யஞ் செய்வதுப்போல், ஸகல லோகங்களிலும் உத்தம ஸ்த்ரீகளென்று ப்ரஸித்திபெற்றவர்களெல்லாம் உனக்கும் பணிவிடை செய்யட்டும். குபேரனிடத்திலுள்ள ரத்னங்களும் தனங்களும் ஸகல லோகங்களும் நானும் உன் ஸ்வாதீனத்திலிருக்கிறோம். இவைகளை இஷ்டப்படி அனுபவிக்கத் தடையென்ன? தபஸ்செய்வதிலாவது தேஹபலத்திலாவது பராக்ரமத்திலாவது ப்ரதாபத்திலாவது கீர்த்தியிலாவது ஐச்வர்யத்திலாவது ராமன் எனக்கு ஈடாவானே? கோர்த்தியான பானங்களைக் குடி; வனங்களிலும் தோட்டங்களிலும் உன்னிஷ்டப்படி விளையாடு; இங்குள்ள ஸகல போகங்களையும் அனுபவி; இந்தப் பூமியையும் அதிலுள்ள ஸமஸ்த தனங்களையும் உனக்குக் கொடுத்தேன். என்னுடன் உன்னிஷ்டப்படி க்ரீடை செய்; உன் பந்துக்களும் உன்னை அடைந்து ஸகல ஸௌக்யங்களையும் அனுபவிக்கட்டும்; பயத்தை விடு. ஸகல ஆபரணங்களாலும் உன்னை அலங்கரித்துக்கொண்டு, அநேக வர்ணமுள்ள புஷ்பங்களாலும் அவைகளில் மொய்க்கும் வண்டுகளாலும் மறைந்த மரங்களையுடைய ஸமுத்திரக்கரையிலுள்ள வனங்களில் என்னுடன் ஆனந்தமாய்க் காலத்தைக் கழி,, யென்றான்.

## ஸர்க்கம் 21.

### ஸீதை ராவணனுக்கு ஹிதோபதேசஞ் செய்தது.

---

க்ரூரனான ராவணன் இப்படிச் சொல்லக் கேட்டு ஸீதை மிகுந்த வருத்தமடைந்து ஹீனஸ்வரத்துடன் மெதுவாய்ப் பதில் சொன்னாள். பர்த்தாவை விட்டுப் பிரிந்த துக்கத்தால் தபித்து, அவரையே நினைத்து அழுது கொண்டு மஹா துஷ்டனான ராவணனைப் பார்த்து நடுங்கினாள்; ஆனால் ராமனையே ஸர்வகாலத்திலும் த்யானிப்பவளாய், அவருடைய சரணாரவிந்தங்களில் நீங்காத பக்தியுடன் பதிவ்ரதா தர்மத்தைக் காப்பாற்றிக்கொண்டு, ஒரு துரும்பைக் கிள்ளி அவனுக்கும் தனக்கும் நடுவில் போட்டுப் புன்சிரிப்புடன் அவனுடைய காரணங்களுக்குப் பதிலுரைத்தாள்.

"ராவண! என்னிடத்தில் வைத்த ஆசையை விலக்கி உன் பார்யைகளிடத்தில் வைப்பது ந்யாயம். மஹாபாபிக்கு மோக்ஷம் கிடைக்குமோ? ப்ரஹ்மஞானிகளான விதேஹ ராஜர்களுடைய வம்சத்தில் பிறந்து, களங்கமற்ற ஆசாரத்தையுடைய ஸூர்யவம்சத்தில் புகுந்து, ஸர்வ லோகநாதனான ராமமூர்த்தியைப் பர்த்தாவாய் அடைந்து, வேறு புருஷனை ஸ்வப்னத்திலும் நினையாத நான், அல்ப மனிதர்களும் நிந்திக்கும் பாபத்தைச் செய்வேனோ" வென்று அவனை அலக்ஷ்யஞ்செய்து, "நானோ பதிவ்ரதை; பிறருடைய பார்யை; உனக்குத் தகுந்த பார்யையல்ல; என்னை விட்டுவிடு; ஸாதுக்கள் அனுஷ்டிக்கும் தர்மத்தையும் ஆசாரத்தையும் அனுஸரி. இந்த விஷயத்தில் உன்னையே உபமானமாக வைத்துச் சொல்லுகிறேன்; உன் பத்னிகளைப் பரபுருஷர்கள் கண்ணெடுத்துப் பார்க்காமல் வெகு ஜாக்ரதையாய்க் காப்பாற்றிவருகிறாயல்லவா?

உன்னிடத்தில் பரம ப்ரீதிவைத்து உன் ஸகல இஷ்டங்களையும் நிறைவேற்றக் காத்திருக்கும் பார்யைகளிடத்தில் உன்னிஷ்டப்படி அனுபவிக்கலாகாதா? ஒருவன் தன் பத்தினிகளிடத்தில் திருப்தியடையாமல் காமம் மீறி இந்த்ரிய ஸ்வாதீனமில்லாதவனாய்ப் பரஸ்த்ரீகளைத் தொடர்ந்தால் அவனுக்கு அந்த ஸமயத்தில் அது ஹிதமாகத் தோன்றினாலும், முடிவில் ஆயுளையும் ஐச்வர்யத்தையும்

தேஜஸ்ஸையும் பெண்டு பிள்ளைகளையும் நல்ல கதியையும் நாசஞ் செய்யும்.

இந்தத் தேசத்தில் உனக்கு ஹிதத்தை உபதேசிக்கும் ஸாதுக்களில்லையோ? நீ செய்யும் அகார்யத்திலிருந்து உன்னைத் தடுப்பவர்களில்லையோ? விபீஷணன் மால்யவான் முதலியவர்களிலிருப்பதால் அப்படிச் சொல்லக்கூடாது. ஆகையால் அவர்களுக்குச் சுச்ரூஷை செய்து நமஸ்கரித்து வணக்கமாய் அவர்களிடத்தில் தர்மங்களை நீ கேட்கவில்லையோ? நேற்று வந்த உனக்கு இது எப்படித் தெரியுமென்றால், உன் புத்தி விபரீதத்தில் செல்வதே போதுமான அடையாளமல்லவா? 'பிறருடைய எண்ணம் ப்ரத்யக்ஷமாய்த் தெரியாமலிருக்க என் புத்தியை நீ அறிந்ததெப்படி'யென்றால், ஸாதுக்களால் நிந்திக்கத் தக்க உன் ஆசாரமே அதற்கு ஸாக்ஷி. உன் நடத்தை உன்னை மாத்ரம் அழிக்குமோ? உன்னை அண்டியிருக்கும் ராக்ஷஸர்களையும் வேரறுக்குமே. அவர்களுக்குப் பரமஹிதத்தைச் செய்பவன் போல் காட்டிக்கொள்ளுகிறாய்; ஆனால் அவர்களை நிர்மூலஞ்செய்ய எண்ணங்கொண்டு ஸாதுக்களின் ஹிதோபதேசத்தை அலக்ஷ்யஞ் செய்கிறாய். அந்யாயத்தில் ஆசை வைத்துப் புத்திஹீனனான அரசனையடைந்த ராஜ்யமும் ப்ரஜைகளும் ஐச்வர்யமும் அழியும். அப்படி அந்யாயத்திலேயே நோக்கமுள்ள உன்னால் ஸகல ஐச்வர்யங்களும் பொருந்தின இந்த லங்காராஜ்யமும் இதில் வஸிக்கும் கணக்கில்லாத ராக்ஷஸர்களும் நாசமடையப்போகிறார்கள். ஆராய்ந்து பாராமல் கொடிய பாபங்களைச் செய்து அவைகளால் நாசமடையும் மனிதனைப் பார்த்து ஸகல ப்ராணிகளும் ஸந்தோஷிப்பார்கள். அப்படியே மஹா பாபியான உன்னால் வஞ்சிக்கப்பட்ட உன் ப்ரஜைகள், "க்ரூரனான ராவணன் தைவானுக்ரஹத்தால் நாசமடைந்தா"னென்று ஸந்தோஷிக்கப்போகிறார்கள்.

உன் செல்வமும் ஐச்வர்யமும் எனக்கு ஒரு பொருட்டா? அவைகளால் என்னை மயக்கப்பார்க்கிறாயே? உன் அந்தப்புர ஸ்த்ரீகளுக்கு யஜமானியாயிருப்பது எனக்கு ஒரு மேன்மையா? ஸகல லோகங்களுக்கும் மங்களத்தை உண்டாக்கும் பொருட்டு ரகுவம்சத்தில் அவதரித்த மஹாவிஷ்ணுவை விட்டு என்னைப் பிரிக்கமுடியுமா? அவர் எந்தக் குலத்தில் அவதரிக்கிறாரோ அந்தக் குலத்திலேயே மஹாலக்ஷ்மீயான நானும் அவதரிக்கிறேன். ஸூர்யனை விட்டு அவருடைய தேஜஸ்ஸைப் பிரிக்க முடியுமோ? நான் ராமனுக்கு உட்பட்டவள்; கிர

ணங்களால் ஸூர்யன் அதிகமாய் விளங்குவதுபோல் நான் அவருடைய அதிக மேன்மைக்கு காரணம். ஜனகருடைய புத்ரி யாருக்குப் பத்னியோ அவருடைய தேஜஸ் எல்லையற்றதென்று மாரீசன் உனக்கு உபதேசித்ததை மறந்தாயோ? ப்ரஹ்மா முதலிய ஸகல தேவர்ளும் தங்களுடைய பதவியை அடையும்பொருட்டு ப்ரார்த்திக்கும் லோகநாதனுடைய வலது புஜத்தையடைந்து, அவரால் ஆலிங்கனஞ் செய்யப்பட்டு, அதையே தலையணையாய் வைத்துத் தூங்கின நான் அவருடைய கிருபையால் ஸகல போகங்களையும் பெற்றுப் பேரும் ஊருமில்லாத ஒரு அல்ப ராக்ஷஸனான உன்னைச் சேர்ந்து, உன்புஜத்தில் தலைவைத்துத் தூங்குவேனா? மஹாவ்ரதங்களை அனுஷ்டித்து ஸித்திபெற்ற தீரனான ப்ரஹ்மஞானிக்கு போகாப்பியாஸ ரூபமான வித்யை எப்படித் தகுந்ததோ அப்படி மஹாவிஷ்ணுவான ராமமூர்த்திக்கு மஹாலக்ஷ்மியான நான் தகுந்த பார்யையன்றோ? ராவண! நான் வேறொருவருக்கும் பார்யையாயிருக்கத்தகாதவள்; அவரைப் பிரிந்து பிழைத்திருக்கமாட்டேன்; ஆகையால் காட்டில் ஆண் யானையை விட்டுப்பிரிந்து தபிக்கும் யௌவனபருவமுள்ள பெண் யானையை அதனுடன் சேர்த்துவைப்பதுபோல், நீயும் ராமனை ப்ரார்த்தித்து இங்கே அழைத்துவந்து என்னை அவரிடத்தில் ஒப்பிவி.

“ராவண! திருடனும் பூமியில் அடிவைத்து நடந்தல்லவா திருடவேண்டும்? ஆகையால் உனக்குப் பூமியிலிருக்க இடம்வேண்டுமென்று விரும்பினால் அவருடன் ஸ்நேஹஞ்செய்வது நலம் ‘என் சத்ருவைச் சரணமடைவதைவிட உயிரைவிடுவதே நல’மென்று நீ நினைத்தால், அப்பொழுதும் நீ அவரையே அடையவேண்டும். மற்றவர்களைப்போல் உன்னை ஸுகமாய் மரணமடைய விடுவாரென்று நினைக்கிறாயோ? உன்னை உயிரோடுவைத்து, உனக்கெதிரில் உன் புத்ரர்களையும் வம்சத்தையும் ப்ரஜைகளையும் ஸைன்யங்களையும் நாசஞ்செய்து, பிறகு உன்னைச் சித்ரவதைசெய்து கொல்வார். ஆகையால் அவரையே சரணமடை. ‘இப்படிச் செய்தாலும் அவர் என்னை ரக்ஷிப்பாரென்று என்ன நிச்சய’மென்றால், இதோவிருக்கும் அந்த மஹாபுருஷன் நீ செய்த அபராதங்களெல்லாவற்றையும் மறந்து, அவரைச் சரணமடைய விரும்பினதையே பெரியதாய் எண்ணி உனக்கு ஸகல மங்களங்களையும் தருவார். அவருடைய கோபத்தைத் தணிக்க வழி தேடு. நானும் உனக்கு வேண்டியவரையில் ஸஹாயஞ்செய்து அவரை ப்ரார்த்திக்கிறேன். சரணமடைந்தவர்களிடத்தில் அவருக்குள்ள ப்ரேமைக்கு எல்லையில்லை. மனதில் கல்மஷமில்லாமல்

என்னை அவரிடத்தில் ஒப்பிவித்தாலே அவருடையகோபம் தணியும் (ஸீதை லோகமாதாவானதால் தனக்கு ஸஹஜமான அபாரகருணை யால் ராவணனை ஸன்மார்க்கத்தில் திருப்புகிறதற்காக தானே ஹித த்தை உபதேசிக்கிருள்.) இப்படிச் செய்யாவிட்டால் நீ கோரமான மரணமடைவாய். இந்த்ரனால் விடப்பட்ட வஜ்ராயுதத்திலிருந்தும் யமனுடைய கையிலிருந்தும் நீ தப்பினாலும் தப்பலாம்; ஸகல லோ கங்களுக்கும் ஈச்வரனான ராமசந்த்ரன் கோபங்கொண்டால் உன்னை விடுவாரோ? தேவேந்த்ரனால் ப்ரயோகிக்கப்பட்ட இடியின் முழ க்கத்தைப்போல், ஸகல திக்குகளும் நடுங்கும்படியாய் அவர் கோதண்டத்தில் நாணேற்றும் ஓசையை சீக்ரத்தில் கேட்பாய். ராமலக்ஷ்மணர்களால் ப்ரயோகிக்கப்பட்ட பாணங்கள் அழகான கணு க்களுடன் நெருப்புஜ்வாலைகளைக் கக்கும் மஹா ஸர்ப்பங்களைப் போல் வந்து விழும், பார். அவை அழகான கழுகிறகுகளால் அல ங்கரிக்கப்பட்டு, இந்த லங்காபுரியில் இடைவெளியில்லாமல் வந்து விழுந்து ராக்ஷஸர்களைக் கோடி கோடியாய் நாசஞ்செய்யும்.

கருடன் ஸமுத்ரத்திலிருக்கும் ஸர்ப்பங்களைக் கொத்திக்கொ ண்டுபோவதுபோல், ராமனென்ற மஹாகருடன் ராக்ஷஸஸர்ப்பங் களை நிர்மூலஞ்செய்வார். பூர்வகாலத்தில் மஹாவிஷ்ணு மூன்றடி களால் ஸகல லோகங்களையும் அளந்து அஸுரர்களிடத்திலிருந்து கீர்த்தியைக் கொண்டுபோனதுபோல், அதிசீக்ரத்தில் என் பர்த்தா உன்னை வதஞ்செய்து என்னை அழைத்துக்கொண்டு போ வார். ஒரு முஹூர்த்தத்தில் ஜனஸ்தானத்திலுள்ள பதினாலாயிரம் ராக்ஷஸ வீரர்களும் ஒருவரால் மடிந்ததைக் கண்டு பயந்து, கையா லாகாத நீ அவர்கள் ஆச்ரமத்திலில்லாமல் வெளியில் போயிருக்கும் ஸமயம் பார்த்து, அவர்களை யுத்தஞ் செய்து ஜயிக்காமல் என்னைத் திருட்டுத்தனமாய் எடுத்துவந்தாய். புலியின் வாஸனை அடிக்கு மிடத்தில் நாய் நிற்கமுடியுமா? புருஷ ஸிம்ஹங்களான ராமலக்ஷ்ம ணர்களுடைய காற்றடிக்குமிடத்தில் நீ நிற்கமுடியுமா? அவர்களு டைய கண்ணில் பட்டுப் பிழைக்கவும் முடியுமோ? முன் காலத்தில் இந்த்ரனுடைய வஜ்ராயுதத்தால் ஒரு கையற்ற விருத்ராஸுரன் இர ண்டு மஹா புஜங்களுடைய இந்த்ரனுடன் எதிர்த்து யுத்தஞ்செய்ய முடிந்ததா? அப்படி ஒண்டியான நீ அவ்விருவர்களையும் யுத்தத்தில் எதிர்தது ஜயமடையவும் முடியுமோ? இதைப்பற்றி ஸந்தேஹமுண் டோ? ஸூர்யனுடைய தீக்ஷ்ணமான கிரணங்கள் அல்பஜலத்தை எப்படி ஒரு நிமிஷத்தில் வற்றச்செய்யுமோ அப்படி என் நாதனும்

லக்ஷ்மணனும் பாணங்களால் உன் ப்ராணனைக் கொள்ளைகொள்வார்கள். குபேரன் வஸிக்கும் கைலாஸகிரியில் ஒளிந்து பார்; நீ பூஜைசெய்யும் பரமசிவன் அங்கே வஸிக்கிறார். அல்லது வருண பகவானுடைய ஸபையில் ஒளிந்து பார், ராமபாணங்கள் அங்கேயும் உன்னைத் தூத்திச் சித்ரவதைசெய்யும். காலங்குறுகின மஹா விருக்ஷம் இந்த்ரனுடைய இடிக்குத் தப்பினதுண்டோ?"

---

## ஸர்கம் 22

## ராவணன் ஸீதையைப் பயமுறுத்தினது.

ஸகல ப்ராணிகளும் பார்த்து ஆனந்திக்கக்கூடிய பார்வையையுடைய ஸீதை இப்படிச் சொல்லியும், ராவணன் அவளுடைய கடும் வார்த்தைகளை ஸஹிக்காமல் கோபங்கொண்டு, "லோகத்தில் புருஷன் ஸ்த்ரீகளைத் தன் வசப்படுத்தவேண்டுமென்று எவ்வளவு நல்ல வார்த்தை சொன்னாலும், எவ்வளவு ஸமாதானஞ்செய்தாலும் அவர்களுக்கு அவனிடத்தில் அலக்ஷ்ய புத்தியும் கர்வமும் விருத்தியாகுமேயொழிய அவர்கள் ஸ்வாதீனப்படுகிறதில்லை. மிரண்டோடுகிற குதிரைகளை ஸமர்த்தனான ஸாரதி அடக்குவதுபோல், நான் உன்னிடத்தில் வைத்த ஆசை என் கோபத்தை அடக்குகிறது. காமத்தின் கதி வெகு விபரீதமாயிருக்கிறது, பார். நாம் ஆசை வைக்கும் வஸ்துவிடத்தில் ஸ்நேஹமும் தயையும் விருத்தியாகிறதேயொழிய அதின் தோஷங்களும் கெடுதிகளும் படுகிறதில்லை. ஆகையால் கபடவேஷமுள்ள ராமனிடத்தில் ஆசைகொண்டிருக்கும் உன்னை அவமானஞ்செய்து கொல்லவேண்டியது; அதற்கோ மனஸ் வரவில்லை. நீ சொன்ன ஒவ்வொரு கடும் வார்த்தைக்கும் உன்னை அப்பொழுதே சித்ரவதைசெய்யவேண்டியது. நான் உனக்குக் கெடுவிட்ட பனிரண்டு மாஸங்களில் இரண்டு மாஸங்கள் பாக்கியிருக்கின்றன. அதற்குள் நீ என்னைச் சேராவிட்டால் மறுநாளே என் சமையற்காரர்கள் உன்னைச் சித்ரவதைசெய்து, என் காலை போஜனத்திற்காகப் பக்வஞ் செய்வார்க"ளென்று பேரிடிபோல் கர்ஜித்தான்.

அதைக் கேட்ட தேவ கந்தர்வ கன்யைகள், தாங்கள் அனுபவித்த கஷ்டங்களை நினைத்து, ஜானகியைப் பார்த்துப் பரிதபித்துச், சிலர் "ரஹஸ்யமாய் ஸீதே! பயப்படாதே! இந்த அல்பன் உன்னை

டை நீட்டினார்கள்; சிலர் சண்களைச் சிமிட்டினார்கள்; சிலர் தலையை ஆட்டினார்கள். அதைக் கண்ட ஸீதை தைர்யங்கொண்டு, தன் பதிவ்ரதா மஹிமையாலும் பர்த்தாவின் பராக்ரமத்தாலும் அவனை அலக்ஷ்யஞ்செய்து, மறுபடியும் அவனுக்கு ஹிதத்தை உபதேசித்தாள். "ராவணா! லோகத்தார்கள் நிந்திக்கும் இந்தக் கெட்ட செய்கையிலிருந்து உன்னைத் திருப்பி ஸன்மார்க்கத்தில் நடக்கும்படி செய்பவர்கள் உன் ராஜ்யத்தில் ஒருவருமில்லையென்று நிச்சயமாத் தெரிகிறது; எல்லோரும் உன் அன்னத்தைத் தின்று உனக்கு த்ரோஹம் நினைப்பவர்களே. இந்த்ரனுடைய பத்னியான சசீதேவியைப்போன்ற என்னை ஸகல லோகங்களிலும் உன்னைத் தவிர எவனாவது மனஸாலும் விரும்பத் துணிவானா? தர்மஸ்வரூபியான ராமனுடைய பார்யையைப் பார்த்து இப்படிப்பட்ட பாபவார்த்தைகளைச் சொன்ன பிறகும், அளவற்ற தேஜஸையுடைய அந்த மஹாவீரனிடத்திலிருந்து தப்பித்துக்கொள்ள எங்கே ஓளியப்போகிறாய்? காட்டில் மதயானையும் முயலும் யுத்தஞ்செய்தால் முடிவென்ன? ஆனால் அந்த மதயானை நீதானென்று குதிக்காதே; ராமனே அந்த மதயானை; நீயே அல்ப ஜந்துவான முயல்; கபடத்தால் அவரை ஆச்ரமத்திலிருந்து வெளியில் இழுத்து என்னைத் திருடின உனக்கு வெட்கமென்பது கிடையாதோ? ஐயோ! ஒரு நிமிஷமாவது அவருடைய கண்ணில் படாமல் போய் விட்டாயே!

உன் விகாரரூபமுள்ள க்ரூரமான கண்கள் லஜ்ஜையில்லாமல் பரஸ்த்ரீயை ஆசையுடன் பார்க்கத் துணிந்தபொழுதே எரிந்து பூமியில் ஏன் விழவில்லை? ஸாதுவான தசரதசக்ரவர்த்திக்கு நாட்டுப் பெண்ணும் தர்மாத்மாவான ராமனுக்குப் பார்யையும் பரபுருஷனையே ஸ்மரிக்காமலிருக்கும் என்னைப் பார்த்துக் காமவிகாரத்தோடு தகாத வார்த்தைகளைச் சொல்லும் உன் நாக்கு ஏன் அறுந்து விழவில்லை தெரியுமா? 'உனக்கு அபாரதஞ்செய்தவர்களுக்குச் சாபங்கொடு'வென்று ராமன் எனக்கு உத்திரவுசெய்யவில்லை. நான் பதிவ்ரதா தர்மத்தைக் காப்பாற்றுகிறவள். பர்த்தாவிருக்கையில் அவரை மீறி, அவர் தண்டிக்க வேண்டியவர்களை நான் தண்டிக்கத் துணியமாட்டேன். ஆகையால் என் கோபாக்னியால் சாம்பலாகத் தகுந்த உன்னை இதுவரையிலும் கொளுத்தவில்லை.

மஹாபுத்திமானான ராமனிடத்திலிருந்து என்னை யாராவது பிரிக்க முடியுமா? உன் உத்தேசம் அவருக்குத் தெரியாதோ? நீ மரணமடைவதற்கு நான் காரணமென்று விதி ஏற்பட்டிருந்ததால் இப்படி நடந்தது. இதில் ஸந்தேஹமுண்டோ? ஆகையால் நீ ஸா

மர்த்யமாய் என்னை எடுத்தாயென்று பெருமையடையாதே. நீ அநேக யுத்தங்களில் கைதேர்ந்த சூரனென்று பெயர் பெற்றவன்; குபேரனுக்கு ஸஹோதரன்; அளவற்ற சதுரங்க பலத்தையுடையவன். இப்படியிருக்க ராமலக்ஷ்மணர்களை மோசஞ்செய்து என்னைத் திருடி வந்ததற்குக் காரணமென்ன''வென்றாள்.

ஸீதை இப்படிச் சொல்லக்கேட்டு, ராவணன் கோபத்தால் கண்களை உருட்டி விழித்து, ஜானகியைப் பயங்கரமாய்ப் பார்த்தான். நீருண்ட மேகம்போல் கறுத்த தேஹத்தையுடையவன்; பர்வத சிகரங்களைப்போன்ற புஜங்களையுடையவன்; கொழுத்த ஸிம்ஹத்தைப் போல் பலத்தையும் நடையையுமுடையவன்; நெருப்புக் கொழுந்துகளைப்போன்ற நாக்கின் நுனியையும் கண்களையுமுடையவன்; அசைகிற நுனிகளையுடைய கிரீடத்தால் உயர்ந்தவன்; விசித்ரமான மாலைகளாலும் பூச்சுக்களாலும் சிவந்த வஸ்த்ரத்தாலும் நேர்த்தியான தங்கத்தால் செய்யப்பட்ட தோள்வளை முதலிய ஆபரணங்களாலும் அலங்கரிக்கப்பட்டவன்; அமிருதத்திற்காக ஸமுத்ரத்தைக் கடைந்த காலத்தில் மந்த்ரபர்வதம் வாஸுகியென்ற மஹாஸர்ப்பத்தால் சுட்டப்பட்டதுபோல் கறுத்த அரைநூல் மாலையால் அலங்கரிக்கப்பட்ட இடுப்பையுடையவன்; இரண்டு புஜங்களால் இரண்டு உன்னத சிகரங்களுடன் விளங்கும் மந்த்ரகிரியைப்போல் ப்ரகாசித்தான். சிவந்த புஷ்பங்களாலும் தளிர்களாலும் நிறைந்த அசோக மரங்களால் அழகு பெற்றிருக்கும் மலையைப்போல், பாலஸூர்யர்களுக்கு ஸமமான காந்தியுடன் ஜ்வலிக்கும் குண்டலங்களைத் தரித்திருந்தான். வஸந்த ருதுவே உருவெடுத்து வந்தது போலிருந்தாலும், ஸகல விதமாய் அலங்கரிக்கப்பட்டிருந்தாலும், ச்மசானத்திலுள்ள விருக்ஷத்தைப்போல் பார்க்கப் பயங்கரமாயிருந்தான். கோபத்தால் சிவந்த கண்களுடன் ஸீதையை வெறிக்கப் பார்த்துக் காலஸர்ப்பத்தைப்போல் சீறிக்கொண்டு "நீதி நெறியில்லாமல் ஸகலத்தையும் இழந்து திரியும் ராமனிடத்தில் இன்னும் ப்ரியம் வைத்த உன்னை ஸூர்யன் ஸந்த்யா கால இருட்டை அழிப்பதுபோல் இப்பொழுதே கொல்வே''னென்று சத்ருக்களைக் கதறவடிக்கும் ராக்ஷஸேச்வரன் கோரமான பார்வையுள்ள ராக்ஷஸிகளைப் பார்த்துப் பின்வருமாறு உத்திரவு செய்தான். அவர்களில் ஒருத்தி ஒரே கண்ணுடையவள்; ஒருத்தி ஒரே காதுடையவள்; ஒருத்தியின் காது தலையை மூடிக்கொண்டிருந்தது. யானை பசு முதலியவைகளைப்போல் காதுடையவர்கள் சிலர். ஒருத்திக்கு காது நீளமாய்த் தொங்கிக்கொண்டிருந்தது; ஒருத்திக்கு காதே இல்லை. யானை குதிரைப்

முதலியவைகளைப்போல் பாதங்களையுடையவர் சிலர்; ஒருத்திக்கு ஒரே கால் ஒருத்திக்குப் பெருங்கால்; ஒருத்திக்கு காலேயில்லை; ஒருத்திக்குத் தலையும் கழுத்தும், ஒருத்திக்கு ஸ்தனமும் வயிறும், ஒருத்திக்கு வாயும் கண்ணும் அளவுக்கு மிஞ்சியிருந்தன. ஒருத்தியின் நாக்குத் தொங்கிக்கொண்டிருந்தது. ஒருத்திக்கு நாக்கேயில்லை. ஒருத்திக்கு மூக்கேயில்லை. ஸிம்ஹத்தைப்போல் ஒருத்திக்கு முகம், பன்றியைப் போல் ஒருத்திக்கு முகம், பசுவைப்போல் ஒருத்திக்கு முகம்.

இவர்களைப் பார்த்து ராவணன், "ராக்ஷஸிகளே! நீங்களெல்லோரும் இவள் எனக்கு அதி சீக்ரத்தில் ஸ்வாதீனப்படும்படி செய்ய வேண்டியது. இவளுடன் அனுகூலமாய்ப் பேசியும் ப்ரதிகூலமாய்ப் பேசியும் தண்டோபாயத்தைத் தவிர ஸாமதானபேதமென்ற மற்ற மூன்று உபாயங்களாலும் வசப்படுத்துங்கள். அப்படியும் முடியாவிட்டால் தண்டோபாயத்தை ப்ரயோகிக்கலா"மென்று கடுமையாய் உத்தாவிட்டுக், காமத்தாலும் கோபத்தாலும் நிறைந்த மனதையுடையவனாய் ஸீதையை அடிக்கடி மிரட்டினான். அப்பொழுது அவனுடைய ப்ரிய பார்யையான தான்யமாலியென்பவள், சீக்ரமாய் ஸமீபத்தில் வந்து ராவணனை இறுகத் தழுவி, "மஹாராஜா! என்னுடன் க்ரீடிக்க வாரும். இவளோ மனுஷ்ய ஸ்திரி; உம்மிடத்தில் இஷ்டமில்லாதவள்; முகம் வெளுத்து விகாரமாயிருப்பவள். இவளால் உமக்கென்ன ப்ரயோஜனம்? உமது புஜபலத்தால் ஸம்பாதிக்கப்பட்ட உத்தம போகங்களை அனுபவிக்கவேண்டுமென்று ப்ரஹ்மா இவளுடைய தலையில் எழுதவில்லையென்பது நிச்சயம். தன்னிடத்தில் ப்ரியமில்லாத ஸ்திரீயை வருத்துகிறவனுடைய தேஹம் தாபத்தையடையும். தன்னிடத்தில் ஆசைவைப்பவளை விரும்பினால் உத்தமமான ஸந்தோஷமுண்டாகு"மென்றாள். காளமேகம்போல் கறுத்த அந்த மஹா பலவான், தான்யமாலி இப்படிச் சொல்லித் தன்னை அவ்விடம்விட்டு இழுத்துக்கொண்டுபோவதைக் கண்டு, கோபந்தணிந்து சிரித்துக்கொண்டு அங்கிருந்து திரும்பினான். அவனுடைய நடையைத் தாங்காமல் பூமி நடுங்க, ஜ்வலிக்கும் ஸூர்யனைப் போல் காந்தியுடைய தன் அரண்மனைக்குள் சென்றான். தேவகந்தர்வ நாககன்னிகைகளும் அவனைப் பின்தொடர்ந்தார்கள். பதிவ்ரதா தர்மத்தைக் காப்பாற்றுவதிலேயே நோக்கமுள்ளவளாய்ப் பயத்தால் நடுங்கும் ஸீதையை ராவணன் இவ்விதமாய் மிரட்டி, அங்கிருந்து புறப்பட்டுக் காமத்தால் கலங்கின மனஸுடன் ப்ரகாசமுள்ள தன் வீட்டில் புகுந்தான்.

ஸர்க்கம் 23.

## ராக்ஷஸிகள் ஸீதைக்குப் போதித்தது.

---

இப்படி ராவணனால் ஆக்ஞாபிக்கப்பட்ட ராக்ஷஸிகள் அவன் அந்தப்புரத்திற்குப் போனவுடன் ஸீதையின் ஸமீபத்தில் வந்து, கோபத்தால் தேஹந்தெரியாமல் க்ரூரமான வார்த்தைகளைச் சொன்னார்கள். "ஸீதே! உன்னைப் பார்யையாக விரும்பும் ராவணன் ஸாமான்யனா? ப்ராஜாபதிகளுள் ஒருவரான புலஸ்த்யருடைய பேரன், சத்ருக்களைக் கதறவடிப்பவன், மஹாபுத்திமான், பத்துத் தலைகளையுடையவன்; லோகத்திலுள்ள ஸகல ராக்ஷஸர்களுக்கும் ப்ரபு; இது உனக்குப் பெரிதாய்த் தோன்றவில்லையோ'' வென்று ஒருத்தி சொன்னாள். பிறகு ஏகஜடையென்ற மற்றொருத்தி, சிறுத்த இடையையுடைய ஸீதையை அழைத்துக் கோபத்தால் கண்கள் சிவக்க, ''மரீசி அத்ரி அங்கிரஸ் புலஸ்த்யர் புலஹர் க்ரது வென்ற ஆறு ப்ரஜாபதிகளுக்குள் நான்காவதான புலஸ்தயர் ப்ரஹ்மதேவருடைய மானஸ புத்ரர்; விச்ரவஸென்ற மஹர்ஷி மஹாதேஜஸ்வியாய் புலஸ்த்தியருடைய மனஸிலிருந்து உண்டானார்; அவர் ப்ரஹ்மாவிற்கு ஸமமானவர். அவருடைய புத்ரன் ராக்ஷஸேச்வரனான ராவணன்; சத்ருக்களுடைய தைர்யத்தைக் குலைத்து அவர்களைக் கதறச் செய்கிறவன். நீ அவனுக்குப் பார்யையாகத் தகுந்தவள். என் வார்த்தைகள் உன் செவியில் ஏறவில்லையோ? என்ன காரணமெ''ன்றாள். பிறகு பூனைக் கண்களையுடைய ஹரிஜடையென்பவள், நெருப்புப் பொறி போன்ற கண்களை உருட்டி, "முப்பத்து முக்கோடி தேவர்களையும் தேவேந்த்ரனையும் முறிபடித்த ராக்ஷஸராஜாவுக்குப் பார்யையாகத் தகுந்தவள் நீயே''யென்றாள். பிறகு ப்ரகஸையென்ற மற்றொருத்தி கோபம் மேலிட்டு ஸீதையைப் பயமுறுத்தி "எங்களுடைய அரசன் பராக்ரமசாலி, சூரன், யுத்தத்தில் பின்வாங்காதவன், பலத்திலும் வீர்யத்திலும் நிகரற்றவன். இப்படிப்பட்டவனுடைய பார்யையாக உனக்கேன் இஷ்டமில்லை? அவனுடைய பலமென்ன! பராக்ரமமென்ன! ஸகல ஸ்திரிகளுக்கும் சிரோமணிபோல் ப்ரகாசிக்கும் மண்டோதரியையும் லக்ஷ்யஞ்செய்யமால் உன்னை வந்தடைகிறான். அவள் ராவணனுடைய பட்டமஹிஷி; அவன் அனுபவிக்கும் பாக்யங்களுக்கெல்லாம் அவளே காரணம்; ஸகல விதத்திலும் அவனு

டைய மனதை அபஹரிக்கக்கூடியவள் ; உன்னிடத்தில் வைத்த ஆசையால் அவளையும் திரும்பிப் பார்க்கிறதில்லை. அந்தப்புரத்திலுள்ள கணக்கில்லாத ஸ்த்ரீரத்னக்களையும் நினைக்கிறதில்லை. ஆகையால் உனக்குச் சக்களத்திகளேயில்லை" யென்றாள். பிறகு விகடையென்ற மற்றொருத்தி, "தேவ கந்தர்வ நாக தானவர் முதலியவர்களை யுத்தத்தில் பலதடவை தோர்க்கடித்த அந்த மஹாவீரன், பலமற்ற மனுஷ்ய ஸ்த்ரீயான உன்னிடத்தில் வந்து ப்ரார்த்திக்கிறான்; ஐச்வர்யத்திலாவது புத்தியிலாவது அவனுக்கு ஈடுண்டோ? அந்த ராக்ஷஸேச்வரனை விரும்பாத உன் புத்தியைச் சுடவேண்டும். இந்தப் பாக்யம் யாருக்குக் கிடைக்கு" மென்றாள். பிறகு துர்முகியென்ற மற்றொருத்தி 'அடி, முட்டாளே ! ஸூர்ய சந்த்ரர்களும் வாயுவும் அக்னியும் அவனைக் கண்டு நடுங்குகிறார்கள். ஸூர்யன் அவனுக்கு ஸுகமான உஷ்ணத்துடன் மாத்திரம் ஸஞ்சரிக்கிறான். அவனுக் கிஷ்டமில்லாதபோது வாயுவும் வீசாது. எந்த ருதுவாயிருந்தாலும் அவன் நினைத்தவுடன் மரங்கள் வேண்டிய புஷ்பங்களை கொடுக்க வேண்டும். பர்வதங்களும் மேகங்களும் அவன் நினைத்தபொழுது ஜலத்தைச் சொரியவேண்டும். இப்படி ப்ரபஞ்சத்திற்கெல்லாம் அதிபதியாயிருக்கும் ராக்ஷஸ சக்ரவர்த்திக்கு ப்ரியபார்யையாயிருப்பது உனக்கு அல்பவிஷயமாய்த் தோன்றுகிறதோ? மஹாரூபவதியே! உனக்குப் பரமஹிதத்தை எங்களுக்குத் தெரிந்தவரையில் எடுத்துச் சொன்னோம். அதை ஸரியாய் கவனித்து அப்படியே நட; தவறினால் உன்னை இப்பொழுதே கொல்வோ" மென்றாள்.

## ஸர்க்கம் 24.

### ராக்ஷஸிகள் ஸீதையை வருத்தப்படுத்தினது.

பிறகு கடுநெஞ்சுள்ள அந்தக் கோர ராக்ஷஸிகள் ஸீதையைச் சூழ்ந்து, ப்ரியமில்லாத கடுமையான வார்த்தைகளைச் சொல்ல வாரம்பித்தார்கள். "விலையற்ற படுக்கைகளால் அலங்கரிக்கப்பட்ட ராவணனுடைய அந்தப்புரத்தில் மஹிஷியாயிருக்க நீ ஸம்மதிக்காம லிருப்பதேன்? எல்லா ப்ராணிகளின் மனதை அபஹரிக்கக்கூடிய அழகு பொருந்தின உனக்குத் தகுந்த அந்தஸ்து அதே. நீ மனுஷ்ய ஸ்த்ரீயானதால் மனுஷ்யனுக்குப் பார்யையாயிருப்பதையே பெரிதாய் எண்ணுகிறாய். ராமனிடத்திலிருந்து உன் மனதைத்

திருப்பு. இனி ஒருபொழுதும் நீ அவனுக்குப் பார்யையாகப் போகிற தில்லை. ராக்ஷஸேச்வரனும் மூன்று லோகங்களிலுமுள்ள ஐச்வர்யங்களை அனுபவிப்பவனுமான ராவணனை பர்த்தாவாக அடைந்து இஷ்டமான போகங்களை அனுபவி. ராஜ்யத்திலிருந்து துரத்தப்பட்டு, ஸகல ஐச்வர்ங்களையுமிழந்து, பயத்தால் சித்தங்கலங்கின ஒரு அல்பமனுஷ்யனை நீ கொண்டாடுகிறாய்; நீயும் மனுஷ்யஸ்த்ரீயல்லவா'' வென்றார்கள்.

அதைக் கேட்டு ஸீதை கண்ணீர் சொரிய, "நீங்களெல்லோரும் சேர்ந்து சொல்லும் வார்த்தைகள் எனக்குக் கோரமாய்த் தோன்றுகின்றன. மஹா பாபமென்றும் ஸகல ஜந்துக்களும் நிந்திக்கத்தகுந்த தென்றும் உங்களுக்கேன் தெரியவில்லை? மனுஷ்யஸ்த்ரீ ராக்ஷஸனுக்குப் பார்யையாவது தகுமா? உங்களுடைய இஷ்டப்படி என்னைத் தின்றுவிடுங்கள்; நீங்கள் சொன்னபடி செய்யமாடேன். ராமன் தரித்ரனாயிருந்தாலும் ராஜ்யமற்றவனாயிரிந்தாலும் என் பர்த்தா; ஆகையால் என்னால் பூஜிக்கத்தகுந்தவர், ச்ரேஷ்டர் ஸுவர்ச்சலா தேவி ஸூர்யனைப் பின்தொடர்வதுபோல நானும் அவரிடத்தில் ப்ரீதிவைத்து அவரைப் பின்தொடர்வேன். மஹாபாக்யசாலியான சசிதேவி இந்த்ரனையும் அருந்ததி வஸிஷ்டரையும், ரோஹிணி சந்த்ரனையும், லோபாமுத்ரை அகஸ்த்யரையும், ஸுகன்யை ச்யவனரையும், ஸாவித்ரீ ஸத்யவானையும், மதயந்தி ஸௌதாஸனையும் ஸ்ரீமதி கபிலரையும், கேசினி ஸகரனையும், தமயந்தி நளனையும், இந்துமதி அஜனையும் மஹா ப்ரேமையுடன் சேர்ந்திருப்பதைப்போல், நானும் ரகுகுலச்ரேஷ்டனான ராமனைப் பத்தாவாயடைந்து ஸந்தோஷிக்கிறேன்'' னென்றாள்.

ஸீதை இப்படிச் சொல்ல ராக்ஷஸிகள் கோபத்தால் மூர்ச்சையடைந்து, ராவணனுடைய கட்டளையை நினைத்துகொண்டு க்ரூரமான வார்த்தைகளால் பயமுறுத்தினார்கள். ஹநுமான் சிம்சுபா விருக்ஷத்தில் மறைந்துகொண்டு, இவற்றையெல்லாம் ஜாக்ரதையாய்க் கவனித்துக்கொண்டிருந்தார். ராக்ஷஸிகள், பயத்தால் நடுங்கிக் கொண்டிருக்கும் ஸீதையைச் சுற்றிக்கொண்டு, நெருப்புக்கொழுந்துபோல் தொங்கிக் கொண்டிருக்கும் உதடுகளைக் கோபத்தால் நக்கிக் கொண்டு, "ராக்ஷஸாதிபதியான ராவணனைப் பர்த்தாவாயடைய இவள் தகாதவ'' ளென்று க்ண்ட்ரகோடாலிகளை ஓங்கிக்கொண்டு ஓடிவந்தார்கள்.

அதைக் கண்டு ஸீதை அவர்களுடைய ஹிம்ஸையைப் பொறுக்காமல் கண்ணீர் பெருக, ஹநுமான் மறைந்திருக்கும் சிம்சுபா வ்ருக்ஷத்தை நோக்கி வந்து, அதனடியில் உட்கார்ந்தாள். ராக்ஷஸிகளும் அவளைச் சூழ்ந்து, அவளுடைய அழுக்கடைந்த வஸ்திரத்தையும் துக்கத்தால் வாடின முகத்தையும் பார்த்துக் கொஞ்சங்கூட இரக்கமில்லாமல் அவளைப் பயமுறுத்தினார்கள். அவர்களில் விநதையென்பவள் மின்னலைப்போன்ற வயிறையும் பயங்கரமான கண்களையுமுடையவள். கோபத்தால் தேஹம் பதற "அடீ! ஸீதே! உன் பர்த்தாவிடத்தில் நீ இதுவரையிலும் வைத்த ப்ரீதியும் விச்வாஸமும் போதும். எந்தக் கார்யத்திலும் அளவுக்கு மிஞ்சி நடப்பது பிசகல்லவா? மனுஷ்யர்களுக்குத் தகுந்தபடி இதுவரையில் உன் பதிவ்ரதா தர்மத்தைக் காப்பாற்றிவந்தது ஸந்தோஷம். நான் சொல்லுகிறபடி செய்; உனக்கு ஸகல மங்களங்களும் உண்டாகும். ராவணனே ஸகல ராக்ஷஸர்களுக்கும் அதிபதி; மஹா பராக்ரமசாலி; அழகில் மந்மதனை ஜயித்தவன்; ஸகல கார்யங்களிலும் ஸமர்த்தன்; பக்தர்களுக்குக் கொடுப்பதில் ஒப்பற்றவன்; எல்லோரும் பார்த்து ப்ரியப்படக்கூடியவன்; தேவதைகளுக்கு இந்திரனைப்போல் எங்களுக்கு நாதன். அப்படிப் பட்டவனை நீ அடைவது உனக்கு மிகவும் தகும். அல்பமனுஷ்யனான ராமனை முற்றிலும் மற; ராவணனைக் கைப்பற்று. திவ்யாபரணங்களாலும் வஸ்த்ரங்களாலும் மாலைகளாலும் பூச்சுகளாலும் அலங்கரிக்கப்பட்டு ஸகல தேசங்களுக்கும் ராணியாயிருக்கலாம். இந்திரனுடைய பத்னியான சசியும், அக்னியுடைய பத்னியான ஸ்வாஹாவும் உனக்கு நிகரல்ல. அல்பாயுளுள்ள ராமனென்றபதரால் உனக்கென்ன ப்ரயோஜனம்? நான் சொன்னபடி செய்யாவிட்டால் இந்த நிமிஷமே உன்னைத் தின்று விடுவோம்" என்றாள்.

பிறகு விகடையென்ற பயங்கரி தொங்குகின்ற ஸ்தனங்களுடையவள், கோபத்தால் விரல்களை மடக்கி உயரத் தூக்கிக்கொண்டு, ஸீதையை நோக்கி இடித்து "அடீ! துர்ப்புத்தியுடையவளே! நீ மிருதுவான ஸ்வபாவமுடையவளென்றும் ப்ரியம் வைத்துக் கொண்டு ஸாப்பட்டவளென்றும் உன்னிடத்தில் இரக்கம் பிறந்து, நீ இதுவரையிலும் சொன்ன கடும் வார்த்தைகளெல்லாம் ராவணன் பொறுத்திருந்தான். நாங்கள் ஸமயோசிதமாக உனக்கு ஹிதத்தை உபதேசிக்கிறோம். அப்படிச் செய்யாமற்போனால் நீ பிழைக்கமாட்டாய். பிறரால் தாண்ட முடியாத ஸமுத்ரத்தைத் தாண்டிக் கோரராக்ஷஸர்களால் இரவும் பகலும் காக்கப்பட்ட

யைக் குறித்து நர்த்தனஞ்சேய்வோ'' மென்றாள். ராக்ஷஸிகளால் கோரமாய் அதட்டப்பட்ட ஸீதை தைர்யத்தைவிட்டு அழுதாள்.

---

## ஸர்க்கம் 25.

### ஸீதை துக்கித்தது.



இப்படி அந்த க்ரூர ராக்ஷஸிகள் கடும் வார்த்தைகளைப் பயங்கரமாய்ச் சொல்லுவதைக் கேட்டு, ஸீதை வாய்விட்டழுதாள். பிறகு பயத்தாலும், கண்ணீராலும் குரல் நடுங்க அவர்களைப் பார்த்து, "மனுஷ்ய ஸ்த்ரீ எப்பொழுதாவது ராக்ஷஸனுக்குப் பார்யையாக முடியுமா? உங்களிஷ்டப்படி என்னைக் கொன்று தின்னுங்கள், உங்களுக்கு உட்படமாட்டே''னென்றாள். தேவகன்யைகளுக்கு ஸமமான ஜானகி, ராவணன் பயமுறுத்தினதையும் ராக்ஷஸிகள் மிரட்டினதையும் ராம லக்ஷ்மணர்கள் தன்னைத் திரும்பிப்பாராமலிருப்பதையும் நினைத்துக், துக்கந்தாங்காமல் தேஹம் குன்றி மறைகிறவள்போலவும்; காட்டில் தன் கூட்டத்திலிருந்து விலகிச் செந்நாய்களால் துரத்தப்பட்ட பெண்மான் போலவும் நடுங்கினாள். ஹனுமான் மறைந்திருக்கும் விசாலமான சிம்சுபா விருக்ஷத்தின் கிளையைப் பிடித்துக்கொண்டு, ராமனைப் பிரிந்த துக்கத்தால் வாடி, "இனி அவரைப் பார்ப்பதே''தென்று ஆசையற்று, ஸ்வபாவத்தாலும் பழக்கத்தாலும் அவரையே *த்யானித்தாள். கண்ணீர்த் தாரைகளால் தேஹமெங்கும் நனைய, அவரையே நினைத்துக்கொண்டு துக்க ஸமுத்ரத்தில் கரைகாணாமல் தத்தளித்தாள். பெருங்காற்றில் அடிபட்டு விழுந்த இளம் வாழையைப்போல் நடுங்கி ராக்ஷஸிகளுடைய கோரவார்த்தைகளால் மிரண்டு முகம்வெளுத்தாள். அப்பொழுது, நீண்டு அகன்ற அவளுடைய பின்னல் நடுங்கிக்கொண்டு நான்கு புறங்களிலும் பாயும் கிருஷ்ணஸர்ப்பத்தைப்போல் தோன்றிற்று. ராமனைப் பிரிந்து புண்பட்ட மனஸில் ராக்ஷஸிகளின் க்ரூர வார்த்தைகள் தைக்க, ப்ரக்ஞையற்றுப் பெருமூச்சு விட்டுக்கொண்டு கண்ணீர் பெருக ப்ரலாபித்தாள்.

"என்ன கஷ்டம்! ஹா, ராம!'' வென்பாள். மறுபடியும் துக்கம் தாங்காமல் "ஹா, லக்ஷ்மண! என் மாமியான கௌஸல்யே! ஹா, ஸுமித்ரே!'' யென்று கதறுவாள். "ஐயோ! ...

இப்படி உபத்ரவிக்கப்பட்டு ராகவனையும் பிரிந்து சொல்லமுடியாத துக்கங்களை அனுபவித்துக்கொண்டு ஒரு க்ஷணங்கூடப் பிழைத்திருக்கிறேனல்லவா? ஸ்த்ரீயாவது புருஷனாவது கர்மத்தால் ஏற்பட்ட காலத்திற்கு முந்தியாவது பிந்தியாவது மரணமடைய முடியாதென்று பண்டிதர்கள் சொல்லும் லோகவசனம் நிஜமென்றே தோன்றுகிறது. ஸமுத்ரத்தின் நடுவில் எதிர்க்காற்றால் அடிக்கப்பட்ட கப்பல் பாரந்தாங்காமல் முழுகுவதுபோல், நாள் காப்பாற்றுகிறவர்களிருந்தும் அநாதையைப் போல், பூர்வ ஜன்மத்தில் விசேஷ புண்யஞ் செய்யாததால் உயிரை விடப்போகிறேன். ஆற்றில் வெள்ளம் கரைகளை இடித்துத் தள்ளுவதுபோல், நிகரில்லாத ஸௌந்தர்யத்தையுடைய என் ப்ராணநாதனைக் காணக் கிடைக்காமல் இந்த ராக்ஷஸிகளுடைய வசத்திலகப்பட்டுத், துக்கத்தால் மடியப்போகிறேன். இந்தஸமயத்தில் ரகுவீரனுடைய மலர்ந்த செந்தாமரையைப் போன்ற விசால நேத்ரங்களையும் கொழுத்த ஸிம்ஹத்தின் நடையைப் போன்ற நடையையும் கண்டு களித்து எப்பொழுதும் எல்லோர்க்கும் ப்ரியத்தையே பேசிக்கொண்டு பிறர் செய்த அல்ப உபகாரத்தையும் பெரிதாய் எண்ணும் அந்த மஹானுபாவனுடைய எதிரிலிருக்கக் கிடைத்தவர்களைப்போன்ற புண்யசாலிகளுமுண்டோ? அவருடைய தர்மபத்னியான எனக்கு மாத்ரம் கிடைக்காமற் போயிற்றே. கொடும் விஷத்தைத் தின்றவன் க்ஷணமாவது பிழைத்திருப்பானோ? ஸகல பதார்த்தங்களின் நிஜஸ்வரூபத்தையறிந்த அந்தப் புருஷோத்தமனைப் பிரிந்து நான் ஒரு நிமிஷமாவது பிழைத்திருக்கலாமோ? இவ்விதமான கஷ்டங்களையும் கோரமான துக்கங்களையும் அனுபவிப்பதற்கு பூர்வஜன்மங்களில் என்ன மஹாபாபஞ்செய்தேனோ? இந்த க்ரூரராக்ஷஸிகள் என்னை சூழ்ந்திருக்க இனி ராமனை நான் பார்க்கப்போகிறேனோ? ஆகையால் இந்த மஹாதுக்கததை அனுபவிப்பதைவிட உயிரை விடுவது ச்ரேஷ்டமென்றெண்ணுகிறேன். ஐயோ! இந்த மனுஷ்யஜன்மத்தை சுடவேண்டும். எந்த விதத்திலாவது ப்ராணனை விடுவோமென்றால் பரலோகத்தில் கோரமான நரகத்தை அனுபவிக்கவேண்டுமென்று சாஸ்த்ரங்கள் சொல்லுகின்றனவே. ஆகையால் எப்படிப்பட்ட கஷ்டத்தையும் ஸஹித்துக்கொண்டிருப்பதே நல்லது. ஐயோ! பார்யையின் தேஹம் பர்த்தாவிற்கு ஸொந்தமல்லவா? இஷ்டப்படி உயிரைவிட முடியவில்லையே''யென்று ப்ரலாபித்தாள்.

## ஸர்க்கம் 26.

### (தொடர்ச்சி)

இப்படி ஜானகி, ஸகல ஸௌக்கியங்களும் அனுபவிக்கத் தகுந்த யௌவனத்தில், கண்ணீர் பெருகப் பூமியைப் பார்த்துக்கொண்டு புலம்பினள். பிறகு தன் முன் நிலைமையையும் அப்போதைய நிலைமையையும் நினைத்து நினைத்துப் பைத்யம் பிடித்தவள்போலவும் மதுபானஞ் செய்து புத்தி சிதறினவள் போலவும், ப்ரமை கொண்டவள் போலவும் நெடுந்தூரம் ஓடிக் களைத்த பெண் குதிரை பூமியில் விழுந்து புரண்டு ச்ரமம் தீர்த்துக் கொள்வதுபோலவும், மறுபடியும் வாய்விட்டழுது, தன் மனஸிலிருக்கும் துக்கத்தை ஆற்றிக்கொள்ளப்பார்த்தாள். "ஐயோ! இந்த மஹா பாபி மாயையால் எந்த ரூபத்தையும் எடுக்கக் கூடியவன். ராமலக்ஷ்மணர்களை மயக்கி, என்னை பலாத்காரஞ் செய்து, பயங்கரமாய் மிரட்டிகோவென்று கதறிக்கொண்டிருக்கையில் அதிவேகமாய் எடுத்துவந்துவிட்டானே. இந்த ராக்ஷஸிகளுக்கு நடுவில் அகப்பட்டு ராமனையே நினைத்துக்கொண்டு சொல்ல முடியாத துக்கங்களை அனுபவித்தும் இனி பிழைத்திருக்கமுடியாது. அந்த மஹா வீரனே என்னைக் கைவிட்டபிறகு இந்த ராக்ஷஸிகளின் நடுவிலிருந்துகொண்டு எதற்காக உயிரை வைத்துக்கொண்டிருக்கவேண்டும்? தனங்களும் ஆபரணங்களும் போகங்களும் எனக்கு வேண்டுமோ? இவ்வளவு துக்கத்தையும் தாங்கும் என் ஹ்ருதயம் கருங்கல்லால் செய்ததோ? நாசமற்றதென்று விதிக்கப்பட்டதோ? இன்னும் பிளக்கக்காணேமே! என் பர்த்தாவைப் பிரிந்து ஒரு க்ஷணமாவது பிழைத்திருக்கலாமோ? என்னைப்போன்ற மஹாபாபியுமுண்டோ? பெரியோர்களும் பதிவ்ரதைகளும் என்னைக் காறி உமிழ்வார்களென்பதில் ஸந்தேஹமுண்டோ? கடல் சூழ்ந்த இந்தப் பூமிக்கு அதிபதி; அம்ருத தாரையைப்போன்ற வார்த்தைகளையுடையவர்; என்னுயிர்க்குயிரானவர். அப்படிப்பட்ட பர்த்தாவை விட்டு உயிரோடிருப்பதிலும் ஸௌகங்களை அனுபவிப்பதிலும் எனக்கென்ன ப்ரயோஜனம்? ஆகையால் இந்த ராக்ஷஸிகள் என் தேஹத்தை வெட்டித் தின்னட்டும். ரகுவீரனைப் பிரிந்திருப்பதைவிட என் சரீரத்தை விடுவது ஸுலபம்.

இந்த ராவணனை என் வலது காலாலும் தொடுவேனே? அப்படியிருக்க அவனிடத்தில் ப்ரியம் வைக்கவா? க்ரூர ஸ்வபாவமுள்ள அந்தப் பாபி தான் படும் கஷ்டங்களை அறியாமல் தனக்குட்படும்படி ப்ரார்த்திக்கிறனே! எனக்கு அவனிடத்திலுள்ள வெறுப்பு எவ்வளவென்று அவனுக்குத் தெரியுமா? நான் பிறந்த வம்சம் இன்னதென்றும் என் ஸ்வபாவம் இன்னதென்றும் அந்த அல்பனுக்குத் தெரியுமா? ஆகையால், நீங்கள் எவ்வளவு நேரம் உபதேசித்தும் மிரட்டியும் ப்ரயோஜனமில்லை. என்னைக் கண்டதுண்டமாய் வெட்டுங்கள்; கோடாலியால் பிளவுங்கள்; கிழித்தெறியுங்கள்; நெருப்பில் போட்டுக் கொளுத்துங்கள்; ராவணனைத் திரும்பிப்பார்க்க மாட்டேன்.

என் ரகுநாதன் அபராதிகளிடத்திலும் குணங்களை கவனிக்கிறவர். அல்ப உபகாரத்தையும் பெரிதாயென்னுகிறவர். பிறர் படும் அல்ப கஷ்டத்தையும் ஸஹிக்கமாட்டார். பிறர் க்ஷேமத்தை அடைவதே தனக்கு முக்ய ப்ரயோஜனமாய் என்னுகிறவர்; இத்தக் கல்யாண குணங்கள் அவருடைய சத்ருக்களாலும் ஒப்புக்கொள்ளப் பட்டவைகளே. நான் இவ்வித கஷ்டங்களை அனுபவிக்கும் பொழுதும் என்னைத் திரும்பிப்பாராமலிருப்பதேன்? நான் பூர்வ ஜன்மங்களில் அவ்வளவு புண்யஞ்செய்யவில்லை. என்னை ரக்ஷிக்கச் சக்தியில்லையென்று நினைக்கலாமோ? ஜனஸ்தானத்தில் பதினாலாயிரம் ராக்ஷஸ வீரர்களையும் கரதூஷணர்களையும் ஒரு முஹூர்த்தத்தில் கொல்லவில்லையோ? என்னை இங்கே சிறையில் வைத்திருக்கும் இந்த ராவணனுடைய வீர்யம் எவ்வளவு? இவனைக் கொல்வது ரகுவீரனுக்குப் பெரிதா? தண்டகாரண்யத்தில் மஹாபயங்கரமான விராதன் மடிந்ததைக் காணவில்லையோ? ஸமுத்ரத்தின் நடுவிலிருக்கும் இந்த லங்கைக்கு வருவது அவருக்கு அஸாத்யமென்று நினைக்கலாமோ? ராமபாணங்கள் போகமுடியாத ஸ்தலம் இந்த ப்ரபஞ்சத்திலுமுண்டோ? அப்படியிருக்கச் சத்ருக்கள் அண்டமுடியாத பராக்ரமமுள்ள ரகுநாதன் தனக்கு ப்ரியமான பார்யையை ஒரு அல்ப ராக்ஷஸன் எடுத்துக்கொண்டு போகையில் அந்த அவமானத்தை எப்படிப் பொறுத்திருக்கிறர்?

ஒருவேளை நான் இங்கிருப்பதாக அவருக்குத் தெரியாதோ? அபராதிகளிடத்தில் ராமனுக்குள்ள அளவற்ற தயையால் அவர் ராவணனை மன்னித்தாலும், கூடவிருக்கும் லக்ஷ்மணன் விட்டு விடுவாரோ? என்னை ராகவன் தன்னிடத்தில் ஒப்புவித்திருக்க ராவணன் எடுத்துப் போவதைக் கண்டு, தான் வயஸ்சென்றவராயிருந்தாலும் ஜடாயுஸ்

அவனுடன் எதிர்த்துக் கோரயுத்தஞ்செய்து முடிவில் உயிரை விட்டார். ஐயோ! என் ஸமாசாரத்தை ராமனுக்குத் தெரிவிக்கக்கூடிய அந்த ஒரு ப்ராணியும் போயிற்றல்லவா? ஆகையால் ராமனுக்கு ஸமாசாரம் தெரியாதென்று எண்ணுகிறேன். நான் இங்கிருப்பதாக அவருக்குத் தெரிந்திருதால், கோப பரவசராய்ப் பாணங்களால் ப்ரபஞ்சத்தில் ராக்ஷஸப் பூண்டில்லாமலேயே செய்வார். ஸமுத்ரத்தை வற்றச்செய்து, இந்த லங்காபுரியைத் தூளாக்கி, நீசனான ராவணனுடைய பெயரே யில்லாமல் செய்வார்; நான் என் பர்த்தாவை பிரிந்து கதறுவதுபோல், இங்குள்ள ராக்ஷஸிகள் புருஷர்களைப் பறி கொடுத்து வீடுவீடாய்க் கதறுவார்கள். இதில் ஸந்தேஹமென்ன? அளவற்ற ஸாமர்த்யமுள்ளவர்களாகையால் தைவானுக்ரஹத்தால் ராமலக்ஷ்மணர்கள் எப்படியாவது இந்த லங்கையைக் கண்டுபிடித்து ராக்ஷஸர்களை நாசஞ்செய்வார்கள். அவர்களுடைய கண்ணில் பட்ட சத்ரு ஒரு க்ஷணமாவது பிழைப்பதுண்டோ? இந்த லங்கையில் வாழும் பிணங்களைக் கழுகுகள் கூட்டங்கூட்டமாய் பிடுங்கித்தின்னும்; பிணப்புகையால் வழிகள் மறைந்திருக்கும். அப்பொழுது ஒரே ச்மசானமாகத் தோன்றும்.

நீங்கள் செய்யும் கெட்ட கார்யங்கள் உங்களையே கெடுக்குமென்று தெரியவில்லையா? அதிசீக்ரத்தில் என் எண்ணங்கள் நிறைவேறும். இந்தப் பட்டணத்தில் ஸகலவிதமான அசுபங்களும் நேரும். அவைகளால் இது காந்தியற்றுப் பாழாகும்; சத்ருக்களால் அண்ட முடியாத இந்த லங்காபுரி ராவணனென்ற நீசனான பாபி மடிந்தவுடன், பர்த்தாவையிழந்த சிறு பெண் கதியில்லாமல் துக்கத்தால் இறப்பது போல் அதிசீக்ரத்தில் இருந்தவிடந்தெரியாமல் போகும். அரசனையிழந்து, மங்களகரமான கார்யங்களற்றுப், புருஷர்கள் இறந்து, ராக்ஷஸிகள் நிறைந்த இந்த லங்கை, புருஷனையிழந்த விதவையைப்போல் களையற்றிருக்கும். ஒவ்வொரு வீட்டிலும் ராக்ஷஸப் பெண்கள் துக்கத்தால் வாய்விட்டழுவதைக் கேட்கப் போகிறேன். ராமபாணங்கள் இங்கே வந்து விழுந்து, ராக்ஷஸ ச்ரேஷ்டர்களைக் கொல்லும்; லங்கையைக் கொளுத்தும்; அப்போது காந்தியற்று ஒரே இருட்டாய் பார்க்கப் பயங்கரமாயிருக்கும். நான் இங்கே ராவணனால் வைக்கப்பட்டிருக்கிறேனென்று ரகுவீரனுக்குத் தெரிந்த அடுத்த க்ஷணநேரத்தில் இவையெல்லாம் நடக்குமென்பதில் ஸந்தேஹமுண்டோ?

க்ரூரனும் நீசனுமான இந்த ராவணன் எனக்கு இட்ட கெடு ஸமீபித்து விட்டது; இன்னும் இரண்டு மாஸங்கள் பாக்கியிருக்கின்றன. "நீ பயப்படுவதற்காக அப்படிச் சொல்லியிருக்கலாமே யொழிய நிஜ

மாய் உன்னைக் கொல்வார்கள்'' வென்றால், எப்பொழுதும் பாபத்தை யே செய்து கொண்டிருக்கிற இந்த ராக்ஷஸர்கள் செய்யத் துணியாத கார்யமுமுண்டோ? ஆகையால் இவர்களுடைய அதர்மமான நடத் தையை யோசித்துப்பார்த்தால் எனக்குப் பெரிய ஆபத் நேருமென்ப தில் கொஞ்சங்கூட ஸந்தேஹமில்லை. மாம்ஸத்தையே ஆஹாரமாயு டைய ராக்ஷஸர்களுக்குத் தர்மமென்றும் அதர்மமென்றுமுண்டோ? ராவணன் கெடுக் கழிந்தவுடன் காலைப்போஜனத்திற்காக என்னை நிச்சயமாய்ச் சமைக்கக் கட்டளையிடுவான். சிவந்த கடைக் கண் களையும் அழகான பார்வையையுமுடைய ராமனைவிட்டுச் சொல்ல முடியாத துக்கங்களை அனுபவித்துக்கொண்டு என்ன செய்ய வேன்? இதிலிருந்து எப்படித் தப்புவேன்? பர்த்தாவுடன் கூடி யிருக்கப் பிராப்தமில்லாத எனக்கு இவ்விடத்தில் யாராவது கொஞ் சம் விஷங் கொடுத்தால் அதிசீக்ரத்தில் யமலோகத்திற்குப் போவேன்.

நான் பிழைத்திருப்பதாக ராமலக்ஷ்மணர்களுக்குத் தெரியா தென்று எண்ணுகிறேன். தெரிந்திருந்தால் இந்தப் பூமியெங்கும் என்னைத் தேடமாட்டார்களா? ஆகையால் நான் இறந்து விட்டே னென்று எண்ணிக் கவனிக்காமலிருக்கிறார்களோ?

அல்லது என்னைப் பிரிந்த துக்கத்தால் ராமன் உயிரை விட் டாரோ? தேவர்களும் கந்தர்வர்களும் ஸித்தர்களும் மஹர்ஷிகளும் செந்தாமரைக் கண்ணனான என் நாதனை ஸ்வர்க்கலோகத்தில் கண்டு களிப்பார்களல்லவா? அவர்களே பாக்யசாலிகள். அல்லது, ஸகல பதார்த்தங்களின் ஸ்வரூபத்தை அறிந்து, ப்ரஹ்மஸ்வரூபி யாய், உத்தம தர்மத்தையே நாடும் அந்த ராஜர்ஷிக்குப் பார்யையால் ப்ரயோஜனமில்லை. ஆகையால் பரம வைராக்கியத்தால் என்னைக் கவனியாமலிருக்கிறாரோ? அப்படியும் இருக்காது. ஜீவன்முக்தர்கள் இவ்விதமான கர்ம பந்தக்களை ஒப்புக்கொள்ளமாட்டார்கள். ஒப் புக்கொண்டால் ஸரியாய் நடத்துவார்களேயன்றி நடுவில் விட மாட்டார்கள்.

ஆகையால் நான் வெகு தூரத்திலிருப்பதாலும், என்னைப் பிரி ந்து வெகுகாலமானதாலும் மறந்தாரோ? என்னை அடிக்கடிப் பார்த்துக்கொண்டிருந்தால் ப்ரீதிவிருத்தியாகும்; பார்க்காவிட்டால் அழியுமல்லவா? சீ! இப்படி எண்ணுவது முற்றிலும் பிசகு.

நன்றி மறந்தவர்களே இப்படிச் செய்வார்கள். தன்னை அண்டினவர்களைத் தன் உயிரைக்கொடுத்தும் காப்பாற்றுவதையே வ்ரதமாயுடைய ரகுவீரனிடத்தில் இந்தத் தோஷத்தைச் சொல்லலாமோ? ஆகையால், அவரைக் குற்றஞ்சாட்டுவதில் ப்ரயோஜனமென்ன?

இதுவரையில் என்னிடத்தில் பரமப்ரீதிவைத்து ஸகல விதத்திலும் காப்பாற்றிவந்த ராமன், இப்பொழுது என்னை மறந்திருப்பதை யோசித்தால், என்னிடத்தில் ஏதோ சில தோஷங்களிருக்கின்றனவென்று எண்ணுகிறேன். அப்படி நான் அவருக்கு யாதொரு அபசாரமும் செய்ததாக ஞாபகமில்லையே!

ஆகையால், பூர்வ ஜன்மங்களில் செய்த பாபத்தால் என் பாக்யம் குறைந்து இந்தக் கஷ்டங்களை அனுபவிக்கிறேனென்பது நிச்சயம். ச்ரேஷ்டமான ஆசாரத்தையுடையவரும் சூரரும் சத்ருகுல காலனும் பெருந்தன்மையான ஸ்வபாவத்தையுடையவருமான அந்தப் புருஷோத்தமனைப் பிரிந்தும் நான் பிழைத்திருப்பதிலும் இறப்பதே மேன்மை. ஆனால், என் பாக்யக் குறைவென்று நிச்சயமாய்ச் சொல்லவும் முடியவில்லை.

ஒருவேளை இந்தப் புருஷ ச்ரேஷ்டர்கள், "ஆயுதங்களை எடுத்தாலல்லவா நமக்கு இவ்வளவு கஷ்டங்களும் நேர்ந்தன" வென்று நிச்சயித்து, ஆயுதங்களை விட்டெறிந்து, வானவாஸிகளாய்ப் பழம் கிழங்கு முதலியவைகளைப் புஜித்துக்கொண்டு தபஸ்செய்கிறார்களோ? அப்படியும் இருக்காது. க்ஷத்ரியனாய்ப் பிறந்தவன் ராக்ஷஸர்களுடன் விரோதித்துக்கொண்டு அவர்களை வேரறுக்காமல் ஒதுங்கிப்போவானோ?

அல்லது, ராவணன் முன்பு பொன்மானால் அவர்களை மோசஞ்செய்ததுபோல் மாயையால் அவர்களை மயக்கிக் கொன்றானோ? இப்படிப்பட்ட கஷ்டம் நேர்ந்த பிறகு எவ்விதத்திலாவது நான் உயிரை விடவேண்டியது அவச்யம். இந்தத் துக்கங்கூட என்னைக் கொல்லச் சக்தியற்றதோ? எனக்கு மரணமென்பதே கிடையாதோ?

இந்தத் துக்கத்தைப் போக்கக் கூடியது விவேகமேயல்லாது வேறுண்டோ? அக்ஞானத்தால் மோஹிக்கப்படும் ஜீவகோடிகளுடைய ஜன்மம் என்ன ப்ரயோஜனம்? பூர்வஜன்மங்களில் பலாபேக்ஷையில்லாமல் தர்மங்களை அனுஷ்டித்துச் சித்த சுத்தியடைந்து

அழிவற்ற ஸமாதியிலிருந்து ப்ரஹ்மஸ்வரூபத்தில் தங்களுடைய ஆத்மாவைக் கலந்து, ஸம்சார ஸமுத்திரத்தைத் தாண்டின மஹான்களுக்கு பாபபுண்யத்தாலுண்டாகும் விருப்பமும் வெறுப்புமுண்டோ? அவர்களைப் பாபங்கள் அணுகமுடியுமோ? தங்களுக்குப் ப்ரியமான வஸ்துவைப் பிரிந்ததால் அவர்களுக்குத் துக்கமில்லை; ப்ரியமில்லாத விஷயங்கள் நேர்ந்ததால் விசேஷ பயமுமில்லை. இப்படி விருப்பமும் வெறுப்புமில்லாத அந்த மஹாத்மாக்களை நமஸ்காரஞ் செய்கிறேன். அவர்களே உத்தம புருஷர்கள். நானும் அவர்களைப்போல ஆகக் கிடைக்குமோ? என் அன்பிற்குரிய ரகுவீரன், ஸுகதுக்கங்களின் ஸ்வரூபத்தை நன்குயறிந்தவர். என் ப்ராண நாதனே என்னைக் கைவிட்டார். மஹாபாபியான ராவணனுடைய கையில் அகப்பட்டேன். இவனுக்கு இணங்கப்போகிறதில்லை; இவனுடைய கையால் மாணமடைவதை விட, நானே உயிரை விடுவது நல'' மென்று ப்ரலாபித்தாள்.

---

## ஸர்க்கம் 27.

## த்ரிஜடை கண்ட ஸ்வப்பனம்.

---

ஸீதை இப்படிச் சொல்லக் கேட்டு, சில ராக்ஷஸிகள் கோபம் மேலிட்டு, அந்த ஸமாசாரத்தை ராவணனிடத்தில் சொல்ல ஓடினார்கள். பிறகு மற்றவர்கள் கோரமான வேஷங்களுடன் ஸீதையைச் சூழ்ந்து அவளுக்குக் கெடுதி நேருமென்ற ஒரே விஷயத்தை பலவிதமாய்க் கொடும் வார்த்தைகளால் சொல்லிப் பயமுறுத்தினார்கள். "ஸீதே! நீ தற்கொலை செய்து கொண்டு எங்களிடத்திலிருந்து தப்பப் பார்க்கிறாயோ? உன்னை இப்பொழுதே கொன்று உன் மாம்ஸத்தை நாங்கள் பங்கிட்டுத் தின்னப்போகிறோம்'' மென்றார்கள்.

இப்படி, அந்த துஷ்ட ராக்ஷஸிகள் ஸீதையை மிரட்டுவதை த்ரிஜடையென்பவள் பார்த்துக்கொண்டிருந்தாள். அவள் விபீஷணனுடைய பெண். வயஸிலும் ஞானத்திலும் அனுபவத்திலும் தர்மத்திலும் முதிர்ந்தவள். அதுவரையில் தூங்கிக் கொண்டிருந்து திடீரென்று விழித்துக்கொண்டு, அந்த ராக்ஷஸிகளைப் பார்த்துத் "துஷ்டைகளே! ஜனகருக்குப் புத்ரியும் தசரத சக்ரவர்த்திக்கு நாட்டுப் பெண்ணுமான இவளைத் தொடவேண்டாம். உங்களுக்குப் பசித்

தால் உங்களுடைய தேஹங்களையே பிடுங்கித் தின்னுங்கள். இப் பொழுதுதான் ஒரு பயங்கரமான ஸ்வப்னத்தைக் கண்டேன். அதை நினைக்க எனக்கு மயிர்க்கூச்சலெடுக்கிறது. ஸீதையின் பர்த்தா விற்கு ஸகல மங்களங்களும் ராக்ஷஸர்களுக்கு நாசமும் நெருங்கியிரு க்கின்றன''வென்றாள். அதைக் கேட்டு முன்பு கோபபரவசர்க ளான ராக்ஷஸிகளுக்குப் பயம் பிடித்து எல்லோரும் த்ரிஜடையைச் சூழ்ந்துகொண்டு, "விடிற்காலையில் கண்ட ஸ்வப்னம் வீண் போ காது. ஆகையால் அதை எங்களுக்கு விஸ்தாரமாகச் சொல்''லென் றார்கள்.

அதற்கு த்ரிஜடை "கேளுங்கள், ராகவன் லக்ஷ்மணனுடன் வெண்மையான வஸ்த்ரங்களையும் மாலைகளையும் அணிந்து கணக்கில் லாத ஹம்ஸங்களால் தாங்கப்பட்ட ஒரு தங்கப்பல்லக்கில் ஆகாச மார்க்கமாய் இந்த லங்கைக்கு வந்தார். பிறகு ஸீதை வெண்மை யான வஸ்த்ரத்தால் அலங்கரிக்கப்பட்டு திருப்பாற்கடலின் நடுவிலு ள்ள ஒரு வெண்மையான பர்வதத்தில் உட்கார்ந்திருந்தாள். பிறகு ஸூர்ய காந்தி ஸூர்யனுடன் சேர்வதுபோல் இந்தப் பாக்யசாலி ரகுநாதனுடன் சேர்ந்திருக்கக் கண்டேன். பிறகு ராமலக்ஷ்மணர் கள் அந்தப் பல்லக்கை விட்டு, நான்கு தந்தங்களையுடையதும் மஹா பர்வதத்தைப்போன்றதுமான ஒரு பெரிய யானையின் மேலேறி, ஸீதையை நோக்கி வந்தார்கள். (பசு காளை யானை அரண்மனை பர் வதம் விருக்ஷங்கள் முதலியவைகளில் ஏறுவதாயும், அமேத்யத்தால் பூசப்படுவதாயும் அழுவதாயும் தான் மரணமடைவதாயும் சேரக்கூடா தவர்களுடன் சேருவதாயும் ஸ்வப்னத்தில் காண்பது மங்களகரம்— ஸ்வப்னாத்யாயம்) அந்த ராஜபுத்ரர்கள் வெண்மையான வஸ்த்ராப ணங்களுடன் ஸீதையிருக்கும் மலைச் சிகரத்திற்கு வந்தார்கள் ராமன் ஸீதையை எடுத்து யானையின் கழுத்தில் உட்கார வைப்பதைக் கண்டேன். பிறகு ஸந்தோஷத்தால் மலர்ந்த கண் களுடன் ஸீதை ராமனுடைய மடியிலிருந்து கிளம்பி சந்த்ரஸூர் யர்களைக் கையால் தொட்டாள். (ஸூர்ய மண்டலத்தையாவது சந்த்ர மண்டலத்தையாவது ஸ்வப்னத்தில் கைகளால் தொடுகிறவன் ராஜ் யத்தை ஆள்வான்—ஷை). பிறகு அந்த யானை ராம லக்ஷ்மணர்களு டனும் ஸீதையுடனும் லங்கைக்குமேல் வந்து நின்றது. பிறகு ராமன் ஸீதையுடன் எட்டு வெள்ளைக் காளைகள் பூட்டின திவ்யரதத் தில் இங்கே வந்தார். பிறகு ஸீதையோடும் லக்ஷ்மணனோடும் ஸூர் யனைப் போல் ஜ்வலிக்கும் புஷ்பக விமானத்திலேறி வடக்கே சென்

ளூர். பராக்ரமத்தில் விஷ்ணுவுக்கு ஸமமான ராமனேயும் லக்ஷ்மணனேயும் ஸீதையையும் ஸ்வப்னத்தில் காணும் பாக்யம்பெற்றேன். முட்டாள்களே! மஹாபாபிகளுக்கு மோக்ஷம் கிடைக்குமோ? அப்படித் தேவர்கள் அஸுரர்கள் ராக்ஷஸர்கள் மற்றும் ப்ரபஞ்சத்திலுள்ள ஸகல ப்ராணிகளும் சேர்ந்தாலும் மஹாதேஜஸ்வியான ரகுவீரனே ஜயிக்கமுடியுமோ?

ராவணன் தைலத்தைத் தேஹமெங்கும் பூசிக்கொண்டு சிவப்பு வஸ்த்ரத்தை உடுத்து, மதுபானத்தால் கொழுப்படைந்து அலரிப் பூமாலையைத் தரித்துக்கொண்டு பூமியில் சஞ்சரிப்பதைக் கண்டேன்; பிறகு மொட்டைத்தலையுடன் கறுப்பு வஸ்த்ரத்தை உடுத்திக்கொண்டு புஷ்பகவிமானத்திலிருந்து கீழே விழுந்தான். ஒரு ஸ்த்ரீ அவனை இழுத்தாள். பிறகு சிவந்த மாலையாலும் அலங்கரிக்கப்பட்டுத் தைலத்தைக் குடித்துக்கொண்டு சித்தப்ரமையுடையவனுய் இந்த்ரியஸ்வாதீனமற்றுச் சிரித்துக்கொண்டும் கூத்தாடிக்கொண்டும் கழுதைகள் பூட்டின தேரிலேறி அதிவேகமாகத் தெற்கே போவதைக் கண்டேன். பிறகு, கழுதையின் மேலிருந்து ராவணன் பயத்தால் நடுங்கிப் பூமியில் தலைகீழாக விழுவதைக் கண்டேன். பிறகு சீக்ரமாய் எழுந்து பயத்தால் கலங்கிப் பைத்யம் பிடித்ததுபோலும் குடிவெறி கொண்டதுபோலும் வஸ்த்ரமேயில்லாமல் பல விதமாய்க் கெட்ட வார்த்தைகளைப் பிதற்றிக்கொண்டு அழுக்குப்படிந்த சேற்றில் திடீரென்று முழுகிமறைந்தான். அது ஸஹிக்கமுடியாததும் கெட்ட நாற்றமுடையதும், இருள் மூடினதும் நரகத்தைப் போல் பயங்கரமாயுமிருந்தது. பிறகு, கறுப்பு நிறமுள்ள ஒரு ஸ்த்ரீ, தேஹமெங்கும் அழுக்கடைந்து சிவப்பு வஸ்த்ரத்தைத் தரித்து ராவணனுடைய கழுத்தில் கையைப் போட்டுத் தெற்கே இழுத்துக்கொண்டு போனுள்.

பிறகு விபீஷணன் வெண்மையான மாலைகளையும் வஸ்த்ரங்களையும் சந்தனப் பூச்சுகளையும் தரித்துக்கொண்டு சங்கம் துந்துபி முதலிய வாத்ய கோஷங்களாலும் பாட்டு நாட்யம் முதலியவைகளாலும் உபசரிக்கப்பட்டுப் பர்வதத்தைப்போன்ற சரீரத்துடன் மேகங்களைப்போல் கர்ஜிக்கும் நான்கு தந்தங்களுள்ள ஒரு யானையின் மேலேறி நான்கு மந்த்ரிகளுடன் ஆகாசமார்க்கத்தில் நிற்கக் கண்டேன்.

இப்படியே கும்பகர்ணனும் ராவணனைப் போல் இருக்கக் கண்டேன். ராவணனுடைய புத்ரர்களெல்லோரும் தைலத்தைப் பூசிக் கொண்டு நின்றார்கள். ராவணன் பன்றியின் மேலும், இந்த்ரஜித் முதலையின் மேலும், கும்பகர்ணன் ஒட்டகத்தின் மேலும், அதிவேகமாய்த் தெற்கே சென்றார்கள்.

பிறகு, ராக்ஷஸர்கள் சிவப்பு வஸ்த்ரங்களையும் மாலைகளையும் தரித்து மதுபானஞ் செய்து கோர வாத்யங்களைச் சப்தித்துக் கொண்டு கூட்டம் கூட்டமாய் நிற்பதைக் கண்டேன். பிறகு இந்த அழகிய லங்காபுரி ரதகஜதுரக பதாதிகளுடன் உப்பரிகைகளும் கோபுரங்களும் வாசற்படிகளும் இடிந்து ஸமுத்ரத்தில் விழக்கண்டேன். ராவணன் அதிக ஜாக்ரதையுடன் காப்பாற்றிவரும் இந்தப் பட்டணத்தை ராமதூதனான ஒருவானர வீரன் கொளுத்தக் கண்டேன். சாம்பலாய்க் கிடந்த இந்த நகரத்தில் ராக்ஷஸிகள் தைலத்தைக் குடித்துப் பாடிக்கொண்டும் ஆடிக்கொண்டும் பெருங்கூச்சலுடன் நுழையக் கண்டேன். கும்பகர்ணன் முதலான ராக்ஷஸ ச்ரேஷ்டர்கள் சிவப்பு வஸ்த்ரங்களை உடுத்திக்கொண்டு சாணத்தால் நிறைந்த மடுவில் முழுகினார்கள்.

ரகுவீரன் அதிசீக்ரத்தில் இங்கே வந்து ஸீதையை அழைத்துக் கொண்டு போவார். அவருடைய கோபாக்னியால், நீங்களும் ராவணனும் இதர ராக்ஷஸர்களும் சாம்பலாவீர்கள், ஓடிப்போங்கள். எங்கேயாவது ஒளிந்துகொள்ளுங்கள். இவள் ராமனுக்கு மிகவும் ப்ரியமானவள்; இவளிடத்தில் அவருக்கு விசேஷ மதிப்பும் கௌரதையுமுண்டு. நான் எவ்வளவு தடுத்தும் கேட்காமல் தன்னுடன் வனத்திற்கு வந்தவள்; இப்படிப் பட்டவளை நீங்கள் பயமுறுத்தி ஹிம்ஸிப்பதைப் பார்த்து ஸஹிப்பாரோ? ஆகையால் இனி க்ரூர வார்த்தைகளைச் சொல்லவேண்டாம். அவளை ஸமாதானஞ்செய்து கோபத்தைத் தணியுங்கள். 'ராமனுடைய கோபத்திலிருந்து எங்களைக் காப்பாற்ற வேண்டு'மென்று இவளைப் ப்ரார்த்திப்பதே நமக்குப் பரம ஹிதமென்று எனக்குத் தோன்றுகிறது. மிகுந்த துக்கத்தை அனுபவித்துக் கொண்டிருக்கும் இந்த ஸீதை ஸகல கஷ்டங்களும் தீர்ந்து உத்தமமான பர்த்தாவுடன் கூடி ஸந்தோஷிக்கப்போகிறளென்று நான் கண்ட ஸ்வப்னத்தால் விளங்கவில்லையா? நீங்கள் இவளை மிக பயமுறுத்தி ஹிம்ஸித்திருக்கிறீர்கள். ஆனாலும் "எங்களைக் காப்பாற்றவேண்டும்" என்று ப்ரார்த்தியுங்கள். நாம் இவ்வளவு

உபத்ரவித்திருக்க நம்மிடத்தில் இவளுக்கு தயையுண்டாகுமாவெ ன்று ஸந்தேஹப்பட வேண்டாம். ராக்ஷஸர்களுக்கு ராமனால் உண் டாகப்போகிற நாசத்தை நினைக்கும்போழுது எந்த உபாயத்தாலா வது நாம் தப்பவேண்டியது அவச்யம். இவளுடைய ஸ்வபாவம் உங்களுக்குத் தெரியாது. இவளை ஒருவன் சரணமடை ந்தாலே போதும்; அவன் செய்த ஸகல அபராதங்களையும் மறந்து அவனுக்கு பரம உபகாரத்தைச் செய்வாள். ஆகையால் நம்மை இந்தக் கோரமான ஆபத்திலிருந்து தப்புவிக்க இவளுக்கே திறமை யுண்டு.

மேலும், இவளுடைய அவயங்களில் விகாரமான அடை யாளங்கள் கொஞ்சமாவது காணப்படவில்லை. காந்தி மாத் ரம் கொஞ்சம் குறைந்திருக்கிறது. ஆகையால் துக்கத்தை அனுபவிக்கவே தகாதவளும், தேவபோகங்களை அனுபவிக் கத் தகுந்தவளுமான இந்த ராஜகுமாரிக்கு இந்தச் சோகம் நேர்ந்திருக்கிறது. இவளுடைய கார்யம் ஸித்தியாகுமென்றும் ரகு நாதன் ஜயமடைவாரென்றும் ராவணன் அழிவானென்றும் எனக்கு நன்றாய்த் தெரிகிறது. இவளுக்கு அதி சீக்ரத்தில் ப்ரியமான ஸமா சாரம் கிடைக்கப்போகிறதென்பதற்கு அநேக அடையாளங்கள் தோன்றுகின்றன. தாமரையிதழ்போன்ற இவளுடைய விசால மான இடது கண் மிகுந்த காந்திபெற்று விளங்குகிறது. இடது புஜமும், யானைத் துதிக்கைபோன்ற இடது துடையும் கொஞ்சம் மயிர்க்கூச்சலடைந்து துடிக்கின்றன. இந்தச் சகுனங்களால் இவள் அதிசீக்ரத்தில் ராகவனைச் சேர்ந்து ஸுகமடைவாளென்பது நிச்ச யம். இதோ பாருங்கள். அந்த மாக்கிளையில் ஒரு பக்ஷி விஸ்தார மான இறக்கைகளை விரித்துக்கொண்டு, ப்ரதக்ஷிணமாய வந்து மேலே கிளம்பிக் கீழே இறங்கி, மலர்ந்த புஷ்பங்களாலும் தளிர்களாலும் விளங்கும் கிளையின்மேல் நன்றாய் உட்கார்ந்திருக்கிறது. இது ஒரு சுபசகுனம். அது அங்குள்ள அதிமதுரமான பழங்களைப் புஜித்துத் தென்றலை அனுபவித்து ஆனந்தத்தால் மெய்மறந்திருக்கிறது. அது அடிக்கடி இனிமையாய்க் கூவுவதைப் பார்த்தால், "ஸீதை! நீ ஏன் வருத்தப்படுகிறாய்? உன் பர்த்தா அதி சீக்ரத்தில் இங்கே வந்து உன் கஷ்டங்களைத் தீர்த்து அயோத்யைக்கு அழைத்துக்கொண்டுபோவார். நீ படும் துக்கம் அதிகமென்று தோன்றினாலும் அவருடைய வருத் தத்திற்கு ஈடாகுமோ? ஆகையால் உன் நாயகனை எதிர்கொண்டழை க்க நீ தகுந்தபடி ஸ்நானஞ்செய்து அலங்கரித்துக்கொள்ளாமல் கண்

னுங் கண்ணீருமாயிருப்பது அழகல்ல, எழுந்திரு. உன் ப்ரிய நாயகன் வரப்போகிறானென்ற ஸந்தோஷ ஸமாசாரத்தை நினைக்க எனக்கும் ஆனந்தத்தால் மயிர்க்கூச்சலெடுகின்ற" தென்று ஸீதையின் துக்கத்தைத் தணிப்பதுபோ லிருக்கின்றது.

(அநாதி காலமாய்ப் பகவானுடைய ஸம்பந்தம் பெற்ற ஜீவனைக் கடைத் தேற்றுவதற்கு ஆசார்யன் செய்யும் ப்ரயத்னங்கள் இந்தக் காண்டத்தில் கதாரூபமாய் வர்ணிக்கப்படுகின்றன. லங்கையே சரீரம்; ஸீதையைக் காக்கும் ராக்ஷஸிகளே இந்த்ரியங்கள்; ராவணனும் கும்பகர்ணனும் நான் என்னுடையதென்ற அஹங்கார மமகாரங்கள்; இந்த்ரஜித் முதலியவர்கள் காமக்ரோத லோப மோஹ மத மாத்ஸர்ய தம்பம் முதலியவை. ஜீவனுக்குப் பகவத் ஸ்வரூபத்தை உபதேசிக்க வந்த ஆசார்யனே ஹனுமான்; ஆசார்ய லக்ஷணங்களாவன:—உத்தம கதிக்கு ஸாதனங்களான ஞான கர்மங்களைப் பூர்ணமாய் அனுஷ்டித்தவர்; யக்ஞத்தாலும் தானத்தாலும் அழிவற்ற தபஸாலும் பகவானை அடைய விரும்பும் ப்ரஹ்மஞானிகள்; சாஸ்த்ரங்களின் அர்த்தங்களைத் தான் பரிசோதித் தறிவதாலும், பிறர் அவைகளை அனுஷ்டிக்கும்படி செய்வதாலும், தானே அனுஷ்டித்துக் காட்டுவதாலும் ஆசார்ய பதவியை அடைந்தவர்; வேத சாகைகளை இடைவிடாமல் அத்யயனஞ்செய்து, அவைகளின் அர்த்தங்களை ச்ரவண மனன நிதித்யாஸனமென்ற அனுஷ்டானத்திற்குக்கொண்டு வந்தவர்; வேதங்களைக் கரைகண்டவர்; பகவானிடத்தில் எல்லையற்ற பக்தியுள்ளவர்; பொறாமையில்லாதவர்; மந்த்ரங்களின் ரஹஸ்யத்தை அறிந்து அவைகளில் பக்திவைத்து எப்பொழுதும் அவைகளையே கதியென்று ஆச்ரயிப்பவர்; சுத்தமான ஆசாரமுள்ளவர்; புராணங்களின் தத்வார்த்தங்களை அறிந்தவர்; குருபக்தியுள்ளவர்; ஆனந்தத்தால் கண்ணீர் பெருகத் தேஹமெங்கும் மயிர்க்கூச்சலுடன் பரமாத்மாவின் கல்யாண குணங்களிலேயே ஈடுபட்டிருப்பவர்; புருஷோத்தமனுடைய குணங்களையும் மஹிமையையும் அடிக்கடி சிஷ்யனுக்கு உபதேசிப்பவர். ஆசார்யன் அலுத்துப்போகாமல் சிஷ்யன் போன வழியே விட்டு அவனைச் சீர்திருத்தித் திருமந்த்ரத்தை உபதேசித்து அவனைப் பகவானிடத்தில் சேர்ப்பிக்கிறார்.)

---

## ஸர்க்கம் 28.

### ஸீதை உயிரைவிடப் போனது.

---

ஸீதை ராவணன் சொன்ன க்ரூரவார்த்தைகளைக் கேட்டு மனம் நொந்து, காட்டில் ஸிம்ஹத்தால் பிடிக்கப்பட்ட பெண் யானையைப் போல் நடுங்கினாள்; ஸ்வபாவத்திலேயே பயந்தவள்; ராக்ஷஸிகளுக்கு நடுவில் அகப்பட்டு ராவணனுடைய வார்த்தைகளால் பயமடைந்து ஜன ஸஞ்சாரமில்லாத காட்டில் ஒரு சிறு பெண்ணை அவளைச் சேர்ந்தவர்கள் பஞ்சத்தின் கொடுமையால் விட்டுப் போவதைப்போல் தன்னைச் சேர்ந்தவர்களால் கைவிடப்பட்டு அழுதாள். "ஐயோ! நான் கொஞ்சங்கூடப் புண்யஞ்செய்யவில்லையோ? இவர்களால் இப்படி மிரட்டப்பட்டும் இன்னும் உயிர்போகக் காணேனே. கர்மகதி முடிந்தாலொழிய மரணம் வாராதென்றும் பெறியோர்கள் சொல்லும் வார்த்தை நிஜமே. என்ன கஷ்டம்! ஸுகமென்பதே கிடையாமல் எல்லையற்ற துக்கத்தையே அனுபவிக்கும் என் மனஸ், வஜ்ராயுதத்தால் அடிபட்ட மலைச்சிகரத்தைப்போல் தூள் தூளாகவில்லையே! இதற்கு அழிவேயில்லையென்பது நிச்சயம். இந்தக் கஷ்டத்தைப் பொறுப்பதைக்காட்டிலும் ஏன் உயிரை விடக்கூடாது? ஆனால் அது மஹா பாதகமல்லவா? எப்படியும் ராவணன் என்னைக் கொல்வானென்பது நிச்சயம்; ஆகையால் அவன் கையால் இறப்பதை விட நானே உயிரை விடுவதில் தோஷமே இல்லை. "எவ்விதத்திலாவது உயிரைக் காப்பாற்றிக் கொள்ளவேண்டிய" தென்ற ச்ருதிப்படி ராவணனை அனுஸரித்து ஏன் பிழைத்திருக்கக்கூடாது? ப்ராஹ்மணன் மற்ற ஜாதியர்களுக்கு வேதமந்த்ரங்களை உபதேசிக்க முடியுமோ? அப்படி ராவணனிடத்தில் என் மனஸ் நாடுமோ? லோகநாதனை ராமன் இரண்டு மாஸங்களுக்குள் இங்கே வாராவிட்டால், ரணவைத்யன் கர்ப்பத்தில் மடிந்த சிசுவின் அங்கங்களை ஆயுதங்களால் துண்டிப்பது போல் ராவணன் என் அவயங்களை இரக்கமில்லாமல் துண்டிப்பான். திருடன் ராஜாவுக்கு அபராதஞ்செய்து சிறையில் அடைக்கப்பட்டு, மறுநாட் காலையில் கொலைசெய்யப்படுவானென்றால், எப்படி அதையே நினைத்து நினைத்து வருந்துவானோ,

அப்படி ராவணன் கெடுவிட்ட இரண்டு மாஸகாலம் வரவர ஸமீபிக்கிறதே யென்று நினைக்க என் தேஹம் நடுங்குகிறது. பெருங்கடலில் சுழற்காற்றால் முழுகும் சப்பலைபோல் மஹாபாபத்தை செய்த நான் நாசமடையப்போகிறேன்.

"ஹா, ராம! ஸகல ப்ராணிகளையும் ஸந்தோஷப் படுத்தக்கூடியவரென்று பெயருள்ள உமக்கு என் துக்கத்தை நீக்கி ஆனந்தத்தைக் கொடுப்பது அஸாத்யமோ; லக்ஷ்மண! ஒருவேளை ராமன் அலக்ஷ்யஞ் செய்தாலும், 'ஸீதையை என்னைப்போல் நினை' யென்று வனத்திற்குப் புறப்படும்பொழுது ஸுமித்ரை உனக்கு உபதேசித்தபடி, என்னைத் தாயாகப் பாவிக்கும் உனக்குக்கூட என்னிடத்தில் அலக்ஷ்யம் பிறந்ததோ? பகவானுடைய நிஜஸ்வரூபத்தை அறிந்த ஸுமித்ராதேவி! உமது புத்ரன் உம்முடைய வாக்யத்தை மீறி நடப்பதையும் மாதாவான என்னைக் கைவிடுவதையும் நீர் பார்த்துச் சும்மாவிருப்பது ந்யாயமோ! கௌஸல்யாதேவி! உமது புத்ரனை நம்பி வனத்திற்குக் கூட அனுப்பினீரே! என்னைக் கைவிட்டதை அறியவில்லையோ? இவர்களெல்லோரும் என்னைக் கைவிட்டாலும் குற்றமல்ல. என்னைப் பெற்ற தாயே! நீயும் இப்படிக் கவனிக்காமலிருப்பது தர்மமோ?

இரண்டு ஸிம்ஹங்களின்மேல் இடி விழுந்து நாசஞ்செய்தது போல் மான்ரூபந்தரித்த அந்த மாரீசன் பலவான்களான ராஜகுமாரர்களைக் கொன்றானோ? இல்லாவிட்டால் என்னைக் காப்பாற்ற மாட்டார்களா? ஒரு அல்ப ராக்ஷஸனுக்கு ராமலக்ஷ்மணர்களை நாசஞ்செய்யச் சக்தியுண்டா? ஆகையால் காலதேவதையே மான்வேஷங்கொண்டு பாக்யமற்ற என்னை மோசஞ்செய்தது. இல்லாவிட்டால் ராமனையும் அவர் பிறகே லக்ஷ்மணனையும் துரத்துவேனோ? ராம! பூர்ணசந்த்ரனைப்போன்ற முகத்தையும் நீண்ட புஜங்களையுமுடையவரே! ஸகல ப்ராணிகளுக்கும் ப்ரியமானவரே! நான் ராக்ஷஸர்களால் மரணமடையப்போகிறது உமக்குத் தெரியவில்லையே. உமது முகமண்டலத்தைப் பார்க்க எனக்குமாத்ரம் கிடைக்காதோ? உமது புஜங்கள் என்னைக் காப்பாற்றச் சக்தியற்றனவோ? என் துக்கத்தைத்தீர்த்து ஆனந்தத்தை கொடுக்க முடியாத உமக்கு ராமனென்ற பெயர் தகுமோ? ராம! நீர் பூஜிக்கும் தைவம் ஸ்ரீமந்நாராயணன்; நானும் அதைப் பூஜிக்கவில்லையா? மேலும் உம்மைத் தவிர என்னை ரக்ஷிக்கும் தைவம் வேறுண்டென்று எனக்கு ஸ்வப்னத்திலும் எண்

ணமுண்டோ? என் பதிவ்ரதாக்னியால் இந்த ராக்ஷஸவம்சத்தைச்
சாம்பலாக்க முடியாதா? உம்மைச் சரணமடைந்தேன்; பிறகு என்
பொறுப்பெல்லாம் உமதே; நான் என் விஷயமாய் ப்ரயத்னஞ்செய்
தால் சரணாகதி தர்மத்திற்கு விரோதம் வரும்; உமது வ்ரதத்திற்குக்
கெடுதி நேருமென்று இவ்வளவு ஹிம்ஸைகளையும் பொறுத்துக்கொ
ண்டிருக்கிறேன். அயோத்யையில் ஸகல ராஜபோகங்களையும் அனு
பவித்துக்கொண்டு ஸுகமாயிருக்கக்கூடாதா? நான் ராவணனைக்
கண்ணெடுத்துப் பார்த்தால் அதைக் காட்டிலும் ச்ரேஷ்டமான
போகங்கள் என் காலடியில் விழாதோ? அவைகளை நினைக்காமல்,
உம்முடன் வனவாஸ கஷ்டங்களையெல்லாம் அனுபவித்து இங்கே
வெறுந்தரையில் புழுதிபடிய உட்கார்ந்திருக்கிறேன். தர்மமார்க்கத்
திலிருந்து என் புத்தி ஒரு க்ஷணமாவது நழுவினதில்லை. கூடிய
வரையில் பதிவ்ரதா தர்மத்தைக் காப்பாற்றிவருகிறேன். ஐயோ!
நன்றியற்றவர்களுக்குச் செய்த உபகாரங்கள் வீணாவதுபோல் இவை
யெல்லாம் ப்ரயோஜனமற்றனவோ? அவைகளை அனுஷ்டித்தால்
உத்தம பலங்கள் கிடைக்குமென்ற சாஸ்த்ரங்களும் பெரியோர்களின்
வாக்யங்களும் பொய்யோ? நீரும் என்னைக் கைவிட்டீர்; உம்மைத்
திரும்பிப் பார்ப்போமென்ற நம்பிக்கையில்லை; உம்மைப் பார்க்காமல்
இளைத்து தேஹம் வெளுத்தது. நான் உம்மையே தைவமென்றிரு
ந்தும் தர்மங்களை ஆசரித்ததும் உபயோகமில்லை.

ஒருவேளை நீர் பிதாவின் ஆக்ஞைப்படி வனவாஸஞ்செய்து
முடித்து அயோத்யைக்குத் திரும்பிப்போய், ஸகல கஷ்டங்களும் தீர்
ந்து ‘ராஜ்யத்தில் அபிஷேகஞ் செய்யப்பட்டு, விசால நேத்ரங்களு
ள்ள ஸ்த்ரீகளுடன் ஆனந்தமாய்க் காலத்தைக்கழிப்பீர். நானோ
பாக்யமற்றவள்; இதுவரையில் அனுஷ்டித்த தபஸும் வ்ரதங்களும்
வீணாயின; உம்மிடத்தில் வைத்த ஆசைக்கோ எல்லையில்லை, அது
என் மரணத்திற்கே காரணமாயிற்று; ஆகையால் இந்தப் பாழும்
ப்ராணனை விடப்போகிறேன். விஷத்தைக் குடித்தாவது ஆயுதங்க
ளாலாவது உயிரைப் போக்கிக்கொள்ளலாம். ஆனால், அவைகளை
எனக்குக் கொண்டுவந்து கொடுக்கக்கூடிய உபகாரிகள் இங்கிருப்பார்
களோ? என்னைக் கெடுப்பதற்கு வேண்டிய ஸகல ஸாதனங்களும்
நினைத்தவுடன் கிடைக்கும். என்னைத் தர்மமார்க்கத்தில் காப்பாற்றக்
கூடிய ஸாதனங்கள் பாபிகளால் நிறைந்த இந்த நகரத்தில் கிடைக்
குமோ’ வென்று ஜானகி, ராக்ஷஸிகளின் உபத்ரவத்தை ஸஹிக்க

முடியாமல் முகம் உலர்ந்து, இப்படிப் பலவிதமாய்ப் புலம்பினாள். பிறகு "ராக்ஷஸிகள் விழித்துக் கொள்வதற்குள் நான் இறக்கவேண்டியது அவச்ய"மென்று, ஸகல விதத்தாலும் ராமனையே த்யானித்துக்கொண்டு, ஆஞ்ஜநேயர் மறைந்திருந்த சிம்சுபா விருக்ஷத்தினடியில் வந்தாள். எவ்விதமாய் ப்ராணனை விடலாமென்று நன்றாய் ஆலோசித்துப் "பின்னலை மரக்கிளையில் மாட்டித் தூக்குப்போட்டுக் கொள்வதே நலம்; என் கஷ்டம் தீர்ந்து சீக்ரத்தில் யமலோகத்திற்குச் செல்வே"னென்று புஷ்பத்தைப்போல் மிருதுவான அவயவங்களையுடைய ஸீதை அந்த மரக்கிளையைப் பிடித்துக்கொண்டு நின்றாள்.

பிறகு, "ராமனுடைய சக்தி நன்றாய்த் தெரிந்திருக்க அவரிடத்தில் நம்பிக்கையற்று இப்படிச் செய்யலாமா? ஒருவேளை அபார கருணையால் சத்ருவின் அபராதத்தை அவர் பொறுத்திருக்கலாம். தசரதரையும் பாதனையும் தண்டிக்கிறேனென்ற லக்ஷ்மணனும் பொறுத்துக்கொண்டிருப்பானோ? ஆகையால், யோசிக்காமல் உயிரை விடலாமா? மேலும் நான் பிறந்த ஜனகவம்சம் எவ்வளவு பரிசுத்தமானது! என்னால் அதற்கு நீங்காத தோஷம் ஏற்படுமே" யென்று யோசித்துக்கொண்டிருக்கையில் அனேக சுபசகுனங்கள் தோன்றின. அவை அதுவரையில் ஸகல ஜனங்களுக்கும் க்ஷேமத்தைக் கொடுத்துத் துக்கத்தைப் போக்கினவென்று ப்ரஸித்தம். "நீ இனி ஏன் துக்கப்படுகிறாய்? தைர்யமாயிரு" வென்று ஸீதையைத் தேற்றுவதுபோலிருந்தது.

---

## ஸர்க்கம் 29

### சுபசகுனங்கள்.

---

சொல்ல முடியாத துக்கங்களை அனுபவித்து எந்த ஸந்தோஷமுமற்று மனம் நொந்திருக்கும் ஸீதைக்கு அநேக சுபசகுனங்கள் உண்டாயின. மங்கள ஸ்வரூபியும் குற்றமற்ற ஆசாரத்தையுடையவளுமான ஸீதை "நான் ஸுகத்தை அனுபவித்த காலமுமுண்டோ" வென்று நினைத்தவள்; லோகத்தில் ஒருவனுக்கு லக்ஷ்மீகடாக்ஷம் பிறந்து ஸகல ஐச்வர்யங்களும் அதிகாரமும் கிடைத்தால்,

ஏழைகள் அவனுக்குத் தங்களால் இயன்ற உபகாரங்களைச் செய்து ப்ரயோஜனத்தை அடைய விரும்புவதுபோல், சுபசகுனங்களும் ஸாக்ஷாத் மஹாலக்ஷ்மியின் விஷயத்தில் தங்களால் கூடிய உபகாரத்தைச் செய்து சகுனங்களுக்கெல்லாம் ச்ரேஷ்டமான பதவியை அடைந்தன. வளைந்த இமைமயிர்களால் சூழப்பட்டு ஓரத்தில் சிவந்து சுற்றிலும் வெளுத்து நடுவில் கறுத்த விசாலமான இடதுகண், மீன்களால் அடிக்கப்பட்ட தாமரைபுஷ்பம்போல் சுபமாய்த் துடித்தது. அழகாய் பொருந்திப், பருத்து உருண்டு அகில் சந்தனம் முதலிய உத்தம கந்தங்களால் அலங்கரிக்கப்பட்டு ப்ரிய நாயகனுல் தழுவப்பட்ட இடதுபுஜம் அடிக்கடி வெகுகாலம் துடித்தது. மதயானைத் துதிக்கையைபோன்றதும் பருத்து அழகாய் ஒன்றுக்கொன்று சேர்ந்ததுமான அவளுடைய இடதுதொடையும் அடிக்கடி துடித்து, ரகுநாதன் சீக்ரத்தில் வரப்போகிறுரென்று தெரிவித்தது. நிர்மலமான நேத்ரங்களையும் மாதுளம் பழத்தின் விதைபோன்ற நுணியையுடைய பற்களுமுள்ள ஸீதை உடுத்திருந்த தங்கமயமான வஸ்த்ரம் கொஞ்சம் புழுதிபடிந்து சரீரத்திலிருந்து சற்று நழுவி விழுந்தது. இவைகளாலும் இன்னும் பெரியோர்களால் ஒப்புக்கொள்ளப்பட்ட மற்ற சுபசகுனங்களாலும் தன் பர்த்தா வரப்போகிறுரென்று நிச்சயங்கொண்டு, காற்றாலும் வெயிலாலும் வாட்டப்பட்டுப் பூமியில் மறைந்துபோன விதை மழை பெய்தவுடன் மறுபடியும் முளைப்பதுபோல், ஸந்தோஷத்தால் பூரித்தாள். கோவைக்கனிபோன்ற உதடுகளையும், ச்ரேஷ்டமான கண்களையும், புருவங்களையும், நுணிமயிரையும், கோணலான இமைகளையும், இடைவெளியில்லாத பற்களையுமுடைய ஸீதையின் முகம்; ராஹுவால் பீடிக்கப்பட்டு விடப்பட்ட சந்த்ரனைப் போல் மறுபடியும் விளங்கிற்று. சோகமும் புத்தியின் கலக்கமும் கொதிப்பும் நீங்கி, ஸந்தோஷத்தால் முகம் மலர்ந்து, சுக்லபக்ஷத்துச் சந்த்ரனைப் போல் வரவரக் காந்தி விருத்தியடைந்தது.

## ஸர்க்கம் 30.

### ஹனுமான் ஸீதையிடத்தில் பேச நிச்சயித்தது.

பராக்ரமசாலியான ஆஞ்ஜநேயர் ஸீதைக்கும் ராக்ஷஸிகளுக்கும் நடந்த ஸம்வாதத்தையும் த்ரிஜடை சொன்ன ஸ்வப்னத்தையும் கேட்டுக்கொண்டிருந்தார். பிறகு இந்த்ரனுடைய நந்தன வனத்

தில் விளங்கும் தேவஸ்த்ரீயைப்போன்ற ஸீதையைக் கவனித்துப் பார்த்துப் பலவிதமாய் யோசித்தார். "கணக்கில்லாத வானரர்கள் ஸகல திக்குகளிலும் தேடிக்கொண்டிருக்கும் ஸீதையை நான் பார்க்கக் கிடைத்தது. இந்த லங்காபுரியையும், ராவணனுடைய மஹிமையையும், ராக்ஷஸர்களுடைய விசேஷத்தையும் நான் மறைந்திருந்து சத்ருவின் சக்தியை ரகஸ்யமாய் அறிகிற தூதனைப்போல் வெகு யுக்தியாய்த் தெரிந்துகொண்டேன். அளவற்ற பராக்ரமசாலியும், ஸகலபூதங்களிடத்திலும் தயையுள்ளவருமான ராமனுடைய பார்யை அவரைப் பார்க்கவேண்டுமென்று ஆசைகொண்டிருக்கிறாள். அவளுக்கு ஆறுதல் சொல்லவேண்டியது அவச்யம். துக்கமென்பதையே அறியாமல், துக்கத்தால் பீடிக்கப்பட்டுத், துக்கஸமுத்ரத்தின் கரையைக்காணாத இந்தச் சந்த்ரனைப்போன்ற முகத்தையுடையவளை நான் அவச்யம் ஸமாதானஞ் செய்யவேண்டியது. சோகத்தால் கலங்கின மனதையுடைய இவளுக்குத் தேறுதல் சொல்லாமல் நான் திரும்பிப் போனால் மஹாதோஷத்திற் குள்ளாவேன். அபார கீர்த்திசாலியான இந்த ராஜபுத்ரி ரக்ஷிப்பவர்களிருக்கிறார்களென்பதை அறியாமல், நான் வானரர்களிருக்குமிடத்திற்குப் போவதற்குள் ப்ராணனை விடுவாள். பூர்ணசந்த்ரனைப்போல் எல்லோர்க்கும் ஆனந்தத்தைக் கொடுக்கும் முகத்தையுடைய மஹாவீரனான ரகுநாதன் ஸீதையைப் பார்க்கப் ஆவல்கொண்டிருக்கிறார். அவருக்கு இவளுடைய விருத்தாந்தத்தைச் சொல்லி ஸமாதானஞ் செய்யவேண்டியது அவச்யமே.

ஆனால் ராக்ஷஸிகள் விழித்துக்கொண்டிருக்கையில் ஸீதையுடன் பேசுவது அஸாத்யம். அதற்கு வழியென்ன? ஒன்றிற்கொன்று விரோதமாயிருக்கிறதே. இந்த ராத்ரி கொஞ்சம் பாக்கியிருக்கிறது. அதற்குள் இவளை ஸமாதானஞ்செய்யாவிட்டால் எப்படியாவது ப்ராணனை விடுவாளென்பதில் ஸந்தேஹமில்லை. இவளுடன் பேசாமல் போனால் "ஸீதை எனக்கு என்ன ஸமாசாரம் சொல்லியனுப்பினாள்" என்று ராமன் என்னைக் கேட்டால் என்ன பதில் சொல்வேன்? இவளிடத்திலிருந்து யாதொரு ஸமாசாரத்தையும் கொண்டுபோகாமல் அதிசீக்ரமாய்த் திரும்பிப் போனால், ராமனுக்குக் கோபம் மேலிட்டு கோபப்பார்வையால் என்னைக் கொளுத்திவிடுவார் இவளுடன் பேசி, ராமனுடைய ஸமாசாரத்தைத் தெரிவித்து இவளைத் தேற்றாமல் திரும்பிப்போய், ஸுக்ரீவனை ராவணனோடு யுத்தஞ் செய்வதற்காக இவ்விடத்திற்கு அழைத்து வந்தாலும் என்ன ப்ரயோஜனம்? அவரும் அவருடைய ஸைன்யங்களும் இங்கே வருவதற்குள் இவள்

ப்ராணனை விடுவாள். ஆகையால், நான் இந்த மரத்திலிருந்துகொண்டே, ராக்ஷஸிகள் அப்புறம் போவதையாவது தூங்குவதையாவது பார்த்து, அந்த ஸமயத்தில் துக்கத்தால் தபிக்கும் ராமபார்யையைக் கொஞ்சங் கொஞ்சமாய்த் தேற்றவேண்டும்.

வானரனான நான் அதிஸூக்ஷ்ம ரூபத்துடன் மனுஷ்ய வார்த்தையால் பேசலாமா? அல்லது வ்யாகரண லக்ஷணங்கள் பொருந்தின ஸம்ஸ்கிருத பாஷையால் பேசலாமா? ப்ராஹ்மணனைப்போல் ஸம்ஸ்கிருத வார்த்தையால் பேசினால், "குரங்கிற்குப் பிறரோடு ஸம்ஸ்கிருத பாஷையில் பேசிப்பழக்கம் எங்கே? ஆகையால், ராவணனே நம்மை மோசஞ்செய்ய இந்த ரூபத்துடன் வந்திருக்கிறா"னென்று ஸீதை பயப்படுவாள். ச்ரேஷ்டமான அர்த்தங்கள் அடங்கிய மனுஷ்ய பாஷையிலேயே இவளுடன் பேசுவது நலம். இவளை வேறுவிதமாய் ஸமாதானஞ்செய்ய முடியாது. கோஸலதேசத்திலுள்ளவர்கள் பேசும் பாஷையிலேயே இவளுடன் பேசவேண்டும்.

இருக்கட்டும். இந்த வானரரூபத்துடன் அவளுக்கெதிரே போய் நின்று பேசினால், என் ரூபத்தையும் அதற்கு விரோதமான மனுஷ்ய பாஷையையும் கவனித்து, முன்பே ராக்ஷஸர்களால் பலவிதமாய்ப் பயமுறுத்தப்பட்டவளாகையால் அதிக பயமடைந்து, நினைத்த ரூபத்தைத் தரிக்கக்கூடிய ராவணனென்றே என்னை நினைத்துப் பெருங்கூச்சலிடுவாள். அதைக்கேட்டு ராக்ஷஸர்கள் பல ஆயுதங்களை எடுத்துக்கொண்டு ஓடி வருவார்கள். அவர்களுடைய பலத்திற்குத் தகுந்தபடி என்னைப் பிடிக்கவாவது கொல்லவாவது ப்ரயத்னஞ் செய்வார்கள். பெரிய விருக்ஷங்களுடைய கிளைகளையும் கீழ்க் கிளைகளையும் அடிமரத்தையும் பிடித்துக்கொண்டு தாவும் என்னைப் பார்த்து, நான் அவர்களுடன் யுத்தஞ்செய்வதற்காக எடுக்கும் பெரிய ரூபத்தைக் கண்டு பயந்து, "காட்டில் திரியும் குரங்கிற்கு இந்தப் பெரிய ரூபம் ஏது? இவன் சத்ருவால் அனுப்பப்பட்டு நினைத்த ரூபங்களை எடுக்கக்கூடிய தூதனாயிருக்க வேண்டு"மென்று ஸந்தேஹிப்பார்கள். பிறகு ராவணனுடைய அரண்மனையில் காவல்காப்பவர்களை அழைத்துக்கொண்டு வருவார்கள். அவர்களும், சூலம் கத்தி முதலிய ஆயுதங்களுடன் அதிவேகமாய்ப் பயங்கரமான யுத்தஞ்செய்வார்கள். அவர்களால் சூழப்பட்டு அவர்களைச் சின்னபின்னமாய் அடித்துக்கொண்டிருக்கும்பொழுது மிகவும் களைத்துப் போவேன்; பிறகு ஸமுத்ரத்தைத் தாண்டிச் செல்லமுடியாது. ஒருவேளை பல ராக்ஷஸர்கள் சேர்ந்து என்னைப் பிடித்துவிட்டால், இவ

ளுக்கு ராமனுடைய விருத்தாந்தமே தெரியாமல் போகும். ப்ராணி களை ஹிம்ஸிப்பதிலேயே ஆசையுள்ள இந்த ராக்ஷஸர்கள், "இவன் யார்? சொல்"லென்று இவளை உபத்ரவிப்பார்கள். அப்பொழுது, ராமனும் ஸுக்ரீவனும் உத்தேசித்த கார்யம் கெடும். இவளைக் கடுங் காவலில் வைத்திருக்கும் லங்கையோ கடலால் சூழப்பட்டது; அதற் குப் போகும் வழி மற்றவர்களுக்குத் தெரியாது; ராக்ஷஸர்கள் இராப் பகலாய்க் காத்துக்கொண்டிருக்கிறார்கள். அவர்கள் என்னை யுத்தத் தில் பிடித்துவிட்டாலும், கொன்றுவிட்டாலும், என்னைத் தவிர வேறு வானரன் நன்றாய் விசாரித்துக்கொண்டு நூறு யோஜனை விஸ் தீர்ணமுள்ள இந்தப் பெருங்கடலைத் தாண்டி வந்து, ராமகார்யத்தை நிறைவேற்றுவதில் ஸஹாயஞ்செய்வானென்று நான் எண்ண வில்லை. ராக்ஷஸர்கள் கணக்கில்லாமல் வந்தாலும் அவர்களைக் கொல்வேன் என்பதில் ஸந்தேஹமில்லை. ஆனால் ஸமுத்ரத்தை மறு படியும் தாண்டமுடியாதென்று எண்ணுகிறேன். யுத்தத்தில் ஜய மும் அபஜயமும் ஒருவனுக்கு நிச்சயமில்லை. அப்படி ஸந்தேஹ முள்ள விஷயத்தில் தலையிட எனக்கு இஷ்டமில்லை. எந்தப் புத்தி மானாவது ஸந்தேஹப்படக்கூடிய கார்யத்தைச் செய்வானா? ஸீதை யுடன் பேசாவிட்டால் அவள் ப்ராணனை விடுவாள்; இந்த ரூபத் துடன் அவளிடத்தில் பேசினால் மேற்சொன்ன அபாயங்கள் நேரும்.

ஏறக்குறைய முடிந்த கார்யங்களும் விவேகமற்ற தூதனிடத் தில் ஒப்புவிக்கப்பட்டால் ஸூர்யோதயத்தில் இருள் நாசமடைவது போல் கால தேசங்களுக்கு ஒவ்வாமல் கெடுகின்றன. அரசர்கள் மந் த்ரிகளுடன் நன்றாய் யோசித்துச் செய்யும் கார்யங்களும் விவேக மற்ற தூதனிடத்தில் அகப்பட்டால் விளங்குகிறதில்லை. அவர்கள் தங்களை மிகவும் தெரிந்தவர்களாக நினைத்துக்கொண்டு கார்யங்களைக் கெடுத்து விடுகிறார்கள். ராமனுடைய கார்யம் நிறைவேறவேண்டும்; நான் புத்தி ஹீனனென்று பெயரெடுக்கக்கூடாது; நான் சொல்ல வந்த ஸமாசாரத்தை ஸீதை பயப்படாமல் கேட்டு ஆறுதலடைய வேண்டும். இவைகளை ஒன்றிற்கொன்று விரோதமில்லாமல் எப்படி முடிக்கலாம்? ச்ரேஷ்டமான ஆசாரத்தையுடையவளும் இவளுக்கு ப்ரியபந்துவுமான ராமனுடைய விருத்தாந்தத்தை இங்கே மறைந்திருந்தே சொல்ல வேண்டும். அப்பொழுது அவளிடத்தி லேயே நாடின மனமுடையவளாய்ப் பயப்படமாட்டாள். இவ் வாறு நினைத்தவரும் மஹாபுத்திமானுமான ஸ்ரீராமமூர்த்தியின் ஸம்பந்த மான குணங்களையும் மதுரமான வார்த்தைகளால் வர்ணிக்கவேண்

டும். மங்களகரமாயும் தர்மத்தை அனுஸரித்ததாயுமிருக்கும். அந்த விருத்தாந்தங்களைக் கேட்டபிறகே என்னிடத்தில் இவளுக்கு நம்பிக்கையுண்டாகு''மென்று லோகநாதனை ராமனுடைய பார்யையைப்பற்றி இப்படிப் பலவிதமாய் யோசித்துப் பிறகு, நிகரற்ற ஸாமர்த்யமுள்ள ஆஞ்ஜநேயர் மரக்கிளைகளில் மறைந்துகொண்டே பின்வரும் உத்தமமான வாக்யங்களை மதுரமாய்ச் சொல்ல ஆரம்பித்தார்.

---

## ஸர்க்கம் 31.

### மாருதி ராம சரித்ரத்தை வர்ணித்தது.

---

ஆஞ்ஜநேயர் இப்படி மேல் நடத்தவேண்டிய கார்யத்தை அனேகவிதமாய் நிச்சயித்து ஸீதைக்கு நன்றாகக் கேட்கும்படியான தூரத்திலிருந்து பின்வரும் மதுரமான வார்த்தைகளைச் சொன்னார்: "இக்ஷ்வாகுகுலத்தில் தசரதனென்று ஒரு ராஜாவிருந்தார். அவருடைய சதுரங்கபலத்திற்கு எல்லையில்லை; புண்யத்தையே ஸ்வபாவமாயுடையவர்; விஸ்தாரமான கீர்த்திபெற்றவர்; ந்யாய மார்க்கத்திலேயே நடப்பவர்; எல்லோராலும் கொண்டாடப்பட்டவர்; ராஜரிஷிகளுக்குள் குணங்களால் மேலானவர்; தபஸில் ரிஷிகளைப்போன்றவர்; சக்ரவர்த்திகளுடைய வம்சத்தில் பிறந்தவர்; பராக்ரமத்தில் இந்த்ரனுக்கு ஸமானவர்; பிறர்க்கு ஹிம்ஸைசெய்யாமலிருப்பதிலேயே ப்ரியமுள்ளவர்; பெருந்தன்மை பொருந்தினவர்; அளவற்ற கருணையுடையவர்; அவருடைய பாக்யம் வீண்போகாது; இக்ஷ்வாகு குலத்தரசர்களுக்குள் ப்ரதானமானவர்; ராஜ்யலக்ஷ்மி பொருந்தினவர்; அவரால் அந்த ராஜ்யத்திற்கு லக்ஷ்மிகடாக்ஷம் விருத்தியாயிற்று; ஸகல ராஜலக்ஷணங்களால் குறைவில்லாமல் பொருந்தினவர்; எல்லையற்ற ஜயலக்ஷ்மியால் விளங்கினவர்; ராஜச்ரேஷ்டர்; அவருடைய கீர்த்தி பரவாதவிடம் பூமியிலில்லை; தன்னை அண்டினவர்களுக்கு ஸகல ஸுகத்தையும் அளிப்பவர்; ஸகல ஸுகங்களையும் அனுபவித்தவர். அவருடைய மூத்த குமாரனுக்கு ராமனென்ற பெயர். தகப்பனுக்கு மிகவும் அருமையானவர்; பூர்ண சந்த்ரனைப்போன்ற முகத்தையுடையவர்; ஸகல சாஸ்த்ரங்களையும் அறி

ந்தவர்; ஸகல வில்லாளிகளுக்கும் மேலானவர்; தனக்குரிய தர்மத்தைக் குறைவற நடத்துகிறவர்; தன்னைச் சேர்ந்தவர்களை ரக்ஷிக்கிறவர்; ஸகல ப்ராணிகளுடைய தர்மங்களையும் ஸரியாய் நடப்பிப்பவர்; தன் தேஜஸாலேயே சத்ருக்களை எரிப்பவர்; வீரசிகாமணி. ஸத்யந்தவறாத தன் வயஸ்சென்ற பிதா செய்த ப்ரதிக்ஞையை நிறைவேற்றத் தன் பத்னியோடும் தம்பியோடும் ராஜ்யத்தை விட்டு வனத்திற்கு வந்தார். அங்கே வேட்டையாடும் பொழுது, இஷ்டமான ரூபத்தை எடுக்கக்கூடிய அநேக ராக்ஷஸ வீரர்களைக் கொன்றார். கரதூஷணர்களும் ஜனஸ்தானத்திலுள்ள ராக்ஷஸர்களும் ராமனால் மடிந்ததைக் கேட்டு ராவணன் கோபங்கொண்டு, பொன்மானென்ற மாயையால் ராமலக்ஷ்மணர்களை வஞ்சித்து, ராமனுடைய பார்யையான ஸீதையை அபஹரித்தான். பிறகு ராமன் அவளைத் தேடிக்கொண்டு வருகையில், காட்டில் ஸுக்ரீவனென்ற வானரனுடன் ஸ்நேஹஞ் செய்தார். மஹாபலவானும் சத்ருக்களை வேரறுப்பவருமான ராமமூர்த்தி, ஸுக்ரீவனுக்கு விரோதியான வாலியென்ற வானர ராஜனைக்கொன்று, தன் மித்ரனுக்கு அந்த ராஜ்யத்தைக் கொடுத்தார். பிறகு, ஸுக்ரீவன் தனக்கு உட்பட்ட வானரர்களைக் கட்டளையிட, நினைத்த ரூபத்தை எடுக்கக்கூடிய அந்த வீரர்கள் ஆயிரக்கணக்காய் ஸகல திக்குகளிலும் ஸீதையைத் தேடுகிறார்கள். அவள் இங்கே இருக்கிறாளென்று ஸம்பாதியென்ற கழுகு சொல்லக்கேட்டு, நானும் அவளைப் பார்க்க விரும்பி நூறுயோஜனை விஸ்தீரணமுள்ள இந்த ஸமுத்ரத்தை அதிவேகமாய்த் தாண்டினேன். இங்கே தேடும்பொழுது என் பாக்யவசத்தால் அவளைக் கண்டேன்; சரீரத்திலும் ரூபத்திலும் வர்ணத்திலும் காந்தியிலும் ராமன் எனக்கு வர்ணித்ததுபோலவேயிருக்கிறா'' ளென்று முடித்தார்.

அதைக் கேட்டுக்கொண்டிருந்த ஜானகிக்கு உண்டான ஆச்சர்யத்தைச் சொல்லமுடியாது. கறுத்து நீண்டு சுருண்டு நுனியில் கொஞ்சம் வளைந்த தலைமயிரையுடைய ஸீதை, ப்ராணனைப் போக்கிக் கொள்வதற்காப் பின்னலால் சுற்றப்பட்ட முகத்தை நிமிர்ந்து, இவ்வளவு ப்ரியமான விஷயத்தைச் சொல்லுகிறவனுடைய ரூபம் எப்படியிருக்குமோ வென்று பயத்துடன் அந்தச் சிம்சுபாவிருக்ஷத்தைப் பார்த்தாள். அந்த வானரச்ரேஷ்டனுடைய வார்த்தையைக் கேட்டு, ஸகல திக்குகளையும் ஜாக்ரதையாய்க் கவனித்துக்கொண்டு, ஸர்வ காலத்திலும் ராமனையே த்யானித்துக்கொண்டிருப்பவளாகையால் எல்லையற்ற ஆனந்தத்தை அடைந்தாள். பிறகு இருபக்கங்க

ளிலும் பார்த்தாள்; ராக்ஷஸிகள் தூங்கிக்கொண்டிருப்பதைத் தவிர வேறொருவரையும் காணவில்லை. "நமது கஷ்டத்தைப் பார்த்துத் தேவகணங்களில் யாராவது இரங்கி இந்த ஸமாசாரத்தைச் சொன்னார்களோ"வென்று மேலே பார்த்தாள்; ஒருவரையும் காணோம். "பாதாளலோக வாஸிகளில் யாராவது கருணை புரிந்து இந்த உபகாரத்தைச் செய்தார்களோ? என்னைப் பெற்ற பூமிதேவியே இப்படி ஆறுதல் செய்கிறாளோ"வென்று கீழே பார்த்தாள். ஒன்றும் கண்ணில் படவில்லை. பிறகு மரக்கிளைகளைக் கவனித்துப் பார்க்கையில் ஏதோ ஒரு ரூபம் மஹாதேஜஸ்வியாய்க் காணப்பட்டது. குரலால் வானரனென்று அறிந்தாள். "இந்த மஹாஸமுத்ரத்தைத் தாண்டி, ஸகல லோக கண்டகனான ராவணனுடைய நகரத்தில் ப்ரவேசித்து, ஒருவர்க்கும் தெரியாமல் எங்கும் தேடி ராக்ஷஸர்களுடைய காவல்களைக் கடந்து, இந்த ராக்ஷஸிகளுக்கு நடுவிலிருக்கும் என்னை அவர்களுக்குத் தெரியாமல் கண்டு பேசினவன் ஒப்பற்ற புத்திமானாயிருக்கவேண்டும்; வணக்கமாயும் ம்ருதுவாயும் பேசுவதால் இவன் பிறர்க்குக் கீழ்ப்பட்டவன்; பேசுந்திறமையால் சிறந்த யோசனை சொல்லக் கூடிய மந்திரி; இவனுடைய மதுரமான மங்களவாக்யங்களால் நான் தற்கொலை செய்துகொள்வதிலிருந்து தப்பி உயிர்பெற்றேன்; நான் உயிரோடிருந்தால் மாத்ரம் ராமன் பிழைத்திருப்பார்; ராமன் உயிருடனிருந்தால் ஸகல ப்ராணிகளும் ஜீவித்திருக்கும். இப்படி ஸகல ஜீவகோடிகளுக்கும் ப்ராணதானஞ்செய்த இவன் அவைகளுக்கு ப்ராணதாரமான வாயுபகவானுடைய புத்ரனாயிருக்கவேண்டும்; இவன் வானரராஜனால் ராஜகார்யமாய் அனுப்பப்பட்ட தூத"னென்று முடிவுசெய்தாள். "உதிக்கும் அருணனைப்போல், என் ப்ரியநாதனான ராமமூர்த்தி வருவதைத் தெரிவிக்க வந்த தூதனோ" வென்று ஆனந்தங்கொண்டாள்.

---

## ஸர்க்கம் 32.

## ஸீதையின் ஸந்தேஹம்.

பிறகு அந்தச் சிம்சுபாவ்ருக்ஷத்தில் மறைந்திருந்தவனைப் பார்க்கையில் அவன் வெண்மையான வஸ்த்ரத்தை உடுத்திருந்தான்; மின்னற்கொடிகளின் கூட்டங்களைப்போல் மஞ்சள்வர்ணமுள்ள

தேஹத்துடனும், உருக்கின தங்கத்தைப்போன்ற நேத்ரங்களுடனும், மலர்ந்த அசோக புஷ்பங்களின் கொத்துகளைப்போலுமிருக்கக் கண்டாள்; முதலில் ஸாமான்யமாய்ப் பார்த்துப் பிறகு கவனித்துப் பார்க்கையில், "நமக்கு ப்ரியமான வார்த்தையைச் சொல்லும் இந்த ஜந்து மாயையாயிருக்குமோ"வென்று பயத்தால் மனஸ் நடுங்கிற்று; நினைக்க நினைக்க ஆச்சர்யம் அதிகரித்து "வானரங்களுக்கு இந்தப் பயங்கரமான ரூபமும், இந்தத் தேஜஸும் எங்கேயாவதுண்டோ? கண்ணெடுத்துப் பார்க்கக் கூசுகிறதே! ஆகையால் இது மாயைதா"னென்று மறுபடியும் மயங்கினாள். பயத்தால் மோஹித்துத் துக்கம் மேலிட்டு "ராம! ராம! லக்ஷ்மண! என்னை இப்படிப்பட்ட கஷ்டங்களுக்கு உட்படுத்திக் கைவிட்டீர்களா"வென்று பலவிதமாய்க் கேட்போர் மனஸ் உருகும்படி ப்ரலாபித்தாள். ஆனால் "தைவானுக்ரஹத்தால் இவன் ராமதூதனாயிருந்தால், என் அழுகையைக் கேட்டு ராக்ஷஸிகள் விழித்துக்கொண்டு கண்டுபிடித்தால் என்ன செய்வே"னென்று மெதுவாய் அழுதாள். மிகவும் வணக்கமாய்த் தன்முன் உட்கார்ந்திருந்த அந்த வானரனைக் கண்டு, "ஒருவேளை இது ஸ்வப்னமோ"வென்று ஸந்தேஹித்தாள். பிறகு "ஒருவேளை எனக்கு அனுகூலத்தைச் செய்ய வந்தவனாய் ஏன் இருக்கக்கூடா"தென்று அவனுடைய பருத்து வளைந்த முகத்தை உற்றுப்பார்த்தாள். ஸுக்ரீவ மஹாராஜாவின் முக்ய மந்த்ரியும் அவனுடைய ஆக்ஞை தவறாமல் நடத்துகிறவனும், ஒப்பில்லாத புத்தியுடையவனுமான அந்த வாயு புத்ரனைப் பார்க்கப் பார்க்க மெய்மறந்து உயிரிழந்தவளைப்போல் கீழே விழுந்தாள். வெகு நேரம் கழித்து ப்ரக்ஞை தெளிந்து பின் வருமாறு யோசித்தாள்:—

"ஸ்வப்னத்தில் விகார ரூபமுள்ள இந்தக் குரங்கைக் கண்டேனே. ஐயோ! ஸ்வப்னத்தில் குரங்கைக் கண்டால் பந்துக்களுக்கு நாசம் நேருமென்று சாஸ்த்ரத்தில் சொல்லியிருக்கிறது. ராமலக்ஷ்மணர்களுக்கும் என் பிதாவான ஜனக மஹாராஜாவிற்கும் யாதொரு கஷ்டமும் நேராமலிருக்கட்டும்; ஸகல மங்களங்களுமுண்டாகட்டும்; இது ஸ்வப்னமல்ல; தூங்கினாலல்லவா தூக்கம் வரும்? சோகத்தாலும் துக்கத்தாலும் தபித்துக்கொண்டிருக்கும் எனக்கு ஸுகமேது? பூர்ணசந்த்ரனைப்போன்ற முகத்தையுடைய ராமனைப் பிரிந்த எனக்கு ஸுகமுண்டோ? எப்பொழுதும் ராம ராம வென்று மனஸால் நினைத்துக்கொண்டிருப்பதாலும் அந்த வார்த்தைகளையே எப்பொழுதும் வாயால் சொல்லிக்கொண்டிருப்பதாலும் அதற்குத் தகுந்த

வார்த்தைகள் என் காதில் விழுகின்றன; அவைகளுக்குத் தகுந்த ரூபங்களும் என் கண்ணில் படுகின்றன. ராமனிடத்திலேயே என் ஸகல எண்ணங்களும் நாடியிருக்கின்றன. அவரிடத்தில் வைத்த ஆசை என்னை எரிக்கின்றது; அவரைத் தவிர வேறொரு ஞாபகமும் எனக்கில்லை; ஆகையால், அவைகளே இந்த்ரியங்களும் ப்ரத்யக்ஷமாய்த் தோன்றுகின்றன. ஆகையால் இது வாஸ்தவமல்ல; கேவலம் மனஸால் கல்பிக்கப்பட்டதே. ஆனால் நன்றாய் யோசித்துப்பார்த்தால் அப்படியிருக்கவும் ந்யாயமில்லை. ஏனென்றால் மனஸால் கல்பிக்கப்படும் பதார்த்தங்களுக்கு ஸ்தூல ரூபம் கிடையாது. இந்த வானரனுடைய ரூபம் ஸ்தூலமான கண்ணிற்கு நன்றாய்த் தெரிகிறது; இவனுடைய வார்த்தைகளும் நன்றாக் கேட்கப்படுகின்றன. எப்படியிருந்தாலும், இவன் சொல்லும் விஷயம் எனக்கு மிகுந்த ப்ரீதியைக் கொடுக்கின்றது. ஆகையால் அது வாஸ்தவமா யிருக்கும்படி, பிருஹஸ்பதி, இந்த்ரன், ப்ரஹ்மா, அக்னி முதலிய தேவதைகள் அனுக்ரஹிக்கட்டும், பொய்யாகக் கூடா"தென்று ப்ரார்த்தித்தாள்.

## ஸர்க்கம் 33.

## ஸீதை பதில் சொன்னது

பவழத்தைப்போன்ற முகத்தையுடைய மஹாதேஜஸ்வியான மாருதி, அந்த மரத்திலிருந்து இறங்கி அதிக வினயத்துடன் ஸீதையின் ஸமீபத்தில் போய்த் தலைமேல் கைகூப்பி ஸாஷ்டாங்கமாய் நமஸ்கரித்து, அவள் படும் கஷ்டத்தைப் பார்த்துத் தானும் மனம் நொந்து, மதுரமான வாக்யங்களால் "தாமரையிதழ்களைப்போன்ற நேத்ரங்களையுடையவளே! ஸகல விதத்தில் உத்தமமானவளே! கிழிந்த பட்டை உடுத்திக் கிளையைப் பிடித்துக்கொண்டு தாங்கள் நிற்பது முற்றிலும் ஒவ்வாததா யிருக்கிறது. தாங்கள் யார்? தாமரை இலையிலிருந்து நீர்த்துளிகள் உதிர்வதுபோல் தங்களுடைய கண்களிலிருந்து துக்கத்தாலுண்டான ஜலம் என் பெருகுகின்றது? ஆனந்த பாஷ்பத்தால் அலங்கரிக்கப்பட வேண்டிய தங்களுடைய நேத்ரங்கள் துக்கத்தால் ததும்புவது யாருடைய குலநாசத்திற்கோ? தேவ அஸுர கந்தர்வ ராக்ஷஸ யக்ஷ கின்னர கணங்களுக்குள் தாங்கள் யார்? தங்களைப் பார்த்தால் தேவஸ்த்ரீயைப்போலிருக்கிறது. ருத்ரர்கள் மருத்துக்கள் வஸுக்கள் முதலிய தேவதாகணங்களுக்

குள் தாங்கள் யார்? நக்ஷத்ரங்களுக்குள் சிறந்தவளும் ஸமஸ்த உத்தம குலங்களோடு கூடினவளுமான ரோஹிணிதேவி சந்த்ரனை விட்டு ஸ்வர்க்கத்திலிருந்து பூமியில் வந்திருக்கிறளோ? ஸகல மங்களங்களுக்கும் இருப்பிடமானவளே! தாங்கள் யார்? ஒப்பில்லாத அழகு பொருந்தின நேத்ரங்களையுடையவளே! தாங்கள் யார்? கோபத்தாலோ தெரியாத்தனத்தாலோ தன்னுடைய நாயகனை வஸிஷ்டமஹர்ஷியைக் கோபமூட்டி ஸ்வர்க்கத்திலிருந்து இங்கே வந்த அருந்ததியோ? தங்களுடைய புத்ரர்களாவது உடன்பிறந்தவர்களாவது பர்த்தாவாவது பரலோகத்தை அடைந்தார்களென்று துக்கிக்கிறீர்களோ? கண்ணீர் விடுவதாலும் பெருமூச்சாலும் பூமியில் பாதம் வைத்து நிற்பதாலும் தாங்கள் தேவஸ்த்ரீயல்ல. தங்களுக்கு ராஜலக்ஷணங்கள் நன்ருய் அமைந்திருக்கின்றன. தங்களுடைய அவயவங்களின் லக்ஷணங்களாலும் கைகால்களிலுள்ள ரேகைகளாலும் தாங்கள் பட்டமஹிஷி அல்லது ராஜகுமாரியென்று நினைக்கிறேன். அல்லது, ஜனஸ்தானத்திலிருந்து ராவணனல் எடுத்து வரப்பட்ட ஸீதையாயிருந்தால் தங்களுக்கு ஸகல மங்களங்களும் உண்டாகட்டும்; தங்களுடைய நிஜஸ்திதியை அறிய விரும்புகிறேன். தயை செய்து சொல்லுங்கள். தங்களுடைய ஸௌந்தர்யமும் தாங்கள் அனுபவிக்கும் கஷ்டமும் மனுஷ்யர்களுக்குள் பார்ப்பதரிது. வனத்தில் வஸிக்கும் தபஸ்வி வேஷத்தைத் தரித்திருக்கிறீர்கள். ஆகையால் தாங்கள் ராகவனுடைய பார்யையென்று நிச்சயமாய் எண்ணுகிறே''னென்ருர்.

ஜானகி அதைக் கேட்டு ராமனைப்பற்றின வார்த்தைகளால் ஸந்தோஷித்து, மரத்தடியிலிருக்கும் ஆஞ்ஜநேயரைப் பார்த்துப் "பூமியில் ராஜச்ரேஷ்டர்களுக்குத் தலைவரும் மஹாவீரரும் ஆத்மஸ்வரூபத்தை அறிந்தவருமான தசரதசக்ரவர்த்தியின் நாட்டுப் பெண். விதேஹராஜாவான ஜனகரென்ற மஹாத்மாவின் பெண். புத்தியில் சிறந்த ராமசந்த்ரனுக்குப் பார்யை. என் பெயர் ஸீதை. ராகவனுடைய க்ருஹத்தில் பன்னிரண்டு வர்ஷங்கள் வரையில் மனுஷ்யர்கள் விரும்பக்கூடிய ஸகல போகங்களையும் அனுபவித்துக்கொண்டு, ஸகல ஆசைகளும் நிறைவேறினவளாய் ஸுகித்தேன். பதின்மூன்ருவது வர்ஷத்தில் சக்ரவர்த்தியும் வஸிஷ்டமஹர்ஷியும் கலந்து ஆலோசித்து ரகுநந்தனை யுவராஜாவாக அபிஷேகஞ் செய்ய நிச்சயித்தார்கள். அதற்கு வேண்டிய ஏற்பாடுகள் நடந்து கொண்டிருக்கையில், சக்ரவர்த்தியின் ப்ரியபார்யையான கைகேயீ

தன் பர்த்தாவைப் பார்த்து, "ராமனுக்கு அபிஷேகஞ்செய்தால் நான் அன்னபானங்களைத் தொடமாட்டேன். நிச்சயமாய் உயிரை விடுவேன். நீர் முன்பு ப்ரியத்தால் எனக்குத் கொடுத்த வரங்களைப் பூர்த்திசெய்ய இஷ்டமிருந்தால் ராமனை வனத்திற்கனுப்பு" மென்றாள்.

தசரதர் ஸத்யந்தவறுதவர்; கைகேயீ தனக்கு ப்ரியமில்லாத க்ரூர வார்த்தைகளைச் சொல்லக்கேட்டுத், தான் அவளுக்குக் கொடுத்த வரங்களையும் நினைத்து மதிமயங்கினார். மிகவும் வயஸ்சென்றவர்; ஸத்யத்தையும் தர்மத்தையும் காப்பாற்றுகிறவர்; ஆகையால் கோவென்று கதறிக்கொண்டு மஹாகீர்த்திமானான மூத்தபுத்ரனைப் பார்த்து "ராம! குலாசாரத்தாலும் யோக்யதையாலும் என் ப்ரதிக்ஞையாலும் உனக்கு ந்யாயமாய்க் கிடைக்கவேண்டிய ராஜ்யத்தை உன்னிடத்தில் யாசிக்கிறே"னென்றார். ஸாதாரண ஜனங்களுக்குத் துக்கமும் காந்திக்குறைவும் நேரும் ஸமயங்களில் ராமனுக்கு உத்ஸாஹமும் ஸந்தோஷமும் காந்தியும் விருத்தியாகும். ராஜ்யத்தை ஆள்வதைவிடப் பிதாவின் ப்ரதிக்ஞையை நிறைவேற்றுவது ச்ரேஷ்டமென்று நிச்சயித்துத் "தங்களுத்திரவுப்படி நடக்கிறே" னென்றார். "நம்மைக் கேட்டவுடன் தடையில்லாமல் கொடுத்துவிடவேண்டும். ஜீவனத்திற்கு வேண்டிய ஸாதனங்களையும் மறுபடி கேட்டு வாங்கக்கூடாது. மாதாபிதாக்களுக்கு ப்ரியமில்லாத வார்த்தையைச் சொல்லக்கூடா"தென்பது ராமனுடைய வ்ரதம்; வீண் போகாத பராக்ரமசாலியல்லவா? ஆகையால் உத்தரீயங்களையும் விலையற்ற ஆபரணங்களையும் கழற்றி, ராஜ்யத்தை மனஸால் தத்தஞ் செய்து, என்னைக் கௌஸல்யாதேவியுடன் வஸிக்கும்படி கட்டளையிட்டார்; அவருடைய கீர்த்திக்கு எல்லையுமுண்டோ? ஆனால் அவரை விட்டு ஸ்வர்க்கத்திலும் வஸிக்க எனக்கு மனஸ் வருமா? ஆகையால் அவருக்கு முன்பாகவே சீக்ரமாய் வனவாஸத்திற்கு வேண்டிய ஏற்பாடுகளுடன் ப்ரயாணம் புறப்பட்டேன். மஹாபாக்கியசாலியும் மித்ரர்களுக்கு ஆனந்தத்தைக் கொடுப்பவரும், உத்தமியான ஸுமித்ரையின் புத்ரனுமான லக்ஷ்மணன் ராமனைப் பின்தொடர்ந்து கடைத்தேற வேண்டுமென்று அதிசீக்ரமாய் மான்தோல் மரவுரி முதலியவைகளைத் தரித்துக்கொண்டார்.

அபிஷேகம் தடைப்பட்டதே தனக்குப் பரமலாபமாக நினைத்துத் "தங்களுக்கு ஸகலவித கைங்கர்யங்களையும் எக்காலத்திலும் செய்வே"னென்ற ப்ரதிக்ஞைப்படி, புருஷோத்தமன் லோக

ரக்ஷணத்திற்காக மனுஷ்யாவதாரமெடுத்தபொழுது மற்றவர்களிருக்க, பரதனுக்கும் எனக்கும் யார்க்கும் கிடைக்காத கைங்கர்ய பாக்யத்தைப் பெற்றவர். 'நீ ராமனுடன் வனத்திற்குச் சென்று அவருக்குத் தாஸனாயிருக்க வேண்டுமென்றே நீ பிறந்ததன்றோ' வென்ற ஸுமித்ரையின் புத்ரன்; 'நமக்கு அப்படிப்பட்ட பாக்யம் கிடைக்காவிட்டாலும் நமது மித்ரனான லக்ஷ்மணன் அதைப் பெற்றானல்லவா' வென்று ஸ்நேஹிதர்கள் ஸந்தோஷித்தார்கள்.

நாங்கள் சக்ரவர்த்தியின் உத்திரவுப்படி அங்கிருந்து புறப்பட்டு வனவாஸஞ் செய்ய நிச்சயித்தவர்களாய்ப் பார்க்கப் பயங்கரமான தண்டகாரண்யத்தில் ப்ரவேசித்தோம்; அதுவரையிலும் அதைக் கண்டதேயில்லை. நாங்கள் அங்கே வஸித்துக்கொண்டிருக்கும்பொழுது ராவணன் ராமனுடைய அபாரதேஜஸை அறியாமல், கெட்ட புத்தியால் அவருடைய பார்யையான என்னை அபஹரித்தான். அவன் கெடுவிட்ட காலத்தில் இன்னும் இரண்டு மாஸங்கள் பாக்கியிருக்கின்றன. பிறகு நான் உயிரை விடுவே" னென்றாள்.

---

## ஸர்க்கம் 34.

### ராமனுடைய வரலாற்றை மாருதி சொன்னது

---

ஓய்வில்லாமல் ஸமுத்ரத்தின் அலைகள்போல் துக்கத்தால் பீடிக்கப்படும் ஸீதை இப்படிச் சொல்லக்கேட்டு, ஹநுமான் அவளுக்கு ஆறுதலுண்டாகும்படி பதில் சொன்னார். "ஸ்ரீராகவன் க்ஷேமமாயிருக்கிறார். அதைத் தங்களிடத்தில் தெரிவிக்கும்படி என்னை இங்கே அனுப்பினார். தங்களுடைய வரலாற்றை அறிந்து அவரிடத்தில் சொல்வதற்காக வந்தேன். ப்ரஹ்மாஸ்த்ரத்தையும் வேதங்களையும் நன்றாய் அறிந்தவரும் அவைகளின் தத்வார்த்தத்தைத் தெரிந்தவர்களுக்குள் ச்ரேஷ்டருமான ராமன் தன் க்ஷேமத்தைத் தங்களிடத்தில் சொல்லச் சொன்னார். அவருடைய தம்பி லக்ஷ்மணன் தங்களுக்கு நேர்ந்த கஷ்டத்தை நினைத்து நினைத்து வ்யஸனமடைந்து தங்களுக்கு ஸாஷ்டாங்க நமஸ்காரஞ் செய்தார். அவர் மஹா தேஜஸ்வியென்றும் ராமனுக்கு மிகவும் அருமையானவரென்றும் அவருக்கு ஸகல கைங்கர்யத்தையும் செய்பவரென்றும் தங்களுக்குத் தெரியுமே" யென்றார்.

புருஷ ச்ரேஷ்டர்களான ராமலக்ஷ்மணர்கள் க்ஷேமமாயிருக்கிறார்களென்று கேட்டு, ப்ரியத்தால் அவயவங்கள் மயிர்க்கூச்சலடைய, ஸீதை ஆஞ்ஜநேயனைப் பார்த்து "என்ன ஆச்சர்யம்! ஒருவன் பிழைத்து மாத்ரமிருந்தால் நூறு வர்ஷங்களுக்குப் பிறகாவது ஸந்தோஷத்தை அனுபவிக்காமலிருக்கமாட்டானென்ற லோகவார்த்தை என் விஷயத்தில் வாஸ்தவமாயிற்"றென்றாள். பிறகு தன்னிடத்தில் தூதனாக வந்த ஹனுமாரிடத்தில் ஸீதைக்கு ஆச்சர்யகரமான ப்ரீதியுண்டாயிற்று. அவ்விருவரும் வெகுநம்பிக்கையாய்ப் பேசிக்கொண்டார்கள்.

ஸீதை இப்படிச் சொல்லக் கேட்ட ஹனுமான் சோகத்தால் வாடியிருக்கும் இவளை இன்னும் தேற்றவேண்டுமென்று ஸமீபத்தில் வர ஆரம்பித்தார். உடனே ஸீதைக்கு ஸந்தேஹம் பிறந்து அவர் வரவர ராவணனென்றே எண்ணினாள். "ஐயோ! புத்திமயங்கி இவனிடத்தில் கபடமில்லாமல் என் மனஸிலுள்ள விஷயங்களைச் சொல்லிவிட்டேனே! என்னைப்போல் முட்டாளுண்டோ? என்னை வஞ்சகமாய் அபஹரித்த ராவணனே மாறுவேஷங்கொண்டு இப்படி வந்திருக்கிறா"னென்று அந்த மரத்தின் கிளையை விட்டு, வருத்தம் மேலிட்டுப் பூமியில் உட்கார்ந்தாள். பயத்தாலும் துக்கத்தாலும் அவள் புத்திஸ்வாதீனமற்றிருப்பதை ஆஞ்ஜநேயர் அறிந்து அவளை நமஸ்கரித்தார். ஆனால் ஜானகி பயத்தால் மிரண்டு அவரைத் திரும்பிப் பார்க்கவேயில்லை.

சற்று நேரம் கழித்து அவர் அப்படியே தலையில் கைகூப்பி வணக்கமாய் நிற்பதைக்கண்டு ஸீதை பெருமூச்சுவிட்டு "ஸகல மாயைகளையும் அறிந்த ராவணனே இந்த ரூபத்தை எடுத்து வந்திருந்தால், பலவித துக்கங்களால் வாடியிருக்கும் என்னை இன்னும் உபத்ரவிப்பது உனக்கு க்ஷேமமல்ல. தண்டகாரண்யத்தில் கபட ஸன்யாஸிவேஷந் தரித்து என்னை மோசஞ்செய்த துஷ்டனல்லவா? நினைத்த ரூபத்தை எடுக்கக்கூடிய உனக்கு இது மிகவும் ஸுலபம். ஆனால் ஆஹாரமில்லாமல் இளைத்து மனம் நொந்திருக்கும் என்னை மறுபடியும் கஷ்டப்படுத்துவது உனக்கு நன்மையன்று.

"ஐயோ! நான் இப்படி ஸந்தேஹிப்பதும் ஸரியல்ல. உன்னைப் பார்க்கையில் எனக்கு எல்லையற்ற ப்ரீதி உண்டாகிறது. ஆகையால் நீ ராவணனாயிருக்கமாட்டாய். நீ நிஜமாகவே ராமனால் என்னிடத்தில் அனுப்பப்பட்ட தூதனாயிருந்தால் உனக்கு மங்களங்க

னுண்டாக்கட்டும். ரகுநாதனுடைய சரித்ரங்களைக் கேட்பது எனக்கு மிகவும் ப்ரியம். ஆகையால் உன்னைக் கேட்கிறேன். என் ப்ராண நாதனான ராமமூர்த்தியின் குணங்களைச் சொல். ஜலப்ரவாஹம் ஆற்றங்கரையை அறுப்பதுபோல் என் மனஸை வரவர அபஹரிக்கிறாய்.

இருக்கட்டும். இவ்வளவு காலம் கழித்துப் பயங்கரமான ஸமுத்ரத்தைத் தாண்டி நானிருக்குமிடத்தைக் கண்டு பிடித்துக் காற்றும் நுழையமுடியாத இந்த லங்காபுரியில் ராமனிடத்திலிருந்து தூதன் வருவதற்கு ந்யாயமில்லை. ஆகையால், இது ஸ்வப்னமே. ஆனாலும் மிகவும் ஸுசகமான ஸ்வப்னம். என்னை அபஹரித்த இவ்வளவு காலத்திற்குப் பிறகு ராமனால் அனுப்பப்பட்ட ஒரு தூதனைப் பார்க்கவும் என் நாயகனுடைய ஸமாசாரத்தை அவன் சொல்லக் கேட்கவும் கிடைத்தது. என்ன ஆச்சர்யம்! இப்படியே இந்த ஸ்வப்னத்தில் ராம லக்ஷ்மணர்களையும் பார்க்கக் கிடைத்தால் என் துக்கமெல்லாம் தீர்ந்து ஸந்தோஷிப்பேன். ஸ்வப்னமும் எனக்குச் சத்ருவாய் நிற்கிறதே.

இது ஸ்வப்னமாயுமிருக்க ந்யாயமில்லை. ஸ்வப்னத்தில் குரங்கைக் கண்டால் கெடுதி விளையுமென்று சொல்லுகிறார்கள். எனக்கோ பரமஸுகம் கிடைத்திருக்கிறது. ஒருவேளை சித்தப்ரமையோ வாதபித்தங்களின் விகாரமோ? பைத்யத்தின் கார்யமோ? கானநீர் போல் பொய்யோ? ராமன் க்ஷேமமாயிருக்கிறாரென்று கேட்பதில் எனக்குள்ள ஆசையும் எப்பொழுதும் அவருடைய த்யானமும் சேர்ந்து இப்படி என் மனஸில் மோஹமுண்டாயிற்றோ? அன்னபானமும் நித்ரையுமில்லாமல் தேஹத்திலுள்ள தாதுக்கள் விகாரமடைந்து இப்படித் தோன்றுகிறதோ? நாயகனைவிட்டு பிரிந்தவர்களுக்கு நேரும் அவஸ்தைகளுக்குள் ஒன்றான உன்மத்தம் (பைத்யம்) என்ற அவஸ்தையோ? ஒரு பதார்த்தத்தை வேறொன்றாகத் தோற்றுவிக்கும் கானநீர் போன்ற விபரீத ஞானமோ? இது உன்மத்தமாயிருக்க ந்யாயமில்லை. ப்ரமையென்பது நிச்சயமானால் அதைப் போக்கக்கூடிய வஸ்துவிருக்கவேண்டும். மேலும், மோஹங் கொண்டவர்களும் பைத்யம் பிடித்தவர்களும் தாங்கள் இன்னாரென்றும் இன்னது செய்கிறார்களென்றும் பிறர் இன்னாரென்றும் இன்னது செய்கிறார்களென்றும் அறியார்கள். இருக்கும் வஸ்துக்களை இல்லையென்றும், இல்லாத வஸ்துக்களை இருக்கின்றனவென்றும் நினைத்து நடப்பார்கள். எனக்கு அப்படியில்லையே. என் ஸ்வரூபமும் எனக்கு ஸமீபத்திலிருக்கும் இந்த வானரனுடைய ஸ்வரூபமும் நன்றாய் விளங்கு

கின்றன. முன் சொன்ன நான்கு அவஸ்தைகளும் நீங்கும்; இது நீங்காமல் ஸ்திரமாயிருக்கிறது. மேலும் அவைகளுக்கு அவிவேகமே ஆதாரம்; எனக்கோ விவேகம் பூர்ணமாயிருக்கிற"தென்று நிச்சயித்து, மேற்சொன்னவைகளின் பலாபலங்களைப் பரிசோதித்து, "இவன் நினைத்த ரூபங்களை எடுக்கக்கூடிய ராவணனே"யென்று தீர்மானித்தாள். ஆகையால் ஹனுமானைத் திரும்பிப் பார்த்துப் பதில் சொல்லவில்லை.

அவர் ஸீதையின் எண்ணத்தை அறிந்து, கேட்பதற்கு இனிமையான வார்த்தைகளால் அவளுடைய மனதை ஸந்தோஷப்படுத்தினார்: "லோகத்தில் ஒரு மஹானுபாவர் இருக்கிறார். அவர் தேஜஸால் ஸூர்யனைப்போலும், ஸகல ப்ராணிகளுக்கும் ஆனந்தத்தைக் கொடுப்பதில் சந்த்ரனைப்போலும் ஸகல ராஜர்களுக்கும் ப்ரபுவாயிருப்பதில் குபேரனைப்போலும், கீர்த்தியிலும் பராக்மத்திலும் மஹாவிஷ்ணுவைப்போலும், புத்தியில் பிருஹஸ்பதியைப்போலும் ஸௌந்தர்யத்தில் மன்மதனைப்போலுமிருப்பவர். ஸத்யமாயும் மதுரமாயும் பேசுகிறவர். ரமணீயமாயும் காந்திபொருந்தியுமிருக்கும் பார்வையுடையவர். இடமறிந்து கோபித்துச் சத்ருக்களை நாசஞ்செய்பவர். அவருக்கு மேலானவரில்லை; மஹாரதர். இந்த ப்ரபஞ்ச முழுவதும் அவருடைய பராக்ரமத்தின் நிழலில் கவலையற்று வஸிக்கிறது. பொன்மானைக்கொண்டு அவரை ஆஸ்ரமத்திலிருந்து அப்புறப்படுத்தி அவரில்லாத ஸமயத்தில் ராவணன் தங்களை அபஹரித்தான். அதற்காக அவனுக்குக் கிடைக்கும் பயனை அதிசீக்ரத்தில் பார்ப்பீர்கள். கொஞ்ச காலத்திற்குள் அவர் கோபங்கொண்டு ஜ்வலிக்கும் அக்னிக்கொழுந்துகளைப்போன்ற பாணங்களால் ராவணனை யுத்தத்தில் வதஞ்செய்வார். நான் அவரால் தங்களிடத்திற்கு அனுப்பப்பட்ட தூதனுய் வந்திருக்கிறேன். தங்களைப்பிரிந்த வ்யஸனத்தால் பீடிக்கப்பட்டுத் தங்களுடைய க்ஷேமஸமாசாரத்தைத் தெரிந்து வரும்படி என்னை அனுப்பினார். மஹாதேஜஸ்வியும் பராக்ரமசாலியும் ஸௌமித்ரையின் பாக்யரூபமுமான லக்ஷ்மணன் தங்களுக்கு நமஸ்கரித்து க்ஷேமத்தைத் தெரிந்து வரும்படி சொன்னார். ராமனுக்கு முக்கிய ஸ்நேஹிதரும் வானராதிபதியுமான ஸுக்ரீவ மஹாராஜா தங்களுடைய க்ஷேமத்தை விசாரித்து வரும்படி சொன்னார். ராமனும் லக்ஷ்மணனும் ஸுக்ரீவனும் எப்பொழுதும் தங்களை ஸ்மரித்துக்கொண்டிருக்கிறார்கள். ராக்ஷஸிகளின் வசத்திலகப்பட்டும் தாங்கள் பிழைத்திருப்பது தைவானுக்ரஹமே. அபாரபலமுள்ள ராமனும் லக்ஷ்மணனும் கணக்கில்லாத வானரஸேனைகளுக்கு நடுவில் ஒப்பற்ற

தேஜஸுடன் விளங்குவதை அதிசீக்ரத்தில் பார்ப்பீர்கள்; நான் சுக்ரீவ மஹாராஜாவின் மந்திரி; என் பெயர் ஹனுமான். இந்த ஸமுத்ரத்தைத்தாண்டி லங்கையில் ப்ரவேசித்துத் தங்களைத் தேடி வந்தேன். ராமனுடைய கிருபையால் எனக்குள்ள பராக்ரமத்தை ஆதாரமாய்க்கொண்டு துஷ்டனான ராவணனுடைய தலையில் அடிவைத்து (அவனை அலக்ஷ்யஞ்செய்து) தங்களைப் பார்க்கவந்தேன். நான் ராவணனல்ல. இந்தப் பிசகான அபிப்ராயத்தை விட்டுவிடுங்கள்; என் வார்த்தையில் நம்பிக்கை வையுங்க''ளென்றார்.

---

## ஸர்க்கம் 35

(தொடர்ச்சி.)

ராகவனுடைய சரித்ரத்தை வானரச்ரேஷ்டன் வர்ணிக்கக் கேட்டு, ஸீதை மதுரமான வாக்யங்களால் ஆஞ்சநேயனைப் பார்த்து "ராகவனுக்கும் உனக்கும் ஸம்பந்தம் ஏற்பட்டதெப்படி? லக்ஷ்மணனை உனக்கு எப்படித் தெரியும்? மனிதர்களுக்கும் வானரர்களுக்கும் சேர்க்கை எப்படி நேர்ந்தது? ராம லக்ஷ்மணர்களுடைய அடையாளங்களை மறுபடியும் நன்றாய் வர்ணி, அவர்களுடைய அவயவப்பொருத்தங்களையும் ரூபங்களையும் தொடைகளையும் புஜங்களையும் விஸ்தாரமாய் வர்ணித்தால் உன்னிடத்தில் எனக்கு நம்பிக்கை பிறந்து துக்கந் தீரு''மென்றாள்.

அதைக் கேட்டு ஹனுமான் ராமனுடைய லக்ஷணங்களைத் தான் அறிந்தவரையில் வர்ணிக்க ஆரம்பித்தார். "அம்மா! நான் ராமதூதனென்றறிந்து ராவணனென்ற ஸந்தேஹத்தை விட்டு என்னை ராம லக்ஷ்மணர்களுடைய அடையாளங்களைக் கேட்பதால் நான் பார்த்தறிந்தவரையில் தெரிவிக்கிறேன். கவனத்துடன் கேட்கவேண்டும். ராமனுடைய ஸகல அவயவங்களும் வெகு ஸுந்தரமாயிருந்தாலும் செந்தாமரையிதழ்கள் போன்ற அவருடைய நேத்ரங்களின் அழகை என்னவென்று சொல்வேன்! காந்தியென்ற ப்ரவாஹத்தில் அவை ஆழ்ந்த சுழல்களைப்போல் ஸமஸ்த ப்ராணிகளுடைய மனதையும் அபஹரிக்கின்றன. மரத்திற்கு மரம் தாவிக்கொண்டு நன்மை தீமை தெரியாத கேவலம் குரங்கான என்னையும் மயக்குகின்றன. அவருடைய தேஹத்திலும் புத்தியிலும் அனந்த கல்யாண குணங்கள் குடிகொண்டிருக்கி

ன்றன. அவை அவருக்கு ஸ்வபாவமானவை. என்னைப் பரீக்ஷிக்கும் தங்களுக்கல்லவா அவைகளின் விஷயம் தெரியும்? யோகத்தாலும் தபஸாலும் ஸகல காமங்களையும் அடக்கின மஹர்ஷிகளும் அவரைக் கண்டு ப்ரமிக்கிறார்கள்.

தேஜஸில் ஸூர்யனுக்கும், பொறுமையில் பூமிதேவிக்கும், புத்தியில் பிருஹஸ்பதிக்கும், கீர்த்தியில் தேவேந்த்ரனுக்கும் ஸமமானவர்; ஸகல ப்ராணிகளையும் ரக்ஷிப்பவர். தன்னை அண்டினவர்களுக்கு யாதொரு துக்கமும் நேராமல் காப்பாற்றுகிறவர். தன்னுடைய ஆசாரத்தையும் தர்மத்தையும் குறைவில்லாமல் நடத்துகிறவர். சத்ருக்களை வேரறுப்பவர். நான்கு வர்ணத்தாரையும் தன்னைப்போல் காப்பாற்றுகிறவர். லோகத்தார்கள் செய்யவேண்டிய ஸகல தர்மங்களையும் ஏற்படுத்தி அவைகளைக் குறைவில்லாமல் நடத்திவைக்கிறவர். மஹா தேஜஸ்வி. எல்லோராலும் பூஜிக்கப்படுகிறவர். ப்ரஹ்மசர்ய வ்ரதத்தை அனுஷ்டிக்கிறவர். ஸாதுக்களுக்கு உபகாரம் செய்யவேண்டிய காலமறிந்தவர். கர்மங்களின் ஹேதுவையும் அனுஷ்டானத்தையும் நிஜமாய் அறிந்தவர். ஆன்வீக்ஷிகீ த்ரயீ வார்த்தா தண்ட நீதி யென்ற நான்கு ராஜவித்யைகளையும் பூர்ணமாய் அறிந்தவர். ப்ராஹ்மணர்களைப் பக்தியுடன் உபாஸிப்பவர். சாஸ்த்ர அர்தங்களை ஸந்தேஹ விபரீதமில்லாமல் பெரியோர்களிடத்தில் கேட்பவர், அதற்குத் தகுந்த ஆசாரமுடையவர். வினயத்தையே பூஷணமாய்க் கொண்டவர். தன் சாகையான யஜுர் வேதத்தில் ஸமர்த்தர். வேதரஹஸ்யங்களை அறிந்தவர்களால் பூஜிக்கப்பட்டவர். தனுர் வேதத்திலும் இதர வேதங்களிலும் வேதாந்தங்களிலும் நிபுணர்.

விசாலமான தோள்களையும் பருத்து நீண்ட புஜங்களையும் சங்கம் போன்ற கழுத்தையும் மங்களகாமான முகத்தையும் மாம்ஸத்தால் மறைந்த கழுத்தெலும்புகளையும் செந்தாமரையிதழ்களைப்போல் மிகவும் சிவந்த நேத்ரங்களையும் துந்துபியின் த்வனியைப் போன்ற குரலையும் ச்யாமளவர்ணத்தையும் ஏற்றக்குறைவில்லாத சரீரத்தையும் பொருத்தமாய் அமைக்கப்பட்ட அங்கங்களையுமுடையவர்; ப்ரதாபசாலி; இப்படிப்பட்ட திவ்யமங்கள விக்ரஹத்தை உடையவரென்பது லோகப்ரஸித்தம், மார்பு மணிக்கட்டு மூஷ்டி இவை மூன்றும் கெட்டியாயும்; புருவம் புஜம் விருஷணம் இவை மூன்றும் நீளமாயும்; மயிரின் நுனியும் விருஷணங்களும முழங்கால்களும் ஏற்றக் குறைவில்லாமல் ஸமமாயும்; நாபி வயிறு மார்பு இம்மூன்றும் உயர்ந்தும்;

உள்ளங்கை கடைக்கண் உள்ளங்கால் இம்மூன்றும் சிவந்தும்; பாத ரேகை தலைமயிர்கள் ஆண்குறி இம்மூன்றும் மழ மழப்பாயும்; த்வனி தேஹவலிமை நாபி இம்மூன்றும் கம்பீரமாயும்; கழுத்து வயிறு இவ்விரண்டும் மூன்று ரேகைகளுடன் கூடியதாயும்; ஸ்தனம் ஸ்தனத்தின் காம்பு பாதரேகை இம்மூன்றும் உள்ளாழ்ந்தும், நரம்பு வெளியில் தெரியாத பாதங்களையும் ஒரே மயிரையுடைய மயிர்க்கால்களையும், சிறிய ஆண்குறியையும், மாம்ஸம் தோற்றாத அடிவயிற்றையுமுடையவராயும், ஏற்றக் குறைவின்றி ஸமமாய்க் குடைபோல் வட்டமாய் விசாலமுள்ள சிரஸையுடையவராயும்; கட்டை விரலின் அடியில் நான்கு ரேகைகளை உடையவராயும்; 96 அங்குலங்களடங்கிய நான்கு முழம் தேஹப்ரமாணமுடையவராயும்; புஜங்கள் முழங்கால் துடை கன்னம் இந்த நான்கும் ஸமமாயும்; புருவங்கள் மூக்கின் த்வாரங்கள் காதுகள் உதடுகள் முலைக்காம்புகள் முழங்கைகள் மணிக்கட்டுகள் முழங்கால்கள் விருஷணங்கள் இடுப்புகள் கைகள் கால்கள் பின்பக்கங்கள் இந்தப் பதினான்கும் ஏற்றக் குறைவில்லாமலும்; இரண்டு பல்வரிசைகளும் உரத்து வழவழப்பாய்க் கோரைப்பற்கள் போன்ற நான்கு தந்தங்களையுடையவராயும்; யானை ஸிம்ஹம் புலி காளை இவைகளைப் போல் நடையுள்ளவராயும்; வேங்கைப் புஷ்பங்கள் போலவும் கோவைக்கனிபோலவும் சிவந்து அழுத்தமான உதட்டையும், மாம்ஸம் நிறைந்த கன்னங்களையும், உயர்ந்த மூக்கையுமுடையவராயும்; தலைமயிர் கண்கள் பற்கள் தோல் உள்ளங்கால் மிருதுவாயும்; சரீரம் பின்புறம் கைகால் விரல் கண் காது ஆண்குறி நீண்டும்; முகம் வாய் கண்கள் நாக்கு உதடு, தவடை ஸ்தனம் நகம் கைகால் தாமரைப் புஷ்பம்போல் சிவந்தும்; மார்பு தலை முகம் கழுத்து புஜம் தோள் தொப்புள் இடுப்பும் பின்புறம் த்வனி கம்பீரமாயும் விசாலமாயும்; தேஜஸாலும் கீர்த்தியாலும் ஸம்பத்தாலும் ப்ரஸித்தியடைந்தவராயும்; கண்களிலும் பற்களிலும் வெளுப்புடையவராயும்; கக்ஷடம் வயிறு மார்பு மூக்கு தோள் முகம் உயர்ந்தும்; தலைமயிர் மீசை நகம் மயிர் தோல் கட்டைவிரல் ஆண்குறி புத்தி ஸூக்ஷ்மமாயும்; முன்பகல் நடுப்பகல் பின்பகல் இம்மூன்று காலங்களிலும் அவைகளுக்கு உசிதமான தர்மங்களை அனுஷ்டிப்பவராயும்; ஸத்யத்திலும் தர்மத்திலும் தனத்தை ஸம்பாதிப்பதிலும்; பிறருக்குக் கொடுப்பதிலும் ப்ரியமுள்ளவராயும்; தேச காலங்களையும் அவைகளின் உபயோகங்களையும் நன்றாய் அறிந்தவராயும்; ஸமஸ்தப்ராணிகளுக்கும் ப்ரியமான வார்த்தையையே சொல்லுகிறவராயும்; ஸகல ஐச்வர்யலக்ஷ்மீ பொருந்தினவராயும்; இன்னும் உத்தம புருஷர்களுக்குரிய ஸகல லக்ஷணங்களுக்கும் வாஸஸ்தலமாயிருப்பவர்.

ஸுமித்ரைக்குப் பிறந்து, கௌசல்யையால் வளர்க்கப்பட்ட லக்ஷ்மணன் பிறரால் ஜயிக்க முடியாதவர்; அன்பிலும் ஸௌந்தர்யத்திலும் குணங்களிலும் ராமனைப் போன்றவர். அவ்விருவரும் எல்லாவிடங்களிலும் தங்களைத் தேடிக்கொண்டுவருகையில் எங்களைக் கண்டார்கள். வானர ராஜாவான ஸுக்ரீவன் வாலியென்ற தமயனால் ராஜ்யத்திலிருந்து துரத்தப் பட்டுப் பயந்து, மரங்களால் சூழப்பட்ட ரிச்யமூக பர்வதத்தின் பின் பாகத்தில் ஒளிந்துகொண்டிருந்தார். ப்ரியமான பார்வையையுடையவரும், சொன்ன சொல்லைத் தவறாதவருமான சுக்ரீவனை நாங்கள் அண்டியிருக்கிறோம். ராம லக்ஷ்மணர்கள் அவரைத் தேடிக்கொண்டு தபஸ்வி வேஷத்துடன் ஆயுதபாணிகளாய் நாங்களிருக்கும் இடத்திற்கு வந்தார்கள். அவர்களைக் கண்டு ஸுக்ரீவன் பயத்தால் மெய்மறந்து அங்கிருந்து தாவி ஓடிப்போனார். பிறகு வேறிடத்தில் மறைந்திருந்து அவர்களுடைய விருத்தாந்தத்தை அறிந்து வரும்படி என்னை அவர்களிடத்தில் அனுப்பினார். ரூபத்தாலும் லக்ஷணங்களாலும் அலங்கரிக்கப்பட்ட அந்தப் புருஷச்ரேஷ்டர்களை நான் மஹாராஜாவின் ஆக்ஞையால் கைகூப்பி நமஸ்கரித்து அவர்களுடைய விருத்தாந்தத்தைக் கேட்டறிந்து எங்களுடைய ஸ்திதியையும் உத்தேசத்தையும் வணக்கமாகத் தெரிவித்தேன். பிறகு என்னிடத்திலும் ஸுக்ரீவனிடத்திலும் ப்ரீதியுண்டாகி அவர்கள் என் முதுகில் ஏறிக்கொண்டு வானர ராஜனிருக்கும் இடத்திற்கு வந்தார்கள். அந்த மஹாத்மாக்களின் விருத்தாந்தங்களை யதார்த்தமாய் ஸுக்ரீவனுக்குச்சொன்னேன். பிறகு அவர்கள் கலந்து பேசிக்கொண்டு பூர்வ விருத்தாந்தங்களைத் தெரிவித்து, விச்வாஸமும் ப்ரீதியும் விருத்தியாய், ஒருவர்க்கொருவர் தேற்றிக்கொண்டார்கள். பலவானான வாலியால் ஒரு ஸ்த்ரீவிஷயமாய் ராஜ்யத்திலிருந்து துரத்தப்பட்ட ஸுக்ரீவனை ராமன் ஸமாதானஞ் செய்தார்.

பிறகு ராவணன் தங்களை அபஹரித்ததையும் குற்றமற்ற ரகுநாதன் தங்களைப்பிரிந்து கஷ்டப்படுவதையும், லக்ஷ்மணன் ஸுக்ரீவனுக்குத்தெரிவித்தார். அதைக்கேட்டு ராஹுவால் பிடிக்கப்பட்ட ஸூர்யனைப்போல் ஸுக்ரீவன் காந்தியற்றான். தங்களை ராவணன் எடுத்துக்கொண்டு போகையில் தாங்கள் கழற்றி எறிந்த ஆபரணங்களையும் வஸ்த்ரங்களையும் வானரச்ரேஷ்டர்கள் வெகு ஸந்தோஷத்துடன் கொண்டுவந்து ராமனுக்குக் காட்டினார்கள். ஆனால், தங்களை மறைத்து வைத்திருந்த இடத்தை மாத்ரம் அறிய முடியவில்லை. முன்பு அவைகளை நானே கண்டெடுத்து, ஸுக்ரீவனிடத்தில் கொடுத்தேன். அவர் அவைகளை ஜாக்ரதையாய்க் காப்பாற்றிவைத்திரு

ந்து, ராமன் துக்கத்தால் மெய்ம்மறந்ததைக் கண்டு அவரிடத்தில் கொண்டுவந்து வைத்தார். தேவதைகளைப்போல் தேஜஸுள்ள ரகுநாதன் அவைகள் தங்களுடைய அங்கங்களில் விளங்கினதை நினைத்துப் பலவிதமாய் ப்ரலாபித்தார். அவைகளைப் பார்த்துப் பார்த்து அழுது கொண்டு தேஹம் வாடியிருக்கும் அவருடைய துக்காக்னியை அவை கொழுந்துவிட்டெரியும்படி செய்தன. மஹாதைர்யசாலியான ரகு வீரன் துக்கம் மேலிட்டு வெகுகாலம் மூர்ச்சையடைந்தார். பிறகு நான் அவரைப் பலவிதமாய் ஸமாதானஞ்செய்து எழுப்பினேன். ராம லக்ஷ்மணர்கள் அவைகளை ஒவ்வொன்றாய் பார்த்து வர்ணித்துத் துக்கித்து, ஸுக்ரீவனிடத்தில் கொடுத்தார்கள். மேருமலையின் சிகரங்களில் ஒன்றான மால்யவானென்ற கொடிமுடியில் ஸம்வர்த்தக மென்ற காலாக்னி எப்பொழுதும் கொழுந்துவிட்டெரிவதுபோல் ராமன் தங்களைப் பார்க்காமல் விரஹாக்னியால் கொளுத்தப்படுகிறார். அக்னிஹோத்ரக்ருஹத்தில் கார்ஹபத்யம் தக்ஷிணம் ஆஹவனீய மென்ற மூன்று அக்னிகளும் எரிவதுபோல் தங்களை நினைத்துக் கவலையும் துக்கமும் நித்ரையில்லாமையும் ராகவனை வாட்டுகின்றன. பெரிய பூகம்பத்தால் மஹாபர்வதங்கள் நடுங்குவதுபோல் தங்களைப்பார்க்காத வ்யஸனத்தால் ராமன் நடுங்குகிறார். அழகான காடுகளிலும் மலையருவிகளிலும் ஆறுகளிலும் திரிந்தும் தங்களைக்காணாமல் துக்கமே விருத்தியாகின்றது. அவர் ராவணனைப் புத்ரமித்ரபந்துக்களுடன் யுத்தத்தில் கொன்று சீக்ரத்தில் தங்களை அடைவார்.

பலவானான வாலியைக் கொல்வதென்றும் தங்களைத் தேடுவதென்றும் ராமனும் ஸுக்ரீவனும் ஒருவர்க்கொருவர் ப்ரதிக்ஞை செய்துகொண்டார்கள். பிறகு அவர்கள் கிஷ்கிந்தைக்குச் சென்றார்கள். அங்கே ராமன் வாலியை யுத்தஞ்செய்கையில் கொன்று, வானர ராஜ்யத்தில் ஸுக்ரீவனை அபிஷேகஞ் செய்தார். விவேகமற்ற வானரர்களுக்கும் இக்ஷ்வாகு வம்சத்தில் பிறந்து வஸிஷ்டரால் ஞானோபதேசம் பெற்ற ராமலக்ஷ்மணர்களுக்கும் ஸம்பந்தம் நேர்ந்த விதத்தைத் தாங்கள் கேட்டீர்களல்லவா? அதை விஸ்தாரமாய்ச் சொன்னேன். விதேஹ வம்சத்தில் பிறந்து ரகுகுலத்தில் புகுந்த லோகமாதாவான தங்களுடன் கிளைக்குக்கிளை தாவும் குரங்கான நான் பேசும்படி நேர்ந்ததுபோலும், ரகுநாதனும் ஸுக்ரீவனும் சேர்ந்ததுபோலும், தன்னுடன் பிறந்து தனக்கு ஸகல கைங்கர்யங்களையும் செய்வதாய் ப்ரதிக்ஞைபண்ணி வனத்திற்கு வந்த லக்ஷ்மணனிருக்க, ஒன்றுந்தெரியாத நான் ரகுவீரனுடைய அந்தப்புரகார்யத்தில் நியமிக்கப்பட்டதுபோலுமென்று அறிந்துகொள்ளலாம்.

ஸுக்ரீவன் வானர ராஜ்யத்தை அடைந்து ஸேனைத் தலைவர்களை வருவித்து ஸகல திக்குகளிலும் தங்களைத் தேடும்படி அனுப்ப, பர்வதங்களைப்போன்ற வானர வீரர்களும் ஸுக்ரீவாக்ஞையால் பூமியெங்கும் தேடப்புறப்பட்டார்கள்; இன்னும் தேடிக்கொண்டிருக்கிறார்கள். அவர்களில் நாங்கள் ஒரு பாகம். மஹாபலசாலியும் காந்தியுடையவனும் வாலிபுத்ரனுமான அங்கதன் வானர ஸைன்யங்களில் மூன்றில் ஒரு பாகத்தை அழைத்துக்கொண்டு புறப்பட்டான். விந்தியமலைச்சாரல்களில் வழிதெரியாமல் கஷ்டப்பட்டு அனேகதினங்கள் தபித்தோம். பிறகு மஹாராஜா எங்களுக்குக் குறிப்பிட்ட காலம் தாண்டிப்போனதாலும் அவர் கடுமையாய் தண்டிப்பாரென்ற பயத்தாலும் காடுகளிலும் மலைகளிலும் தேடியும் தங்களிருக்குமிடம் தெரியாமல் வந்த கார்யம் முடியாததாலும் ப்ராணனைவிட நிச்சயித்தோம். ஸகல வானர ச்ரேஷ்டர்களும் உபவாஸஞ்செய்து ப்ராணனைவிடத் தயாராயிருப்பதைக் கண்டு அங்கதன் துக்கம் மேலிட்டுத் தாங்கள் காணாமல் போனதையும் வாலி இறந்ததையும், வானரர்கள் ப்ராயோபவேசஞ் செய்ததையும், ஜடாயுஸ் மரணமடைந்ததையும் சொல்லி ப்ரலாபித்தான். இப்படி நாங்கள் ஆசையற்று ஸுக்ரீவனுடைய ஆக்ஞைக்குப் பயந்து உயிரைவிட நிச்சயித்திருக்கையில், வெகு பராக்ரமசாலியும், மிகவும் வயஸ்சென்றவரும், கழுகுகளுக்கு அரசனும், ஜடாயுஸுடன் பிறந்தவருமான ஸம்பாதியென்பவர் அங்கே எங்களுடைய கார்யத்தை முடிப்பதற்காகவே வந்தவர்போல் வந்து ஜடாயுவின் மரணத்தைக் கேள்விப்பட்டு கோபங்கொண்டு 'வானரர்களே! என் தம்பி எங்கே மரணமடைந்தான்? எவனால் கொல்லப்பட்டான்? இதை விஸ்தாரமாகச் சொல்லுங்க'ளென்றார். பிறகு அங்கதன், ஜனஸ்தானத்திலிருந்து தங்களை ராவணன் எடுத்துப்போனபோது ஜடாயுஸ் அவனுடன் கோரயுத்தஞ்செய்து மரணமடைந்ததைத் தெரிவித்தான். அதைக் கேட்டு அருணனுடைய புத்ரனான ஸம்பாதி மிகுந்த வ்யசனமடைந்து தாங்கள் ராவணனுடைய அரண்மனையிலிருப்பதாகச் சொன்னார். அதைக்கேட்டு நாங்கள் அளவற்ற ஆனந்தமடைந்து அங்கதனுடன் உடனே அங்கிருந்து புறப்பட்டு ஸமுத்ரக்கரைக்கு வந்தோம். உத்ஸாஹத்தாலும் ஸந்தோஷத்தாலும் தங்களைப் பார்க்க ஆசையாலும் மெய்மறந்த நாங்கள் அந்த மஹாஸமுத்ரத்தைப்பார்த்து இதைத் தாண்டுவதெப்படியென்று பயந்து கவலை

அப்பொழுது நான் அவர்களைப் பார்த்து மனமிரங்கி அவர்களுடைய பயத்தைப் போக்கடித்து நூறு யோஜனை விஸ்தீர்ணமுள்ள ஸமுத்ரத்தைத் தாண்டினேன். ராத்ரியில் இந்த லங்கையில் ப்ரவேசித்துக் கணக்கில்லாத ராக்ஷஸர்கள் வெகு ஜாக்ரதையாய்க் காத்துக் கொண்டிருந்தும் ஒரு இடமும் விடாமல் தேடினேன். அந்தப் புரத்தில் தூங்கும் ராவணனைக் கண்டேன். துக்கத்தால் தபிக்கும் தங்களையும் தர்சிக்கப் பாக்யம் பெற்றேன்.

தாங்கள் கேட்டதற்கு நடந்தது நடந்தபடி விஸ்தாரமாய்ப் பதில் சொன்னேன். இனிமேலாவது நான் ராவணனல்லவென்று நம்பிக்கை பிறந்ததா? நான் ராமதூதன். என்னிடத்தில் ஸந்தேஹமில்லாமல் பேசலாம். நான் வாயுபுத்ரன், ஸுக்ரீவனுக்கு மந்த்ரீ. ராமனால் அனுப்பப்பட்டுத் தங்களைப்பற்றி இங்கே வந்தேன். ஆயுதமெடுத்தவர்களுக்குள் ச்ரேஷ்டரான ரகுவீரனும், அவரைப் பிதாவைப்போல் பாவித்து அவருடைய கைங்கர்யத்திலே ஈடுபட்டிருக்கும் ஸகல உத்தம லக்ஷணங்களும் பொருந்தின லக்ஷ்மணனும் க்ஷேமமாயிருக்கிறார்கள். மஹாவீரரான தங்களுடைய பர்த்தாவின் க்ஷேமத்திலேயே நோக்கமுள்ள நான் ஸுக்ரீவனுடைய உத்தரவால் ஒண்டியாய் இங்கே வந்தேன். தாங்களிருக்குமிடத்தைக் கண்டுபிடிக்க ஆவல்கொண்டு நினைத்த ரூபத்தை எடுக்கக்கூடியவனாய்த் தெற்கே தேடிக்கொண்டு இங்கே வந்தேன். தங்களைத் தைவானுக்ரஹத்தால் நான் கண்ட ஸமாசாரத்தைச் சொல்லித் தங்களைக் காணாமல் தபித்துக்கொண்டிருக்கும் வானர ஸைன்யங்களை ஸந்தோஷப்படுத்துவேன். நான் ஸமுத்ரத்தைத் தாண்டினது வீணாகவில்லை. தங்களைக் கண்டேனென்ற கீர்த்தியும் எனக்குக் கிடைத்தது. ராகவனென்ற வீரச்ரேஷ்டர் சீக்ரத்தில் ராவணனைப் புத்ர மித்ரபந்துக்களுடன் யுத்தத்தில் நாசஞ்செய்து தங்களை அடைவார்.

வானரனை நான் வாயுபகவானுக்கு எப்படிப் புத்ரனாகக்கூடுமென்று தாங்கள் எண்ணலாம். கேஸரியென்ற வானரச்ரேஷ்டன் மால்யவானென்ற பர்வதத்தில் வஸித்துக்கொண்டிருந்தார். ஒரு ஸமயத்தில் ஸமுத்ர தீரத்தில் தபஸ் செய்துகொண்டிருந்த ரிஷிகள் சம்பஸாதனனென்ற அஸுரன் தங்களை மிகவும் ஹிம்ஸிக்கிறானென்றும் அவனைக் கொல்லவேண்டுமென்றும் கேஸரியை ப்ரார்த்தித்தார். அவர் கோகர்ண பர்வதத்திற்குச் சென்று அந்தத் துஷ்டனை ஸம்ஹரித்தார். அப்பொழுது கேஸரியின் பார்யையிடத்தில் வாயுபகவானுக்குப் பிறந்தேன். அந்தக்காலத்தில் நடந்த விருத்

தாந்தத்தால் எனக்கு ஹனுமானென்ற பெயர் கிடைத்தது. (ஸூர்யனைப் பழமென்று தாவிப் போகையில் இந்த்ரன் வஜ்ராயுதத்தால் தவடையில் (ஹனு—தவடை) அடித்ததால் அப்பெயர் கிடைத்தது.) தங்களுக்கு என்னிடத்தில் நம்பிக்கையுண்டாகும்பொருட்டு ராகவனுடைய குணங்களை எனக்குத் தெரிந்தவரையில் வர்ணித்தேன். அதிசீக்ரத்தில் ராகவன் தங்களை இவ்விடத்திலிருந்து அழைத்துப் போவார்''ரென்றார்.

அதுவரையில் துக்கத்தால் இளைத்திருந்த ஸீதை மேற்சொன்ன காரணங்களாலும் அடையாளங்களாலும் மாருதியிடத்தில் நம்பிக்கைவைத்து அவள் ராமதூதனென்றே நிச்சயித்தாள். அளவற்ற ஸந்தோஷ மடைந்து ஆனந்த கண்ணீர் உதிர்த்தாள். அழகான நேத்ரங்களால் விளங்கும் அவளுடைய முகம் ராஹுவால் விடப்பட்ட சந்த்ரனைப் போல் ப்ரகாசித்தது. முடிவில் அவன் ஹனுமானென்ற வானரனென்றும் வேறல்லவென்றும் ஸ்பஷ்டமாய்த் தெரிந்து கொண்டாள். பிறகு ஆஞ்ஜனேயர் ஸந்தோஷத்தால் முகமலர்ந்த ஸீதையைப்பார்த்து "அம்மா! எனக்குத் தெரிந்தவரையில் ஸகல விருத்தாந்தங்களையும் சொன்னேன். தாங்கள் வருத்தப்படவேண்டியதில்லை. தங்களுடைய ஆக்ஞையை நிறைவேற்றத் தயாராயிருக்கிறேன். நான் தங்களுடைய க்ஷேம ஸமாசாரத்தை அதிசீக்ரத்தில் ராகவனுக்குத் தெரிவிக்கவேண்டியதாகையால் திரும்பிப் போகிறேன். ஒரு அல்பக் குரங்கு நமக்கு என்ன செய்யப்போகிறதென்று நினைக்கக்கூடாது. வானரச்ரேஷ்டனை கேஸரி, சம்பஸாதனனென்ற ராக்ஷஸனை வதஞ்செய்யப் போயிருக்கையில் அவருடைய மனைவிக்குப் பிறந்தேன். பலத்திலும் பராக்ரமத்திலும் வேகத்திலும் என் பிதாவான வாயுபகவானுக்கு ஸமான"னென்றார்.



## ஸர்க்கம் 36.

## ஹனுமார் கணையாழியைக் கொடுத்தது.



மஹாதேஜஸ்வியான மாருதி ஸீதைக்கு நம்பிக்கையுண்டாகும்படி மிகவும் வணக்கமாய் "அம்மா; அளவற்ற பாக்கியசாலியே! நான் மஹாபுத்திமானை ராமமூர்த்தியால் தங்களிடத்தில் அனுப்பப்பட்ட தூதன். அவருடைய திருநாமத்தால் அலங்கரிக்கப்பட்ட

இந்தக் கணையாழியைப் பாருங்கள். தங்களுக்கு நம்பிக்கையுண்டாகும்பொருட்டு இதை ராமன் என்னிடத்தில் ஒப்புவித்துத் தங்களுக்குக் கொடுக்கச் சொன்னார். கவலையை விடுங்கள். தங்களுக்கு ஸகல மங்களங்களும் உண்டாகட்டும்; அதிசீக்ரத்தில் தங்களுடைய துக்கங்களெல்லாம் இருந்தவிடம் தெரியாமல் போகு''மென்று அந்த மோதிரத்தைக் கொடுத்தார்.

ஸீதை ராமனுடைய கையில் விளங்கும் அந்த ஆபரணத்தை வாங்கிப் பார்த்துப் பர்த்தாவை மறுபடியும் கண்டவளைப்போல் அளவற்ற ஸந்தோஷமடைந்தாள். அதைப் பார்த்து ஆசை தீராமல் அதிலிருந்து கண்களை எடுக்க முடியவில்லை. முதலில் ராவணன் மாறு வேஷம் பூண்டு வந்தானோ வென்று பயந்தவள்; பிறகு அனேககாரணங்களால் அவன் தன் பர்த்தாவிடத்திலிருந்து வந்த ப்ரியதூதனென்று நம்பிக்கை பிறந்து ஆஞ்ஜநேயரைப் பார்த்து ஸந்தோஷித்தாள்; பிறகு ராமனுடைய மோதிரத்தைக் கண்டு ராமனையே கண்டதுபோல் பரவசமானாள். தன்னை ரகுநாதன் பாணிக்ரஹணஞ்செய்த காலத்தில் அவருடைய கையில் அணிந்த ஆபரணமாகையால், அந்த மஹோத்ஸவமும் அதற்கு பிறகு அவரும் தானும் அனுபவித்த ஏகாந்த ஸுகங்களும் ஞாபகத்திற்கு வந்தன. ரதிகாலத்தில் இருவரும் வேடிக்கையாய்க் கோபித்துக்கொண்டிருக்கையில் ஒருவர்க்கொருவர் பேசாமல் பார்க்காமலுமிருக்கும்பொழுது, பிரிந்திருக்க ஸஹிக்காமையாலும் வேறு மத்யஸ்தர்களில்லாமையாலும் ராமன் தன் மோதிரத்தை மெள்ளக் கழற்றி அகஸ்மாத்தாய் நழுவினது போல் கீழே போடுவார். அப்பொழுது ஸீதை 'மோதிரம் கழன்று கீழே விழுந்துவிட்டதே'யென்று சொல்லி அதை எடுத்துக்கொடுப்பாள். உடனே கலஹம் தீர்ந்து மறுபடியும் ஆனந்தமாய்ப் பேசிக்கொண்டிருப்பார்கள். அப்படிப்பட்ட மோதிரமல்லவாவென்று நினைத்தாள். வெகு நாளாய்ப் பிரிந்திருந்த தங்களைச் சேர்த்து வைத்த மோதிரமல்லவாவென்று நினைத்தாள். அந்த மோதிரமணிந்த விரலையும் க்ரமமாய்க் கையையும் புஜங்களையும் திருமேனியையும் தன்னெதிரில் நிற்பதுபோல் பார்த்து ஆலிங்கனஞ்செய்துகொண்டாள். சிவந்து நீண்டு ஸந்தோஷத்தால் மலர்ந்த கண்களையுடைய ஸீதையின் முகம் ராஹுவால் விடப்பட்ட சந்த்ரன் போல் ப்ரகாசித்தது.

பிறகு "ஐயோ! இவனை நமக்கு ப்ராணதானஞ்செய்தவனென்று கொண்டாடாமல் ராவணனென்று ஸந்தேஹித்தோமே" யென்று

வெட்கப்பட்டு, ராமனுடைய விருத்தாந்தத்தைக் கேட்டதால் பரமானந்தமடைந்து, அந்த ஸமாசாரத்தைக் கொண்டுவந்த ஆஞ்ஜனேயரை வெகு பயத்துடன் முளிரக்கடாக்ஷித்து, "வானரச்ரேஷ்ட! நீ ஒண்டியாய் இந்த ராக்ஷஸ ராஜதானியில் அலக்ஷ்யமாய் வந்தாயே! உன் பலத்தையும் பராக்ரமத்தையும் புத்தியையும் என்னவென்று சொல்வேன். பயங்கரமான ஜலஜந்துக்கள் வஸிக்கும் நூறு யோஜனை விஸ்தீர்ணமுள்ள இந்த ஸமுத்ரத்தை ஒப்பற்ற பராக்ரமசாலியான நீ பசுவின் குளம்படியைப்போல் அலக்ஷ்யமாய்த் தாண்டினுயே! ஸர்வலோக கண்டகனுன ராவணனைக்கண்டு உனக்குக் கொஞ்சமாவது பயமும் கலக்கமுமில்லை. ஆகையால், ஸாதாரணமான வானரனென்று உன்னை நினைக்கவும் முடியுமோ? மஹாபுத்திமானுன ராமனே உன்னை என்னிடத்தில் நம்பிக்கையாய் அனுப்பியிருக்கிருர். ஆகையால் என்னுடன் நீ தடையில்லாமல் பேசத்தகுந்தவன். பிறரால் நெருங்க முடியாத சக்தியையுடைய ராகவன் ஒருவனுடைய பராக்ரமத்தைப் பூர்ணமாய் அறிந்து அவனை நன்ருய்ப் பரீக்ஷிக்காமல் என்னிடத்தில் அனுப்பமாட்டாரல்லவா?

தர்மாத்மாவும் வீணுகாத ப்ரதிக்ஞையையுடையவருமான ராகவன் என் பாக்யவிசேஷத்தாலும் தைவானுக்ரஹத்தாலும் க்ஷேமமாயிருக்கிருரா? மஹாதேஜஸ்வியான லக்ஷ்மணர் க்ஷேமமாயிருக்கிருரா? ராகவன் க்ஷேமமாயிருந்தால் கடல் சூழ்ந்த பூமியை ப்ரளய காலாக்னியைப்போல் கோபத்தால் கொளுத்துகிருரே? இல்லையே.

தேவாஸுரர்களையும் ஒரு க்ஷணத்தில் நாசஞ்செய்ய ராமலக்ஷ்மணர்களுக்குச் சக்தியில்லையா? ஆகையால், என் துக்கம் முடிவதற்குக் காலம் வரவில்லையென்று எண்ணுகிறேன். அந்தப் புருஷோத்தமன் வருத்தத்தால் இளைக்காதிருக்கிருரா? பரிதபிக்காமலிருக்கிருரா? தைர்யத்தை இழக்காமலிருக்கிருரா? துக்கத்தால் மெய்மறந்து கார்யங்களில் மயங்காமலிருக்கிருரா? ஸகல புருஷப்ரயத்னங்களையும் செய்துகொண்டிருக்கிருரா? மித்ரர்களிடத்தில் கிருபையுடன் ஸாமதான உபாயங்களையும் பகைவர்களை ஜயிப்பதற்காக அவர்களிடத்தில் பேத தண்ட உபாயங்களையும் க்ரமமாய் அனுஸரித்துவருகிருரா? சுத்தமான மனஸையுடைய மித்ரர்களை ஸம்பாதிக்கிருரா? அப்படிப்பட்டவர்கள் அவரைத் தேடியடைகிருர்களா? அவர்களால் பஹுமானிக்கப்படுகிருரா? என்னை அடையும் பொருட்டுத் தேவதைகளின் அனுக்ரஹத்தை ப்ரார்த்தித்து வருகிருரா? அவருடைய வீரியசௌர்ய பராக்ரமங்களுக்குத் தகுந்தபடி ஸகல புருஷ ப்ரயத்னங்களையும் குறைவில்லா

மல் செய்து வருகிறாரா? குலதைவமான நாராயணனுடைய கிருபைக்குத் தன்னைப் பாத்ரனாகச் செய்துகொண்டு வருகிறாரா? அவரை விட்டுப்பிரிந்து வெகுகாலமாய்க் கண்ணுக்கெட்டாத தேசத்தில் நான் இருக்கிறேனென்று என்னை மறக்கவில்லையல்லவா? என்னிடத்திலுள்ள பூர்வ ஸ்நேஹத்திற்குக் கொஞ்சமேனும் குறைவில்லையல்லவா! இந்த ஸங்கடத்திலிருந்து என்னைச் சீக்ரத்தில் விலக்குவாரோ? உத்தம ஸுகங்களை அனுபவிக்கத்தகுந்தவர்; கஷ்டத்தை அனுபவிக்கவேதகாதவர் அதிக துக்கத்தால் தேஹம் நொந்து வருந்தாமல் க்ஷேமமாயிருக்கிறாரா? கௌஸல்யை ஸுமித்ரை பரதன் முதலியவர்கள் க்ஷேமமாயிருப்பதாக சமாசாரம் கிடைத்துகொண்டிருக்கிறதா. என்னைப்பிரிந்த சோகத்தால் தாபத்தை அடையாமலிருக்கிறாரா? வேறு விஷயங்களில் மனதைச் செலுத்தாமல் என்னை இந்தக் கஷ்டத்திலிருந்து கரையேற்றுவாரா? ராமனிடத்தில் பரம பக்தியுள்ள பரதன் தன் மந்த்ரிகளையும் கணக்கில்லாத வீரர்களடங்கிய சதுரங்க பலத்தையும் என் நிமித்தமாய் அனுப்புவாரா? பற்களையும் நகங்களையும் ஆயுதமாயுடைய வானரவீரர்களால் சூழப்பட்டு ஸுக்ரீவமஹாராஜர் இங்கே அதி சீக்ரத்தில் வருவாரா? சூரனும் அஸ்த்ர ரஹஸ்யங்களைப் பூரணமாய் அறிந்தவருமான லக்ஷ்மணன் பாணவர்ஷத்தால் ராக்ஷஸர்களை நாசஞ்செய்வாரா? நெருப்பு ஜ்வாலைகளைக் கக்கும் பாணங்களால் ராவணனும் அவனுடைய பந்துக்களும் யுத்தத்தில் அதி சீக்ரத்தில் அடிபட்டுக் கிடப்பதைக் காண்பேனா? தங்கநிறமுள்ளதும் தாமரைப் புஷ்பத்தின் வாஸனையுடையதுமான ராகவனுடைய முகம் வெயிலால் ஜலம் வற்றின ஓடையில் வாடும் தாமரையைப்போல், என்னைப்பிரிந்த துக்கத்தால் உலர்ந்து வாடாமலிருக்கிறதா?

தர்மானுஷ்டானத்தைக் காரணமாய் வைத்துக்கொண்டு, தன் ராஜ்யத்தை விட்டு, ஸகல ஸுகங்களையும் அனுபவித்துக்கொண்டிருந்த என்னையும் வனத்தில் கால்நடையாய் அழைத்து வந்த ராமனுக்கு வருத்தமும் பயமும் சோகமும் கொஞ்சங்கூடவில்லை. அப்படிப்பட்டவர் என்னைப்பிரிந்து தைர்யத்தை இழக்காதிருக்கிறாரா? தன்னிடத்தில் பரமப்ரீதி வைத்த கௌஸல்யையும் தன்னைப் பிரிந்து உயிரோடிருக்க ஸஹிக்காமல் மரணமடைந்த தசரதரும், இதர பந்துக்களும் ராமனுடைய மனஸில் எனக்கு ஸமமாவார்களோ? ரகுநாதன் என்னை அழைத்துப் போவாரென்ற வார்த்தையைக் கேட்கும்வரையில் மாத்ரம் ப்ராணனை வைத்துக்கொண்டிருப்பே" னென்றாள்.

இந்த விதம் அநேக அர்த்தங்களடங்கிய மதுரமான வார்த்தைகளைச் சொல்லி, "இந்த வானரேந்த்ரன் என் கேள்விகளுக்கு என்ன பதில் சொல்வான், பார்ப்போ" மென்று பேசாமலிருந்தாள். பராக்ரமசாலியான மாருதி, தலைமேல் கைகூப்பி வணக்கமாய்ப் பின்வருமாறு பதில் சொன்னார்.

"பூர்வம் அனுஹ்லாதனென்னும் அஸுரன் இந்த்ரனுடைய பார்யையான சசீதேவியை ஒளித்தான். அவ்விடத்தை வெகு காலம் அறியாமல் இந்த்ரன் பிறகு தேடிக்கண்டுபிடித்ததுபோல், ராமனுக்கு தாங்களிருக்குமிடம் இதுவரையில் தெரியவில்லை. செந்தாமரையைப் பழிக்கும் நேத்ரங்களையுடையவளே! தங்களை இது வரையிலும் அழைத்துப் போகாததற்கு இதே காரணம். நான் தங்களுடைய விருத்தாந்தத்தைத் தெரிவித்த அடுத்த க்ஷணத்திலேயே வானரஸைன்யங்களைக் கூட்டிக்கொண்டு இங்கே வருவார். அவை நூறு யோஜனை விஸ்தீர்ணமுள்ள இந்த ஸமுத்ரத்தை எப்படித் தாண்ட முடியுமென்று ஸந்தேஹிக்கவேண்டாம். ராகவன் இந்தப் பயங்கரமான கடலைத் தன் பாணங்களால் கட்டி தன் ஸைன்யங்களுடன் இங்கே வந்து ராக்ஷஸ குலத்தை வேருடனறுப்பார்; ம்ருத்யுதேவதையாவது தேவர்களாவது அஸுரர்களாவது அதைத் தடுக்கப் பார்த்தால் அந்த க்ஷணமே நாசமடைவார்களென்பதில் ஸந்தேஹமுண்டோ? ஸிம்ஹத்தால் பிடிக்கப்பட்ட யானையைப்போல் ராகவன் தங்களைக் காணாமல் துக்கத்தால் தபிக்கிறார். இது ஸத்யம். நான் வஸிக்குமிடங்களான மலயம் விந்த்யம் மேரு மஹேந்த்ரம் தர்த்துரம் முதலிய பர்வதங்களின்மேலும் நான் புஜிக்கும் பழம் கிழங்கு ஜலம் முதலிய பதார்த்தங்களின்மேலும் ஆணை வைத்துச் சொல்லுகிறேன். அழகான கண்களாலும் கோவைகனிபோன்ற உதடுகளாலும் ஜ்வலிக்கும் குண்டலங்களாலும் பூர்ண சந்த்ரனைப்போல் விளங்கும் ராமமூர்த்தியின் திருமுகமண்டலத்தைக் காண்பீர்கள்.

ராமன் மதுமாம்ஸங்களை விட்டார். வானப்ரஸ்தருக்குத் தகுந்த பழம் கிழங்கு முதலியவைகளை ஸாயங்காலத்தில் புஜிக்கிறார். தங்களிடத்திலேயே மனஸைச் செலுத்தி, தேஹத்தையும் மறந்து, காட்டு ஈக்கள் கொசுகள் புழுக்கள் ஊரும் ஜந்துக்கள் முதலியவைகளால் நேரும் உபத்ரவத்தைக் கவனிக்கிறதுமில்லை; அவைகளை ஓட்டுகிறதுமில்லை; தங்களிடத்தில் வைத்த ஆசையால் எப்பொழுதும் தங்களையே நினைத்துக்கொண்டு சோகம் மேலிட்டு வேறு ஞாபகமில்லாமலிருக்கிறார். அவருக்குத் தூக்கமே

கிடையாது. எப்பொழுதாவது தன்னை அறியாமல் தேஹம் அலுத்துத் தூங்கினாலும் "ஸீதை!"யென்று மதுரமான வார்த்தையைச் சொல்லிக்கொண்டே விழித்துக்கொள்கிறார். பழங்கள் புஷ்பங்கள் முதலிய மனோஹரமான பதார்த்தங்களைக் கண்டாலும், "ஹா ஸீதை"யென்று அடிக்கடி பெருமூச்சு விட்டுத் தாங்கள் பேசுவதுபோல் தங்களுக்குப் பதில் சொல்லுகிறார். தாங்கள் எப்பொழுதும் எதிரிலிருப்பதாக அவருடைய பாவனை. தங்களைப்பிரிந்ததால் எப்பொழுதும் பரிதபித்துக்கொண்டிருக்கிறார். தங்களையடைவதற்கு வேண்டிய ஸகல ப்ரயத்னங்களையும் குறைவில்லாமல் செய்துகொண்டிருக்கிறார். அவர் கலங்காத தைர்யமுடையவரென்றும், செய்த ப்ரதிக்ஞை தவறாதவரென்றும் க்ஷத்ரிய வீரரென்றும் தங்களுக்குத்தெரியாதா" வென்றார்.

ராமனுடைய விருத்தாந்தத்தைக் கேட்டதால் ஸீதைக்கு ஒருவாறு கவலை நீங்கிற்று; ஆனாலும் தன்னைப்பிரிந்து ராமன் படும் கஷ்டத்தைக்கேட்டு அவரைப்போல் தானும் சோகமடைந்து சரத்ருதுவின் ஆரம்பத்தில் ரோகத்தால் கொஞ்சம் மறைந்து மாறி மாறி ப்ரகாசிக்கும் சந்த்ரமண்டலத்தைப்போல் தோன்றினாள்.

---

## ஸர்க்கம் 37.

## மாருதி ஸீதையைத் தன்னுடன் வரும்படி ப்ரார்த்தித்தது.

---

அதற்கு ஸீதை நீதி நிறைந்த வாக்யங்களால் மறுமொழி சொன்னாள். "ராமன் வேறு ஞாபகமில்லாமலிருக்கிறார்; ஆனால், சோகஸமுத்ரத்தில் முழுகியிருக்கிறாரென்று நீ சொன்னது விஷத்தையும் அம்ருதத்தையும் கலந்து கொடுத்தது போலிருக்கிறது. அவரைப் விட்டுப்பிரிந்தது நானாகச் செய்துகொண்டதல்ல. ஸகல ஐச்வர்யங்களும் பொருந்தின ரகுநாதனையும் மிகவும் தாழ்ந்த ஸ்திதியில் கஷ்டப்பட்டுக்கொண்டிருக்கும் ஸாமான்ய புருஷனையும் தைவம் கயிற்றில் கட்டியிழுப்பதுபோல் நினைத்தபடியெல்லாம் ஆட்டுகிறது. ப்ராணிகள் விதியை வெல்வது அஸாத்யம். இதற்கு என்னையும் ராமனையும் லக்ஷ்மணனையும் காட்டிலும் வேறு உபமானங்கள் வேண்டுமோ? (மஹாவிஷ்ணுவான ராமனும், காலரூபியும் ஞானரூபியுமான லக்ஷ்மணனும் பராசக்தியான நானும் கர்மகதிக்குத் தப்ப முடிந்ததோ வென்ற கருத்து.)

பெருங்கடலில் காற்றால் அடிக்கப்பட்ட கப்பல் தத்தளிப்பது போல் ராமன் சோகஸமுத்ரத்திலிருந்து எப்பொழுது கரையேறுவார். ராவணனை ராக்ஷஸர்களுடன் நாசஞ்செய்து லங்கையை அழித்து என் நாயகன் எப்பொழுது என்னைக் காண்பாரோ? ராவணன் கெடு விட்ட ஒரு வர்ஷம் முடிவதற்குமுன் என்னை மீட்கும்படி நீ அவருக்குச் சொல்லவேண்டியது. அதுவரையிலுந்தான் நான் உயிரோடு இருப்பேன். பத்தாவது மாஸம் நடக்கிறது; இன்னும் இரண்டு மாஸங்களிருக்கின்றன. தன் ஸகோதரனை விபீஷணன் என்னைத் திருப்பிக்கொடுக்கும்படி தன்னால் கூடியமட்டும் ப்ரயத்னஞ்செய்தும் ராவணன் அதைக் கொஞ்சமாவது லக்ஷ்யஞ்செய்யவில்லை. அந்தவிஷயமே அவனுக்கு இஷ்டமில்லை. காலபாசத்தால் கட்டுப்பட்ட ராவணனை மிருத்யுதேவதை யுத்தகளத்தில் தேடிக்கொண்டிருக்கிறது. விபீஷணனுடைய பார்யை ஸரமையென்பவள் இந்த ஸமாசாரத்தைத் தன் மூத்தபெண்ணான அனலை மூலமாய் எனக்குச் சொல்லியனுப்பினாள்.

என் அந்தராத்மா கல்மஷமில்லாமல் சுத்தமாயிருக்கிறது. லோகோத்தரமான கார்யங்களைச் செய்யவேண்டுமென்ற ஸ்திரமான ப்ரயத்னமும் அவைகளைச் செய்வதற்கு வேண்டிய சக்தியும் க்ரூரமற்றிருப்பதும் நன்றி மறவாமையும் சௌர்யமும் மஹிமையும் இன்னும் அனந்தமான குணங்களும் ரகுநாதனிடத்தில் விளங்குகின்றன. ஆகையால் என் பர்த்தா என்னைச் சீக்ரமாய் அடைவாரென்பதில் கொஞ்சங்கூட ஸந்தேஹமில்லை. லக்ஷ்மணனுடைய ஸஹாயமுமில்லாமல் பதினாலாயிரம் ராக்ஷஸவீரர்களை ஒரு முஹூர்த்தத்தில் லீலையாய்க்கொன்ற ரகுவீரனைக் கண்டு பயப்படாத சத்ருவுமுண்டோ? எப்படிப்பட்ட ஸங்கடங்கள் நேர்ந்தாலும் அவருடைய தைர்யம் கொஞ்சமாவது கலங்குமோ? இந்த்ரனுடைய மஹிமையை இந்த்ராணி அறிவதுபோல் அவருடைய மஹிமை எனக்கல்லவா தெரியும்? ராமனென்ற ஸூர்யன் பாணக்கூட்டங்களாகிற கிரணங்களால் ராக்ஷஸர்களென்ற ஜலத்தை அதிசீக்ரத்தில் வற்றச்செய்வா" ரென்று கண்ணீர் பெருக மனஸில் துக்கந்ததும்ப ஸீதை ராமமூர்த்தியைப்பற்றிப் பரிதபிப்பதைக்கேட்டு ஆஞ்சநேயர்,

"தாயே! ஏன் கவலைப்படுகிறீர்கள்? தங்களுடைய விருத்தாந்தத்தை நான் சொன்னவுடனே கணக்கில்லாத வானர ஸைன்யங்களுடன் ரகுநாதன் இங்கே வருவார். இவ்வளவென்ன? தங்களுடைய துக்கத்தை இந்த க்ஷணமே போக்கடிக்கிறேன். என் முது

கில் ஏறுங்கள். ஒரு நொடியில் இந்த ஸமுத்ரத்தைத் தாண்டி ராகவனிடத்தில் தங்களைக் கொண்டுபோய்ச் சேர்க்கிறேன். ஸந்தேஹப்படவேண்டாம். இந்த லங்கையும் இதிலுள்ள ஸகல பதார்த்தங்களையும் அலக்ஷ்யமாய் எவ்விடத்திற்கும் கொண்டுபோக என்னால் முடியாதா? ஹோமஞ்செய்கிற பதார்த்தங்களை அக்னிபகவான் இந்த்ரனிடத்தில் ஸமர்ப்பிப்பதுபோல் ப்ரஸ்ரவணகிரியில் விளங்கும் ராமமூர்த்தியிடத்தில் தங்களைக் கொண்டுபோய்ச் சேர்ப்பேன். மஹாவிஷ்ணு அஸுரர்களை நாசஞ் செய்வதில் உத்ஸாஹத்துடனிருப்பதுபோல் ராக்ஷஸர்களை வேறறுப்பதில் எப்போதும் கவலையுள்ள ரகுநாதனையும் லக்ஷ்மணனையும் இப்போதே பார்ப்பீர்கள். தேவேந்த்ரன் ஸ்வர்க்கத்தில் மஹிமையோடு வீற்றிருப்பதைப்போல் தங்களைப் பார்க்கும்பொருட்டு ஸகல ப்ரயத்னங்களையும் செய்துகொண்டு ப்ரஸ்வணகிரியில் வீற்றிருக்கும் மஹாபலவானான ராகவனைப் பார்க்கப்போகிறீர்கள். ஆகையால், என் முதுகில் ஏறுங்கள். என்னால் என்ன முடியுமென்று அலக்ஷ்யஞ் செய்யவேண்டாம். ரோஹிணீதேவி சந்த்ரனுடன் கூடி ஸுகிப்பதுபோல் ரகுநாதனுடன் சேர்ந்திருக்க விரும்புங்கள். என் முதுகில் ஏறிக்கொண்டு ஸூர்ய சந்த்ரர்களுடன் வார்த்தைசொல்வதுபோல் ஆகாசவீதியில் உன்னதமாய்ச் செல்லுங்கள். இந்த லங்கையிலுள்ளவர்கள் ஒன்றுசேர்ந்தாலும் நான் தங்களை எடுத்துப்போகும்பொழுது என்னைத் தடுக்கவரவது பின் தொடரவாவது முடியுமோ? நான் இங்கே எப்படி அலக்ஷ்யமாய் வந்தேனோ அப்படியே தங்களை எடுத்துக்கொண்டு ஆகாச மார்க்கமாய்ச் செல்வேன். இதில் ஸந்தேஹமில்லை'' யென்று ப்ரார்த்தித்தார்.

இந்த ஆச்சர்யமான வார்த்தையைக் கேட்டு ஸீதை ஸந்தோஷத்தால் மயிர்க்கூச்சலடைந்து மாருதியைப் பார்த்து, "நூறு யோஜனை விஸ்தீர்ணமுள்ள ஸமுத்திரத்தைத் தாண்டிக் கிஷ்கிந்தைக்கு என்னைக் கொண்டுபோகிறேனென்று நீ சொல்வது விநோதமாயிருக்கிறது. உனக்கு ஸ்வபாவமான வானர புத்தி இது தான். அல்பமான சரீரத்தையுடைய நீ என்னை ராமனிடத்தில் கொண்டுபோய் விடுகிறேனென்று எந்தத் தைர்யத்தால் சொன்னாய்''யென்று கேட்டாள்.

உடனே ஹநுமார் "என்ன ஆச்சர்யம்! நான் இதுவரையில் ஒருவரிடத்திலும் இப்படி அவமானப்பட்டதில்லை'' யென்று எண்ணினார். "நான் அளவற்ற பலமுடையவனென்றும், பிறரால் செய்யக்

கூடாத கார்யங்களைச் செய்தவனென்றும் இவளுக்குத் தெரியாத தால் இப்படிச் சொல்லுகிறாள். ஆகையால் நான் இஷ்டமான ரூபங்களை எடுக்கக் கூடியவனென்பதைக் காட்டவேண்டு''மென்று நிச்சயித்துத் தன் விச்வ ரூபத்தை ஸீதைக்குக் காட்டினார். அவ ளுக்கு நம்பிக்கை உண்டாகும்பொருட்டு அந்த மரத்திலிருந்து குதி த்து வர வா வளர ஆரம்பித்தார். மேரு மந்தரம் முதலிய மஹாபர்வ தங்களைப்போல் அளவற்றவராய்க் கொழுந்துவிட்டெரியும் அக்னி யைப்போல் காந்தியுடன் ப்ரகாசித்துக்கொண்டு ஸீதைக்கு நேராக நின்றார். மலைபோன்ற தேஹத்தையும் சிவந்த முகத்தையும் எல்லை யற்ற பலத்தையும் வஜ்ராயுதத்தை போன்ற பற்களையும் நகங்களையுமு டையவராய்ப் பயங்கரமான ரூபத்துடன் ஸீதையைப் பார்த்துத் "தாயே! இந்த லங்கையும் அதிலுள்ள பர்வதங்கள் வனங்கள் ப்ராகாரங்கள் கட்டடங்கள் ப்ராணிகள் அவைகளுக்கு அதிபதியான ராவணன் இவையெல்லாவற்றையும் துரும்புபோல் அலக்ஷ்யமாய் எடு துச் செல்ல எனக்குச் சக்தியுண்டு. ஆகையால் என்னை அலக்ஷ்யஞ் செய்யாமல் தங்களுடைய மனஸை ஸ்திரப்படுத்திக்கொண்டு என் ப்ரார்த்தனையை அங்கீகரித்து ராம லக்ஷ்மணர்களுடைய துக்கத்தைப் போக்குங்க''ளென்று வேண்டினார்.

ப்ரளய கால ருத்ரனைப்போல் பயங்கரமாய் ஜ்வலிக்கும் வாயுபுத் ரனை ஸீதை குளிரக் கடாக்ஷித்து, "வானர ச்ரேஷ்ட! உன் பலத் தையும் பராக்ரமத்தையும் நான் நன்றாய் அறிவேன். வேகத்தில் வாயுவிற்கும் அத்புதமான தேஜஸில் அக்னிக்கும் ஸமமென்பதை யும் நன்றாய் அறிவேன். உன்னைத்தவிர வேறு ஸாமான்ய புருஷன் ஒண்டியாய் இந்த மாஹ ஸமுத்ரத்தைத் தாண்டிக், கோர ராக்ஷஸர் களால் நிறைந்த இந்த லங்கையில் பயமில்லாமல் ப்ரவேசித்து மஹா ஸாமர்த்யமாய் என்னுடன் பேச முடியுமா? என்னை எடுத்துக்கொ ண்டு ஆகாசமார்க்கமாய் போகக்கூடிய சக்தியுடையவனென்று என க்கு நன்றாய்த் தெரியும். ரகுநாதனுடைய கார்யம் சீக்ரத்தில் ஸித் தியடையும் வழியைப் யோசிக்கவேண்டியது. (இதனால் ராவணவதம் முக்கியமான கார்யமென்று குறிப்பிடப்படுகிறது).

ஆனால் நான் உன்னுடன் போவது யுக்தமல்ல. வாயுவிற்கு ஸமமாய்ச் செல்லும் உன் வேகத்தால் எனக்கு ப்ரக்ஞை போய்வி டும். ஸமுத்ரத்திற்கு மேல் ஆகாசத்தில் அதிவேகமாய் வர வர உயரக் கிளம்பிப் போகையில் நான் பயந்து கடலில் விழுந்துவிடு

வேன். உடனே அங்குள்ள திமிங்கலம் முதலை முதலிய பயங்கா மரன ஜலஜந்துக்கள் என்னைத் தின்றுவிடும். நீ சத்ருக்களை நாசஞ் செய்வதில் ஒப்பில்லாதவனென்று எனக்குத் தெரியும். ஆனால், என்னை எடுத்துப்போகையில் உன் ப்ராணனுக்கு நிச்சயமாய் ஆப த்து நேரும். எப்படியென்றால், நான் இங்கிருந்து போய்விட்டது தெரிந்தவுடன் ராவணன் பயங்கரமான பராக்ரமமுள்ள ராக்ஷஸர் களை உன்னைப் பின்தொடர்ந்து கொல்லும்படி கட்டளையிடுவான். சூலம் உலக்கை முதலிய ஆயுதங்களுடன் அவர்கள் கணக்கில்லாமல் ஒண்டியாய் ஆயுதமற்றிருக்கும் உன்னைச் சூழ்ந்துகொள்வார்கள். அப்பொழுது அவர்களுடன் யுத்தஞ் செய்து அவர்களை நாசஞ் செய் வாயா? அல்லது, உன்னைக் காப்பாற்றிக்கொள்வாயா? அல்லது, என க்கு யாதொரு தீங்கும் நேரிடாமல் காப்பாற்றுவாயா? இம்மூன்றையும் ஒரு காலத்தில் செய்ய முடியாதல்லவா? ஆகையால் உன் ப்ராண னுக்கு ஆபத்து நேருமென்பதில் ஸந்தேஹமென்ன?

மேலும், அந்த க்ரூர ராக்ஷஸர்களோடு நீ யுத்தஞ் செய்கை யில் நான் அதைக் கண்டு பயந்து உன் முதுகிலிருந்து விழுந்துவிடு வேன். பிறகு பலபராக்ரமத்தால் பயங்கரமான அந்த ராக்ஷஸர்கள் உன்னை எப்படியாவது யுத்தத்தில் ஜயிப்பார்கள். அல்லது நீ யுத் தத்தில் கவனத்தைச் செலுத்தி பராமுகமாயிருக்கையில் உன் முது கிலிருந்து நழுவி விழுவேன். உடனே அந்தப் பாபிகள் என்னையும் பிடித்துக் கொண்டுபோவார்கள். உன் கையிலிருந்து என்னை அப ஹரித்துக்கொல்லவும் கொல்வார்கள். 'நான் ஸாமான்யனா? என்னை, ஜயித்துத் தங்களைக் கொண்டுபோக அவர்களுக்குத் திறமையுண்டா, வென்று கேட்டால் யுத்தத்தில் புகுந்தால் ஜயமும் அபஜயமும் நிச் சயமில்லையே. அவர்கள் என்னை மிரட்டி உபத்ரவிக்கும்பொழுது அதை ஸஹிக்காமல் நான் ப்ராணனை விடுவேன். அப்போழுது நீ இவ்வளவு ப்ரயத்னஞ் செய்தும் ச்ரமப்பட்டதும் வீணாகுமே.

மேலும், ஸகல ராக்ஷஸர்களையும் நாசஞ் செய்ய உனக்குச் சக்தி யிருந்தாலும் அப்படிச் செய்வது ராகவனுடைய கீர்த்திக்குக் குறை வல்லவா? ராவணனை எதிர்க்கத் தைர்யமில்லாமல் திருட்டுத்தனமாய் ஒரு குரங்கால் ராமன் என்னை எடுத்துவரச்சொன்னானென்று லோ கத்தார் சொல்வார்களே.

மேலும், ராக்ஷஸர்கள் என்னைப் பிடித்து வானரர்களுக்கும் ராமலக்ஷ்மணர்களுக்கும் தெரியாத ஓரிடத்தில் மறைத்து வைப்பார் கள். அப்போழுது எனக்காக நீ படும் பாடெல்லாம் வீணாகுமே. ரகு

நாதனிடத்தில் நீ போய் என் ஸமாசாரத்தைச் சொல்லி அவரை இங்கே அழைத்துவருவதில் அதிக நன்மையுண்டு. அப்படிச் செய்யாமல் என்னை இங்கிருந்து எடுத்துப்போக யத்தனித்தால் தவறி நான் ராக்ஷஸர்களுடைய கையில் அகப்பட்டால் மறுபடியும் உங்களுடைய கண்ணில் படப்போகிறதில்லை. என்னைக் காணுமல் ராகவன் உயிரை விடுவார். உடனே அவருடைய தம்பிகளும் தாய்களும் ஸுக்ரீவனும் வானர சைன்யங்களும் ப்ராணனை வைத்துக்கொள்ளார்கள்.

மேலும், பர்த்தாவிடத்தில் அளவற்ற ப்ரியத்தையும் பக்தியையும் வைத்திருக்கும் நான் அவரைத்தவிர வேறு புருஷனைத் தொடுவது ந்யாயமல்ல. ராவணன் உன்னைத் தொட்டெடுத்துவரவில்லையர்வென்றால்; நானே ஒண்டி; பலமற்ற மனுஷ்யஸ்த்ரீ; என்னை ரக்ஷிப்பவர்கள் ஸமீபத்திலில்லை; அவனே ராக்ஷஸன்; அளவற்ற பலசாலி; மஹா க்ரூரன்; என்னைப் பலாத்காரஞ் செய்யும்பொழுது எப்படித் தடுக்கமுடியும்? ஆனாலும், என்னால் கூடியவரையில் தடுத்துப் பார்த்தேன்; முடியவில்லை. ராகவன் இங்கே வந்து ராவணனையும் அவனைச் சேர்ந்தவர்களையும் யுத்தத்தில் கொன்று எல்லோருமறிய என்னை அழைத்துப்போவது அவருடை குலத்திற்கும் வீர்யத்திற்கும் பராக்ரமத்திற்கும் கீர்த்திக்கும் என்னிடத்தில் வைத்த ப்ரீதிக்கும் அழகு. யுத்தத்தில் தேவ கந்தர்வ பன்னக ராக்ஷஸர்கள் முதலியவர்களும் அவருக்கெதிரில் நிற்கமாட்டார்கள். அவருடைய வீர்யத்தை விராதன் கரன் தூஷணன் ஜனஸ்தானத்திலுள்ள ராக்ஷஸர்கள் முதலியவர்களைக் கொன்றபொழுது பார்த்திருக்கிறேன். என்னை விவாஹஞ்செய்வதற்கு முன் மாரீசன் ஸுபாஹு தாடகை முதலியவர்களைப் படுத்தின பாட்டையும் பிறர் சொல்லக் கேட்டிருக்கிறேன்; கபந்தனையும் வாலியையும் வதஞ்செய்ததை நீயே சொல்லியிருக்கிறாய். கொழுந்துவிட்டெரியும் நெருப்பும் காற்றும் சேர்ந்தது போல் மஹாபலவானும் தேவேந்த்ரனுக்கு ஸமமான பராக்ரமசாலியும் அத்புதமான வில்லாளியுமான ராமனும் லக்ஷ்மணனும் யுத்த களத்தில் சேர்ந்து நின்றால் எவன்தான் அவர்களைக் கண்ணெடுத்துப் பார்க்கமுடியும்? ப்ரளயகாலத்தில் ஸகல லோகங்களையும் ஸம்ஹரிப்பதற்காக ஸூர்யபகவான் ஆயிரத்தெட்டுக் கண்களையும் திறந்து கொண்டு நிற்பதுபோல் பாணங்களையே; கிரணங்களாயுடைய ரகு

னுடன் நின்று கோதண்டத்தை வளைத்துக் காலஸர்ப்பங்களைப்போல் பாணங்களை வர்ஷித்துச் சத்ரு ஸைன்யங்களை ஹதஞ்செய்தால் எவனாவது அவர்களைப் பார்த்துப் பிழைக்கமுடியுமா? ஆகையால், வானரச்ரேஷ்ட! ராமலக்ஷ்மணர்களையும் ஸுக்ரீவனையும் வானர ஸைன்யங்களையும் சீக்ரமாய் இங்கே அழைத்துவா. வெகு காலமாய் ராமனை நினைத்து நினைத்து அவர் வருவாரென்று வழிபார்த்து ஸகல கஷ்டங்களையும் பொறுத்துப்பொறுத்துத் தேஹம் துரும்பாய்ப்போன எனக்கு ஸந்தோஷத்தையும் ப்ராணனையும் கீர்த்தியையும் கொடுக்கும் பெரும் உபசாரத்தைச்செய்வா"யென்றாள்.

## ஸர்க்கம் 38.

### காகாஸுர விருத்தாந்தம்.

மஹாபுத்திமானான அந்த வானரச்ரேஷ்டன் ஸீதையின் வார்த்தையைக் கேட்டு மிகுந்த ஸந்தோஷமடைந்து, "அம்மா! தாங்கள் சொன்ன வார்த்தைகள் ஸ்த்ரீகளின் ஸ்வபாவத்திற்கும் பதிவ்ரதைகளுடைய விநயத்திற்கும் தகுந்தவையே. நூறு யோசனை விஸ்தீர்ணமுள்ள இந்தப்பெருங்கடலை என் முதுகிலேறித் தாண்டுவது ஸ்த்ரீயான தங்களுக்கு முடியாதல்லவா? ராமனைத்தவிர வேறு புருஷனைத் தொடமாட்டேனென்ற இரண்டாவது காரணம் அந்த மஹாத்மாவின் பத்னியாகிய தங்களுக்கே தகும். இப்படிப்பட்ட வார்த்தையை வேறொருவரும் சொல்லமாட்டார்கள். தங்களுடைய ஸகல விருத்தாந்தங்களையும் வார்த்தைகளையும் ஒன்றுவிடாமல் ராகவனிடத்தில் சொல்வேன். அவருக்கு ப்ரியமான கார்யத்தைச்செய்ய வேண்டுமென்ற இச்சையால் வேறு அனேக காரணங்களாலும் தங்களிடத்திலுள்ள ஸ்நேஹத்தாலும் களங்கமில்லாத மனஸுடன் இப்படிச் சொன்னேனேயொழிய வேறல்ல. இந்தப் பெருங்கடலைத் தாண்டுவது கஷ்டம்; கோர ராக்ஷஸர்களால் இரவும் பகலும் காக்கப்பட்ட இந்த லங்கையில் ப்ரவேசிப்பது அதிலும் கஷ்டம்; நான் சொன்னபடி செய்ய எனக்குச் சக்தியுண்டு; மற்றவர்களுக்கு ஸுலபமல்ல. ஆகையால் இப்படிச் சொன்னேன்; ராகவனிடத்தில் எனக்குள்ள ஸ்நேஹத்தாலும், தங்களிடத்தில் வைத்த பக்தியாலும், இப்பொழுதே தங்களை ராமனோடு சேர்த்து வைக்கவேண்டுமென்று

அளவற்ற ஆசைகொண்டிருக்கிறேன். இல்லாவிட்டால் இப்படிச் சொல்வேனு? என்னுடன் ராமனிருக்குமிடத்திற்கு வருவதற்குத் தாங்கள் இஷ்டப்படா விட்டால் நான் தங்களைப்பார்த்தேனென்று அவர் நம்பும்படி சில அடையாளங்களைக் கொடுங்களென்று'' ப்ரார்த்தித்தார்.

அதைக் கேட்டு ஸீதை தன்க்கும் ராகவனுக்கும் ஏகாந்தத்தில் நடந்த விருத்தாந்தங்களைச் சொல்ல ஆரம்பிக்கையில், தான் முன்பு அனுபவித்த ஸுகங்களையும் இப்போழுது படும் கஷ்டத்தையும் நினைத்துக் கண்ணீர் நெஞ்சடைக்க மெதுவாய், "ஆஞ்ஜநேய! சித்ர கூட பர்வதத்தினடியில் வடகிழக்கு மூலையில் மந்தாகினி நதிக்கு ஸமீபத்தில் ஓர் புண்யஸ்தலமுண்டு. அங்கே ஸித்தர்களும் தபஸ்விகளும் ஆனந்தமாய் வஸிப்பார்கள். பழம் கிழங்கு ஜலம் குறைவில்லாமல் கிடைக்கும்; நாங்கள் அங்கேயிருக்கையில் நடந்த ஒரு விருத்தாந்தத்தைச் சொல்லுகிறேன். இந்த அடையாளத்தை என் பர்த்தாவிடத்தில் சொல். 'ஒரு ஸமயத்தில் பலவித புஷ்பங்களால் வாஸனையுள்ள மரச்சோலைகளில் நான் வெகு நேரம் விளையாடி வியர்த்துக் களைத்துத் தங்களுடைய மடியில் உட்கார்ந்தேன். அப்பொழுது ஒரு காக்கை மாம்ஸத்தில் ஆசைகொண்டு என் ஸ்தனத்தில் கொத்திற்று. நான் அதன்மேல் ஒரு சிறிய கல்லை எடுத்தெறிந்து துரத்தினேன். மாம்ஸத்தில் ஆசைவைத்த அந்தத் துஷ்டக் காக்கை நான் எவ்வளவு துரத்தியும் மறுபடியும் என்னை அடிக்கடி ஹிம்ஸித்ததேயல்லாமல், அவ்விடத்தை விட்டுப் போகவேயில்லை. அந்த ஹிம்ஸையைத் தீர்க்கவேண்டுமென்று பரபரப்புடன் எழுந்தேன். என் உத்தரீயம் நழுவ, அதை ஒட்டியாணத்தால் சேர்த்துப்பிடித்துக்கொண்டு அந்தக் காக்கையிடத்தில் மிகுந்த கோபத்துடன் நின்றேன். அப்போழுது என்னைப் பார்த்தீர்கள். பிறகு நான் அந்தக் காக்கையை எவ்வளவு அடித்துத்துரத்தியும் அது என்னைக் கொத்திக் கொண்டேயிருந்தது. அதைக்கண்டு ஒரு காக்கையை ஓட்ட எனக்குச் சக்தியில்லாததைப்பற்றித் தாங்கள் பரிஹாஸஞ்செய்தீர்கள். அப்பொழுது எனக்குண்டான வெட்கமும் அந்தக்காக்கையிடத்திலுள்ள கோபமும் சொல்லி முடியாது. அதைக் கண்டு தாங்கள்என்னை ஸமாதானஞ் செய்தீர்கள். நான் மிகவும் களைத்துத் தங்களுடைய மடியில் மறுபடியும் வந்து படுத்தேன். ஒரு காக்கை நம்மை இவ்வளவு பாடுபடுத்திற்றல்லவாவென்று நினைக்க எனக்குத் துக்கந் தாங்காமல் கண்ணீரால் முகம் நனைந்து பிறகு மெள்ள மெள்ளத் துடைத்துக்

கொண்டேன். அப்பொழுது தாங்கள் என்னைப் பார்க்கவில்லையோ? பிறகு களைப்பால் நான் வெகு நேரம் அவருடைய மடியில் படுத்துத் தூங்கினேன். அவரும் களைத்து என் மடியில் படுத்துத் தூங்கிவிட்டார். அப்பொழுது அந்தக் காக்கை என் ஸமீபத்தில் வந்து நான் விழித்துக்கொண்டு ராகவனுடைய மடியிலிருந்து எழுந்தவுடன் சீக்ரமாய் என்மேல் பாய்ந்து ஸ்தனங்களுக்கு நடுவில் கொத்திற்று. அடிக்கடி கிளம்பிக்கிளம்பி என்னைக் கொத்திக்கிழிக்கையில் ரக்தத்துளிகள் ரகுநாதன்மேல் விழ, அவர் விழித்துக்கொண்டார். ஸுகமாய்த் தூங்கிக்கொண்டிருக்கையில் சத்ருக்களை நாசஞ் செய்யும் சக்தியுள்ளவர்; அந்தக்காக்கையின் ஹிம்ஸையைப் பொறுக்க முடியாமல் நான் அவரை எழுப்பினேன்.

அந்த மஹா வீரன் நான் படும் அவஸ்தையையும் அந்தக் காக்கை என் ஸ்தனங்களுக்கு நடுவில் செய்த கார்யத்தையும் பார்த்துக் கோபங்கொண்டு காலஸர்ப்பத்தைப்போல் பெருமூச்சு விட்டு 'ஸுந்தரீ! இப்படி உன்னை மார்பில் கொத்திக் காயப்படுத்தினவன் யார்? ஐந்துதலை நாகம் கோபத்தால் சீறிக்கொண்டிருக்கும்பொழுது அதனுடன் விளையாட விரும்பும் மூர்க்கள் யா'ரென்று நான்கு புறத்திலும் பார்க்கையில் அந்தக் காக்கை க்ரூரமான நகங்களுடன் என் ரக்தத்தால் பூசப்பட்டு எனக்கெதிரே உட்கார்ந்திருப்பதைக் கண்டார். அது இந்த்ரனுடைய புத்ரனான ஜயந்தன்; ராகவன் கோபத்துடன் தன்னைப் பார்த்தபொழுது, "ஓஹோ! மோசம் வந்ததே"யென்று வாயுவேகமாய்ப் பூமிக்குள் மறைந்தான். அதைக் கண்டு மஹாபுத்திமானான ரகுவீரன் அந்தக் காக்கையின் நிஜஸ்வரூபத்தையும் எண்ணத்தையும் அறிந்து, கோபத்தால் கண்கள் ஜ்வலிக்க, அதை க்ரூரமாய்ச் சிக்ஷிக்க வேண்டுமென்று நினைத்தார். ஆனால், அங்கே அவருடைய கோதண்டமும் பாணங்களுமில்லை. உடனே தான் உட்கார்ந்திருந்த ஆஸனத்திலிருந்து ஓர் தர்ப்பத்தைக் கிள்ளி அதில் ப்ரஹ்மாஸ்த்ரத்தின் மந்த்ரத்தை ஜபித்து அந்தக் காக்கையை உத்தேசித்து ப்ரயோகித்தார். உடனே அது காலாக்னிபோல் ஜ்வலித்துக்கொண்டு அந்த காக்கையை ஆகாசமார்க்கமாய்த் துரத்த ஆரம்பித்தது.

அதைக் கண்டு அந்தக் காக்கை ஓடிற்று, தாவிற்று, பறந்தது மறைந்தது; தனக்குத் தெரிந்த ஸகல தந்த்ரங்களையும் உபாயங்களையும் செய்தது. ஒன்றும் பலிக்காததைக் கண்டு, 'என்னைக் காப்பாற்றுவாருண்டோ' வென்று வாய்விட்டலறிக்கொண்டு இந்த லோக

மெங்கும் அலைந்து திரிந்தது. என்ன கஷ்டம்! பிறகு தன் பிதா வான தேவேந்திரனிடத்தில் சென்றால் தன்னைக் காப்பாற்றுவா ரென்று அங்கே ஓடிற்று. தேவேந்த்ரன் அவனுடைய அஸுர ரூபத்தையும் துக்கத்தையும் கண்டு, நடந்த விருத்தாந்தத்தை விசா ரித்து அவனைத் துரத்திவரும் ப்ரஹ்மாஸ்த்ரத்தையும் பார்த்தான். "ராமன் ஒருவனைக் கொல்லவேண்டுமென்று நிச்சயித்த பிறகு நாம் அதில் தலையிட்டுக்கொண்டால் பிழைப்பதேது? மேலும், இவன் செய்த துஷ்ட கார்யத்திற்கு இந்தத் தண்டனை தகுந்ததே. மேலும், நான் ராஜ்யத்தையும் தேஜஸையும் பார்யையும் கீர்த்தியை யும் இழந்து ஓடி ஒளிந்து தப்பிக்கும்பொழுது எனக்கு ஸகலத் தையும் கொடுத்து ரக்ஷித்த லோகமாதாவிற்கும் அபகாரஞ் செய்த வனை நான் திரும்பிப் பார்க்கலாமோ? ஸகல லோகங்களுக்கும் பிதா வான ஹரியே அவனைக் கைவிட்டபின் எனக்கென்ன? அவர் என் னுடன் பிறந்த வரன்றோ? அவருக்கு அபராதஞ் செய்தாலென்ன? என்னையும் தேவர்களையும் கதறவடிக்கும் ராவணனை வதஞ்செய்யப் பகவான் அவதரித்திருக்க, இவன் அந்தக் கார்யத்திற்கு விரோதஞ் செய்து எங்களுடைய க்ஷேமத்தைக் கெடுக்கவந்த துஷ்டன்; ஆகையால் ஓர் குலத்திற்கு நாசம் த்ராதபடி அதில் ஒருவனைத் தள் ளிவிடுவது ந்யாய''மென்று புத்திபூர்வகமாய் ஜயந்தனை அங்கிருந்து துரத்திவிட்டான். பிறகு தன்னைப் பெற்றெடுத்த தாய் தன்னிடத் தில் இரங்காமலிருப்பாளோவென்று ஜயந்தன் இந்த்ராணியிடத் தில் சென்று அடைக்கலம் வேண்டினன். "ஸகல ப்ராணிகளுக் கும் மங்களத்தைச் செய்யவேண்டிச் சொல்ல முடியாத கஷ்டங்களை ஸஹித்துக்கொண்டிருக்கும் ஜானகிக்குத் தீராத அபராதஞ் செய்த இவன் நமக்குப் புத்ரனல்ல''வென்று அவளும் துரத்திவிட்டாள். பிறகு தன்னைப்போன்ற தேவதைகளிடத்தில் சென்று அடைக்க லம் புகுந்தான். "எவருடைய கிருபையால் நாம் ஸமுத்ர மதனகா லத்தில் அமிருதத்தைப் பெற்றுச் சிரஞ்ஜீவிகளாய் வாழ்கிறோமோ; எவருடைய பராக்ரமத்தால் அஸுரர்களை ஜயித்து ஸ்வர்க்கலோக ராஜ்யத்தை ஆளுகிறோமோ; அந்த நமது குலதைவமான ராமனு டைய கண் சிவந்தால் நாம் எங்கே''யென்று அவர்களும் துரத்திவிட் டார்கள். பிறகு ஜயந்தன் தன்னைப்போன்ற பக்ஷிகளிடத்தில் போ ய்ச் சரணமடைந்தான்; "நமக்கு ப்ரபுவான கருடன் யாருக்கு வாஹ னமோ அந்த மஹாப்ரபுவைக் கோபமூட்டினவன் நம்மிடத்திற்கு ஏன் வந்தா''னென்று அவைகள் அடித்துத் துரத்திவிட்டன. பிறகு மஹர்ஷிகளிடத்தில் சென்று தன்னைக் காப்பாற்ற வேண்டு

மென்று ப்ரார்த்தித்தான். அவர்கள் மூன்று காலங்களையும் அறிந்தவர்களாகையால், "நாம் இவனுக்கு இடங்கொடுத்தால் நமக்கும் ஆபத்து நேரும். ராமனே இவனைக் காப்பாற்றுவார். பக்ஷிகளுக்குள் காக்கை சண்டாளன்; நாம் இவனைப் பார்ப்பது பிசகு; ஸகல ஜீவ கோடிகளுக்கும் புருஷகாரமாய் நின்று உத்தம கதியை அடைவிக்கும் லோகரக்ஷிக்கு அபராதஞ்செய்த இவனுக்குக் கதியுண்டோ?" வென்று கைவிட்டார்கள். இப்படிப் பூலோகம் புவர்லோகம் ஸ்வர்க்க மென்ற மூன்று லோகங்களிலும் சுற்றியலைந்தான்; பூமியில் மஹர்ஷிகளும் புவர்லோகத்தில் பக்ஷிகளும் ஸ்வர்க்கத்தில் தேவர்களும் மாதா பிதாக்களும் கைவிட்டார்கள். இன்னும் ஆசைவிடாமல் கண்டபேர்களைக் கேட்டுக் கண்டவிடங்களில் வெட்கமில்லாமல் நுழைந்து அடித்துத் துரத்தப்பட்டான்.

ஆகையால், முடிவில் ஸர்வலோக சரண்யனை ரகுவீரனையே சரணமடைந்தான். மஹாலக்ஷ்மியே ஒருவன் மேல் குற்றஞ் சொன்னலும் 'என் அடியார் குற்றஞ் செய்யார். அப்படிச் செய்தாலும் அது குற்றமாயிரா"தென்று பக்தர்களைக் காப்பாற்றும் கருணைமூர்த்தியைச் சரணமடைந்தான். பூர்வத்தில் இந்த்ரனுக்கு ஸஹாயமாய் அஸுரர்களை ஜயித்த ககுத்ஸ்தருடைய வம்சத்தில் பிறந்த ராமன், இந்த்ரனுடைய புத்ரனிடத்தில் இரக்கம் வைத்தார். அவன் செய்த அபராதத்திற்கு அவனைக் கொல்லவேண்டியது. ஆனாலும் அது வரையில் வெகு கஷ்டங்களை அனுபவித்திருக்கிறான். இப்போழுது வேறு கதியற்று நம்மைச் சரணமடைந்திருக்கிறான். இவனை ரக்ஷிப்பது நமது வ்ரதமல்லவாவென்று அவனிடத்தில் கிருபைசெய்தார். ஸகல ஜீவகோடிகளுக்கும் அவரைத் தவிர வேறு சரணமுண்டோ? ஸகல லோகங்களிலும் அலைந்து திரிந்து யாதொரு ப்ரயோஜனமில்லாமல் தன்னையே சரணமடைந்த அந்தக் காக்கையின் துக்கத்தையும் பரிதாபத்தையும் அவன் தன்னையே கதியென்று வந்தடைந்ததையும் கண்டு, "இந்த ப்ரஹ்மாஸ்த்ரம் வீண்போகாதே; ஆகையால் தங்களுடைய அஸ்த்ரத்திற்கு என் வலது கண் பலியாகக் கொடுக்கிறேனென்று சொல்" லென்றார். ஜயந்தனும் அப்படியே செய்ய அவனுடைய வலது கண்ணைப் பிடுங்கினர். இப்படித் தனது வலது கண்ணைக் கொடுத்து ராமனுடைய கடாக்ஷத்தால் உயிர்பிழைத்தான். பிறகு அவன் ரக்ஷகனை ரகுநாதனையும் அந்த மஹானுபாவரைப் பெற்ற தசரத சக்ரவர்த்தியையும் நமஸ்கரித்து ராமசந்த்ரனிடத்தில் உத்தரவு பெற்று ஸ்வர்க்கலோகஞ் சென்றான்.

(இதனால் ஈச்வரனிருக்க நம்முடைய ரக்ஷணத்தில் நாம் தலையிடக் கூடாதென்பதும், லோகத்தில் பிதா புத்ரனைச் சிக்ஷித்தால் தாயி டத்தில் ஓடுவதுபோல் ராமபாணத்தால் துரத்தப்பட்டு ஸீதையின் பாதங்களில் தலையைவைத்து விழுந்த ஜயந்தனை ஸீதை ராமனு டைய திருவடியில் வைத்ததால் அவள் ஸர்வலோகங்களுக்கும் புரு ஷகாரமான தயாநிதியென்பதும் நன்கு விளங்குகிறது.)

லோகநாத! எனக்காக ஒரு காக்கையின்மேல் ப்ரஹ்மாஸ்த்ரத் தை ப்ரயோகிக்கவில்லையா? இப்போழுது என்னைத் தங்களிடத்திலி ருந்து அபஹரித்துத் தங்களை அவமானஞ் செய்து என்னை இப்படி உபத்ரவிக்கும் ஒரு அல்ப ராக்ஷஸனைப் பொறுத்திருப்பதற்கு கார ணமேதோ? அளவற்ற உத்ஸாஹத்தையுடைய தாங்கள் என்னிடத் தில் தயவு செய்யக்கூடாதா? பிறர் துக்கப்படுவதைக் கண்டு ஸஹிக்க மாட்டேனென்ற தாங்கள் அந்த வார்த்தையை நடத்தையில் காட் டித் தங்களைச் சேர்ந்த நான் படும் துக்கத்தைத் தீர்க்கக்கூடாதா? இப்படிச் செய்யாவிட்டால் புருஷோத்தமனென்ற பெயர் தங்க ளுக்கு எப்படித் தகும்? அதைக் காப்பாற்றிக்கொள்ளுங்கள். நான் தங்களை நாதனாய் அடைந்தும் அநாதையைப்போலிருக்கிறேன். ஓட் டத்தில் ஏறின பிறகு கூலிகேட்பதுபோல் தாங்களும் நானும் ஏகாந்த மாயிருக்கையில், 'தங்களுக்கு மிகவும் ப்ரியமான தர்மம் என்று நான் கேட்டிருக்கிறேன். 'பிறர் துக்கப்படுவதைப் பார்த்தால் ஸஹிக் காமலிருப்பதே உத்தமமான தர்மம்; அதே எனக்கு ப்ரியம். அதே என் ஸ்வபாவ'மென்று தாங்களே சொல்லக் கேட்டிருக்கிறேன். வேறு தூதன் முதலியவர்கள் சொன்னதில்லை. 'இது வார்த்தையேயொ ழிய அனுஷ்டானத்திற்கு வரவில்லை' யென்று ஆஞ்ஜனேய! என் ப்ரபுவைக் கேள்.

"தாங்கள் அளவற்ற வீர்யம் உத்ஸாஹம் பலம் முதலிய அனந்த கல்யாண குண பரிபூரணனென்றும், கம்பீரத்தன்மையில் ஸமுத் ரத்தைப்போன்றவரென்றும், பிறரால் அசைக்க முடியாத வரென்றும், இந்த்ரன எப்படி ஸ்வர்க்கத்திற்கு அதிபதியோ அப்படி இந்தக் கடல் சூழ்ந்த பூமிக்கு நாதனென்றும் அறிவே" னென்று அவரிடத்தில் சொல்லவேண்டும். ஆஞ்ஜ நேய! ரகுவீரன் சொன்ன வார்த்தையைத் தவறுகிறதுண்டோ? அஸ்த்ரவித்தையில் அவருக்கு நிகருண்டோ? அவருடைய பலத்

ராக்ஷஸர்களிடத்தில் ஏன் ப்ரயோகிக்கக்கூடாது? யுத்தகளத்தில் நாகர்களாவது கந்தர்வர்களாவது அஸுரர்களாவது தேவர்களாவது ராமனுடைய பாணவேகத்தைத் தடுக்கமுடியுமா? அந்த வீரருக்கு என்னிடத்தில் நிஜமான ப்ரேமையும் என்னைச் சீக்ரத்தில் மீட்க வேண்டுமென்ற இச்சையுமிருந்தால் கூர்மையான பாணங்களால் ராக்ஷஸர்களை ஏன் நாசஞ்செய்யவில்லை? அவ்வளவென்ன? லக்ஷ்மணன் பலவானல்லவா? வீரனல்லவா? சத்ருக்களுக்குக் காலனல்லவா? ராமனிடத்தில் உத்திரவு பெற்று என்னை ரக்ஷிக்கக்கூடாதா? வாயுவிற்கும் அக்னிக்கும் ஸமமான வேகத்தையும் தேஜஸையுமுடைய அவ்விருவர்களும் தேவர்களாலும் எதிர்க்கப்படுவார்களா? அவர்கள் சேர்ந்திருந்தால் என்னை ஏன் கவனிக்கவில்லை? சத்ருவர்க்கங்களை வேரறுத்து என்னை ரக்ஷிக்க அவர்களுக்குச் சக்தியில்லையோ? இது வரையில் அப்படிச் செய்யவில்லையோ? இப்பொழுது நான் படும் அவஸ்தைகளைப் பார்த்தால் தங்களுடைய ப்ராணனை கொடுத்தாவது என்னை ரக்ஷிப்பதற்கு நான் தகாதவளோ?

ஆகையால் அவர்களிடத்திலாவது என்னிடத்திலாவது ஏதோ குற்றமிருக்கவேண்டும். அவர்கள் இப்படிச் செய்ய ஸமர்த்தர்களென்று எவரும் ஒப்புக்கொள்வார்கள். ஆகையால் என்னிடத்தில் பெரிய குற்றம் ஏதோ இருக்கிறது; ஸந்தேஹமில்லை. நான் ஸர்வமும் தெரிந்தவளா? எனக்குத்தெரியாமல் நான் பாபத்தைச் செய்திருக்கலாம். அதை அனுபவிக்காமல் தீருமோ? காரணமிருக்கையில் கார்யம் உண்டென்பதில் ஸந்தேஹமோ? ஒரு வேளை அவர் என்னை வனத்திற்கு அழைத்துப்போகமாட்டேனென்று சொன்னபொழுது "தாங்கள் புருஷவேஷந்தரித்த ஸ்த்ரீயென்பதை அறியாமல் அந்யாயமாக என் தகப்பன் மோசம்போய் என்னைத்தங்களுக்கு விவாஹஞ் செய்து கொடுத்துவிட்டாரே'' யென்று சொல்லி மஹா அபசாரத்தைச் செய்திருக்கிறேனல்லவா? அந்தப் பாபம் போதாதா" வென்றாள்.

ஸீதை அப்படித் தீனமாய்க் கண்ணீர் பெருக ப்ரலாபித்ததைக் கேட்டு ஆஞ்ஜநேயர் மனங்கலங்கித், "தாயே! தங்களைப்பிரிந்த துக்கத்தால் ராமன் இதர விஷயங்களில் ஆசையற்றுச் சோக ஸமுத்ரத்தில் முழுகியிருக்கிறார். லக்ஷ்மணன் பரிதபிக்கிறார். ஸத்யத்தின் மேல் ஆணையிட்டுச் சொல்லுகிறேன். இவ்வளவு கஷ்டப்பட்டுத் தங்களைக் கண்டுபிடித்தேன். இனிமேலும் தாங்கள் க்லேசப்படவேண்

டிய ந்யாயமென்ன? இந்த முஹூர்த்தத்தில் தங்களுடைய துக்கங்களெல்லாம் நாசமடைந்தன. மஹாபலவானுன அந்தப் புருஷச்ரேஷ்டர்கள் தங்களைப் பார்க்க ஆவல்கொண்டு லங்கையைச் சாம்பலாய் அழிக்கப்போகிறார்கள். துஷ்டனுன ராவணனையும் அவனுடைய பந்துக்களையும் யுத்தத்தில மடித்துத் தங்களை அயோத்யைக்கு அழைத்துப் போவார்கள். ஆகையால் ராகவனுக்கும் லக்ஷ்மணனுக்கும் தேஜஸ்வியான ஸுக்ரீவனுக்கும் வானரர்களுக்கும் நான் சொல்ல வேண்டிய ஸமாசார மென்ன" வென்றார்.

அதற்கு ஸீதை சோகத்தால் தழதழக்க, "மாருதே! லோகத்தில் ஸ்தரீகள் இஹ பர ஸாதகத்திற்காகவும் தங்களை ரக்ஷிப்பதற்காகவும் புத்ரர்களைப் பெறுகிறார்கள். என் மாமியான கௌஸல்யையோ அப்படிச் செய்யவில்லை. பெருந்தன்மையான ஸ்வபாவமுடையவளாகையால், ஸகல லோகங்களையும் ரக்ஷிக்கும் புத்ரன் பிறக்கவேண்டுமென்று வ்ரதங்களை அனுஷ்டித்து லோகோபகாரத்திற்காக ரகுவீரனைப் பெற்றாள். அவளுடைய உத்தேசம் வீணுகுமோ? அவர் ரக்ஷிக்கவேண்டிய லோகத்தில் நானும் சேரவில்லையா? என்னை ரக்ஷிக்கவேண்டுமென்று நான் ப்ரார்த்திப்பதும் பிசகு. அந்தக் கவலை அவருக்கல்லவா? காலதாமஸத்தை ஸஹிக்க முடியாமல் நான் சீக்ரப்படுத்துவதேயொழிய வேறல்ல. அவருக்கு என்னை ரக்ஷிக்கச் சக்தியிருந்தால் போதும். அப்பொழுது எனக்குக் குறைவென்ன? அவருக்கு எப்பொழுதும் பக்தர்களை ரக்ஷிக்கும் சக்தியும் கருணையும் குறையாமலிருக்கவேண்டுமென்று நாம் ப்ரார்த்திக்கவேண்டியது மாத்ரமே. ஆகையால் ரகுவீரன் க்ஷேமமாயிருக்கிறாராவென்று நான் விசாரித்ததாகச் சொல். அவரை நான் ஸாஷ்டாங்கமாய் நமஸ்கரித்தேனென்று சொல். ஏனென்றால், லோகத்தார்களைப்போல் அவரிடத்தில் நான் ப்ரார்த்திக்கவேண்டியது ஏதாவதிருந்தால் இந்த நமஸ்காரத்தைத்தவிர நான் செய்யவேண்டியது வேறென்ன?

மாலைகள் ரத்னங்கள் ப்ரியமான பார்யைகள் இன்னும் இந்த விசாலமான பூமியில் அடையமுடியாத ஸம்பத்துகளையும் விட்டு லக்ஷ்மணன் மாதாபிதாக்களிடத்தில் வணக்கமாய் உத்திரவுபெற்றுக்கொண்டு, தமயனிடத்தில் வைத்த ஸ்நேஹத்தாலும் பக்தியாலும் அவரைப் பின்தொடர்ந்து, அவருக்கு ஸகல கைங்கர்யங்களையும் செய்து ஆரண்யத்தில் ரக்ஷித்துவருகிறானல்லவா? ஸிம்ஹத்தைப்

பெருந்தன்மையான ஸ்வபாவத்தையுடையவன்; பார்க்க ப்ரியமான
வன்; தன் தாயைப்போல் என்னையும் பிதாவைப்போல் ராமனையும்
பாவித்துச் சுச்ரூஷை செய்பவன்; பெரியோர்களைப் பணிகிறவன்;
ராமனுக்கு ஸகலவித கைங்கர்யத்தையும் செய்யும் பாக்யம் பெற்ற
வன்; ஸகல கார்யங்களையும் செய்ய ஸமர்த்தன்; அதிகமாய்ப் பேசாத
வன்; என் மாமனான தசரதருக்கு ஸமானன்; அவருக்கு ப்ரியமான
புத்ரன்; என் ப்ரீதிக்கு எப்பொழுதும் பாத்ரன்; ச்ரேஷ்டன்; தைர்ய
வான்; ராமனுக்குத் தம்பி; கட்டளையிட்ட கார்யங்களை நிர்வஹித்துச்
செய்யக்கூடியவன்; ராமன் அவனுடைய முகத்தைப் பார்த்துத் தச
ரதர் காலஞ்சென்றதையும் நினைக்காதிருக்கிறார். எப்பொழுதும்
பரிசுத்தன், ஸமர்த்தன், மிருதுவான ஸ்வபாவமுள்ளவன்; ராகவ
னுக்கு ப்ரியன்; அவனை என் விஷயத்தில் கவனிக்கவேண்டுமென்று
நான் க்ஷேமம் விசாரித்ததாகச் சொல். என்னை ராவணன் அபஹரித்
தானென்று அவனுக்குத் தெரியாது. இல்லாவிட்டால் இவ்வளவு
காலம் நான் கஷ்டபடவேண்டுமா?

ஆஞ்ஜநேய! ராகவன் என் துக்கத்தை நாசஞ்செய்யும்படி
நீயே அவருக்குச் சொல்லவேண்டியது. வானர ச்ரேஷ்ட! இந்தக்
கார்யத்தை நீயே முடித்துவைக்கவேண்டியது. உன் ஸாமர்த்யத்தால்
ராகவன் என்னை மீட்க ஸகல ப்ரயத்னங்களையும் செய்யவேண்டியது.
மஹாசூரனும் என் நாதனுமிருக்கும் ராமனிடத்தில் 'தாசரதே!
நான் ஒரு மாஸத்திற்குமேல் பிழைத்திருக்கமாட்டேன். இது ஸத்
யம். பூர்வத்தில் இந்த்ரன் விருத்ராஸுரனென்ற ப்ராஹ்மணனைக்
கொன்று, அந்த ப்ரஹ்மஹத்யையால் ஸ்வர்க்கத்தையும் ராஜ்யலக்ஷ்மீ
யையும் இழந்து, தரித்ரனாய்க் கஷ்டப்பட்டான். அப்பொழுது
நாராயணன் மற்ற தேவதைகளுடன் அச்வமேதமென்ற வைஷ்ணவ
யாகத்தைச் செய்து அவனுடைய பாபத்தைப் போக்கிப் பூர்வ ஸ்திதி
யில் வைத்தார். (அவனை விட்டு விலகின கௌசிகீயென்ற ராஜ்ய
லக்ஷ்மீ, கவாக்ஷமென்ற புண்ய தீர்த்தத்தில் வஸித்துக்கொண்டிருந்
தாள். தேவர்கள் அங்கே சென்றவுடன் பாதாளத்தில் மறைந்தாள்.
அப்பொழுது அவளை அழைத்து வரக்கூடியவர்கள் யாரென்று
தேவர்கள் கவலைகொள்ள, ஆகாசவாணி அவளைக் கொண்டுவரக்கூடி
யவர் உத்தமபுருஷலக்ஷணங்கள் பொருந்தின நாராயணனே'
யென்று சொன்னாள். அதைக் கேட்டுத் தேவர்கள் பகவானை ப்ரார்த்
திக்க, அவர் லக்ஷ்மீயை அழைப்பித்து ஸ்வர்க்கத்தில்

திக்கப்பட்டு இங்கே சிறையில் வைக்கப்பட்டிருக்கும் என்னைத் தாங்கள் ரக்ஷிக்கத்தகுந்தவர்களென்று அடிக்கடி சொல்லவேண்டியு" தென்று ஸமாசாரத்தைத் தெரிவித்துத் தன் வஸ்த்ரத்திலிருந்து திங்களாகரமான சூடாமணியை எடுத்து ராகவனுக்கு அடையாளமாகக் காட்டும்படி ஆஞ்ஜநேயரிடத்தில் கொடுத்தாள். அவர் அதை வணக்கமாய்ப் பெற்றுக்கொண்டு விரலில் தரிக்கப்பார்த்தார். ஆனால் தான் விச்வரூபத்தை மாற்றி முன்பு எடுத்த ஸூக்ஷ்ம ரூபத்துடனிருந்தபடியால் அது அந்த ஆபரணத்திற்கு ஸரியாகவில்லை.

பிறகு ஹநுமான் ஸீதையை நமஸ்கரித்து ப்ரதக்ஷிணஞ்செய்து வணக்கமாய்ப் பக்கத்தில் நின்றார். ஜானகியைக் கண்ட ஸந்தோஷத்தால் பூரித்துத், தேஹம் லங்கையிலிருந்தபோதிலும் மனஸால் ராகவனுடைய திருவடிகளை அடைந்து நமஸ்கரித்தார். பெருங்காற்றால் கொஞ்சம் அசைந்த பிறகு முன்போல் ஸ்திரமாயிருக்கும் மலையைப் போல், ஆஞ்ஜநேயர் ஸீதையைத் தேடியும் காணாமல் ப்ராணனைவிட நிச்சயித்துக் கலங்கி, அவளை கண்ட பிறகு ஆனந்தபரவசராய், அவளிடத்திலிருந்து சூடாமணியைப் பெற்றுக்கொண்டு ராமனுடைய ஸந்நிதிக்குத் திரும்பிப்போக யத்தனித்தார்.

## ஸர்க்கம் 39.

## மாருதி ஸீதையைத் தேற்றினது

பிறகு ஸீதை, "ஆஞ்ஜநேய! இந்த அடையாளம் ராமனுக்கு நன்றாய்த் தெரியும். என் விவாஹ ஸமயத்தில் என் தாய் என் பிதாவிடத்திலிருந்து இதை வாங்கி நான் அணிந்துகொள்ளும்படி தசரதரிடத்தில் கொடுத்ததை, ராமன் ப்ரத்யக்ஷமாய்ப் பார்த்துக்கொண்டிருந்தார். ஆகையால் இதைக் கண்டவுடன் என்னையும் என் தாயையும் தசரதரையும் ஸ்மரிப்பார். இந்தக் கார்யத்தில் நீ முன்னைவிட அதிக உத்ஸாஹமுள்ளவனாய் மேல்நடக்கவேண்டிய விஷயங்களை யோசித்துச்சொல். என் ஸமாசாரத்தைத் தெரிவித்தவுடன் எல்லாம் முடிந்துவிட்டதென்று எண்ணாதே. இந்தக் கார்யத்தைத் தலைக்கட்டுவதற்கு நீயே ஸமர்த்தன். ஸகல ப்ரயத்னங்களையும் செய்து என் துக்கத்தையும் போக்கு. ராகவன் எப்பொழுது ஸந்தோஷிக்கப்போகிறாரென்று நீ கவலை கொண்டிருப்பதே என் துக்கத்தை நாசஞ்செய்யு"மென்றாள்.

மாருதி அந்த வார்த்தைகளை மனஸில் வைத்துத் தலைவணங்கி, அப்படியே செய்கிறே"னென்று ப்ரதிக்ஞைசெய்து போகப் புறப்பட்டார். அதைக் கண்டு ஸீதை, "ஐயோ! இவன் போய்விட்டால் நமக்குக் கதி யார்? சோக ஸமுத்ரம் மறுபடியும் மூடிக்கொள்ளுமே"யென்று, கண்ணீரால் குரல் தழதழக்க, "ராம லக்ஷ்மணர்களையும் ஸுக்ரீவனையும் அவனுடைய மந்த்ரிகளையும் வயஸ்சென்ற ஸகல வானரர்களையும் அவர்களுடைய தர்மத்திற்குத் தகுந்தபடி நான் க்ஷேமம் விசாரித்ததாகச் சொல். இந்தத் துக்கஸமுத்ரத்திலிருந்து ராமன் என்னைக் கரையேற்றவேண்டியது உன்னாலேயே. நான் உயிரை விடுவதற்குமுன் ராகவன் என்னைப் பார்க்கும்படி நீயே செய்யவேண்டியது. அப்படிச் செய்து விசேஷ தர்மத்தைக் கட்டிக்கொள். அகில ஜீவகோடிகளையும் தன் பந்துக்களையும் ரக்ஷிப்பவரென்றும் பிறர் துக்கப்படுவதை ஸஹிக்க மாட்டாரென்றும் ப்ரஸித்தி பெற்ற ராமன் அந்தக் கீர்த்தியைக் காப்பாற்றிக்கொள்ளவாவது என்னைச் சிறை மீட்கவேண்டியது. உத்ஸாஹத்தைக் கொடுக்கும் வார்த்தைகளை எப்பொழுதும் நீ சொல்லிக் கொண்டிருந்தால் அதைக் கொண்டு ராமன் என்னை அடையும் விஷயத்தில் ப்ரயத்னஞ் செய்வார். அவருடைய பராக்ரமம் விருத்தியாகு"மென்றாள்.

அப்பொழுது ஆஞ்ஜநேயர் தலைமேல் கைகூப்பி, "அம்மா! ரகுநாதன் அதிசீக்ரத்தில் வானர ஸைன்யங்களுடன் இங்கே வந்து சத்ருக்களை ஜயித்துத் தங்களுடைய துக்கத்தைப் போக்குவார். அவர் பாணப்ரயோகஞ் செய்கையில் மனுஷ்யர்களாவது தேவர்களாவது அஸுரர்களாவது எதிரில் நிற்கமுடியுமா? தங்களைத் திரும்பியடையும் விஷயத்தில் ஸூர்யன் இந்த்ரன் யமன் முதலிய ஸகல தேவ கணங்களையும் துரத்தியடிப்பதற்கு ஸமர்த்தரல்லவா? இந்தக் கடல் சூழ்ந்த பூமியை ரக்ஷிக்க அவரே தகுந்தவர். தங்கள் மூலமாக அவருக்கே விசேஷ லாபமுண்டாகப் போகிற"தென்றார்.

இப்படி ஆஞ்ஜநேயர் நன்றாயும் யதார்த்தமாயும் சொல்லக் கேட்டு ஸீதை அவரை மிகவும் ஆதரித்து, அவர் போய் விடுகிறாரே யென்று அவரை அடிக்கடி ப்ரியத்துடன் பார்த்து, அவருக்கு உத்திரவு கொடுக்க மனஸ் வராமல், ராகவனுக்குத் தன்னிடத்திலுள்ள ஸ்நேஹத்தைக் குறிக்கும் சில வார்த்தைகளைச் சொன்னாள். "வானர ச்ரேஷ்ட! ஒருவேளை மிகவும் களைத்திருந்தால் ஒரு தினம்

இவ்விடத்தில் தங்கி, மாங்களாலும் கொடிகளாலும் நன்றாய் மறைக்கப்பட்ட ஓரிடத்தில் இளைப்பாறி நாளை போகலாம். பாக்யமற்ற நான் உன் ஸமீபத்திலிருந்தால் இந்தப் பெரும் துக்கத்தைக் கொஞ்சகாலம் மறந்திருப்பேன். நீ இங்கிருந்து போய் ராமனுக்கு ஸமாசாரத்தைத் தெரிவித்து அவரை அழைத்துக்கொண்டு திரும்பிவருவதற்குள் என் ப்ராணன் நிற்பது நிச்சயமில்லை. அதில் ஸந்தேஹமென்ன? ஆகையால் அதற்குள் ராமன் இங்கே வரும்படி செய்ய வேண்டியது. நீ வருவதற்குமுன் மிகுந்த துக்கத்தை அனுபவித்துக்கொண்டிருந்தேன். உன்னைப்பார்த்து அதை மறந்தேன். இப்பொழுது நீயும் கண்ணில் படாமல் போய்விட்டால் முன்துக்கம் முன்னைவிட அதிகமாய் என்னைக் கொளுத்துமே.

வானரவீர! ஆனால் ஒருஸந்தேஹம் மாத்ரம் இடைவிடாமல் என்னை உபத்ரவிக்கிறது. அதாவது, ராம லக்ஷ்மணர்களும் வானர ஸைன்யங்களும் இந்தக் கோரமான பெருங்கடலை எப்படிதாண்ட முடியும்? உன்னையும் கருடனையும் வாயுவையும் தவிர இதைத் தாண்ட கூடியவர்களுமுண்டோ? கார்யங்களை ஸாமர்த்யமாய் முடிப்பதில் உனக்கு நிகரில்லை. நாம் உத்தேசித்த கார்யத்திற்குப் பெரும் தடையாயிருக்கும் இதற்கு என்ன உபாயம் உனக்குத் தோன்றுகிறது; நீ ஒண்டியாய் இந்தக் கார்யத்தை முடிக்கத் திறமையுள்ளவன். இப்படிச் செய்வதில் உனக்கு விசேஷ கீர்த்தியுண்டாகும். ஆனால் ராகவன் ஸைன்யங்களுடன் இங்கே வந்து ராவணனை யுத்தத்தில் ஜயித்து என்னை அயோத்யைக்கு அழைத்துப் போனுல்லவா எனக்குப் பெருமை? சத்ருகுல காலனான ரகுவீரன் கூரான பாணங்களால் லங்கையைக் கலக்கி என்னைப் அழைத்துப் போனலல்லவா அவருக்குப் பெருமை? ஆகையால் எனக்கும் அவருக்கும் யாதொரு கீர்த்திக்குறைவில்லாமலும் அவருடைய பராக்ரமம் நன்றாய் விளங்கும்படியாயும் உபாயஞ்செய்யவேண்டியது உன் கடமை" யென்றாள்.

இப்படி அநேக அர்த்தங்களடங்கி யுக்தியுடன் ஸீதை சொன்ன வார்த்தையைக் கேட்டு ஹனுமான், "தேவி! வானர ஸைன்யங்களுக்கு அதிபதியான ஸுக்ரீவன் அளவற்ற பராக்ரம முடையவர்; தங்களை எப்படியாவது கண்டு பிடித்து ராமனுடன் சேர்த்துவைக்கவேண்டுமென்று நிச்சயஞ்செய்திருக்கிறார். கணக்கில்லாத வானர ஸைன்யங்களால் சூழப்பட்டு ராக்ஷஸர்களை நாசஞ் செய்யப்போகிறார். அவருக்கு உட்பட்டவர்களெல்லோரும்

பராக்ரமசாலிகள், மிகுந்த சக்தியுடையவர்கள், பறவான்கள், மனோ வேகமாய்ச் செல்லுகிறவர்கள், ஸகல திக்குகளிலும் தடையில்லாமல் ஸஞ்சரிப்பவர்கள், அளவற்ற தேஜஸ்விகள், பெரிய கார்யங்களிலும் கொஞ்சங்கூட ச்ரமத்தையடையாதவர்கள்; அவர்கள் வெகு உத்ஸாஹத்துடன் ஆகாச மார்க்கமாய் இந்தப் பூமியை அடிக்கடி சுற்றி வந்திருக்கிறார்கள். ஸுக்ரீவனுடைய ஸபையில் இருப்பவர்களெல்லோரும் என்னை மிஞ்சினவர்கள், அல்லது எனக்கு ஸமானர்கள்; என்க்குக் குறைந்தவர்கள் ஒருவரும் அங்கில்லை. நான் இங்கே வந்திருக்கும்பொழுது அந்த மஹா பலவான்கள் வரத்தடையென்ன? அரசர்கள் முக்யமானவர்களை வெளியில் அனுப்புவார்களா? ஸாமான்யர்களையே தூது செல்லச் சொல்வார்கள். ஒரே தாண்டாய் வானராதிபதிகள் லங்கையில் வந்து குதிப்பார்கள். தாங்கள் வ்யஸனப்பட வேண்டாம்; துக்கத்தை விடுங்கள். அளவற்ற ஸத்வமுடைய அந்தப் புருஷ ச்ரேஷ்டர்களான ராமலக்ஷ்மணர்கள் என் முதுகிலேறிக்கொண்டு ஸூர்ய சந்த்ரர்கள் உதித்ததுபோல் தாங்களிருக்குமிடத்தில் வந்து, லங்கையைப் பாணங்களால் கொளுத்துவார்கள். ராமன் ராவணனையும் அவன் பரிவாரங்களையும் யுத்தத்தில வதஞ்செய்து தங்களை அயோத்யைக்கு அழைத்துப் போவார். ஆகையால் தாங்கள் ஆறுதலடையவேண்டியது. தங்களுக்கு ஸகல மங்களங்களுமுண்டாகட்டும். ராவணன் நாசமடையும் காலத்தைத் தாங்கள் அதிசீக்ரத்தில் எதிர்பார்க்கலாம். ஜ்வலிக்கும் அக்னியைப்போல் ராகவன் இவ்விடத்திற்கு வருவதையும், ராவணனைக் கொல்வதையும், தாங்கள் துக்கஸமுத்ரத்தைத் தாண்டுவதையும் சீக்ரத்தில் பார்ப்பீர்க"ளென்று ஸீதையை ஸமாதானஞ்செய்து அங்கிருந்து போகப் புறப்பட்டு, அவளுக்கு இன்னும் அதிக நம்பிக்கையுண்டாகும்பொருட்டு மறுபடியும், "அம்மணி! சத்ருக்களுக்குக் காலனை கோதண்டபாணி ஸகல ப்ரயத்னங்களையும் குறைவறச் செய்து லக்ஷ்மணனுடன் இந்த லங்கைக் கோட்டைவாசலில் வந்து நிற்பதையும்; நகங்களையும் பற்களையும் ஆயுதங்களாயுடையவர்களும், ஸிம்ஹம் புலி இவைகளைப்போல் பராக்ரமசாலிகளும் மதயானைகளைப்போல் காந்தியுள்ளவர்களுமான வானர வீரர்கள் ஒன்று சேர்ந்து இங்கே படையெடுத்து வருவதையும், இங்கே மலய பர்வதத்தின் தாழ்வரைகளில் வானர ச்ரேஷ்டர்களின் கூட்டங்கள் பர்வதங்களைப்போலும் மேகங்களைப்போலும் சப்தித்துக்கொண்டு பரவியிருப்பதையும் பார்க்கப்போகிறீர்கள். ஸிம்ஹத்தால் பிடிக்கப்பட்ட யானையைப்போல் ராகவன் தங்களைப் பிரி

ந்து மன்மத பாணத்தால் ஹிருதயத்தில் அடிபட்டு வருந்துகிறார். அம்மா! அழவேண்டாம்; மனஸில் கவலை வைக்கவேண்டாம். சசீதேவி கொஞ்சகாலம் இந்த்ரனைப் பிரிந்து மறுபடியும் கூடினது போல் ராகவனுடன் சேருவீர்கள். அவருக்கு மேலானவர்களுமுண்டோ? லக்ஷ்மணனைப்போன்றவர்கள் யார்? அக்னிக்கும் வாயுவிற்கும் ஸமமான அந்த ஸஹோதரர்கள் தங்களுக்கு ஆதாரமாயிருக்கிறார்கள். ராக்ஷஸர்களால் நிறைந்த இந்தக் கோரமான தேசத்தில் நெடுங்காலம் தாங்கள் வஸிக்கப்போகிறதில்லை. தங்களுடைய நாதன் இங்கே வர நெடுநாள் செல்லுமோ? நான் போய் அவரைக் காணும் வரையில் தாங்கள் பொறுத்திருக்கவேண்டு"மென்று ப்ரார்த்தித்தார்.

---

## ஸர்க்கம் 40.

### இதுவுமது.

மஹாபுத்திமானான வானரவீரன் சொல்வதைக் கேட்டு ஸீதை தனக்கு ஹிதமான வார்த்தையைச் சொன்னாள். "பயிர் பாதி வளர்ந்து பயன் கொடுக்கும் ஸமயத்தில் மழையில்லாமல் காய்ந்துபோய்ப் பிறகு தைவ ஸங்கல்பத்தால் மழை பெய்து செழிப்பதுபோல், ராமனோடு ஸகல போகபோக்யங்களையும் குறைவில்லாமல் அனுபவித்து, நடுவில் சொல்லமுடியாத கஷ்டங்களை அடைந்து ப்ராணனை விடுவதற்கு நிச்சயித்தேன். அப்பொழுது உன் வார்த்தைகள் அமிருததாரையைப்போல் எனக்குப் போன உயிரைத் திரும்பக் கொடுத்தன. நான் அந்தப் புருஷ ச்ரேஷ்டனைத் தர்சித்து, துக்கத்தால் இளைத்த அவயங்களால் அவரை ஆசைதீர ஆலிங்கனஞ்செய்து கொள்ளும்படி நீயே என்னிடத்தில் தயை செய்யவேண்டும். அவர் கோபங்கொண்டு காக்கையின்மேல் ப்ரஹ்மாஸ்த்ரத்தை ப்ரயோகித்ததையும், அதனுடைய வலது கண்ணைப் பிடுங்கினதையும், நாங்களிருவரும் ஒரு பர்வதத்திலிருக்கையில் என் கன்னத்திலிட்ட திலகம் அழிந்துபோக, என் நாதன் மனச்சிலையென்ற பர்வத தாதுவால் மறுபடியம் திலகமிட்டதையும் அந்தரங்க அடையாளங்களாய் ஞாபகப்படுத்திக்கொள்ளச்சொல்.

மஹேந்த்ரன் வருணன் முதலிய திக்பாலர்களுக்கு ஸமமான ரகுவீரன், தன் பார்யையை ஒரு ராக்ஷஸன் அபஹரித்துச் சிறையில் வைத்திருப்பதை எப்படிப் பொறுத்திருக்கிறாரோ? 'தாங்கள் ப்ரியத்துடன் கொடுத்த சூடாமணியை இதுவரையில் ஜாக்ரதையாய்க் காப்பாற்றிவந்தேன். துக்கம் நேர்ந்தபோதெல்லாம் தங்களைப் பார்ப்பதுபோல் அதைப் பார்த்துத் தேறுதலடைந்தேன். அந்த ஜீவாதாரத்தையும் தங்களுக்கு அனுப்பிவிட்டேன். ஆகையால் தங்களைப் பார்க்காமல் தபித்துக் கொண்டிருக்கும் நான் இனி உயிரை வைத்துக்கொள்ள முடியாது. பிறரால் ஸஹிக்க முடியாத கஷ்டங்களையும், கோர ராக்ஷஸிகள் என் ஹ்ருதயத்தைப் பிளக்கும்படியாகச் சொல்லும் வார்த்தைகளையும், தாங்கள் என்னை எப்படியாவது ரக்ஷிப்பீர்களென்றல்லவா பொறுத்திருக்கிறேன்? தாங்கள் சத்ருக்களை நாசஞ் செய்வீர்களென்ற நம்பிக்கையால் ஒரு மாஸம் வரையில் உயிரை வைத்துக்கொண்டிருப்பேன். அப்பொழுதும் தங்களை அடையாவிட்டால் அடுத்த க்ஷணத்தில் ப்ராணனை விடுவேன். ராவணன் வெகு க்ரூரன்; பயங்கரமன ரூபமுள்ளவன்; நான் அவனைப் பார்க்க ஸஹிக்கமாட்டேன். தாங்களும் தாமஸஞ் செய்வதாக நான் கேள்விப்பட்டால் ஒரு நிமிஷங்கூடப் பிழைத்திருக்கமாட்டே' னென்று ரகுவீரனிடத்தில் சொல்லவேண்டிய" தென்றாள்.

ஸீதை இப்படிக் கண்ணும் கண்ணீருமாய் ப்ரலாபிப்பதைக் கேட்டு ஹனுமான் "தேவி! தங்களைப் பிரிந்து தாங்கள் இருக்குமிடம் தெரியாமல் துக்கம் மேலிட்டிருப்பதால் மாத்ரம் தங்களை மீட்பதற்குத தகுந்த ப்ரயத்னங்களைச் செய்யவில்லையேயொழிய, ராகுநாதனுக்குத் தாங்களிருக்குமிடம் தெரிந்த பிறகும் ஒரு க்ஷணமாவது சும்மாயிருப்பாரா? இதை ஸத்யத்தின்மேல் ஆணையிட்டுச் சொல்கிறேன். தன் உயிர்க்குயிரான ராமன் க்லேசப்படுகையில் லக்ஷமணனுக்கு வேறு ஞாபகமிருக்குமா? போகட்டும். இவ்வளவு கஷ்டப்பட்டாவது தங்களைக் கண்டுபிடித்தேனல்லவா? இனிமேலும் துக்கப்படவேண்டுமோ? இந்த முஹூர்த்தத்திலேயே அவையெல்லாம் தீர்ந்தன. சத்ருகுல காலர்களான அந்தப் புருஷோத்தமர்கள் தங்களைப் பார்ப்பதில் உத்ஸாஹமுடையவர்களாய்ப் பாணங்களால் லங்கையைச் சாம்பலாயடித்து க்ரூரனான ராவணனையும் அவனுடைய பரிவாரங்களையும் யுத்தத்தில் மடித்துத் தங்களை அயோத்யைக்கு அழைத்துப் போவார்கள்.

ராமனுக்கு நன்றாயத் தெரிந்ததும், ப்ரீதியை உண்டுபண்ணக் கூடியது மான ஓர் அடையாளத்தை மறுபடியும் சொல்லுங்க' ளென்று ப்ரார்த்தித்தார். அதற்கு ஸீதை "இதுவரையிலுமே ச்ரேஷ்டமான அடையாளங்களைச் சொன்னேனே. இந்தச் சூடாமணியைக் கண்டவுடன் நீ சொல்லும் ஸகல வார்த்தைகளையும் நம்புவா"ரென்றாள். பிறகு மாருதி, அந்தச் சூடாமணியை எடுத்துக்கொண்டு, ஸீதையை நமஸ்கரித்துத், தான் வந்த கார்யத்தை நிறைவேற்றினதால் ஜய லக்ஷ்மி ப்ரகாசிக்கப் புறப்பட்டார்.

தன் தேஹத்தைவளர்த்து வேகத்தைச் சேர்த்துக்கொண்டு உயரக் கிளம்பத் தயாராயிருக்கும் ஆஞ்ஜநேயரைப் பார்த்து ஸீதை "நான் ராமனைப்போல் பார்த்துவந்த சூடாமணியையும் கொடுத்துவிட்டு, இவனையும் போகவிட்டு எப்படிப் பிழைத்திருப்பேன்? என் நாதனை எப்பொழுது காண்பேனோ? அவர் எப்பொழுது இங்கே வருவாரோ? அவருடைய தர்சனம் எனக்கு எப்பொழுது கிடைக்குமோ? எப்பொழுது என் துக்கம் தீருமோ?" வென்று முகம் வாடி, மெய் சோர்ந்து, கண்ணீர் பெருகக் குரல் தழதழக்க "ஆஞ்ஜநேய! ஸிம்ஹத்தைப்போல் பராக்ரமசாலிகளான ராமலக்ஷ்மணர்களையும் ஸுக்ரீவனையும் அவனுடைய மந்த்ரிகளையும் மற்ற வானரர்களையும் நான் க்ஷேமம் விசாரித்ததாகச் சொல் இந்தத் துக்க ஸமுத்ரத்திலிருந்து ராகவன் என்னை எப்படிக் கரையேற்றுவாரோ அப்படிச் செய்யவேண்டியது உன் கடமை. ராமனுடைய ஸமீபத்தில் சென்று நான் அனுபவிக்கும் தீவ்ரமான இந்தச் சோகத்தையும் இந்த ராக்ஷஸிகள் என்னை அதட்டி உபத்ரவிப்பதையும் நன்றாய்ச் சொல்லவேண்டியது. நீ போகும் வழியில் உனக்கு ஸகல மங்களங்களும் ஜயமும் உண்டாகட்டு"மென்றாள். இப்படி ஆஞ்ஜநேயர் ஸீதையின் விருத்தாந்தத்தையும் அவள் சொன்ன ஸமாசாரத்தையும் தெரிந்துகொண்டு தான் வந்த கார்யத்தை முடித்துவிட்டு, மிகுந்த ஸந்தோஷத்துடன் திரும்பிப் போக யத்னிக்கையில், செய்ய வேண்டிய கார்யம் கொஞ்சம் பாக்கியிருப்பதாகத் தோன்றிற்று. ஆகையால் அதை யோசிப்பதற்கு வடக்கே சென்றார்.

## ஸர்க்கம் 41.

### ஹனுமார் அசோக வனத்தை அழித்தது.



இப்படி ஸீதை சிறந்த வார்த்தைகளால் தன்னைக் கொண்டாட ஆஞ்ஜநேயர் திரும்பிப் போக நிச்சயித்து, அங்கிருந்து அப்புறம் சென்று யோசித்தார். "ஸீதையைக் கண்டுபிடிப்பது, ராவணனுடைய இருப்பிடத்தைத் தெரிந்து கொள்வதென்ற இரண்டு கார்யங்களைச் செய்ய நிச்சயித்தேன். ஸீதையைக் கண்டு பேசினேன். இனி ராவணனுடைய இருப்பிடத்தைத் தெரிந்துகொள்வதில் கொஞ்சம் பாக்கியிருக்கிறது. லங்கையையும் அதிலுள்ள ஸகல ஸ்தலங்களையும் நன்றாய்ப் பரிசோதித்தேன். ஆனால், ராக்ஷஸர்களுடைய பலாபலங்களையும் ராவணனுடைய அந்தரங்க அபிப்ராயத்தையும் அறியவில்லை. அதற்கு ஸாமதான பேதமென்ற உபாயங்களைக்காட்டிலும் தண்டோபாயமே ச்ரேஷ்டம். ராக்ஷஸர்களிடத்தில் ஸாமதானஞ் செய்ய முடியாது. அளவற்ற ஐச்வர்யத்தையுடையவர்களை த்ரவ்யத்தைக் கொடுத்து வசப்படுத்த முடியுமா? பலக்கொழுப்படைந்தவர்களுக்குள் கலஹம் செய்விப்பது ஸாத்யமில்லை. யுத்தத்தில் ஜயம் அபஜயம் நிச்சயமில்லையாகையால், ஒருபொழுதும் அந்த உபாயத்தைக் கைகொள்ளக் கூடாதென்று பெரியோர்கள் சொல்லுகிறார்கள். ஆனால் பலசாலிக்கு ஸகலமும் ஹிதமாகவே முடியுமென்றபடி, ஒப்பற்ற பலபராக்ரமமுள்ள எனக்கு அபஜயமென்பது ஒரு நாளுமில்லை. ஆகையால என் உத்தேசத்தை நிறைவேற்றுவதற்கு பராக்ரமமே தகுந்த உபாயமென்று எண்ணுகிறேன்.

இதைத் தவிர வேறு வழியில்லை. வீரர்களெல்லோரும் யுத்தத்தில் மடிந்த பிறகுதான் இந்த ராக்ஷஸர்கள் கொஞ்சமாவது அழிவார்கள். ஆனால் 'ஸீதையைக் கண்டுபிடித்து ராவணனிருக்குமிடத்தை அறிந்துவா' வென்று என்னை ஸுக்ரீவன் ஆக்ஞாபித்தார். அதைத் தவிர வேறு கார்யங்களைச் செய்வது தோஷமல்லவாவென்றால், உத்தேசித்த கார்யத்தைச் செய்வதில், அதற்கு விரோதமில்லாமல் அநேக கார்யங்களை முடிப்பவனே திறமையுள்ளவன். அல்ப கார்யத்தை முடிப்பதற்கும் ஒரே ஸாதனத்தை நம்பியிருக்கக்

கூடாது; அனேக ஸாதனங்களை ஸித்தமாய் வைத்திருக்கவேண்டும். அப்படிப்பட்டவனல்லவா கார்யத்தை ஸாதிப்பான்? பெரிய கார்யங்களைப் பற்றிச் சொல்லவேண்டுமோ? ராக்ஷஸர்களுடைய பலாபலங்களையும் யுத்தத்தில் எனக்கும் அவர்களுக்குமுள்ள தாரதம்யத்தையும் நன்றாய் அறிந்துகொண்டு மஹாராஜாவிடத்தில் திரும்பிச் சென்றாலொழிய அவருடைய கட்டளை பூர்த்தியாகுமா? லங்கையையும் அதிலுள்ள ராக்ஷஸர்களையும்பற்றி என்னைக் கேட்டால் நான் என்ன பதில் சொல்வேன்? ஆகையால் எனக்கும் இங்குள்ள ராக்ஷஸர்களுக்கும் ஸுலபமாய் யுத்தம் நேரும் உபாயத்தைத் தேடவேண்டும். அப்பொழுதுதான் ராவணனுக்குத் தன் ஸைன்யத்தின் பலத்திற்கும் என் பலத்திற்கும் பேதம் தெரியும். பிறகு ராக்ஷஸ ராஜனையும் அவனுடைய மந்த்ரிகளையும் ஸேனைத் தலைவர்களையும் எதிர்த்து, அவனுடைய பலத்தையும் ஸீதையைப் பற்றி அவன் மனஸிலுள்ள அபிப்ராயத்தையும் நன்றாய் அறிந்துகொண்டு திரும்பிப் போவேன்.

இந்த அசோகவனம் விசித்ரமான விருக்ஷங்களாலும் கொடிகளாலும் பார்ப்பவர்களுடைய கண்களையும் மனஸையும் கவர்கிறது. தேவேந்த்ரனுடைய நந்தனமென்ற தோட்டமும் இதற்கீடோ? காட்டுத்தீ உயர்ந்த மரங்களைப் பற்றுவதுபோல் இந்தக் கொடிய ராக்ஷஸனுடைய தோட்டத்தை நாசஞ்செய்தால் அவனுக்கு கடுங்கோபமுண்டாகும்; என்னைக் கொல்ல அநேக ஸைன்யங்களை அனுப்புவான்; அவர்களுக்கும் எனக்கும் கோரயுத்தம் நடக்கும். அந்த ராக்ஷஸப் படைகளை என் வீர்யாக்னியால் கொளுத்தி விட்டுக் கிஷ்கிந்தைக்குச் செல்வே"னென்று ஆலோசித்து, மாருதி வாயுபகவானைப்போல் கோபங்கொண்டு, தன் பயங்கரமான பராக்ரமத்தைப் ப்ரயோகித்துத் தொடைகளின் சண்டவேகத்தால் பெரிய விருக்ஷங்களை முறிக்க ஆரம்பித்தார். அந்தப்புரத்திலுள்ள மாச்சோலையை அழித்தார். நானாபக்ஷிகளாலும் மரங்களாலும் விளங்கும் அந்த வனத்திலுள்ள விருக்ஷங்களை முறித்தார்; தடாகங்களை உடைத்தார்; க்ரீடா பர்வதங்களைப் பொடிசெய்தார்; பறவைகள் பயந்து கூச்சலிட்டன; மாக்கொடிகள் வாடி வதங்கின; தாமரை முதலிய புஷ்பங்கள் காய்ந்து கருகின; அந்தச்சோலை காட்டுத் தீப்பற்றி அழிந்ததுபோல் விகாரமாய்க் காணப்பட்டது. கொடிகள் ஆதாரமற்றுப் பயத்தால் திகைத்து நிற்கும் பெண்களைப்போல் தோன்றின. க்ரீடா க்ருஹங்களும், கல்மண்டபங்களும், ஸாதாரண கட்டடங்களும், கொடிகளால் அமைக்கப்பட்ட க்ருஹங்களும் அழிந்தன; மஹாஸர்பங்க

ளும் துஷ்ட மிருகங்களும் மடிந்தன; அந்தத் தோட்டம் உருவழிந்தது. வாடாத பல மரங்கொடிகளுடன் ஸீதைக்குக் காவலாயிருந்த அந்தத் தோட்டம் மாருதியின் வீர்யத்தால் அழிக்கப்பட்டு முறிந்து விழுந்த விருக்ஷங்களால் சோகந்தாங்காமல் தலை சாய்ந்து கிடப்பது போல் காணப்பட்டது. இப்படி ராக்ஷஸாதிபதியின் மனஸைப் புண்படுத்தி, ஹனுமான் தான் ஒருவனே அநேக ராக்ஷஸ வீரர்களுடன் யுத்தஞ்செய்ய நிச்சயித்து உத்ஸாஹ லக்ஷ்மீயால் ஜ்வலித்துக் கொண்டு, தோட்டத்தின் வெளி வாசலில் காத்திருந்தார்.

---

## ஸர்க்கம் 42.

### ராவண கிங்கரர்களைக் கொன்றது.

பக்ஷிகளின் கூச்சலாலும் மரங்கள் முறியும் சப்தத்தாலும் லங்கையிலுள்ள ஸகல ப்ராணிகளும் பயந்து நடுங்கின. மிருகங்களும் பக்ஷிகளும் திகிலடைந்து நான்கு திக்குகளிலும் ஓடி ஊளையிட்டன. ராக்ஷஸர்களுக்கு அநேக அபசகுனங்கள் தோன்றின. அங்கிருந்த ராக்ஷஸிகள் திடீரென்று விழித்துக்கொண்டு பார்க்கையில் அசோக வனம் அழிந்ததையும், ஓர் வானர வீரன் அட்டஹாஸஞ் செய்வதையும் கண்டார்கள். ஆஞ்சநேயர் அவர்களைப் பயமுறுத்த எண்ணிக் கோரமான பெரிய ரூபமெடுத்தார். மஹா பர்வதத்தையொத்த தேஹத்தையும் ஒப்பற்ற பலத்தையுமுடைய அந்த வானரவீரனைக் கண்டு, ராக்ஷஸிகள் ஸீதையைப் பார்த்து "இவன் யார்? யாரைச் சேர்ந்தவன்? எங்கிருந்து எதற்காக வந்தவன்? உன்னுடன் இவன் எப்படிப் பேசலாயிற்று? உன்னிடத்தில் என்ன சொன்னான்? பயப்படாமல் சொல்"லென்று கேட்டார்கள். ஸகல உத்தம லக்ஷணங்களும் பொருந்தின தேஹத்தையுடைய அந்தப் பதிவ்ரதை "பயங்கரமான ரூபமெடுக்கக்கூடிய ராக்ஷஸர்களின் தந்த்ரங்களை என்னால் அறிய முடியுமோ? இவன் யாரோ? என்ன செய்வானோ? உங்களுக்கே நன்றாய்த் தெரியும். பாம்பின் கால் பாம்பிற்கல்லவா தெரியும்? இதிலென்ன ஸந்தேஹம்? உங்களைப்போலவே நானும் இவனைக் கண்டு பயந்துகொண்டிருக்கிறேன். இவனைப் பற்றி எனக்கு ஒன்றுந்தெரியாது. நினைத்தரூபங்களை எடுக்கக்கூடிய ராக்ஷஸன் வந்திருக்கிறானென்றே நினைக்கிறே"னென்றாள். (விவாஹ காலத்திலும் ரதிஸம

யத்திலும் ப்ராணனுக்கு ஆபத் நேரும் பொழுதும் ஸ்நேஹிதனுக்காக வும் தன்-தனம் முழுவதும் நஷ்டமாகும்பொழுதும் பொய் சொல்லு தல் பாதகமாகாதென்றபடி, ஸீதை, தன் ப்ராணனுக்கும் ஸ்நேஹித னுக்கும் ஆபத் நேராதபடி இவ்விதமாகச் சொல்லித் தப்பித்துக் கொண்டிருக்கலாம்)

ஸீதையின் வார்த்தையைக் கேட்டு ராக்ஷஸிகள் நான்கு புறங் களிலும் ஓடி மறைந்தார்கள். சில விகார முகமுள்ள ராக்ஷஸிகள் ராவணனிடத்தில் ஓடி அந்தக் கோரரூபமுள்ள வானர வீரனைப் பற்றிச் சொல்ல ஆரம்பித்தார்கள். "ஸ்வாமி! ஒரு குரங்கு நமது அசோக வனத்தில் வந்து ஸீதையுடன் ரஹஸ்யமாய்ப் பேசிற்று. இப் பொழுதும் அங்கேயே இருக்கிறது. அதின் பராக்ரமத்திற்கோ அளவில்லை, நாங்கள் பலவிதமாய்க் கேட்டும் ஸீதை அதைப்பற்றி யாதொன்றும் சொல்லவில்லை. இந்த்ரனுடைய தூதனோ, குபேரனு டைய தூதனோ; ஸீதையைத் தேடுவதற்கு ராமனால் அனுப்பப் பட்ட தூதனோ? அத்புதமான ரூபமுள்ள அந்தக் குரங்கு பல விருக்ஷங்களும் மிருகங்களுமுள்ள அழகான அந்தப்புரத் தோட்டத் தைச் சின்னபின்னமாக்கிவிட்டது. ஸீதையிருக்குமிடத்தைத் தவிர மற்ற விடமெல்லாம் நாசமாயிற்று. ஸீதையைக் காப்பாற்றுவத ற்கோ, அல்லது ச்ரமத்தாலோ தெரியவில்லை; அதற்கு அது ஒரு ச்ரமமா? அவளை ரக்ஷிப்பதற்காகவே அப்படிச் செய்திருக்கவேண் டும். அவளிருக்குமிடத்தில் அழகான துளிர்களோடும் புஷ்பங் களோடும் விளங்கும் சிம்சுபாவிருக்ஷத்தை அது தொடவேயில்லை. பயங்கரமான பராக்ரமமுடைய ஸ்வாமி! பயங்கரமான ரூபத்துடன் கூடின அந்த வானரனைத் தாங்களே தண்டிக்கும்படி ஆக்ஞாபிக்க வேண்டும். அவன் ஸீதையுடன் ரஹஸ்யமாய்ப் பேசியிருக்கிறான். நமது வனத்தையும் அழித்திருக்கிறான். கணக்கில்லாத ராக்ஷஸ ஸைன்யங்களுக்குத் தாங்கள் அதிபதி யல்லவா? தாங்கள் மனஸால் விரும்பிய இந்த ஸீதையுடன் பேசியும் ஒருவன் உயிருடனிருப்பது தகுமா" வென்று தெருவித்தார்கள்.

அதைக்கேட்டு ப்ரதாப லங்கேச்வரன் கோபத்தால் கண்கள் சுழல, அக்னியில் ஆஹுதிசெய்ததுபோல் ஜ்வலித்தான். எரியும் இர ண்டு திரவங்களிலிருந்து, எண்ணெய்ச் சுடர் கொதித்து விழுவது போல், கோபாவேசங்கொண்ட அவனுடைய நேத்ரங்களிலிருந்து நீர்த்துளிகள் விழுந்தன. பல பராக்ரமத்தில் தனக்கு ஸமமாய்க் கிங் கரர்களென்று பெயர்பெற்ற ராக்ஷஸவீரர்களை அழைத்து ஹனு

மாலைச் சிக்ஷிக்கும்படி ஆக்ஞாபித்தான். பலசாலிகளான அந்த எண்பதினாயிரம் கிங்கரர்களும் பல ஆயுதங்களுடன் அரண்மனையிலிருந்து வெளிப்பட்டார்கள். பெரிய வயிறு பல்லுகளுடையவர்கள், கோரரூபமுள்ளவர்கள்; மஹாபலவான்கள்; யுத்தஞ் செய்வதில் ஆசை கொண்டவர்கள்; ஆஞ்ஜநேயரைப் பிடிப்பதிலேயே நோக்கமுள்ளவர்கள். தோட்டத்தின் வாசலில் தயாராய் உட்கார்ந்திருக்கும் அந்த வானரவீரனை நெருங்கி, விளக்கு வெட்டுப் பூச்சிகள் நெருப்பில் விழுவது போல், அதிவேகமாக அவர்மேல் பாய்ந்தார்கள். விசித்ரமான கதாயுதங்களாலும் தங்கப்பிடி கட்டின பரிகை, ஸூர்ய காந்தியுள்ள பாணங்கள், இருப்புலக்கைகள், பெரிய கத்திகள், சூலம், ப்ராஸம், எறிவல்லயம், கத்தி முதலிய ஆயுதங்களாலும் நான்கு புறங்களிலிருந்தும் மாருதியை அடித்தார்கள்.

தேஜஸாலும் காந்தியாலும் ஜ்வலிக்கும் வாயுபுத்ரன் பெரிய மலையைப்போல் அசையாமல் நின்று பூமியில் வாலை அடித்துத் திக்குகள் நடுங்கும்படி கர்ஜித்தார்; பிறகு தன் சரீரத்தை மிகவும் பெரியதாய்ச் செய்துகொண்டு லங்கை கிடுகிடென்று நடுங்கும்படி ஸிம்ஹநாதஞ்செய்தார். சுற்றிலுமிருந்த பர்வதங்களிலிருந்து ஆயிரமடங்காய் எதிரொலி உண்டாக, ஆகாசத்தில் பறந்த பக்ஷிகள் மெய் மறந்து பூமியில் விழுந்தன.

அப்பொழுது ஆஞ்சநேயர் அந்த ராக்ஷஸர்களைப் பார்த்து, "பலபராக்ரமத்தில் நிகரற்ற ராமனுக்கும், மஹாபலவானான லக்ஷ்மணனுக்கும், ராகவனால் காப்பாற்றப்பட்ட ஸுக்ரீவ மஹாராஜாவுக்கும் ஸமானர்களுண்டோ? ஸகல ப்ராணிகளுக்கும் ஹிதத்தைச் செய்யும் இக்ஷ்வாகு குல திலகனான ராமமூர்த்திக்கு நான் அடிமை; என் பெயர் ஹநுமான்; சத்ரு ஸைன்யங்களுக்குக் காலன்; வாயுபகவானுடைய புத்ரன்; கல்லுகளாலும் விருக்ஷங்களாலும் யுத்தஞ் செய்கிறவன்; ராக்ஷஸர்களை ஆயிரக்கணக்காய் மடிப்பேன்; உங்கள் அரசனான ராவணனைப்போல் ஆயிரம் ராக்ஷஸர்கள் ஒன்று சேர்ந்தாலும் எனக்கு ஈடோ? உங்களுடைய காவல்களைக் கடந்து, இந்த லங்கையில் ப்ரவேசித்து, ஸீதையை நமஸ்கரித்து, அவளுடைய விருத்தாந்தத்தை அறிந்து, நீங்கள் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே இந்த நகரத்தை நாசஞ்செய்து நான் வந்த கார்யத்தை முடித்துக்கொண்டு ஸுகமாய்த் திரும்பிப் போவே"னென்று கர்ஜித்தார்.

அந்தச் சப்தத்தால் ராக்ஷஸர்கள் பயந்து, ஸந்த்யா காலத்து மேகம்போல் ஆகாசத்தை அளாவி நிற்கும் ஆஞ்சநேயரைக் கண்டு நடுங்கினார்கள். ஆனாலும் ராவணனுடைய கடுமையான உத்திரவால், இவனுடன் நாம் யுத்தஞ் செய்வது நமக்கு நன்மையாவென்ற ஸந்தேஹந்தீர்ந்து, பயங்கரமான பலவித ஆயுதங்களால் மாருதியை அடித்தார்கள். அவர்களால் சூழப்பட்ட ஹநுமான் நான்கு புறங்களிலும் பார்க்கையில் வாசற்படிக்கு ஸமீபத்தில் ஓர் பயங்கரமான இருப்புலக்கையைக் கண்டு, அதைப்பிடுங்கிக் கையிலெடுத்துக் கொண்டு ராக்ஷஸர்களை அடித்தார். கருடன் காந்தி பொருந்திய ஸர்ப்பங்களை எடுத்துக்கொண்டு ஆகாசத்தில் செல்வது போல் ஹநுமான் அந்த இருப்புலக்கையைச் சுழற்றிக்கொண்டு ஆகாசத்தில் ஸஞ்சரித்தார். இப்படி ராவணன் அனுப்பின கிங்கரர்களை நாசஞ் செய்து மறுபடியும் எவர் யுத்தத்திற்கு வருவார்களென்று வாசற்படியின்மேல் நின்று பார்த்துக்கொண்டிருந்தார்.

அதற்குள் சில ராக்ஷஸர்கள் மாருதியைக்கண்டு பயந்து, யுத்தஞ்செய்யாமல் ராவணனிடத்திற்கு ஓடிக் கிங்கரர்கள் நாசமடைந்ததைத் தெரிவித்தார்கள். அதைக்கேட்டு அந்த ராக்ஷஸேச்வரன் கண்களை உருட்டி விழித்து, நிகரில்லாத பராக்ரமசாலியும் யுத்தத்தில் ஜயிக்க முடியாதவனுமான ஜம்புமாலியை அனுப்பினான். (இவன் ராவணனுக்கு முக்ய மந்த்ரியான ப்ரஹஸ்தனுடைய புத்ரன்.)

---

## ஸர்க்கம் 43.

### மாருதி உப்பரிகையை இடித்தது.

அதற்குள் ஹநுமான் "கிங்கரர்களைக் கொன்றேன், அசோக வனத்தை அழித்துவிட்டேன். ஆனால் தேவகிருஹம்போன்ற இந்த உப்பரிகையை அழிக்கவில்லையே. இதையும் நாசஞ்செய்து என் பலத்தைக் காட்டுகிறே"னென்று நிச்சயித்து, மேருமலையின் சிகரத்தைப்போல் உன்னதமான அந்த உப்பரிகையின்மேல் தாவி நின்று, ஸூர்யனுக்கெதிராக வேறு ஸூர்யன் உதித்ததுபோல் தேஜஸால் ஜ்வலித்தார். (ஒரேகாலத்தில் இரண்டு ஸூர்யர்கள் காணப்படுவது ராஜ்யத்திற்கு க்ஷேமக்குறைவு.) அங்கிருந்து பாரியாத்ரமென்ற குலபர்வதத்தைப்போல் தன் ரூபத்தை விருத்திசெய்துகொண்டு, ஜயலக்ஷ்மீயால் விளங்கி, லங்கை அதிரும்படி ஸிம்ஹநாதஞ்செய்

தார். அது கேட்போரின் செவிகளைத் துளைத்தது! ஆகாசத்தில் பக்ஷிகள் சுருண்டு விழுந்தன. அந்த உப்பரிகையைக் காப்பவர்களும் மெய் மறந்தார்கள். "ராக்ஷஸர்களே! அஸ்த்ரவித்தையில் நிகரற்ற ரகுவீரனுக்கும் மஹாபலவானான லக்ஷ்மணனுக்கும் ராமனால் காப்பாற்றப்படும் ஸுக்ரீவ மஹாராஜாவுக்கும் நிகருண்டோ? ஸகல பூதங்களுக்கும் ஹிதத்தைச் செய்யும் இக்ஷ்வாகுகுல ச்ரேஷ்டனான ராமமூர்த்திக்கு நான் அடிமை. என் பெயர் ஹனுமான்; நான் வாயுவின் புத்ரன்; சத்ருக்களுக்கு ம்ருத்யு; பாறைகளாலும் விருக்ஷங்களாலும் ராக்ஷஸர்களை ஆயிரக்கணக்காகக் கொல்கிறவன்; ஆயிரம் ராவணர்கள் ஒன்று சேர்ந்தாலும் எனக்கு ஈடாமோ? உங்களால் காக்கப்பட்ட இந்த லங்கையில் ப்ரவேசித்து, உங்களுக்குத் தெரியாமல் ஸீதையுடன் பேசிவிட்டு உங்களுக்கெதிரே இந்த நகரத்தை நாசஞ்செய்து, நான் வந்த கார்யத்தை முடித்துக்கொண்டு திரும்பிப் போகிறே"னென்று அந்த உப்பரிகையின் விமானத்திலிருந்து அதிலுள்ள ராக்ஷஸர்களைப் பார்த்துப் பயங்கரமாகக் கர்ஜித்தார்.

அதைக் கேட்டு அதைக் காப்பவர்கள் பல ஆயுதங்களை எடுத்துக் கொண்டு மாருதியைச் சூழ்ந்து நான்கு புறங்களிலிருந்தும் அவரை அடித்தார்கள். கங்கா ப்ரவாஹத்தில் பெரிய விஸ்தாரமான சுழியைப்போல் அந்த ராக்ஷஸ ஸைன்யம் ஆஞ்ஜநேயரைச் சுற்றி சுற்றி ஸஞ்சரித்தது. அப்பொழுது அந்த வானரவீரன் இவர்களுடன் எவ்வளவு நேரம் யுத்தஞ்செய்கிறதென்று கோபங்கொண்டு, பயங்கரமான ரூபமெடுத்து, அந்த உப்பரிகையின் ஓர் பெரிய ஸ்தம்பத்தைப் பிடுங்கி, இந்த்ரன் வஜ்ராயுதத்தைச் சுழற்றுவதுபோல் கரகரவென்று அதைச் சுழற்றினர். தங்கத்தால் அலங்கரிக்கப்பட்ட அந்த ஸ்தம்பத்துடன் மற்ற ஸ்தம்பங்கள் அடிபட்டு நெருப்புப் பிடித்து அந்த உப்பரிகை முழுவதும் வெந்துபோயிற்று. அதைக் கண்டு, இந்த்ரன் வஜ்ராயுதத்தால் அஸுரர்களை நாசஞ்செய்வதுபோல், மாருதி ராக்ஷஸக்கூட்டத்தை நாசஞ்செய்து ஆகாசத்திலிருந்துகொண்டு "எங்களுடைய மஹாராஜாவான ஸுக்ரீவன் ஸீதையைத் தேடுவதற்காக ஸகல திக்குகளிலும் கணக்கில்லாத வானரவீரர்களை அனுப்பியிருக்கிறார். அவர்கள் என்னைபோல் பலவான்கள், தைர்ய சாலிகள், மஹாராஜாவின் ஆக்ஞையை நிறைவேற்றுகிறவர்கள். சிலர் பத்து யானைகளின் பலமுள்ளவர்கள்; சிலர் நூறு, சிலர் ஆயிரம், சிலர் ஓகம், இப்படிப் பல விதமான பலத்தையுடையவர்

பலமுடையவர்கள்; பற்களையும் நகங்களையும் ஆயுதமாயுடைய கணக்கில்லாத வானர ஸைன்யங்களால் சூழப்பட்டு, ஸுக்ரீவ மஹாராஜா உங்களெல்லோரையும் இருந்தவிடந்தெரியாமல் நாசஞ்செய்யப் போகிறார். ரகுவீரனுடன் பகைத்துக்கொண்டு அந்த மஹாத்மாவின் கோபத்திற்குப் பாத்ரமான பிறகும் இந்த லங்கை இருக்குமோ? நீங்களும் இருப்பீர்களோ? உங்கள் ப்ரபுவான ராவணன் இருப்பானோ''வென்று கர்ஜித்தார்.

---

## ஸர்க்கம் 44.

### ஜம்புமாலி வதம்.

அதனுள் ப்ரஹஸ்தனுடைய புத்ரனான ஜம்புமாலி ராவணனால் உத்திரவு செய்யப்பட்டு ஆயுதபாணியாய் யுத்தத்திற்குப் புறப்பட்டான். பெரிய கோரைப் பற்களையுடையவன். சிவந்த மாலைகளாலும் வஸ்த்ரங்களாலும் அலங்கரிக்கப்பட்டவன். குண்டலங்களையும் ஹாரங்களையும் தரித்துக்கொண்டு கண்களைச் சுழற்றிக்கொண்டு, கடுங்கோபத்துடன், மலைபோல் நடந்து வந்தான். யுத்தத்தில் ஜயிக்க முடியாதவன்; இந்த்ரதனுஸைப் போன்ற வில்லையும் ச்ரேஷ்டமான பாணங்களையும் எடுத்துக்கொண்டு வஜ்ராயுதம் விழுந்தது போலும் இடியிடித்ததுபோலும், வேகமாய் நாணேற்றினான். அதனால் ஸகல திக்குகளும் மூலைகளும் ஆகாசமும் நடுங்கிற்று. கழுதைகள் பூட்டின ரதத்தில் ஏறிவரும் ஜம்புமாலியைக் கண்டு மாருதி வேகங்கொண்டு, 'இவனுடன் கொஞ்ச நேரம் யுத்தம் செய்யலா மென்று ஸந்தோஷித்து ஸிம்ஹநாதஞ்செய்தார். பருத்த புஜங்களையுடைய அந்த ராக்ஷஸன் வாசற்படியின் மேலுள்ள கூண்டிலிருக்கும் அந்த வானர வீரனைக் கண்டு, வரும்போழுதே முகத்தில் ஒரு அர்த்த சந்த்ர பாணத்தாலும் தலையில் ஒரு கர்ணியாலும் புஜங்களில் பத்து நாராசங்களாலும் அடித்தான். (கர்ணியென்றது யானையின் மாவெட்டியைப்போல் முகத்தையுடைய அம்பு.) அப்பொழுது ஸுர்யனுடைய கிரணத்தால் தாக்கப்பட்டு மலர்ந்திருக்கும் தாமரையைப் போல் ஆஞ்ஜநேயரின் சிவந்த முகம் பாணங்களால் அடிபட்டு விளங்கிற்று. ரத்தத் துளிகளால் சிவந்த அவருடைய சிவப்பான முகம், சிவப்பு சந்தனத் துளிகளால் நிறைந்த பெரிய தாமரை ஆகா

சத்தில் மலர்ந்ததுபோலிருந்தது. ஜம்புமாலியின் பாணங்களால் அடிபட்டு ஹநுமான் கோபங்கொண்டு, இவனை முடிக்கும் வழியென்னவென்று சுற்றிலும் பார்க்கையில், ஓரிடத்தில் ஒரு பெரிய பாறையைக் கண்டார். பலவான்களுக்குள் பலவானான மாருதி, அதைப் பெயர்த்து ராக்ஷஸன் மேல் எறிய, அவன் அதைப் பத்து பாணங்களால் உடைத்தான். சண்டமாருதத்தைப்போல் வேகமுள்ள அந்த வானரவீரன் தன் எண்ணம் வீணானதைக் கண்டு, உன்னதமான ஓர் ஆச்சா மரத்தைப் பிடுங்கிக் கர கரவென்று சுழற்றினார். உடனே அந்த ராக்ஷஸன் நான்கு பாணங்களால் அதைத் துண்டித்து, ஹநுமானைத் தோளில் ஐந்து பாணங்களாலும் மார்பில் ஒரு பாணத்தாலும் ஸ்தனமத்யையில் பத்து பாணங்களாலும் அடித்தான். அந்த வானர ச்ரேஷ்டன் தேஹமெங்கும் அம்புகள் தைக்கக் கடுங் கோபத்துடன் முன்னிருந்த இருப்புலக்கையை எடுத்து, அதி வேகமாய்ச் சுழற்றினார். அளவற்ற பலசாலி, நிகரற்ற வேகமுடையவர்; அந்த ஆயுதத்தைத் தன் பூர்ண பலத்துடன் சுழற்றி, ஜம்புமாலியின் விஸ்தாரமான மார்பை நோக்கி எறிந்தார். அதற்குப் பிறகு ஜம்புமாலியின் தலையாவது கைகளாவது முழங்கால்களாவது வில்லாவது பாணங்களாவது தேராவது குதிரைகளாவது ஒன்றும் காணப்படவில்லை. மஹாபலவானான ஜம்புமாலி ஆஞ்ஜநேயரால் அடிபட்டுப் பொடிப் பொடியாய்ப் பூமியில் விழுந்தான். பலசாலிகளான கிங்கரர்கள் மடிந்ததையும் ஜம்புமாலி நாசமடைந்ததையும் ராவணன் கேட்டுக் கோபத்தால் கண்கள் சிவந்து, மஹா பராக்ரமசாலிகளான தன் மந்த்ரிபுத்ரர்களை "அந்தத் துஷ்டக்குரங்கைப் பிடித்து வாருங்க"ளென்று கட்டளையிட்டான்.

---

## ஸர்க்கம் 45.

## மந்த்ரி குமாரர்களின் வதம்.

---

அக்னியைப்போல் தேஜஸால் ஜ்வலிக்கும் அந்த ஏழு மந்த்ரிபுத்ரர்களும் ராவணனால் ஏவப்பட்டு ஸபையிலிருந்து புறப்பட்டார்கள்; மஹாபலவான்கள்; அஸ்த்ர வித்யையை அறிந்தவர்களில் ச்ரேஷ்டர்கள்; ஒருவரையொருவர் ஜயிக்கவேண்டுமென்று ப்ரார்த்திப்பவர்கள்; அளவற்ற பராக்ரமசாலிகள்; கணக்கில்லாத வீரர்களால் சூழப்

பட்டு, ஸ்வர்ணமயமான ஜன்னல்களாலும் கொடிகளாலும் பாவட்டாக்களாலும் விளங்கி மேகத்தைப்போல் சப்திக்கும் பெரிய ரதங்களில் ஏறிக்கொண்டு, உருக்கின தங்கத்தால் செய்த வில்லுகளை நாணேற்றிடங்காரஞ் செய்துகொண்டு, மின்னல்கள் பாயும் மேகங்களைப்போல், ஸாஹஸமாய் ஜயிப்போமென்ற ஸந்தோஷத்துடன் வெளிக்கிளம்பினார்கள். அவர்களுடைய தாயும் பந்துக்களும் மித்ரர்களும் பலசாலிகள்ளான கிங்கரர்களே மடிந்தார்களென்பதைக் கேட்டுச் சோகத்தால் துடித்தார்கள். அந்த மந்த்ரி புத்ரர்கள் "நான் முந்தி, நான் முந்தி" யென்று மேல்விழுந்து, வாசற்படிமேலிருக்கும் ஹனுமானுக்கு ஸமீபத்தில் வந்தார்கள். மழைக்காலத்து மேகங்களைப் போல் பாணங்களை வர்ஷித்துக்கொண்டு இடிபோல் குமுறுகின்ற ரதங்களுடன் ஆஞ்ஜநேயரைச் சூழ்ந்துகொண்டார்கள். அவர் தேஹமெங்கும் பாணவர்ஷத்தால் நிறைந்து மழைத்தாரைகளால் மூடப்பட்ட மஹாபர்வதம்போல் விளங்கினார். நிர்மலமான ஆகாசத்தில் அதிவேகமாய் ஸஞ்சரித்துக் கொண்டு அந்த மந்த்ரிபுத்ரர்களுடைய பாணங்களுடைய குறியையும் ரதங்களின் வேகத்தையும் ப்ரயோஜனமில்லாமல் செய்தார். இந்த்ரவில்லால் அலங்கரிக்கப்பட்ட மேகங்களுடன் வாயுபகவான் ஆகாசத்தில் விளையாடுவது போல், மாருதி ஆகாசத்தில் அந்த வில்லாளிகளுடன் விளையாட்டு யுத்தஞ் செய்துகொண்டு விளங்கினார். பிறகு பயங்கரமான ஓர் சப்தமிட்டு அந்த ராக்ஷஸ ஸைன்யத்தை பயத்தால் நடுங்கச்செய்து, அதிவேகமாய் அவர்களின் நடுவில் பாய்ந்தார். சிலரைக் கைகளால் அறைந்து கொன்றார்; சிலரைக் கால்களால் உதைத்தார்; சிலரை முஷ்டியால் குத்தினார்; சிலரை நகங்களால் கிழித்தார்; சிலரை மார்பால் இடித்தார்; சிலரைத் துடைகளால் மோதினார்; சிலர் அவருடைய ஸிம்ஹநாதத்தால் பூமியில் விழுந்தார்கள். இப்படி மந்திரி புத்ரர்கள் இறந்து பூமியில் விழுந்ததைக் கண்டு அந்த ஸைன்யம் முழுதும் பயம்பிடித்து மூலைக்குமூலை ஓடிற்று. யானைகள் விகாரமாய் வீறிட்டன. குதிரைகள் பூமியில் சுருண்டு விழுந்தன; த்வஜம் குடை முதலியவைகள் முறிந்து ரதங்கள் பூமியெங்கும் கிடந்தன; வழியிலுள்ள ஆறுகளில் ரத்தப்ரவாஹம் ஓடிற்று; லங்கை நகரம் முழுவதும் விகாரமான சப்தங்களால் நிறைந்தது.

மஹா பலவானும் பிறரால் தடுக்கமுடியாத பராக்ரமசாலியுமான மாருதி, பெயர்பெற்ற அந்த ராக்ஷஸர்களைக் கொன்று, இன்னும் பல சாலிகளிருந்தால் ஒரு கை பார்ப்போமென்று அந்த வாசற்படியிலிருந்தார்.

## ஸர்க்கம் 46.

## பஞ்ச ஸேனாதிபதிகளின் வதம்.

---

தன் மந்த்ரிபுத்ரர்கள் ஆஞ்ஜநேயரால் மடிந்தார்களென்று கேட்டு, ராவணன் தான் ஸாமான்யக் குரங்கென்று நினைத்திருந்த மாருதியிடத்தில் தனக்குண்டான பயத்தை வெளிக்காட்டாமல் மிகுந்த தைர்யத்துடன் வேறு யோசனை செய்தான். விருபாக்ஷன் யூபாக்ஷன் துர்த்தரன் ப்ரகஸன் பர்ஸகர்ணனென்ற ஐந்து ஸேனாதிபதிகளை அழைத்து, ஹநுமானைப் பிடித்து வரும்படி உத்திரவுசெய்தான். அவர்கள் வீரர்கள்; யுத்தநீதியில் தேர்ந்தவர்கள்; சண்டையில் வாயு வேகமுள்ளவர்கள். அவர்களைப் பார்த்து ராவணன் "ஸேனாதிபதிகளே! கணக்கில்லாத சதுரங்க ஸைன்யங்களுடன் செல்லுங்கள். அந்தக் குரங்கை நான் சொல்லுகிற விதமாக சிக்ஷியுங்கள். அதன் ஸமீபத்தில் வெகு ஜாக்ரதையாய்ப் போங்கள். தேச காலங்களுக்கு விரோதமாய் நடக்கும் அந்தக் குரங்கின் சேஷ்டைகளை நிறுத்துங்கள். அதன் செய்கைகளை நான் நன்றாய் யோசித்துப் பார்க்கையில் அது ஒருக்காலும் குரங்கல்லவென்று தோன்றுகிறது. இந்த்ரனோ மற்ற எவரோ நமக்குக் கெடுதி செய்யக் கடுந்தபஸால் இந்த மஹா பலமுள்ள பெரிய ப்ராணியை ஸிருஷ்டித்துவிட்டிருக்கிறார்கள். நாகர்களும் யக்ஷர்களும் கந்தர்வர்களும் தேவர்களும் அஸுரர்களும் மஹர்ஷிகளும் உங்களாலும் என்னாலும் பலதட்வை ஜயிக்கப் பட்டிருக்கிறார்கள்.

அவர்கள் நமக்கு ஏதாவது கெடுதி செய்வது ஆச்சர்யமில்லையே. ஆகையால் எப்படியாவது அந்தக் குரங்கைப் பிடித்து வாருங்கள். புத்தியிலும் பராக்ரமத்திலும் அளவிற்கு மிஞ்சின அந்தக் குரங்கை ஸாமான்யமென்று அலக்ஷ்யம்செய்யக்கூடாது. வாலியையும் ஸுக்ரீவனையும் மஹாபலசாலியுமான ஜாம்பவானையும் ஸேனாபதியான நீலனையும் த்விவிதன் முதலிய மற்ற வானரர்களையும் பார்த்திருக்கிறேன். அவர்கள் அதிக பராக்ரமசாலிகளுமல்ல. அவர்களுடைய ஸஞ்சாரமும் தேஜஸும் பராக்ரமமும் புத்தியும் ஸத்வமும் உத்ஸாஹ

மும் இப்படியல்ல. இந்தப் பெரிய ஜந்து நினைத்த ரூபங்களை எடுக்கக் கூடியது. ஆகையால் நீங்கள் எப்படியாவது இதை ஜயிக்கவேண்டியது. இந்தரனும் தேவர்களும் அஸுரர்களும் மனுஷ்யர்களும் மூன்று லோகங்களிலும் உங்களுக்குமுன் நிற்கமுடியாதென்று எனக்குத் தெரியும். ஆனாலும் யுத்தத்தில் ஜயமும் அபஜயமும் ஒருவனுக்கல்ல. ராஜநீதியை அறிந்து யுத்தத்தில் ஜயம் பெறவேண்டுமென்று விரும்புகிறவன் தன்னை நன்றாய் ரக்ஷிக்கவேண்டிய'' தென்று ஆக்ஞாபித்தான்.

அக்னியைப்போல் ஜ்வலிக்கும் அந்த ப்ரதாபவீரர்கள் அரசனுடைய உத்திரவை அங்கீகரித்துத் தேர்களோடும் மதயானைகளோடும் மஹாவேகமுள்ள குதிரைகளோடும் ஸகல ஸைன்யங்களோடும் தீக்ஷ்ணமான ஆயுதங்களை எடுத்துக்கொண்டு அதிவேகமாய் வெளிக்கிளம்பினார்கள். பாலஸூர்யனைப்போல் தன் தேஜஸாகிற கிரணங்களால் சூழப்பட்டு ப்ரகாசிக்கும் ஆஞ்ஜநேயர் அந்த வாசற்படியின் மேல் உட்கார்ந்திருப்பதைக் கண்டார்கள். அவர் உத்ஸாஹத்திலும் ஸத்வத்திலும் பலத்திலும் புத்தியிலும் வேகத்திலும் ரூபத்திலும் நிகரில்லாதவர். நான்கு புறங்களிலிருந்தும் பயங்கரமான ஆயுதங்களுடன் ராக்ஷஸர்கள் அவர்மேல் பாய்ந்தார்கள். துர்த்தரன், கருநெய்தல் புஷ்பத்தைப்போல் காந்தியுள்ள ஐந்து பாணங்களால் அவருடைய தலையில் அடித்தான். அவை இரும்பால் செய்யப்பட்டவை, உக்ரமானவை, பச்சைவர்ணமுள்ளவை, ஹ்ருதயத்தைப் பிளக்கக் கூடியவை. உடனே மாருதி ஸகல திக்குகளும் பிளக்கும்படி கர்ஜித்துக்கொண்டு ஆகாசத்தில் தாவினார். பிறகு துர்த்தரனென்ற வீரன் ரதத்திலிருந்து இடைவிடாமல் அவர்மேல் பாணங்களை வர்ஷித்தான். மழைக்காலத்தின் முடிவில் காற்று நீருண்டமேகங்களைச் சிதறவடிப்பது போல், பாணவர்ஷங்களைப் பொழிகிற துர்த்தரனை மாருதி தன் வேகத்தால் தடுத்தார். பிறகு அவன் தன்னை மிகவும் உபத்ரவிப்பதைக் கண்டு ரூபத்தை விருத்திசெய்துகொண்டு மஹாவேகத்துடன் ஆகாசத்தில் வெகுதூரம் கிளம்பி, அவனுடைய தேரில் இடிக்கூட்டங்கள் மலையில் விழுந்தாற்போல் சீக்ரமாய்க் குதித்தார். உடனே அந்தத் தேர் ஏர்க்கால் முறிந்து தூளாயிற்று. எட்டுக் குதிரைகளும் இறந்தன; துர்த்தரனும் பிணமாய்ப் பூமியில் விழுந்தான்.

அதைக் கண்டு பிறரால் ஜயிக்கமுடியாத யூபாக்ஷனும் விருபாக்ஷனும் வெகு ரோஷங்கொண்டு மாருதியின்மேல் பாய்ந்து, முத்

கரமென்ற ஆயுதத்தால் மார்பில் அடித்தார்கள். கருடனைப்போன்ற பலபராக்ரமுள்ள ஆஞ்ஜநேயர் அவர்களுடைய வேகத்தை அடக்கி, மறுபடியும் பூமியில் குதித்து, ஓர் ஆச்சாமரத்தைப் பிடுங்கி அவ்விரண்டு ராக்ஷஸர்களையும் அடித்துக் கொன்றார்.

அதைக் கண்டு ப்ரகஸன் ஒரு பட்டாக்கத்தியுடனும் பாஸகர்ணன் கூர்மையான நுனியையுடைய சூலாயுதத்துடனும் ஆஞ்ஜநேயர்மேல் பாய்ந்து யுத்தஞ்செய்தார்கள். அவர்களால் தேஹமெங்கும் காயப்பட்டு ரக்தத்தால் பூசப்பட்ட மயிர்களுடன் மாருதி பாலஸூர்யனைப்போல் கோபத்தால் ஜ்வலித்தார். பிறகு ஓர் பர்வதசிகரத்தை அதில் வஸிக்கும் விருக்ஷங்கள் மிருகங்கள் துஷ்டஜந்துக்களுடன் அலக்ஷ்யமாய்ப் பிடுங்கி அதனால் அந்த ராக்ஷஸர்களை அடித்துக்கொன்று, மற்ற ஸைன்யங்களையும், குதிரைகளால் குதிரைகளையும், யானைகளால் யானைகளையும், காலாள்களால் காலாள்களையும், ரதங்களால் ரதங்களையும், தேவேந்த்ரன் அஸுர ஸைன்யத்தை நாசஞ்செய்ததுபோல் மடித்தார். அடிபட்ட யானைகளாலும் குதிரைகளாலும் ராக்ஷஸர்களாலும் முறிபட்ட ரதங்களாலும் அந்த யுத்தபூமியில் போக வழியில்லை. இப்படி அந்த வானர ச்ரேஷ்டன் பஞ்சஸேனாதிபதிகளையும் அவர்களுடைய வாஹனங்களையும் ஸைன்யங்களையும் நாசஞ்செய்து ப்ரளயகால மிருத்யுவைப்போல் மறுபடியும் அந்த வாசற்படியின்மேல் உட்கார்ந்து சற்று இளைப்பாறினார்.

------

## ஸர்க்கம் 47.

### அக்ஷகுமாரனுடைய வதம்

------

இப்படி ஒரு வானரனால் பஞ்சஸேனாதிபதிகளும் ஸைன்யமும் நாசமடைந்ததைக் கேட்டு, ராவணன் தன்னைச் சூழ்ந்திருப்பவர்களில் யாரை அனுப்பலாமென்று பார்க்கையில், தன் குமாரனான அக்ஷன் மாருதியோடு யுத்தஞ்செய்து அவரைப் பிடித்துவர ஆவல்கொண்டவனாய் முகத்தைத் தூக்கினான். அதைக் கண்டு ராவணனும் கண் ஜாடையால் "போய்வா" வென்று அவனை உத்திரவுசெய்ய, அவன் ஸபையிலிருந்து வெளியில் சென்றான். அவன் ப்ரதாபசாலி, ப்ராஹ்

மண ச்ரேஷ்டர்களால் ஹோமஞ்செய்து வளர்க்கப்பட்ட அக்னி யைப்போல் ஜ்வலித்துக்கொண்டு, ஸ்வர்ணத்தால் அலங்கரிக்கப் பட்ட வேலாயுதத்தைக் கையிலேந்தி யுத்தித்திற்குப் புறப்பட்டான். உருக்கிவிட்ட தங்கத்தால் செய்யப்பட்டுப், பாலஸூர்யனைப்போல் ப்ரகாசிக்கும் பெரிய ரதத்திலேறி ஆஞ்ஜநேயரிருக்குமிடத்திற்குச் சென்றான். தேவதைகளுக்கு ஸமமான பராக்ரமத்தையுடைய அந்த அக்ஷகுமாரனுடைய ரதம் கடுந்தபஸால் ஸம்பாதிக்கப்பட் டது. உருக்கின தங்கத்தால் செய்யப்பட்ட ஜன்னல்களையுடையது. ரத்னத்தால் அலங்கரிக்கப்பட்ட கொடிகளாலும் த்வஜங்களாலும் அழகுபொருந்தினது. மனோவேகமுள்ள எட்டுக் குதிரைகள் பூட்டி னது. தேவர்களாலும் அஸுரர்களாலும் தடுக்கமுடியாதது. யாதொரு ஸஹாயமுமில்லாமல் செல்லக்கூடியது. ஸூர்யனைப் போன்ற காந்தியையுடையது. ஆகாசத்தில் தடையில்லாமல் ஸஞ் சரிக்கக்கூடியது. அதில் அம்பறைகளும் எட்டுக் கத்திகளும் சக்தி தோ மரம் முதலிய ஆயுதங்களும் வரிசையாய்க் கட்டப்பட்டிருந்தன. இப் படி யுத்தத்திற்கு வேண்டிய ஸகல பதார்த்தங்களாலும் நிறைந்து ஸூர்யனைப்போலும் சந்த்ரனைப்போலும், மஞ்சள் நிறமும் வெண் மையுள்ள கடிவாளங்களையுடைய அந்தத் திவ்ய ரதம் ஆகாசத்தில் ஸூர்யன் உதித்ததுபோல் ஸித்தமாய் நிற்கக்கண்டு, அக்ஷகுமாரன் அதிலேறி யுத்தபூமிக்கு வந்தான். இப்படிக் குதிரை யானை ரதம் காலாட்கள் இவைகளுடைய சப்தத்தால் ஆகாசமும் பூமியும் அதி லுள்ள பர்வதங்களும் நடு நடுங்க, யுத்தகளத்தில் இன்னும் யார் வரு கிறானென்று எதிர்பார்த்துக்கொண்டிருக்கும் ஹனுமானுடைய ஸமீ பத்தில் வந்தான்.

பிறகு ஸிம்ஹத்தைப்போல் நேத்ரங்களையுடைய அந்த ராக்ஷ ஸன், ஸகல பதார்த்தங்களையும் நாசஞ்செய்யும் காலாக்னியைப்போல் ஜ்வலிக்கின்ற அந்த வாயுபுத்ரனைக் கண்டு, "என்ன ஆச்சர்யம்! இந்த ஒரு குரங்கு பயமில்லாமல் நமது நகரத்தில் ப்ரவேசித்து இவ்வளவு ஸைன்யங்களையும் விளையாட்டாய்க்கொன்று என்ன அலக்ஷ்யமாய் உட்கார்ந்திருக்கிற"தென்று பரபரப்புடன் மாருதியிடத்தில் கௌர தைவைத்து அவரை உற்றுப்பார்த்தான். மஹாபலவானும் புத்தி சாலியுமாகையால் அக்ஷகுமாரன் ஹனுமானுடைய தேஹத்தையும் பலத்தையும் பராக்ரமத்தையும் அவருடைய செய்கைகளால் ஊஹித் துத் தன் பலபராக்ரமத்தையும் ஒப்பிட்டு, இவனை ஜயிப்போமென்று நிச்சயங்கொண்டு, பனி நீங்கினவுடன் உதிக்கும் ஸூர்யனைப்போல்

உக்ரமான தேஜஸ்ஸால் விருத்தியடைந்தான். பிறகு அவருடன் யுத்தஞ்செய்ய நிச்சயித்து, அவர் பிறரால் தடுக்கமுடியாத பராக்ரம சாலியென்று கண்டு, கோபபரவசனுய் அமரிக்கையாய் யுத்தஞ்செய்ய ஏற்பாடுசெய்துகொண்டு ஆஞ்ஜநேயரை மூன்று கூர்மையான பாணங்களால் அடித்தான். அவர் கொஞ்சங்கூட ச்ரமமில்லாமல் யுத்தஞ்செய்துகொண்டு, சத்ருக்களை ஜயிப்போமென்ற நிச்சயத் தால் கர்வமடைந்திருப்பதை கண்டு, "இன்றைக்கு எனக்கு ஸரி யான யுத்தவீரன் கிடைத்தா" னென்று ஸந்தோஷபட்டு, வில்லை யும் பாணங்களையும் எடுத்துக்கொண்டு, எல்லா ஆபரணங்களாலும் அலங்கரிக்கப்பட்ட பராக்ரமசாலியான அக்ஷகுமாரன் அதிசீக்ரமாய் மாருதிக்கு ஸமீபத்தில் மறுபடியும் வந்தான்.

பிறகு, தேவர்களும் அஸுரர்களும் பயத்தால் நடுங்கும்படி அவ் விருவர்க்கும் யுத்தம் நேர்ந்தது; அதற்கு உபமானம் சொல்ல முடி யாது. பூமி நடுங்கிற்று; ஸூர்யன் பயந்து மறைந்தான்; காற்றடிக்க வில்லை; மலைகள் அசைந்தன; ஆகாசத்தில் பெருஞ்சப்தமுண்டா யிற்று; ஸமுத்ரம் கலங்கிற்று. அக்ஷ குமாரன் மஹாவீரன்; தங்கக் கட்டுகளுடன் இறகுகளால் அலங்லரிக்கப்பட்டுக் கூர்மையான மூன்று பாணங்களைக் கடும் விஷமுள்ள மஹாஸர்பங்களைப்போல் ஹனுமானுடைய தலையில் ப்ரயோகித்தான். உடனே ரத்தப்ரவாஹத் தால் அந்த வானர வீரனுடைய தேஹம் நனைந்தது. அவர் கண் களைக் கோபத்தால் உருட்டி, விழித்து, பாலஸூர்யனைப்போல் சிவந்து, பாணங்களாகிற கிரணங்களால் சூழப்பட்டு விளங்கினர். ராவணேச்வரனுடைய புத்ரன், பயங்கரமான ஆயுதங்களையும் வில்லை யும் தரித்து தன்னுடன் யுத்தத்திற்கு வந்து நிற்பைதக் கண்டு ஸந்தோஷத்தாலும் யுத்த ஆவேசத்தாலும் பூரித்தார். உத்தரா யணத்தில் மத்யாஹ்ன காலத்தில் மந்தரபர்வதத்தின் உச்சியிலிருந்து லோகத்தைக் கொளுத்தும் ஸூர்யனைப்போல், ஹனுமான் கோபத் தாலும் பலத்தாலும் வீர்யத்தாலும் நிறைந்து, நேத்ரங்களிலிருந்து பறக்கும் நெருப்புப் பொறிகளால் அக்ஷகுமாரனையும் அவனுடைய வாகனங்களையும் ஸைன்யத்தையும் எரித்தார். பிறகு அக்ஷகுமார னென்ற காளமேகம் தங்கத்தால் அலங்கரிக்கப்பட்ட வில்லாகிற இந்த்ர தனுஸ்ஸால் பிரகாசித்துக்கொண்டு ஹனுமானென்ற பர்வதத் தில் பாணங்களான மழைத் தாரைகளைப் பெய்தது! மஹா மேகங்களுக்கு ஸமமான பராக்ரமத்தையுடைய மாருதி, அக்ஷகுமாரன் யுத்தத்தில் தீரனுய் நிமிஷத்திற்கு நிமிஷம்

அவனுடைய வீர்யமும் தேஜஸும் விருத்தியடைவதைக் கண்டு, இன்று நல்ல யுத்தம் நடக்குமென்று ஸந்தோஷத்தால் கர்ஜித்தார். காட்டில் புல்லால் மூடப்பட்ட பெருங்கிணற்றில் மதயானை விழுவதுபோல், அக்ஷ குமாரன் பால்யத்தால் கர்வமடைந்து, யுத்தஞ் செய்வதில் தனக்கு நிகரில்லையென்ற கொழுப்புடன் வர வரக் கோபத்தால் கண்கள் ரத்தம் போல் சிவக்க, யுத்தத்தில் நிகரில்லாத ஆஞ்சநேயரை எதிர்த்தான். பாணவர்ஷத்தால் அவரை மறைக்க, மாருதி மேகம்போல் கர்ஜித்துப் புஜங்களையும் துடைகளையும் பயங்கரமாய் தட்டிக்கொண்டு ஆகாசத்தில் கிளம்பினார். உடனே ப்ரதாபசாலியான அந்த ராக்ஷஸவீரன் ரதத்தைச் செலுத்திக் கார்மேகம் பர்வதத்தில் சிலைகளை வர்ஷிப்பதுபோல், அந்த வானரவீரன்மேல் பாணங்களை ப்ரயோகித்தான். மனோ வேகமுள்ள மாருதி அதைக் கண்டு கோபம்மேலிட்டு அவைகளைத் தன்மேல் படாமல் உபாயமாய்த் தப்பித்துக்கொண்டு, அவைகளுக்கு நடுவில் காற்றைப்போல் ஸஞ்சரித்து ஆகாசமார்க்கத்தில் உலாவினார். அக்ஷகுமாரன் வில்லை வளைத்து யுத்தாவேசங்கொண்டு ச்ரேஷ்டமான பல பாணங்களால் ஆகாசத்தை மறைப்பதைக் கண்டு, அவனை மெச்சி "இவ்வளவு சாதுர்யமாய் யுத்தஞ் செய்பவனை ஜயிக்கும் வழியென்ன" வென்று யோசித்தார். அப்பொழுது அந்த ராக்ஷஸன் மிகவும் தைர்யமாய் அவரைப் புஜங்களுக்கு நடுவில் பாணங்களால் பிளக்க, ஆஞ்சநேயர் பேரிடிபோல் கர்ஜித்து, யுத்த ரஹஸ்யத்தை நன்றாயறிந்தவராகையால், அந்தச் சிறுவனுடைய பராக்ரமத்தைச் சற்று யோசித்துப் "பாலஸூர்யனைப்போல் ப்ரகாசிக்கும் இந்த ராக்ஷஸன் மஹாபலவானாகத் தோற்றுகிறான்; வயஸில் சிறுவனாயிருந்தாலும் யுத்தத்தில் தைதேர்ந்தவர்கள் செய்ய முடியாத ஆச்சர்யங்களைச் செய்கிறான். ஸகல யுத்தங்களையும் நன்றாய் அறிந்து ப்ரயோகிக்கிறான். இவனைக் கொல்ல என்க்கு மனமில்லை. இவன் மஹாதைர்யசாலி; பராக்ரமத்தில் சிறந்தவன்; அமரிக்கையாய் யுத்தஞ்செய்கிறவன்; மிகுந்த பொறுமையுள்ளவன். தேவகணங்களும் மஹர்ஷிகளும் யுத்த வ்யாபாரங்களில் இவனுடைய சௌர்யத்தைக் கண்டு ஸந்தேஹமில்லாமல் மெச்சுவார்கள். இவனுடைய பராக்ரமும் உத்ஸாகமும் வரவர விருத்தியாகின்றன. கொஞ்சங்கூடப் பயமில்லாமல் எனக்கெதிரே வந்து நின்று யுத்தத்திற்கு அழைக்கிறான். கண் கூசாமல் என்னைப் பார்க்கிறான். மனோவேகமுடைய இந்தச் சிறுவன் பராக்ரமத்தால் தேவாஸுரர்களின் ஹ்ருதயத்தையும் நடுங்கச்செய்வான். க்ஷணத்திற்கு க்ஷணம் இவனுக்கு யுத்தத்தில் வீர்யம் விருத்தி அடைகிறது;

இவனை நான் அலக்ஷ்யஞ்செய்தால் எப்படி ஜயிக்க முடியும்? ஆகையால் இவனைக் கொல்லவேண்டியது அவச்யம். வர வரப் பற்றி எரியும் நெருப்பை அலக்ஷ்யஞ்செய்யலாமா"வென்று சத்ருவின் பராக்ரமத்தை இவ்விதமாய் ஊஹித்துத் தான் செய்ய வேண்டியகார்யத்தையும் நிச்சயித்து அவனைக் கொல்வதில் புத்தியைச் செலுத்தினர். அவனுடைய ரதத்தில் எட்டுக் குதிரைகள் கட்டியிருந்தன. அவை பலத்தால் கொழுத்து, வாயுவேகமுள்ளவைகளாய்ப் பலவித நடைகளிலும் பழகி, ரதத்தை அலக்ஷ்யமாய் இழுக்கக்கூடியவை.

முதலில் இவனை ரதமில்லாமல் செய்யவேண்டுமென்று, ஆஞ்ஜநேயர் ஆகாசமார்க்கத்திலிருந்துகொண்டே கைகளால் குதிரைகளை அறைந்து கொன்றார். உடனே அந்தத் திவ்யரதம் ஏர்க்கால் முறிந்து, கொடிகள் அறுந்து, குதிரைகள் மடிந்து, பூமியில் விழுந்தது. அப்பொழுது மஹாரதனை அக்ஷகுமாரன் அந்தத் தேரைவிட்டு வில்லையும் கத்தியையும் எடுத்துக்கொண்டு ஆகாசத்தில் பாய்ந்து, யோகாப்யாஸத்தால் ஸ்தூலதேஹத்தை விட்டுத் திவ்யதேஹத்துடன் ஸ்வர்க்கத்திற்குப் போகும் முனியைப்போல் விளங்கினன். வாயுவின் பராக்ரமத்தையுடைய வாயுபுத்ரன் தன் தகப்பனும் கருடனும் ஸஞ்சரிக்கும் ஆகாசவீதியில் பயமில்லாமல் எதிர்த்து வரும் அந்த ராக்ஷஸவீரனை ஸமயம் பார்த்து நெருங்கி, அவனுடைய கால்களை இறுகப் பிடித்துக், கருடன் ஸர்பத்தைச் சுழற்றுவதுபோல் அவனை அடித்து நொறுக்கித் தேய்த்துப் பிண்டமாக்கிப் பூமியில் வீசியெறிந்தார். புஜங்கள் தொடைகள் இடுப்புகள் தளர்ந்து ரத்தம் பெருக அக்ஷகுமாரன் பூமியில் விழுந்து உயிரைவிட்டான்.

இப்படி ஹநுமான் அவனை அடித்து முறித்துத் தேய்த்து ராவணனுடைய ஹ்ருதயத்தைக் கலக்கினர். மஹர்ஷிகளும் க்ரஹ தேவதைகளும் மஹா வ்ரதங்களை அனுஷ்டித்தவர்களும் பூதங்களும் யக்ஷர்களும் பன்னகர்களும் தேவர்களும் இந்த்ரனும் ஆச்சர்யம் மேலிட்டு ஆஞ்ஜநேயரைக் கண்கொட்டாமல் பார்த்தார்கள். ரத்தத்தைப்போல் சிவந்த நேத்ரங்களையுடையவனும் இந்த்ர புத்ரனை ஜயந்தனைப்போல் தேஜஸ்வியுமான அக்ஷகுமாரனை இவ்விதமாய்க் கொன்று ஹநுமான் உத்ஸாஹம் மேலிட்டு மறுபடியும் அந்த வாசற்படியின்மேல் ப்ரளயகால ம்ருத்யுவைப் போல்நின்றார்.

## ஸர்க்கம் 48.

### ஹனுமான் ப்ரஹ்மாஸ்திரத்தால் கட்டுப்பட்டது.



இப்படி அக்ஷகுமாரன் மாருதியால் கொல்லப்பட்டதைக்கேட்டு, ராவணன் தன் துக்கத்தை வெளியில் காட்டாமல் மனதை தைர்யப் படுத்திக்கொண்டு, வீர்யத்தில் இந்த்ரனுக்கு ஸமமான இந்த்ரஜித் தென்ற தன் குமாரனை வெகு கோபத்துடன் ஆக்ஞாபித்தான். "குழந்தாய்! உனக்கு ப்ரஹ்மாஸ்த்ரத்தின் ரஹஸ்யம் தெரியும். ஆயுத வித்தையின் மர்மங்களை அறிந்தவர்களுக்குள் உன்னைப்போன்றவர் களில்லை. தேவர்களும் அஸுரர்களும் உன் பெயரைக் கேட்டால் அலறுகிறார்கள். தேவர்களையும் இந்த்ரனையும் நீ முறியடித்தது லோக ப்ரஸித்தமல்லவா? ப்ரஹ்மதேவரைக் கடுந்தபஸால் ஆராதித்து ஸகல அஸ்த்ரங்களையும் பெற்றிருக்கிறாய்; யுத்தத்தில் அஸுரர்க ளும் இந்த்ரனால் காப்பாற்றப்பட்ட தேவகணங்களும் உன் அஸ்த்ர பலத்தின்முன் நிற்கமுடியவில்லை. மூன்று லோகங்களிலுள்ளவர் கள் யாராயினும், ஹரிஹராதிகளாயிருந்தாலும் உன்னுடன் யுத்தஞ் செய்து கஷ்டத்தையடையாதவர்களில்லை. புஜபலத்தாலும் கடுந் தபஸாலும் தன்னை ரக்ஷித்துக்கொண்டு தேசகாலங்களின் பேதங் களை அறிந்த மஹாபுத்திமான் நீயே. யுத்தங்களில் உன் பராக்ரமத் திற்கு முடியாத கார்யம் கிடையாது. யுத்த ஆலோசனையில் உன் புத்திக்கு எட்டாத விஷயமுண்டோ? மூன்று லோகங்களிலு முள்ள ஸகல ப்ராணிகளும் உன் தேஹபலத்தையும் அஸ்த்ரபலத் தையும் அறியார்களா? தபோபலத்திலும் அஸ்த்ரபலத்திலும் யுத் தத்தில் பராக்ரமத்திலும் என்னைத்தவிர உனக்கு ஈடில்லை. ஆகை யால் உன்னை யுத்தத்திற்கு அனுப்புவதால் ஜயம் நிச்சயமென்று என் மனஸ் கவலையற்றிருக்கிறது. நான் அனுப்பிய கிங்கரர்களும் ஜம்பு மாலியும் வீரர்களான மந்திரிகுமாரர்களும் ஐந்து ஸேனாதிபதிகளும் அவர்களுடன் சென்ற அளவற்ற சதுரங்கபலமும், முடிவில் உன் அருமைத்தம்பியான அக்ஷனும் ஒரு அல்பக்குரங்கால் கொல்லப்பட் டார்கள். ஆனால் எனக்கு உன்னிடத்திலிருக்கும் நம்பிக்கை அவர் களிடத்தில் இல்லவேயில்லை.

ஒரு குரங்கு, ஒண்டியாய் ஸஹாயமில்லாமல், வெகுஜாக்ரதையாய்க் காக்கப்பட்ட நமது லங்கையில் பயமில்லாமல் ப்ரவேசித்து, இவ்வளவு வீரர்களையும் கொன்றதையும் அவனுடைய ஸூக்ஷ்ம புத்தியையும் அபாரபலத்தையும் சக்தியையும் பராக்ரமத்தையும் நீ நன்றாய் ஆலோசித்து, உன் சக்தியையும் ஸத்வத்தையும் நன்றாய் ஆலோசித்து, உன் பலத்திற்குத்தகுந்த வேகத்தை விருத்திசெய்து கொள். அஸ்த்ர ரஹஸ்யங்கள் உன்னைப்போல் யாருக்காவது தெரியுமா? இதுவரையில் நீ ஜயிக்காத சத்ருக்களுண்டோ? நீ அந்தக் குரங்கை ஸமீபித்தவுடன், உன் ஸேனை நாசமடையாதபடி உன் பலத்தையும் சத்ருபலத்தையும் நன்றாய் ஆலோசித்து, ஜயமுண்டாகும் படி யுத்தத்திற்கு ஆரம்பஞ்செய். வீரச்ரேஷ்ட! பெரிய ஸைன்யத்தைக் கூட்டிக்கொண்டு அவனை ஜயிக்கலாமென்று எண்ணாதே; அவைகளை ஒரு க்ஷணத்தில் மடித்துவிடுவான்; வஜ்ராயுதத்தால் அவனைக் கொல்ல நினைக்காதே, அவனுடைய ஸத்வத்திற்கு இது ஒரு பொருட்டா? வாயுவிற்கும் இவனுடைய வேகம் கிடையாது. திடீரென்று எந்தத் திக்கிலிருந்தாவது பாய்ந்து அடிப்பவனிடத்தில் வஜ்ராயுதத்தால் ப்ரயோஜனமென்ன? ஸமீபத்தில் வரும் நான் இதுவரையில் சொல்லிவந்த விஷயங்களை நன்றாய் ஆலோசித்துப்பார். நீ உத்தேசித்த கார்யம் ஸித்தியாகும்பொருட்டு, மனஸைச் சிதறவிடாமல் நிறுத்தி, வில்லை எடுத்துக்கொண்டு திவ்யாஸ்த்ரத்தின் மந்த்ரங்களை த்யானஞ்செய்து கொண்டே போ. எப்படியாவது ஜயத்துடன் திரும்பிவா. அஸ்த்ரபலத்தால் அவனைக் கட்டலாமேயொழிய வேறு விதத்தால் முடியாது. இவ்வளவு பயங்கரமான சத்ருவிடத்தில் என்னைப்போன்ற சிறுவனை அனுப்பிப் பரீக்ஷிப்பதைக்காட்டிலும் தாங்களே போகக்கூடாதாவென்றால் தன் பரிவாரங்களிருக்கையில் அரசன் அவர்களை அனுப்பாமல் தானே யுத்தத்திற்குப்போவது ராஜ தர்மமல்ல. அவைகளை அனுஷ்டிக்கும் எனக்கும் அழகல்ல. மேலும் யுத்தத்தில் ஸகல ஆயுதங்களையும் ப்ரயோகிப்பதில் உன்னைப்போன்றவனில்லையென்று எனக்குத் தெரியும். மேலும் யுத்தத்தில் சத்ருக்களை நாசஞ்செய்து ஜயமடைவது நமக்கு அழகல்லவா? இப்படிப்பட்ட ஸமயத்தை விட்டுவிடலாமோ? ஆகையால் உன்னை அனுப்பினேன்" னென்றான்.

பராக்ரமத்தில் தேவர்களைப்போன்ற இந்த்ரஜித் ஸாமான்யபல்வானா? மஹாவீரன்; ராவணனுடைய வார்த்தையைக் கேட்டு, யுத்தஞ்செய்ய ஆவல்கொண்டு பிதாவை ப்ரதக்ஷிணஞ்செய்தான்.

அவனுடைய பந்துக்களும் மித்ரர்களும் கொண்டாட, யுத்தஞ் செய்வதில் நோக்கமுள்ளவனுய் வெகு உத்ஸாஹத்துடன் யுத்தத்திற்கு புறப்பட்டான். ப்ரதாப லங்கேச்வரனுடைய மூத்த குமாரன்; தாமரையிதழ்களைப்போன்ற நேத்ரங்களையுடையவன்; மஹாதேஜஸ்வி; தைர்ய லக்ஷ்மியால் ஜ்வலித்துக்கொண்டு பர்வகாலங்களில் பொங்கும் மஹாஸமுத்ரத்தைப்போல் அட்டஹாஸஞ்செய்து கொண்டு வெளிக்கிளம்பினுன். இந்த்ரனைப்போன்ற இந்த்ரஜித் நான்கு ஸிம்ஹங்கள் பூட்டின உத்தம ரதத்திலேறிச் சென்றுன். அவை வேகத்தில் கருடனைப்போன்றவை; ஒன்றிற்கொன்று ஸமமானவை; வெளுத்த கூர்மையான பல்லுகளையுடையவை; அந்த ரதம் எங்கும் தடையின்றிச் செல்லக்கூடியது. 'வில்லாளிகளுக்குள் ச்ரேஷ்டனும், அஸ்த்ர சஸ்த்ர வித்யையில் நிகரில்லாதவனுமான இந்த்ரஜித் திவ்யரதத்தில் ஹனுமானிருக்குமிடத்திற்கு வந்தான். அவர் ரதகோஷத்தையும் வில்லின் நாணெலியையும் கேட்டு, "நமக்குத் தகுந்த சத்ரு வருகிறு"னென்று அளவற்ற ஸந்தோஷமடைந்தார். யுத்த சாஸ்த்ரத்தில் நிபுணரான ராவணகுமாரன் அதற்குள் பெரிய வில்லையும் எஃகால் செய்யப்பட்ட நுனிகளையுடைய கூர்மையான பாணங்களையும் எடுத்துக்கொண்டு ஆஞ்ஜநேயரை நோக்கி வந்தான். இப்படி யுத்தத்தில் உத்ஸாஹங் கொண்டு ஆயுதபாணியாய் இந்த்ரஜித் வருகையில் ஸகல திக்குகளும் கலங்கின; மிருகங்களும் பயங்கரமாய்க் கத்தின; அந்த அத்புதமான யுத்தத்தைப் பார்க்க நாகர்களும் யக்ஷர்களும் ஸித்தர்களும் மஹர்ஷிகளும் க்ரஹதேவதைகளும் நக்ஷத்ரதேவதைகளும் கூட்டம் கூட்டமாய் ஆகாசவீதியில் நின்றார்கள். பக்ஷிகள் இன்று நமக்கு நல்ல ஆஹாரம் கிடைக்குமென்று உரக்கக் கூவின.

அப்பொழுது தன்னை நோக்கி ரதத்திலேறி வரும் இந்த்ரஜித்தைப்பார்த்து ஆஞ்ஜநேயர் ஸிம்ஹநாதஞ்செய்து, சரீரத்தை விருத்தி செய்துகொண்டார். இந்த்ரஜித் தன் திவ்யரதத்திலிருந்துகொண்டு வில்லை வளைத்து இடிபோல் நாணெலிசெய்தான். பிறகு கடும் வேகமுடையவர்களும் மஹா பலசாலிகளும் யுத்த விஷயங்களில் ஸந்தேஹமற்றவர்களுமான ஆஞ்ஜநேயரும் இந்த்ரஜித்தும், எப்பொழுதும் விரோதிகளான தேவாஸுர ச்ரேஷ்டர்களைப்போல் யுத்தத்திற்கு ஆரம்பித்தார்கள். ப்ரஸித்தமான வில்லாளியும் மஹாரதனும் சூரனும் யுத்தத்தில் ஆசையுள்ளவனுமான ராவணபுத்ரன் ப்ரயோகிக்கும் பாணங்களை மாருதி தடுத்துக்கொண்டும், சரீரத்தை வரவரப்

பெருக்கிக்கொண்டும் ஆகாசமார்க்கத்தில் ஸஞ்சரித்தார். பிறகு அந்த ராக்ஷஸன் தங்கக்கட்டிகளாலும் இறகுகளாலும் அலங்கரிக்கப்பட்ட கோணலான பாணங்களை ப்ரயோகித்தான். அவை நீண்டு வெகு கூர்மையாக சத்ருக்களின்மேல் வஜ்ராயுதத்தைப்போல் வேகமாய் விழுந்து கொல்லும். பேரி ம்ருதங்கம் தப்பட்டை முதலிய வாத்யங்களுடைய சப்தத்தையும் ரதத்தின் கர்ஜனையையும் நாணோசையையும் லைன்யங்களின் கோஷத்தையும் கேட்டு, ஹனுமான் மறுபடியும் உயரக்கிளம்பி வில்லாளிகளுக்குள் ச்ரேஷ்டனான இந்த்ரஜித் ப்ர போகிக்கும் பாணங்களைத் தன்மேல் விழாமல் செய்துகொண்டு, அவைகளுக்கு நடுவில் புகுந்து புறப்பட்டு வீர்யத்தையும் பலத்தையும் விருத்திசெய்துகொண்டார். அந்த ராக்ஷஸன் பாணப்ரயோகஞ் செய்யும்பொழுது கைகளை நீட்டி அவைகளை விலக்கிக்கொண்டு ஆகாசத்தில் தாவினர். இருவரும் அளவற்ற வேகமுள்ளவர்கள்; யுத்தத்தில் நிபுணர்கள். அவர்கள் செய்யும் யுத்தத்தைக்கண்டு ஸகல பூதங்களும் ஆச்சர்யமடைந்தன. இந்த்ரஜித் ஹனுமானுடைய மர்மத்தை அறியமுடியவில்லை. மாருதியும் ராவணபுத்ரனுடைய மர்மத்தை அறிய முடியவில்லை. இருவரும் தேவதைகளைப்போல் பராக்ரமசாலிகள்; அவர்கள் செய்யும் யுத்தம் பிறரால் ஸஹிக்கமுடியாமலிருந்தது. இந்த்ரஜித் மஹாபுத்திமான்; குறி வைப்பதிலும் அதை அடிப்பதிலும் மனதை சிதறவிடாமல் வெகு ஜாக்ரதையாயிருப்பவன். 'நான் ப்ர போகிக்கும் பாணங்களெல்லாம் நான் நினைத்தபடி இவன்மேல் விழுகின்றன. ஆனால் இவன் எப்படியோ அவைகளுக்கு அகப்படாமல் தப்பி வருகிறான். என்ன ஆச்சர்ய''மென்று தீர்க்கமாய் யோசித்து "இவனைப் பாணங்களால் கொல்லமுடியாது. எப்படியாவது மூர்ச்சை அடையும்படி செய்து கட்டிக்கொண்டுபோவதே ச்ரேஷ்ட''மென்று நிச்சபித்தான்.

பிறகு ஸகல அஸ்த்ரங்களின் ரஹஸ்யத்தை அறிந்த இந்த்ரஜித் "இவன் எந்த அஸ்த்ரங்களாலும் மரணமடையான். இவனைக் கட்டக்கூடியது ப்ரஹ்மாஸ்த்ரம் ஒன்றே'' யென்று கண்டு மாருதியின்மேல் அதை ப்ரயோகித்து அவரைக் கட்டிவிட்டான். உடனே அவர் சேஷ்டையற்று மூர்ச்சையடைந்து பூமியில் விழுந்தார். சற்று நேரங்கழித்து, தான் ப்ரஹ்மாஸ்த்ரத்தால் கட்டுப்பட்டிருப்பதையும், அதனால் தன் வேகம் அடங்கினதையும், தனக்கு முன்பு ப்ரஹ்மா கொடுத்திருக்கும் வரத்தையும் ஞாபகப்படுத்திக்கொண்டார். "ப்ரஹ்மாஸ்த்ரத்தைத் தவிர என்னைக் கட்டக்கூடிய அஸ்த்ரம் வேறொன்

றில்லை. இதிலிருந்து என்னை விடுவித்துக்கொள்ள எனக்கு கொஞ்ச காலம் சக்தி கிடையாது. இந்த ரஹஸ்யத்தை அறிந்தே இந்த ராக்ஷஸன் இதை ப்ரயோகித்திருக்கிறான். ஆகையால் லோககுருவான ப்ரஹ்மாவின் ஆக்ஞைக்கு நான் கட்டுப்படவேண்டியது. இந்த அஸ்த்ரத்தின் வீர்யமோ எல்லையற்றது. ஆனால் எனக்கு யாதொரு உபத்ரவமும் நேராதென்றும் இதற்கு ஒரு முஹூர்த்தம் வரையில் நான் கட்டுப்பட்டிருக்கவேண்டுமென்றும் ப்ரஹ்மா எனக்கு வரங்கொடுத்திருக்கிறார். ஆகையால் கொஞ்சநேரத்திற்கெல்லாம் இதிலிருந்து விடுபடுவேன். ப்ரஹ்மா இந்த்ரன் வாயு முதலியவர்கள் என்னை ரக்ஷிக்கையில், இந்த அஸ்த்ரத்தால் கட்டப்பட்டிருந்தபோதிலும் எனக்குக் கொஞ்சங் கூடப் பயமில்லை. இந்த ராக்ஷஸர்கள் என்னைக்கட்டிக் கொண்டுபோவதும் எனக்கு லாபந்தான். ராவணனைக் கண்டு பேசி அவனுடைய குணங்களையும் பராக்ரமத்தையும் நன்றாய் அறியலா" மென்று அசைவற்றிருந்தார்.

பிறகு ராக்ஷஸர்கள் ஸமீபத்தில் வந்து சணப்பக்கயிறுகளாலும் மரவுரிகளாலும் அவரை இறுக்கிக்கட்டி மிரட்டினார்கள். மாருதி தீர்க்கமான ஆலோசனையுள்ளவர்; தான் செய்ய வேண்டிய கார்யத்தை நன்றாய் நிச்சயித்துக்கொண்டவர், எவ்வித சத்ருக்களையும் அலக்ஷ்யமாய்க் கொல்லக்கூடியவர். ஆகையால் மிகவும் பயந்தவர்போல் சேஷ்டையற்று, "ஒரு வேளை ராவணன் என்னைப் பார்க்க விரும்பி வருவிப்பா" னென்ற நம்பிக்கையால் சத்ருக்கள் தன்னைக் கட்டுவதையும் உபத்ரவிப்பதையும் லக்ஷ்யஞ் செய்யவில்லை. சணப்பக்கயிற்றால் கட்டப்பட்டவுடன் ப்ரஹ்மாஸ்த்ரத்திலிருந்து விடுபட்டார். அதினால் கட்டப்பட்டிருக்கும்பொழுது வேறொன்றால் கட்டினால் அந்த அஸ்த்ரத்தின் வீர்யம் போய்விடும். ஹனுமான் சணப்பக்கயிற்றால் கட்டப்பட்டவுடன் ப்ரஹ்மாஸ்த்ரத்திலிருந்து விடுபட்டாரென்றறிந்து, மஹா புத்திமானான இந்த்ரஜித் "ஐயோ! இந்த அஸ்த்ரத்தை ப்ரயோகித்திருக்கும்பொழுது வேறொன்றால் கட்டக்கூடா"தென்ற மந்த்ர ரஹஸ்யம் இந்த மூடர்களுக்குத் தெரியவில்லையே! அருமையான அஸ்திரம் வீணாயிற்றே! என் உத்தேசமும் நிறைவேறாமல் போயிற்றே! இந்த அஸ்த்ரம் வீணானபிறகு வேறு அஸ்த்ரம் ப்ரயோஜனப்படாதே! ச்ரமப்பட்டுச்செய்த இந்தப்பெருங்கார்யத்தைக் கெடுத்துவிட்டார்களே! ப்ரஹ்மாஸ்த்ரத்தை மறுபடியும் ப்ரயோகிக்கமுடியாது. இவன் அதிலிருந்து விடுபட்டபோதிலும் கட்டுப்பட்டவன்போல் காட்டிக்கொள்

ளுகிருன். இதின் ரஹஸ்யம் எனக்குத் தெரியவில்லை. திடீரென்று கிளம்பி எல்லோரையும் நாசஞ்செய்தாலும் செய்வா"னென்று கவலை கொண்டான்.

ஹநுமான் தான் ப்ரஹ்மாஸ்த்ரத்திலிருந்து விடுபட்டதாய்க் காட்டிக்கொள்ளாமல், ராக்ஷஸர்கள் தன்னைக் கட்டியிருப்பதையும் தடிகளாலும் முஷ்டிகளாலும் அடிப்பதையும் பொறுத்துக்கொண்டிருந்தார். பிறகு அவரை ராவணனிருக்குமிடத்திற்குக் கொண்டுபோனார்கள். அங்கே இந்த்ரஜித், "நமது சைன்யங்களையும் ஸேனாதிபதிகளையும் கொன்று அசோகவனத்தை அழித்த குரங்கைப் பாருங்க"ளென்று ராவணனுக்கும் மந்த்ரிகளுக்கும் மாருதியைக் காட்டினான். ஆனால் அவர் ப்ரஹ்மாஸ்த்ரத்திலிருந்து விடுபட்டும், ஏதோ காரணத்தால் கட்டுப்பட்டவர்போலிருக்கிறாரென்று அவனுக்கு நன்றாய்த் தெரியும். மயங்கின மதயானையைப்போல் கட்டுப்பட்டுக் கிடக்கும் அந்த வானரச்ரேஷ்டனை ராக்ஷஸர்கள் ராவணனுக்குத் தெரிவித்தார்கள். அங்கிருந்த ராக்ஷஸ வீரர்கள் மாருதியைப் பார்த்து, "இவன் யார்? யாரைச் சேர்ந்தவன்? எங்கிருந்து வந்தான்? இங்கே என்ன கார்யம்? இவனுக்கு வேண்டியவர்கள் இங்கே யா"ரென்று பலவிதமாய் ஒருவர்க்கொருவர் பேசிக்கொண்டார்கள். பிறகு அவரைக்கண்டு கோபங்கொண்டு, "நமது பந்துக்களையும் மித்ரர்களையும் கொன்று நம்மை அவமானஞ்செய்த இந்தத் துஷ்டக் குரங்கைக் கொல்லுங்கள், கொளுத்துங்கள், தின்னுங்கள், சித்ரவதை செய்யுங்களெ"ன்று இரைந்தார்கள். அதைக் கேட்டுக்கொண்டே அந்த வானரவீரன் ராஜ மார்க்கத்தை தாண்டிச் சென்று, ராவணனுடைய காலடியில் வயஸ்சென்ற மந்த்ரிகள் உட்கார்ந்திருப்பதையும் நவரத்ன கசிதமான அந்தக் கொலுமண்டபத்தின் அழகையும் பார்த்தார். விகார ரூபமுள்ள ராக்ஷஸர்களால் அங்குமிங்கும் இழுக்கப்பட்ட இந்த வானரச்ரேஷ்டனை மஹாதேஜஸ்வியான ராவணனும் பார்த்தான். ஆஞ்ஜநேயரும் கொஞ்சங்கூடப் பயமில்லாமல் அந்த ப்ரதாபலங்கேச்வரனை உற்றுப்பார்த்தார். அவன் எல்லையற்ற தேஜஸையும் பலமும் பொருந்தி, ஸகல கிரணங்களுடன் ஜ்வலிக்கும் ஆதித்யனைப்போல் ப்ரகாசித்தான். பிறகு ராக்ஷஸாதிபதி மாருதியைப் பார்த்துக் கோபத்தால் சிவந்த கண்களை உருட்டி விழித்து, தன் பாதத்தடியில் உட்கார்ந்திருக்கும் குலத்தாலும் ஆசாரத்தாலும் முதிர்ந்த மந்த்ரிகளை நோக்கி, "இவனுடைய வரலாற்றைக் கேளுங்க"ளென்று ஆக்ஞாபித்தான். அப்படியே அவர்கள் "நீ யார்?

இங்கே வந்த காரணமென்ன? இங்கே செய்யவேண்டிய கார்யமென்ன''வென்றுகேட்க, ஆஞ்ஜநேயர் "நான் ஒரு தூதன்; ஸுக்ரீவ மஹாராஜாவால் அனுப்பப்பட்டேன்''னென்று சொன்னார்.

## ஸர்க்கம் 49.

### ராவணன்.

பயமில்லாமல் லங்கையில் புகுந்து சத்ருக்களைக் கலக்கின மாருதி "ஹா, ஹா! என்ன ஆச்சர்யம்! ராக்ஷஸ வீரர்களை ஒவ்வொருவராய் நாசஞ்செய்தால் முடிவில் ராவணன் நம்முடன் யுத்தத்திற்கு வருவான். அப்பொழுது அவனுடைய பலத்தை அறியலாமென்று நான் செய்த யோசனை வீணாயிற்றே! இவன் ஸிம்ஹாஸனத்திலிருந்து இறங்காமலே என்னைத் தன்னிடத்திற்கு வரவழைத்துக்கொண்டா''ரென்று ஆச்சர்யப்பட்டார். பிறகு, அவன் ராமனுக்குச் செய்த அபராதத்தையும் ஸீதையை உபத்ரவித்ததையும் நினைத்துக் கோபந் தாங்காமல் அவனை உற்றுப்பார்த்தார். சிரஸில் நவரத்னக்ஜிதமான ஸ்வர்ண கிரீடம் முத்து மாலைகளால் அலங்கரிக்கப்பட்டு விளங்கிற்று. அருமையான நவரத்னங்களிழைத்து மனஸால் ஸிருஷ்டிக்கப்பட்டதுபோல் விசித்ரமாய்ச் செய்யப்பட்ட ஸமஸ்த ஆபரணங்களாலும் அலங்கரிக்கப் பட்டிருந்தான். விலையற்ற வெண்பட்டை உடுத்திக்கொண்டு கஸ்தூரி புனுகு ஜவ்வாது முதலிய பரிமளத்ரவ்யங்கள் கலந்த சிவப்புச் சந்தனத்தால் விசித்ரமான வரிசைகளுடன் பூசப்பட்டிருந்தான். ரக்தத்தைப்போல் சிவந்த இருபது கண்களால் ஆஞ்ஜநேயரைப் பயங்கரமாய் உருட்டி விழித்துப் பார்த்துக்கொண்டிருந்தான். உதடுகள் தொங்கிக் கொண்டிருந்தன; க்ரூரமான கோரைப்பற்கள் ஜ்வலித்தன; பலவித க்ரூர ஜந்துக்கள் ஸஞ்சரிக்கும் சிகரங்களையுடைய மந்தர கிரியைப்போல் பத்துத் தலைகளுடன் விளங்கினான்; கறுத்த மைமலைபோல் தேஹகாந்தியுள்ளவன். பூர்ணசந்த்ரனைப்போல் நாயகமணியையுடைய முத்துஹாரம் கொக்குகளோடு கூடின மேகத்தைபோல் மார்பில் ப்ரகாசித்தது. புஜங்களில் கேயூரங்களும் தோள்வளைகளும் கட்டப்பட்டு உத்தமமான சந்தனம் பூசப்பட்டிருந்தது. அவை ஐந்துதலை நாகங்களைப்போன்ற விரல்களுடன் பருத்துத் திரண்டு விளங்கின.

அவன் உட்கார்ந்திருந்த ஆஸனம் ஸ்படிகத்தால் செய்யப்பட்டு ச்ரேஷ்டமான ரத்ன ஸ்தம்பங்களாலும் விரிப்புகளாலும் அலங்கரிக்கப்பட்டிருந்தது. ஸர்வாலங்காரமுள்ள அழகிய பெண்மணிகள் ஸமீபத்தில் நான்கு பக்கங்களிலுமிருந்து சாமரங்களாலும் விசிறிகளாலும் உபசரித்துக்கொண்டிருந்தார்கள். நான்கு மஹாஸமுத்ரங்களால் இந்தப் பூமி சூழப்பட்டிருப்பதைப்போல் துர்த்தரன் ப்ரஹஸ்தன் மஹாபார்ச்வன் நிகும்பனென்ற மந்த்ரிகளால் சூழப்பட்டிருந்தான். அவர்கள் மந்த்ராலோசனையில் சிறந்தவர்கள்; பலத்தால் கர்வங் கொண்டவர்கள்; மேலும் ராவணனுக்கு எப்பொழுதும் மங்களத்தையே தேடும் புத்திமான்களான இதர மந்த்ரிகள், தேவர்கள் இந்த்ரனைச் சூழ்ந்திருப்பதுபோல் அவனைச் சுற்றி உட்கார்ந்திருந்தார்கள். தேஜஸாலும் காந்தியாலும் பார்ப்போர்களின் கண் கூசும்படி, மலையருவிகள் பாயும் மேருவின் சிகரத்திலிருக்கும் காளமேகத்தைப் போல் ஸிம்ஹாஸனத்தில் இறுமாந்து வீற்றிருக்கும் ப்ரதாபலங்கேச்வரனைப் பார்த்து, மாருதி ராக்ஷஸர்கள் தன்னை உபத்ரவிப்பதையும் மறந்து அளவற்ற ஆச்சர்யமடைந்தார். அவருடைய தேஜஸால் மயங்கி, "என்ன ரூபம்! என்ன தைர்யம்! என்ன ஸத்வம்! என்ன காந்தி! இவனுடைய தேஜஸுக்கும் ப்ரபாவத்திற்கும் அளவில்லையோ? ஸகல லக்ஷணங்களும் பொருந்தியிருக்கின்றன. இந்தப் பலவான் தர்மசாலியாயிருந்தால் இந்த்ரனையும் ஸ்வர்க்கத்தையும் காப்பாற்றத் தகுந்தவனல்லவா? தேவர்களும் அஸுரர்களும் ஸகல லோகங்களும் இவனுடைய க்ரூரகிருத்யங்களாலும் லோகத்தார் நிந்திக்கும்படியான நடத்தையாலும் நடுங்குகிறார்கள். இவன் கோபங்கொண்டால் இந்த ப்ரபஞ்சத்தை நாசஞ்செய்து ஸமுத்ரத்தில் தூற்றிவிடக்கூடியவ" னென்று பலவிதமாய் யோசித்தார்.

---

## ஸர்க்கம் 50.

### ராவணனுக்கும் மாருதிக்கும் ஸம்வாதம்.

---

ஸகல லோகங்களையும் கதறச்செய்யும் மஹாபலவானான ராவணனும், தேஜஸால் ஜ்வலிக்கும் ஆஞ்ஜநேயர் மஞ்சள் வர்ணமான நேத்ரங்களுடன் தன்னெதிரில் நிற்பதைக்கண்டு கோபங்கொண்டு "இவன் யார்? பூர்வத்தில் நான் கைலாஸகிரியைப் பெயர்த்து அசைக்

கும்பொழுது என்னைச் சபித்த நந்திகேச்வர பகவான் இந்த ரூப மெடுத்து வந்திருக்கிறாரா? அல்லது, பாணாஸுரன் இந்த ரூபத்து டன் வந்திருக்கிறானோ''வென்று பலவிதமாய் யோசித்தான்.

பிறகு ராவணன் ப்ரஹஸ்தனைப் பார்த்து விஸ்தாரமான அர்த்தங்களடங்கிய வார்த்தையைக் காலதேசங்களுக்குத் தகுந்தபடி சொன்னான். "இந்தத் துஷடன் யார்? எங்கிருந்து வந்தான்? யார் அனுப்பினார்கள்? அசோகவனத்தை அழித்து ராக்ஷஸர்களை எதற்காகப் பயமுறுத்தினான்? கேள். பிறர் நெருங்கமுடியாத என் ராஜ தானியில் ஏன் வந்தான்? என் ஸைன்யங்களுடன் ஏன் யுத்தஞ் செய்தான்? கே''ளென்று ஆக்ஞாபித்தான். ப்ரஹஸ்தன் "குரங்கே! பயப்படாதே; தைர்யப்படுத்திக்கொள். உனக்கு க்ஷேமமுண்டாகட் டும். இந்த்ரன் உன்னை இங்கே அனுப்பியிருந்தால் வாஸ்தவத்தைச் சொல். பயப்படாதே; உன்னை விடச்சொல்லுகிறேன். குபேரனாவது, யமனாவது, வருணனாவது, விஷ்ணுவாவது, ராக்ஷஸேச்வரனை ஜயிக்க விரும்பி உன்னை இந்த ரூபத்துடன் இங்கே அனுப்பியிருந்தாலும் சொல். நீ ரூபத்தால் வானரனேயொழிய தேஜஸாலும் பலத்தாலும் உன்னை வானரனென்று சொல்ல முடியுமா? நிஜத்தைச் சொல்! உன்னை விடுவோம்; பொய் சொன்னால் நீ பிழைப்பதரிது. அரசனுடைய அந்தப்புரத்தில் எப்படி ப்ரவேசித்தாய்? சொல். எதற்காக ப்ரவேசித்தா'' யென்று கேட்டான்.

அதற்கு ஆஞ்ஜநேயர் அவனை லக்ஷ்யஞ்செய்யாமல் ராவணனைப்பார்த்து, "இந்த்ரனாவது யமனாவது வருணனாவது எனக்கு யஜமானனல்ல. குபேரனுடன் எனக்கு ஸ்நேஹமில்லை. விஷ்ணு என்னை அனுப்பவில்லை. நான் வானரன். இது என் ஸ்வரூபம். ராக்ஷஸராஜனைப்பார்க்க இங்கே வந்தேன். அந்த உத்தேசத்துடன் அசோகவனத்தை அழித்தேன். உடனே ராக்ஷஸர்கள் என்னுடன் யுத்தஞ்செய்ய வந்தார்கள். என் தேஹத்தை ரக்ஷிப்பதற்காக அவர்களுடன் யுத்தஞ்செய்தேன். தேவர்களும் அஸுரர்களும் அஸ்த்ரங்களும் என்னைக் கட்டுப்படுத்தாதென்று ப்ரஹ்மா எனக்கு வரங்கொடுத்திருக்கிறார். தங்களைப்பார்க்க விரும்பியே ப்ரஹ்மாஸ்த்ரத்திற்குக் கட்டுப்பட்டேன். அதினால் விடுபட்டும் கட்டப்பட்டவன் போலிருந்து இந்த ராக்ஷஸர்கள் செய்யும் உபத்ரவங்களை ஸஹித்துக் கொண்டிருக்கிறேன். ஒரு ராஜகார்யமாய்த் தங்களிடத்தில் வந்திருக்கிறேன். அளவற்ற தேஜஸுடைய ரகுவீரனால் நான் இங்கே அனுப்பப்பட்டேன். லங்கேச்வர! நான் சொல்லும் ஹிதமான வார்த்தைகளைக் கேட்கவேண்டிய'' தென்றார்.

## ஸர்க்கம் 51.

## மாருதி ராவணனுக்கு ஹிதோபதேசஞ் செய்தது

பராக்ரமசாலியான ஹனுமான் எல்லோரும் கண்டு நடுங்கும் ப்ர பாவமுள்ள ராவணனை லக்ஷ்யஞ்செய்யாமல், தான் ஒண்டியாயிருப் பதையும், கணக்கில்லாத சத்ருக்கள் தன்னைச் சூழ்ந்திருப்பதையும் கவனிக்காமல், தான் சொல்லும் விஷயம் ராவணனுக்குக் கோபத் தை உண்டாக்குமென்று தெரிந்திருந்தும் பயப்படாமல், விசேஷ அர்த்தங்களடங்கிய வார்த்தைகளைச் சொன்னார். "லங்கேச்வர! கிஷ் கிந்தா நகரத்தில் அரசுசெய்யும் ஸுக்ரீவ மஹாராஜா என்னைத் தங் களிடத்தில் அனுப்பினர். ஸஹோதரனைப்போல் தங்களிடத்தில் ப்ரியம் வைத்த மஹாராஜா தங்களுடைய க்ஷேமத்தை விசாரிக்கிறார். மஹாத்மாவாயும் தங்களுக்கு ஸஹோதராயுமிருக்கும் அவர் சொல் லியனுப்பின விஷயங்கள் இஹபர ஸாதகமானவை; தர்மம் அர்த்த மென்ற புருஷார்த்தங்களுக்கு ஒத்தவை; ஆகையால் அதைக்கவனி த்துக் கேளுங்கள். தசரதனென்று ப்ரஸித்திபெற்ற ஓர் அரசனிருந் தார். அவர் நிகரில்லாத சதுரங்கபலத்தையுடையவர்; தேஜஸில் இந் த்ரனைப்போன்றவர்; அவருடைய மூத்தபுத்ரனான ராமன் மஹாதே ஜஸ்வி, மஹாபலவான், எல்லோர்க்கும் ஆனந்தத்தைக் கொடுப்பவர்; அனுக்ரஹிக்கவும் சிக்ஷிக்கவும் திறமையுள்ளவர்; பெரியோர்களுடைய ஆசாரத்தை அனுஷ்டித்துப் பிதாவின் ஆக்ஞையால் ராஜ்யத்தை விட்டு, லக்ஷ்மணனென்ற தம்பியோடும் ஸீதையென்ற பார்யையோ டும் தண்டகாரண்யத்தில் ப்ரவேசித்தார். அங்கே மஹாபதிவ்ரதை யான ஸீதை காணமற்போனள். அவள் விதேஹதேசத்தரசனான ஜனகனென்ற மஹாத்மாவின் பெண்.

பிறகு அவ்விருவரும் அவளைத் தேடிக்கொண்டு ரிச்யமுகபர்வ தத்திற்கு வந்து ஸுக்ரீவ மஹாராஜாவுடன் ஸ்நேஹஞ்செய்தார்கள். ஸுக்ரீவன் ஸீதையைத் தேடிக்கண்டுபிடிக்கிறேனென்று ப்ரதிக் ஞைசெய்தார். அப்படியே ராமன் வாலியை யுத்தத்தில் கொன்று ஸுக்ரீவனை வானரர்களுக்கு அதிபதியாக்கினர். வாலியைத் தங்களு க்கு இதற்கு முன் நன்றாய்த் தெரியுமே. அந்த வானரச்ரேஷ்டனை ராமன் யுத்தத்தில் ஒரேபாணத்தால் அடித்தார். பிறகு ஸத்யவானான ஸுக்ரீவன் ஸீதையைத் தேட நிச்சயித்து வானர ஸைன்யங்களை

ஸகல திக்குகளிலும் அனுப்பினர். அவர்கள் பூமியிலும் ஆகாசத்திலும் பாதாளத்திலும் கூட்டங்கூட்டமாய்க் கணக்கில்லாமல் சென்று அவனைத் தேடிவருகிறார்கள். அவர்களில் சிலர் கருடனைப் போன்றவர்கள்; சிலர் வாயுவைப்போன்றவர்கள். ஆகையால் அளவற்ற வேகத்துடன் எங்கும் தடையில்லாமல் செல்லக்கூடியவர்கள். என் பெயர் ஹனுமான்; நான் வாயுபகவானுக்குப் பிறந்தவன். ஸீதையைக்காண நூறு யோஜனை விஸ்தீர்ணமுள்ள ஸமுத்ரத்தைத் தாண்டி இங்கே வந்தேன். நகரமெங்கும் தேடிப்பார்க்கையில் ஸீதை தங்களுடைய கிருஹத்திலிருக்கக் கண்டேன்.

தாங்கள் மஹாபுத்திமான்; ஸகல சாஸ்திரங்களையும் புருஷார்த்தங்களின் ஸ்வரூபத்தையும் அறிந்தவர்கள்; கடுமையான தபஸ் செய்து அபூர்வமான வரங்களைப் பெற்றவர்கள். ஆகையால் பிறருடைய பத்னிகளை அபஹரித்துப் பலாத்காரம்செய்வது தங்களுக்கு நியாயமல்ல. தங்களைப்போன்ற புத்திமான்கள் தர்மத்திற்கு விரோதமாயும் பெரிய ஆபத்துகளுக்குக் காரணமாயும் வேருடன் நாசஞ் செய்யக்கூடியதாயுமிருக்கும் கார்யங்களில் தலையிட்டுக்கொள்ளமாட்டார்களல்லவா? ராமன் கோபங்கொண்டு லக்ஷ்மணனை ஏவி அவர் பாணப்ரயோகஞ்செய்தால், தேவாஸுரர்களில் யாராவது எதிரில் நிற்கமுடியுமா? ரகுவீரனுக்கு அபராதஞ்செய்து ஸுகமாயிருந்தவன் இந்த மூன்று லோகங்களிலுமுண்டோ? ஆகையால் மூன்று காலங்களிலும் தங்களுக்குப் பரம மங்களத்தைச் செய்வதும் தர்மத்திற்கும் அர்த்தத்திற்கும் ஒத்ததுமான இந்த ஹிதோபதேசத்தை அங்கீகரித்து ரகுநாதனிடத்தில் ஸீதையைக் கொண்டுபோய் ஒப்புவியுங்கள். வெகு ச்ரமப்பட்டு ஸீதையைக் கண்டேன். மேல் நடக்கவேண்டிய கார்யங்களுக்கு ராமனுடைய ஆக்ஞையை எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறேன். ஸீதை சொல்லமுடியாத துக்கத்தால் தபித்துக்கொண்டிருப்பதைக் கண்டேன். அவளை எடுத்துவந்து இங்கே வைத்திருப்பது, ஐந்துதலை நாகத்தை மடியில் கட்டிக்கொள்வதுபோலென்று தங்களுக்குத் தோன்றவில்லையா? அவளுடைய கற்பை அழித்துவிட்டால் பிறகு ராமனுக்கு அவளால் என்ன ப்ரயோஜனமென்றால், விஷங்கலந்த அன்னத்தை வயிறு நிறையப் புஜித்து ஜீர்ணஞ்செய்துகொள்ளமுடியுமா? தேவாஸுரர்களும் இவளைக் கொண்டுபோய் வைத்துப் பிழைக்கவும் முடியுமா? கடுமையான தபஸ்களையும் ச்ரேஷ்டமான தர்மங்களையும் வெகுகாலம் அனுஷ்டித்துப் பெற்ற இந்த வஜ்ரதேஹத்தையும் தீர்க்காயுளையும் ஐச்வர்யத்தையும் நாசஞ்செய்துகொள்வது நியாயமா?

"நான் தபோபலத்தாலும் தேவர்களாலும் அஸுரர்களாலும் மரணமில்லையென்ற வரம் பெற்றிருக்கிறே"னென்று தாங்கள் நம்பியிருக்கலாம். ஆனால் நான் சொல்லும் விஷயத்தைக் கவனியுங்கள். ஸுக்ரீவன் தேவனல்ல, அஸுரனல்ல, ராக்ஷஸனல்ல, தானவனல்ல, பன்னகனல்ல; ஆகையால் அவனிடத்திலிருந்து எப்படி ப்ராணனைக் காப்பாற்றுவீர்கள்?

"நான் இதுவரையில் அநேக பாபங்களைச் செய்திருக்கிறேன். அவைகளின் பலத்தை அனுபவிக்கவேண்டியது ஸித்தம். உன் உபதேசத்தால் ப்ரயோஜனமென்ன"வென்று நினைக்கவேண்டாம். ஒருவன் தர்மத்தையும் அதர்மத்தையும் செய்திருந்தால், அவைகளுக்குப் பலமான ஸுகத்தையும் துக்கத்தையும் ஒரே காலத்தில் சேர்ந்து அனுபவிக்கமுடியுமா? ப்ரகாசமும் இருட்டும் சேர்ந்திருக்குமா? தர்மம் ஸுகத்தையே கொடுக்கும்; அதர்மம் துக்கத்தையே கொடுக்கும்.

"தர்மத்தால் பாபத்தைப் போக்கடிக்கிறு"னென்ற ச்ருதிப்படி, நான் பூர்வத்தில் செய்த தர்மம் அதர்மத்தை அழித்துவிடாதா? என்னை ரக்ஷிக்காதா"வென்று எண்ணவேண்டாம். அப்படியல்ல; தாங்கள் செய்த தர்மங்களெல்லாம் ஸீதையை அபஹரிப்பதற்கு முந்திச் செய்தவை; அவைகளின் பலமாய் அளவற்ற போகங்களை இதுவரையிலும் அனுபவித்தீர்கள். இனி அவைகளுக்குச் சக்தியில்லை. தாங்கள் செய்த அதர்மங்களின் பலம் பாக்கியிருக்கிறது. அது தீராத துக்கத்தைக்கொடுக்கும்; வேரறுக்கும். ஆகையால் தர்ம பலத்தை நம்பி மோசம்போகவேண்டாம். அதர்மத்தின் பலத்தையும் அதிசீக்ரத்தில் அனுபவிப்பீர்கள்.

இது ஒரு அல்பக்குரங்கு சொல்லும் வார்த்தையென்று அலக்ஷயஞ் செய்யவேண்டாம்; இதில் ஸந்தேஹமில்லை. ஆகையால் அதற்கு முன்னமே விசேஷ தர்மத்தைச் செய்தால் தப்பலாம். ஜனஸ்தானத்தில் பதினாலாயிரம் ராக்ஷஸ வீரர்கள் மடிந்ததையும், தங்களைச் சிறையில் வைத்த வாலி ஒரே பாணத்தால் மாண்டதையும், ராமனும் ஸுக்ரீவனும் ஸ்நேஹஞ் செய்துகொண்டிருப்பதையும் நன்றாய் ஆலோசித்து ஹிதமான கார்யத்தைச் செய்யுங்கள். இந்த லங்கையை இதிலுள்ள ராக்ஷஸர்களுடனும் ஸைன்யங்களுடனும் நாசஞ்செய்ய நான் ஒருவனே போதும். ஆனால் ரகுவீரனுக்கு

அப்படிப்பட்ட உத்தேசமில்லை. ஸீதையை அபஹரித்தவனை மூல நாசஞ்செய்வேனென்று ராகவன் வானரர்களுக்கு முன்பாக ப்ரதிக்ஞை செய்திருக்கிறார். ராமனுக்கு அபராதஞ்செய்து ஸாக்ஷாத் தேவேந்த்ரனும் பிழைப்பானோ? அப்படியிருக்க, தங்களைப் போன்ற மற்றவர்களைப்பற்றிச் சொல்லவும்வேண்டுமா? தங்களுடைய ஸ்வாதீனத்திலிருக்கிறாளென்று தாங்கள் எண்ணும் ஸீதை, லங்கையை முற்றிலும் நாசஞ்செய்ய வந்த காளராத்ரியென்ற சக்தியென்று அறியுங்கள். ஸீதையென்ற காலபாசத்தை தாங்களே கழுத்தில் மாட்டிக்கொள்ளவேண்டாம். தங்களை ரக்ஷிக்கும் வழியைத் தேடுங்கள் மஹாபதிவ்ரதையான ஸீதையின் தபஸாலும் ராகவனுடைய ஸௌபாக்யத்தாலும் இந்த லங்காபுரி முழுவதும் எரிக்கப்படுவதை தாங்கள் பார்க்கவில்லையோ? தங்களுடைய நண்பர்களையும் ஹிதத்தைக் கோரும் மந்த்ரிகளையும் பந்துக்களையும் ஸஹோதரர்களையும் புத்ரர்களையும் போகங்களையும் பார்யைகளையும் இந்த லங்கையையும் வீணாய் அழிக்கவேண்டாம்.

நான் ஸாமான்ய வானரனல்ல; ஸகல லோகநாதனான ராமனே என்னை அடிமையாய் ஏற்றுக்கொண்டிருக்கிறார்; என்னை நம்பித் தன் அந்தப்புரகார்யத்தை என்னிடத்தில் ஒப்புவித்து இங்கே அனுப்பியிருக்கிறார்.

ஸத்யம் தர்மம் தயை முதலிய கல்யாண குணங்களின் அவதாரமான ரகுநாதனுடைய தாஸனான நான் சொல்லும் வார்த்தைகள் பொய்யாகுமோ? பஞ்ச பூதங்களால் அமைக்கப்பட்டுச் சராசர ஜந்துக்களுடன் கூடியிருக்கும் இந்த ப்ரபஞ்சம் முழுவதையும் ரகுநந்தனன் ருத்ரரூபியாய் ஸம்ஹாரஞ்செய்து அப்படியே ஸ்ருஷ்டிக்கச் சக்தியுள்ளவர். அவருக்கு ப்ரபு ஒருவருமில்லை. அவருடைய பெயர் மஹாகீர்த்தியென்று ச்ருதி ஸ்ம்ருதிகளால் விக்தமானபடி அவர் அளவற்ற கீர்த்திசாலி. தேவர்கள் அஸுரர்கள் அரசர்கள் யக்ஷர்கள் ராக்ஷஸர்கள் வித்யாதரர்கள் கந்தர்வர்கள் உரகர்கள் ஸித்தர்கள் கின்னரர்கள் பக்ஷிகள் முதலிய ஸகல பூதங்களிலும் பராக்ரமத்தில் மஹாவிஷ்ணுவிற்கு ஸமமான ராமனுடன் எதிர்த்து யுத்தஞ் செய்பவன் எவ்விடத்திலும் எக்காலத்திலும் கிடையவே கிடையாது. ஸகல லோகங்களுக்கும் நாயகனும் ராஜாதிராஜனுமான ராமசந்த்ரனுக்கு ஸஹிக்கமுடியாத அபராதத்தைச் செய்து இன்னும் பிழைத்திருக்கலாமென்று தங்களுக்கு ஸந்தேஹமுண்

டோ? தேவர்களும் அஸுரர்களும் கந்தர்வர்களும் வித்யாதரர்களும் நாகர்களும் யக்ஷர்களும் இன்னும் மற்ற எவர்களும் மூன்று லோகங்களுக்கும் நாயகனான ராமனுடன் யுத்தஞ்செய்ய ஸமர்த்தர்களோ? இவ்வளவென்ன? ஒருவனைக் கொல்லவேண்டுமென்று ராமன் ஸங்கல்பஞ்செய்த பிறகு அவரோடு யுத்தஞ்செய்து அவனை இந்த்ரன் காப்பாற்றமுடியுமோ? மூன்று லோகங்களுக்கும் அதிபதியாயிருந்தாலும், விருத்ரன் முதலிய அஸுரர்களைக்கொன்றிருந்தாலும், தன்னைப் போன்ற முப்பத்து முக்கோடி தேவர்களுடைய ஸஹாயத்தைப் பெற்றாலும் ஏதாவது ப்ரயோஜனமுண்டோ? அவன் போகட்டும். "ஸகல ப்ரபஞ்சத்தையும் ஸம்ஹாரஞ்செய்யும் ருத்ரனால் முடியாதோ"வென்றால், ஸம்ஹார காலத்தில் அவருக்கு அந்தச் சக்தியுண்டேயொழிய மற்றக் காலங்களில் கிடையாது. 'நெற்றிக் கண்ணால் மன்மதனையும் பலவான்களான த்ரிபுராஸுரர்களையும் ஸம்ஹரித்தவருக்கு இது லக்ஷ்யமா'வென்றால், அவர்கள் அபராதிகள். ஆகையால் அவர்களிடத்தில் நேத்ராக்னி ப்ரயோஜனப்படுமேயொழிய கல்யாணகுணபரிபூர்ணனான ராமனிடத்தில் செல்லுமோ? போகட்டும். 'பகவானுக்கு மூத்த புத்ரரான ப்ரஹ்மாவால் முடியாதோ? அவர் ருத்ரனுக்கு பிதாவல்லவா'வென்றால், அவரும் கர்மகதிக்குக் கட்டுப்பட்டவரே; மற்றவர்களைப்போல் உத்பத்தியாகாமல் ஸ்வயம்புவல்லவா'வென்றால் ஸஹாயமில்லாமல் என்ன செய்ய முடியும்? ஒரே காலத்தில் ஸகல வேதங்களையும் உச்சரிக்கக்கூடிய மஹிமை பொருந்தினவரல்லவாவென்றால், அந்தமஹிமையும் ப்ரயோஜனப்படாது. இவர்கள் ஒன்றுசேர்ந்தாலும் ப்ரயோஜனமில்லை" யென்றார்.

இப்படி ஹநுமான் மஹாதைர்யமாய்த் தனக்கு ப்ரியமில்லாத வார்த்தைகளை ஹிதோபதேச ரூபமாய்ச் சொல்லக் கேட்டு, எவ்விதத்திலும் தனக்கு நிகரில்லையென்று கர்வங்கொண்ட ராவணன், கோபத்தால் கண்களை உருட்டி விழித்துக் கொஞ்சங்கூட யோசிக்காமல் "இந்தக் குரங்கைக் கொல்லுங்க"ளென்று ஆக்ஞாபித்தான்.

---

## ஸர்க்கம் 52.

## விபீஷணன் ராவணனைத் தடுத்தது.

மாருதி இப்படிச் சொல்ல, ராவணன் கோபத்தால் மெய்மறந்து, "இந்தக் குரங்கைக் கொல்லுங்க"ளென்று கட்டளையிட்டான். அதைக் கேட்ட விபீஷணன் "ஐயோ! தன் ப்ரபு சொல்லியனுப்பின ஸமாசாரத்தைத் தெரியப்படுத்தினால் அது தூதனுடைய அபராதமா? இவனைக் கொல்வது நியாயமல்ல. ஆனால் ராவணன் கடுங்கோபங் கொண்டிருக்கிறான்; அதிசீக்ரத்தில் இவனைக் கொல்வான். இப்பொழுது என்ன செய்யலா"மென்று நன்றாய் யோசித்து, ஒரு முடிவு செய்தான். மஹா பராக்ரமசாலியானதால் ராவணனை எதிர்க்கிறோமென்று கொஞ்சமும் பயமில்லை. பேசுந் திறமையுள்ளவனாகையால் தான் உத்தேசித்த கார்யத்தை முடிப்போமென்று நிச்சயமுண்டு. ஆகையால் ராவணனை நமஸ்கரித்து ஸாமோபாயத்தால் அவனுக்கு ஹிதமான விஷயத்தைச் சொன்னான்.

"ராக்ஷஸாதிபதியே! பொறுங்கள்; கோபத்தை விடுங்கள்; மனஸில் கலக்கமற்றிருங்கள்; நான் சொல்லும் விஷயத்தைக் கவனித்துக் கேளுங்கள்; நியாய அநியாயங்களை பகுத்தறியக் கூடிய யோக்யர்களான அரசர்கள் தூதர்களைக் கொல்லமாட்டார்கள். ப்ரபோ! இவன் தூதன், அல்பக் குரங்கு, இவனைக் கொல்வது ராஜதர்மத்திற்கு விரோதம்; எல்லோரும் நிந்திக்கக்கூடியது. தங்களுடைய பலத்திற்கும் பராக்ரமத்திற்கும் கீர்த்திக்கும் அழகல்ல. தாங்கள் ப்ராணிகளுக்குள் தர்மங்களை அறிந்தவர்கள்; ராஜநீதியில் மஹாநிபுணர்கள்; ந்யாயாந்யாயங்களைப் பரீக்ஷித்தறிந்தவர்கள்; பரமார்த்த ஞானத்தால் மேலானவர்கள்; அல்பவ்யாபாரத்தையும் மறக்காதவர்கள்; தங்களைப்போன்ற பண்டிதர்களே கோபத்திற்கு இடங்கொடுத்தால், சாஸ்த்ரங்களைப் படிப்பது வீண் ச்ரமமல்லவா? தாங்கள் ராக்ஷஸாதிபதி; ஸகல சத்ருக்களையும் நாசஞ்செய்யும் பராக்ரமத்தையுடையவர்கள்; ஸகல விஷயங்களிலும் தங்களுக்கு நிகரில்லை; ஆகையால் தயவுசெய்து இந்த அநாவச்யமான பாபத்தை நிறுத்துங்கள். ந்யாயாந்யாயத்தை விசாரித்துப் பிறகு இவனைத் தண்டிக்கலா"மென்று ப்ரார்த்தித்தான்.

அதைக் கேட்டு ராவணன், கோபம் மேலிட்டு "விபீஷண! பராக்ரமசாலியாயிருந்தும் இப்படிச்சொல்லுகிறாயே! பாபிகளைக்கொல்வது பாபமா? இவனைப்போல் பாபியுண்டோ? ஆகையால் அவச்யம் கொல்லவேண்டிய"தென்றான்.

விபீஷணன் உத்தம புத்திமானாகையால் "ஐயோ! இவன் சொல்வது முற்றிலும் தர்ம விரோதமாயிருக்கிறது. கோபத்தால் மெய் மறந்திருக்கிறான். இங்கிருக்கும் துஷ்டர்களுக்கும் அது மிகவும் ப்ரியமாயிருக்கிறது. ஆனாலும் நாம் இப்பொழுது சும்மாயிருக்கக் கூடா"தென்று ச்ரேஷ்டமான தத்வங்களடங்கிய வார்த்தைகளைச் சொன்னான். "லங்கேச்வர! என்னிடத்தில் தயவு செய்யுங்கள். புருஷார்த்தங்களுக்கு விரோதமில்லாமல் நான் சொல்லும் வார்த்தைகளைக் கேளுங்கள். "எக்காலத்திலும் எவ்விடத்திலும் தூதர்களைக் கொல்லக்கூடா"தென்று பெரியோர்கள் சொல்லியிருக்கிறார்கள். 'இவன் தூதன் மாத்ரமல்ல; நமது ஸைன்யங்களையும் வீரர்களையும் கொன்ற சத்ரு. ஆகையால் இவனைக் கொல்வது தோஷமில்லை"யென்றாள், இவன் நமது சத்ரு. நமக்கு விசேஷ கெடுதியையும் அவமானத்தையும் செய்திருக்கிறான். இவனை வளரும்படிவிட்டால் நம்மை நாசஞ்செய்வான்; ஆனாலும், தூதனாகையால் இவனைக் கொல்லக்கூடாது. தூதர்களைச் சிக்ஷிப்பதற்குப் பெரியோர்கள் அநேக வழிகளை ஏற்படுத்தியிருக்கிறார்கள். அங்கங்களை விகாரப்படுத்தலாம்; கொறடாவால் அடிக்கலாம்; மொட்டையாக்கலாம்; இப்படி எப்பொழுதும் அடையாளமிருக்கக்கூடிய தண்டனைகளை விதித்திருக்கிறார்களேயன்றிக் கொல்லச்சொல்லவில்லை. தாங்கள் புருஷார்த்தங்களை நன்றாயறிந்து அனுஷ்டித்தவர்கள்; ஹிதாஹிதங்களைப் பரீக்ஷித்து நிச்சயமான ஞானத்தை ஸம்பாதித்தவர்கள். தாங்களே கோபத்திற்கு உட்பட்டால்; பலவான்கள் கோபத்தை எப்படி அடக்க முடியும்? தர்ம விசாரத்திலும் லோகவ்யவஹாரத்திலும் சாஸ்த்ரார்த்தங்களைப் பரீக்ஷித்தறிவதிலும் தங்களுக்கு ஸமமானவர்கள் ஒருவருமில்லை. ஸகல ஸுராஸுரர்களுக்குள் தாங்களே ச்ரேஷ்டர்கள். இந்தக் குரங்கைக் கொல்வதில் ஒரு ப்ரயோஜனமும் காணப்படவில்லை. இவனை அனுப்பினவர்களையல்லவா கொல்லவேண்டியது? சத்ருக்களால் அனுப்பப்பட்டவன் ஸாதுவானாலும் துஷ்டனானாலும் பிறர்க்கு உட்பட்டவன்; பிறர் சொன்ன ஸமாசாரத்தைச் சொல்கிறவன். இவனைக் கொல்லத்தகாது. இவனைக் கொன்றால் ஆகாசமார்க்கமாய் ஸமுத்ரத்தைத் தாண்டி இங்கே வரக்கூடியவன் வேறொருவனி

ல்லே. நமது சத்ருக்களான ராம லக்ஷ்மணர்களுக்கு ஸமாசாரத்தைச் சொல்லி நம்முடன் யுத்தஞ்செய்ய அவர்களை இங்கே அழைத்து வர வேறொருவனில்லே. அந்த க்ரூரர்கள் தூரமான மார்க்கத்தால் இங்கே வராமல் தடைப்பட்டிருக்கிறார்கள். இவனை விட்டுவிட்டால் அவர்களை எப்படியாவது இங்கே அழைத்து வருவான். அப்பொழுது அவர்களைக் கொல்லலாம். பராக்ரமம் உத்ஸாஹம் மனோதைர்யம் பூர்ணமாயுள்ள தேவாஸுரர்களும் தங்களை ஜயிக்க முடியுமோ? ராக்ஷஸர்களுடைய ஸகல இஷ்டங்களையும் பூர்த்திசெய்து ஸந்தோஷத்தைக் கொடுக்கும் தாங்கள், ராமலக்ஷ்மணர்களுடன் எப்பொழுது யுத்தம் நேருமென்று பாபரப்புடன் தோள் தட்டிக்கொண்டிருக்கும் ராக்ஷஸ வீரர்களுடைய ஆசையைக் கெடுக்கலாமா? தங்களுடைய ஸைன்யங்கள் ஹிதத்தையே கோருகிறவர்கள்; சூரர்கள்; ஸன்மானங்களாலும் கௌரதையாலும் வசப்பட்டவர்கள்; உத்தமகுலத்தில் பிறந்தவர்தள்; கார்யங்களை நன்றாய் வஹிக்கக்கூடியவர்கள்; யுத்தத்தில் கைதேர்ந்தவர்கள் கலங்காக தைர்யமுடையவர்கள்; இன்னும் அனேக உத்தமகுணங்களையுடையவர்கள். ஆகையால் இப்பொழுதே சில ஸைன்யங்களை ராமலக்ஷ்மணர்களென்ற மூடர்களிடத்தில் அனுப்பி, அவர்களை அவமதித்துச் சத்ருக்களிடத்தில் தங்களுடைய மஹிமையை வெளிப்படுத்துங்க''ளென்றார்.

ராக்ஷஸாதிபதியான ராவணன் தேவர்களைக் கதறச்செய்யும் பலவானும் பராக்ரமசாலியாயுமிருந்தும், விபீஷணன் ஹிதமாயும் ப்ரியமாயும் சொன்ன வார்த்தைகளை அங்கீகரித்தான்.



## ஸர்க்கம் 53.

இப்படித் தேசகாலங்களுக்குத் தகுந்தபடி விபீஷணன் சொல்ல, ராவணன் "விபீஷண! தூதர்களைக் கொல்லக்கூடாதென்று நீ சொன்னது யுக்தம். ஆகையால் இவனுக்கு வேறு முக்யமான அவமானஞ் செய்ய வேண்டியது. குரங்குகளுக்கு ப்ரியமான ஆபரணம் வாலல்லவா? ஆகையால் அதில் நெருப்புவைத்து இவனை அடித்துத் தூக்துங்கள். இவனுடைய மித்ரர்களும் பந்துக்களும் இவன் அங்கஹீனமாய் உத்ஸாஹமற்றிருப்பதைப் பார்க்கட்டும். வாலில் நெருப்பு வைத்து இவன்இந்தப் பட்டணம் முழுவதிலும் ஓரிடம் பாக்கியில்லாமல் அழைத்துப் போங்க''ளென்று ஆக்ஞாபித்தான்.

உடனே ராக்ஷஸர்கள், மாருதி தங்களைச் சேர்ந்தவர்களைக் கொன்றரென்ற கோபத்தால் அவருடைய வாலில் பழைய வஸ்த்ரங்களைச் சுற்றினார்கள். காட்டில் உலர்ந்த கட்டைகளில் பிடித்த அக்னியைப் போல் மாருதியின் வால் விருத்தியடைந்தது. பிறகு அவர்கள் அதின்மேல் எண்ணெயைக் கொட்டி நெருப்புவைத்தார்கள். கோபத்தாலும் ரோஷத்தாலும் பாலஸூர்யனைப் போல் ஜ்வலிக்கும் ஆஞ்ஜநேயர், எரிந்துகொண்டிருக்கும் வாலால் ராக்ஷஸர்களை அடித்துத் தள்ளினர். துஷ்டக் குரங்கின் வாலில் நெருப்பு வைத்ததைப் பார்க்க ஸ்த்ரீகளும் சிறுவர்களும் கிழவர்களும் ஸந்தோஷமாய் ஓடி வந்தார்கள். அடித்துத் தள்ளியும் மறுபடியும் மேல்விழுந்து தன்னைக் கட்டுவதைக் கண்டு, “இவர்கள் என்னை எந்த விதமாய்க் கட்டினாலும் ஒரு பொருட்டா? நினைத்தவுடன் கட்டுகளை அறுத்தெறிந்து இவர்களைப் பொடி செய்வேன். நான் இவர்களுக்குச் செய்த கெடுதிக்கு இது ஒரு சிக்ஷையாகுமா? இவ்வளவு ராக்ஷஸர்களையும் நான் ஒருவனே யுத்தத்தில் கொல்லக் கூடியவன். ஆனால் ராவணனையும் லங்கையையும் நாசஞ்செய்வதாக ராமன் ப்ரதிக்ஞைசெய்திருக்கிறபடியால் நான் யுத்தஞ்செய்வதை விட்டு லங்கையைச் சுற்றிப் பார்ப்பேன். இவர்கள் செய்யும் அவமானங்களையெல்லாம் பொறுப்பேன். இந்த லங்காநகரத்தையும், கோட்டைகள் கொத்தளங்கள் அரண்கள் முதலியவைகளையும் ராத்ரியில் பார்த்தேன். ஆனால் பகலில் மறுபடியும் கவனித்துப் பார்க்கவேண்டியது. என்னை ஓரிடம் பாக்கியில்லாமல் கொண்டுபோகும்படி ராவணன் உத்தரவுசெய்தது இந்தக் கார்யத்திற்கும் அனுகூலமாகவேயிருக்கிறது. பிறகு இங்கே யுத்தஞ்செய்யும்பொழுது, இந்தப் பாபிகள் ஸீதையை எவ்விடத்தில் ஒளித்தாலும் கண்டுபிடிக்கவும், நான் போகும்போது எல்லாவிடங்களையும் கவனித்துக்கொண்டு போகவேண்டும். இவர்கள் என்னைக் கட்டி வாலைக் கொளுத்தி வேண்டியவரையில் ஹிம்ஸிக்கட்டும். என் மனஸில் கொஞ்சங்கூட ஆயாஸமில்லை”யென்று முடிவு செய்தார்.

மஹாபலவானாயினும், தன் ஸ்வபாவத்தை மறைத்து, அல்பக் குரங்கைப்போல் காட்டிக்கொள்ளும் ஆஞ்ஜநேயரை ராக்ஷஸர்கள் பிடித்துக்கொண்டு வெகு ஸந்தோஷமாய் நகரத்தைச் சுற்றி வந்தார்கள் “கணக்கில்லாத ராக்ஷஸவீரர்களைக் கொன்ற இந்தத் துஷ்டக் குரங்கைக் கட்டிக்கொண்டு வந்திருக்கிறோ”மென்று

தோள் தட்டிக் கர்ஜித்துச், சங்கம் பேரி முதலிய வாத்யகோஷத்துடன் மாருதியை அழைத்துப்போனார்கள். எந்தச் சத்ருக்களையும் விளையாட்டாய் நாசஞ்செய்யக்கூடிய வாயுபுத்ரன், ராக்ஷஸர்களால் சூழப்பட்டு லங்கா நகரத்தை ஜாக்ரதையாய்ப் பார்த்துக்கொண்டே போனார். விசித்ரமான விமானங்களையும் மறைவான நிலவறைகளையும் நன்றாய்ப் பிரிக்கப்பட்ட நாற்சந்துகளையும் ராஜவீதிகளையும் சிறு வீதிகளையும் பெரிய உப்பரிகைகளையும் சிறு வீடுகளையும் பார்த்தார். காவற்காரர்கள் ராஜமார்க்கங்களிலும் நாற்சந்துகளிலும் மண்டபங்களிலும் நின்று, "இதோ நமது ரஹஸ்யங்களைக் கண்டுபிடிக்க வந்த தூதனைப் பாருங்க"ளென்று கூச்சலிட்டார்கள். உடனே ஸ்த்ரீகளும் சிறுவர்களும் வயஸ்சென்றவர்களும் ஹநுமானையும் அவருடைய வால் நெருப்புப் பற்றி எரிவதையும் பார்க்க ஆவலுடன் கூட்டங்கூட்டமாய் வந்தார்கள்.

அதற்குள் அசோகவனத்திலிருந்த ராக்ஷஸிகள் ஜானகியிடத்தில் சென்று, "ஸீதே! சிவந்த முகமுள்ள ஒரு குரங்கு உன்னுடன் பேசிக்கொண்டிருந்ததல்லவா? அதின் வாலில் நெருப்புவைத்து நகரத்தைச் சுற்றி அழைத்துக்கொண்டு போகிறார்க"ளென்றார்கள். தான் உயிரை விடப்போகும் ஸமயத்தில் தன்னைத் தடுத்து, ப்ரியநாயகனுடைய க்ஷேம ஸமாசாரத்தைத் தெரிவித்துத் தனக்கு ப்ராணனையும் ஸந்தோஷத்தையும் கீர்த்தியையும் கொடுத்த ஹநுமானுக்கு இந்த அபாயம் நேர்ந்ததென்று கேட்டவுடன், ஸீதை தன் ப்ராணனை பறிகொடுத்ததுபோல் துக்கத்தால் துடிதுடித்து, மாருதிக்கு க்ஷேமமுண்டாவதற்காக அக்னிபகவானை உபாஸித்தாள். மாருதியிடத்தில் வைத்த ப்ரியத்தால் கண்கள் மலர்ந்து, அவருக்கு மங்களமுண்டாகவேண்டுமென்று கோறித் தன்னைச் சுத்திசெய்துகொண்டு அக்னியை ஆராதித்தாள். "நான் பர்த்தாவிற்கு ஸகல சுச்ருஷையும் செய்தது நிஜமானால், நான் இந்த்ரியங்களை அடக்கி அவரையே த்யானித்துக்கொண்டிருப்பது நிஜமானால், நான் பதிவ்ரதையென்பது நிஜமானால்; இவற்றிற்குப் பயனாகத் தாங்கள் ஹநுமானைத் தபிக்காமல் குளிர்ந்திருக்கவேண்டும். மஹாஞானியான ராகவனுக்கு என்னிடத்தில் கொஞ்சமாவது தயையிருப்பது நிச்சயமானால், நான் இந்தத் துக்கத்திலிருந்து நீங்கி என் காதலுடன்சேரும் பாக்யம் எனக்கிருப்பது நிஜமானால், மாருதியைத் தபிக்காமல் குளிர்ந்திருக்கவேண்டியது. நான் நல்ல நடத்தையுள்ளவளென்றும், என் காதனைச் சேர ஆவல்கொண்டவளென்றும் தர்மாத்மாவான ஹநுமானுக்

குத் தெரிந்திருப்பது நிஜமானால், அவனுடைய தேஹத்தைத் தபிக்காமல் குளிர்ந்திருக்கவேண்டும். ஸத்யஸந்தரான ஸுக்ரீவன் இந்தத் துக்க ஸமுத்ரத்திலிருந்து என்னைக் கரையேற்றுவாரென்பது நிஜமானால், ஹநுமானைக் கொளுத்தாமல் குளிர்ந்திரு''மென்று ப்ரார்த்தித்தவுடன், அக்னிபகவான் ஸீதைக்கு மாருதியின் க்ஷேமத்தைச் சொல்லுகிறவர்போல் உஷ்ணமான ஜ்வாலைகளை அடக்கி ப்ரதக்ஷிணமாய் அசையாமல் எரிந்துகொண்டிருந்தார். வாயுபகவான் ஸீதைக்கு ஹிதஞ்செய்ய விரும்பி, எரிகின்ற வாலால் வீசும் உஷ்ணக் காற்றைப் பனிக்கட்டியைப்போல் குளிர்ச்சியாக மாற்றினார்.

வாலில் நெருப்புப்பற்றி எரியக் கண்டு மாருதி, "என்ன ஆச்சர்யம்! வால் எரிந்துகொண்டிருக்கிறது. நெருப்பு ஜ்வாலைகள் வரவர விருத்தியாகின்றன; ஆனால் எனக்குக் கொஞ்சங்கூட உபத்ரவமில்லை. வாலின் நுனியில் குளிர்ந்த பதார்த்தங்களெல்லாவற்றையும் ஒன்று சேர்த்து வைத்ததுபோலிருக்கிறது. ஆனால் ராமகார்யமாய் நான் கடலைத் தாண்டும்பொழுது ராகவனுடைய மஹிமையால் நான் இளைப்பாற மைநாகபர்வதம் ஸமுத்ரத்திலிருந்து கிளம்பிற்றல்லவா? அதுவும் இதைப் போலிருக்கலாம். ஸமுத்ரத்திற்கும் மைநாகத்திற்கும் ராமகைங்கர்யத்தில் இருக்கும் பரபரப்பு அக்னிபகவானுக்கு ஏன் இருக்கக்கூடாது? ஸீதையின் அபார க்ருபையாலும் ராகவனுடைய மஹிமையாலும் என் பிதாவிடத்திலுள்ள ஸ்நேஹத்தாலும் அக்னிபகவான் என்னைக் கொளுத்தவில்லை''யென்று ஒரு முஹூர்த்தகாலம் மேல்நடக்கவேண்டிய ஸங்கதிகளை யோசித்துத் திடீரென்று கிளம்பி கர்ஜித்துக்கொண்டு, பர்வதசிகரத்தைப்போல் உயர்ந்த நகரத்வாரத்தின் மேல் ஏறினார். ஒரு க்ஷணத்தில் மலையைப்போல் தேஹத்தைப் பெருக்கிக்கொண்டு, உடனே அதிஸூக்ஷ்மமாய்ச் செய்துகொண்டு கட்டுகளை உதறினார். பிறகு முன்போல் பெரிய ரூபத்தை எடுத்துக்கொண்டு சுற்றிப்பார்க்கையில், வாசற்படியில் வைத்திருந்த இரும்புத்தடியைக் கண்டார். அதினால் அங்கிருந்த காவற்காரர்களையும் சுற்றிருந்த அரக்கர்களையும் அடித்துக் கொன்றார். அந்த வானரவீரன் நகரத்தை நன்றாகச் சுற்றிப்பார்த்து வருகையில் வாலின் நுனியில் கொழுந்துவிட்டெரியும் அக்னியால் ஆயிரங்கிரணங்களோடு விளங்கும் ஆதித்யனைப்போல் தோன்றினார்.

---

## ஸர்க்கம் 54.

## ஹநுமார் லங்கையைக் கொளுத்தினது.

---

“ஸீதையைக் கண்டு ராவணனுடைய விருத்தாந்தத்தை அவளுக்குத் தெரிவித்து ஸமாதானஞ்செய்து, அவளுடைய விருத்தாந்தத்தைத் தெரிந்துகொண்டேன். ராக்ஷஸர்களுடைய பலாபலத்தைப் பரீக்ஷித்தேன். ராவணனைக் கண்டு பேசி அவனுடைய அபிப்ராயத்தை அறிந்தேன். இனிமேல் செய்யவேண்டியது ஏதாவது பாக்கியுண்டோ”வென்று ஆஞ்ஜநேயர், வரவர விருத்தியாகும் உத்ஸாஹத்துடன் நான்கு புறங்களிலும் கவனித்துப் பார்த்தார். “இந்த ராக்ஷஸர்களை வருத்தப்படுத்தக் கூடிய கார்யம் என்ன செய்யலாம்? அசோகவனத்தை அழித்தேன்; முக்கியமான ராக்ஷஸவீரர்களைக் கொன்றேன்; ஸைன்யங்களில் ஒரு பாகத்தை மடித்தேன்; கோட்டையையும் அரண்மனைகளையும் அழிப்பது தான் மிகுதி. கோட்டையை அழித்தால் நான் இதுவரையிலும் ச்ரமப்பட்டுச் செய்த கார்யங்களெல்லாம் ப்ரயோஜனமாகும். இந்த விஷயத்தில் அதிக ச்ரமப்படாமல் உபாயத்தால் கார்யத்தை முடிக்க வேண்டியது. என்னிடத்தில் பரமக்ருபை செய்திருக்கிற அக்னி பகவானுக்கு இந்தக் கட்டடங்களைப் பலியாகக் கொடுத்துத் திருப்தி செய்வே”னென்று முடிவுசெய்தார்.

பிறகு, மேகங்களில் பாயும் மின்னலைப்போல், மாருதி எரிகிற வாலுடன் லங்கையிலுள்ள வீடுகளின்மேல் ஸஞ்சரிக்க ஆரம்பித்தார். ராக்ஷஸர்களுடைய வீடுகளையும் தோட்டங்களையும் மாளிகைகளையும் நன்றாய்ப் பார்த்துக்கொண்டு வீட்டிற்கு வீடு தாவினார். ப்ரஹஸ்தனுடைய வீட்டில் பாய்ந்து அதில் நெருப்புவைத்தார். பிறகு மஹாபார்ச்வன் வஜ்ரதம்ஷ்ட்ரன் சுகன் ஸாரணன் இந்த்ரஜித் ஜம்புமாலி ஸுமாலி ரச்மிகேது ஸூர்யசத்ரு ஹ்ரஸ்வகர்ணன் தம்ஷ்ட்ரன் ரோமசன் யுத்தோன்மத்தன் மத்தன் த்வஜக்ரீவன் வித்யுத்ஜிஹ்வன் ஹஸ்திமுகன் கராளன் பிசாசன் சோணிதாக்ஷன் கும்பகர்ணன் மகராக்ஷன் யஜ்ஞசத்ரு ப்ரஹ்மசத்ரு நராந்தகன் கும்பன் நிகும்பன் முதலியவர்களுடைய வீடுகளையெல்லாம் வரிசை

யாசக் கொளுத்திக்கொண்டு வந்தார். தனக்கும் ஸீதைக்கும் ஹிதத்தைச் சொன்ன விபீஷணனுடைய கிருஹத்தை மாத்ரம் கொளுத்தவில்லை. அந்தந்த விடுகளில் தனதான்யங்களாலும் வாஹனங்களாலும் ஐச்வர்யங்களாலும் விளங்கும் பாக்யவான்களுடைய செல்வத்தை முற்றிலும் நாசஞ்செய்தார். பிறகு எல்லா வீடுகளையும் தாண்டி, ராக்ஷஸாதிபதியான ராவணனுடைய வீட்டிற்கு வந்தார். என்ன தைர்யம்! ஸகல லோகங்களிலும் ஒப்பில்லாத அந்த அரண்மனை பலவகை ரத்னங்களால் அலங்கரிக்கப்பட்டு மேரு மந்த்ர பர்வதங்களைப்போல் ஆகாசத்தையளாவி, ஸகல மங்கள த்ரவியங்களாலும் விளங்கின. அந்த ராஜகிருஹத்தில் மாருதி தன் வாலில் எரியும் நெருப்பை வைத்துக் கர்ஜித்தார்.

உடனே அக்னிபகவான் வாயுவுடன் சேர்ந்து காலாக்னியைப் போல் ஜ்வலித்து விருத்தியடைந்தார். வாயு அந்த நகரத்திலுள்ள வீடுகளிலெல்லாம் நெருப்பைப் பரவச் செய்து அதிவேகமாய் வீசினார். முத்து ஹாரங்களாலும் ரத்னங்களாலும் ஸ்வர்ண ஜன்னல்களாலும் ப்ரகாசிக்கும் பெரிய வீடுகள் சாம்பலாயின. புண்யத்தால் ஸ்வர்க்கத்தை அடைந்தவர்களுடைய விமானங்கள் புண்யகர்மங்கள் முடிந்தவுடன் பூமியில் விழுவதுபோல், வீடுகளின் விமானங்கள் வெடித்து விழுந்தன. ராக்ஷஸர்கள் தங்களுடைய வீடுகளைக் காப்பாற்றுவதில் உத்ஸாஹமற்று அங்குமிங்கும் ஓடிக்கொண்டு "ஐயோ! இங்கே வந்தது குரங்கல்ல. அக்னியே இந்த ரூபமெடுத்து வந்திருக்கிறான். என்ன கஷ்ட''மென்று பெருங்கூச்சலிட்டார்கள். மெத்தை வீடுகள் நெருப்புப்பிடித்தவுடன் அங்கிருந்து சில ஸ்த்ரீகள் தலைமயிர் அவிழ்ந்து அலங்கோலமாய்க் குழந்தைகளை எடுத்துக்கொண்டு, மேகங்களிலிருந்து விழும் மின்னற்கொடிகளைப்போல், கீழே விழுந்தார்கள். வஜ்ரம் பவழம் முத்து வெள்ளி முதலியவைகளால் விசித்ரமாகக் கட்டப்பட்ட வீடுகளும் அங்குள்ள பொன் வெள்ளி முதலிய தாதுக்களும் உஷ்ணத்தால் உருகுவதை மாருதி கண்டார். கட்டைகளாலும் செத்தைகளாலும் அந்த நெருப்பு திருப்தியடைந்ததோ? அப்படியே அக்னியால் மரணமடைந்த ராக்ஷஸர்களால் பூமிக்கும் ஹனுமானுக்கும் திருப்தியுண்டாகவில்லை. லங்கை முழுவதும் நாசமடைந்தால் ஒருவேளை திருப்தியடைந்திருப்பார். அக்னி ஜ்வாலைகள் சிலவிடங்களில் பலாச புஷ்பங்களைப்போலவும், சில விடங்களில் இலவம் புஷ்பங்களைப்போலவும் சிலவிடங்களில் குங்குமத்தைப்போலவும் காணப்பட்டன. பூர்வகாலத்தில் ருத்ரன் த்ரிபுரங்களை எரித்ததுபோல் ஹனுமான் லங்கையை எரித்தார்.

பிறகு ஆஞ்ஜநேயர் த்ரிகூடமென்ற பர்வத சிகரத்திற்குப் போனார். அவரால் வைக்கப்பட்ட அக்னி லங்கையில் எல்லாவிடங்களிலும் பரவிப், பர்வதத்தில் நெருப்பிருக்கிறதென்ற தர்க்கசாஸ்த்ர ந்யாயத்தை லோகத்தாருக்குக் காட்டுவதுபோலிருந்தது. ராக்ஷஸ க்ருஹங்களில் பிடித்த அக்னி ஆகாசத்தையளாவிப், புகையில்லாமல் கொழுந்து விட்டெரிந்து ராக்ஷஸர்களுடைய சரீரமென்ற நெய்யால் விருத்திசெய்யப்பட்டது. அதுவரையில் ராவணனுக்குப் பயந்திருந்த வாயுவும் அக்னியும் ஹனுமானால் பயந்தீர்ந்து ஒன்று சேர்ந்து ப்ரளயகாலாக்னிபோல் லங்கையை நாசஞ்செய்ய ஆரம்பித்தார்கள். கோடிஸூர்யதேஜஸுடன் அந்தப் பெருந்தீ லங்கையில் ஓரிடம் பாக்கியில்லாமல் பரவிற்று. அங்கங்குள்ள ஸகல பதார்த்தங்களும் வெந்து வெடிப்பதாலுண்டான சப்தம் ப்ரஹ்மாண்டத்தைப் பிளப்பதுபோலிருந்தது. பலாச புஷ்பங்களைப் போன்ற ஜ்வாலைகளுடன் அக்னிபகவான் ஆகாசம்வரையில் வளர்ந்து ஓங்கினார். அணைந்த புகையில் மேகங்களும் மறைக்கப்பட்டுக் கருநெய்தல் புஷ்பங்களைப்போல் காணப்பட்டன.

லங்கையிலுள்ள ப்ராணிகளும் வீடுகளும் விருக்ஷங்களும் அதி சீக்ரமாய் எரிந்ததைக் கண்டு அங்குள்ள அனேக புத்திமான்கள் "வஜ்ராயுதத்தைத் தரித்த தேவராஜனோ? விருத்ராஸுரனைக் கொன்ற மஹேந்த்ரனோ? வருணனோ, வாயுவோ, ருத்ரனோ, அக்னியோ, ஸூர்யனோ, குபேரனோ, அல்லது ஸாக்ஷாத் காலனோ? அல்லது, ஸகல லோகங்களையும் ஸ்ருஷ்டித்த ப்ரஹ்மதேவருடைய கோபம் இந்த வானர ரூபமெடுத்து ராக்ஷஸர்களை நாசஞ்செய்ய இங்கே வந்திருக்கிறதோ? அல்லது சேகாலவஸ்துக்களுக்குப் புறம்பாயும், இந்த்ரியங்களுக்கும் மனஸிற்கும் எட்டாததாயும், ஒன்றாயுமிருக்கும் மஹாவிஷ்ணுவின் அத்புதமான தேஜஸே தன் மாயையால் ராக்ஷஸர்களை அழிக்க இப்போது இந்த வானரரூபமெடுத்து வந்திருக்கிறதோ" வென்று சொல்லிக்கொண்டார்கள்.

ராக்ஷஸர்களும் குதிரைகளும் யானைகளும் பக்ஷிகளும் மிருகங்களும் விருக்ஷங்களும் இன்னும் லங்கையிலுள்ள ஸகல பதார்த்தங்களும் ஹனுமானால் நாசமடைந்து, அந்த நகரம் கேட்டோர் பரிதபிக்கும்படி கதறிற்று. "குழந்தாய், அப்பா, நாதா, மித்ர! அந்யாயமாய் இறந்தீர்களே! ஸுகத்தை இழந்தோம், ப்ராணனைப் பறிகொடுத்தோம். இனி எப்படிப் பிழைப்போ" மென்று அலறி

கிற ராக்ஷஸர்களின் கூச்சல்கள் கோரமாயும் பயங்கரமாயும் கிளம்பின. நெருப்பு ஜ்வாலைகளால் சூழப்பட்டு, வீரச்ரேஷ்டர்கள் இறந்து, ஸைன்யங்கள் மூலைக்குமூலை ஓடி, ஹனுமானுடைய கோஷத்தாலும் பலத்தாலும் நாசஞ்செய்யப்பட்ட லங்கை, சாபத்தால் அழிந்ததுபோல் காணப்பட்டது. பகவானுடைய ஆக்ஞையால் அழிந்த பூமியைப்போல், ஜ்வாலைகளோடு கூடின அக்னியால் லங்கை வெந்து, அதிலுள்ள ராக்ஷஸர்கள் துக்கத்தால் பரபரப்புடன் அங்குமிங்கும் ஓடுவதை ஆஞ்ஜநேயர் கண்டார்.

நானு விருக்ஷங்களால் நிறைந்த அசோகவனத்தை அழித்துப் பெயர்பெற்ற ராக்ஷஸர்களை யுத்தத்தில் கொன்று, அழகான வீடுகளையே ரத்னமாலையாகத் தரித்த லங்கையைக் கொளுத்தித், தான் வந்த கார்யத்தை நிறைவேற்றி, த்ரிகூடபர்வதத்தின் சிகரத்தில் எரிகின்ற வாலுடன் உட்கார்ந்திருக்கையில், மாருதி கிரணங்களால் விளங்கும் ஸூர்யனைப்போல் தோன்றினர். கணக்கற்ற ராக்ஷஸர்களைக் கொன்று, மரங்களடர்ந்த அசோகவனத்தை அழித்து, ராக்ஷஸர்களுடைய வீடுகளில் நெருப்புவைத்துத், தான்வந்த கார்யம் நிறைவேறிற்றென்று மனஸால் ஸ்ரீராமனை ஸ்மரித்து; 'ஸ்வாமி! நான் தங்களுடைய ஸன்னிதியை விட்டு வந்ததுமுதல் நடந்த விஷயங்களை ஸ்தூல தேஹத்துடன் வந்து விக்ஞாபனஞ்செய்ய முடியவில்லை. ஆனாலும் மனஸால் விக்ஞாபனஞ்செய்கிறேன். அங்கீகரிக்கவேண்டு''மென்று ப்ரார்த்தித்தார். அப்பொழுது மஹா பலவானும் வேகத்தில் வாயுவைப்போன்றவரும் வாயுபுத்ரனும் மஹாபுத்திமானும் வானர ச்ரேஷ்டருமான மாருதியை ஸகல தேவகணங்களும் கொண்டாடினர்கள். அவரும் அசோகவனத்தை அழித்து ராக்ஷஸர்களை யுத்தத்தில் கொன்று, லங்கையைக் கொளுத்தி மஹாதேஜஸுடன் விளங்கினர். அப்பொழுது தேவ கந்தர்வ ஸித்த கணங்களும் மஹர்ஷிகளும் "என்ன தைர்யம்! என்ன பராக்ரமம்! நாம் இதுவரையில் கண்ணெடுத்துப் பார்க்கத் துணியாத இந்த லங்கையை இவன் ஒண்டியாய்ச் சாம்பலாக்கிவிட்டானே''யென்று அடங்காத ஆச்சர்யமடைந்தார்கள். பிறரால் செய்யமுடியாத கார்யங்களைச் செய்த மாருதி, த்ரிகூடசிகரத்தில் ஜ்வலிப்பதைக் கண்டு, ஸகல ப்ராணிகளும் "இது குரங்கல்ல ஸாக்ஷாத் ப்ரளயகாலாக்னி''யென்று நினைத்துப் பயந்தன. தேவ கந்தர்வ வித்யாதர நாக யக்ஷ கணங்களும் முனி ச்ரேஷ்டர்களும் ஸகல பூதங்களும் ஆஞ்ஜநேயருடைய அத்புதமான செய்கையால் அளவற்ற ஸந்தோஷமடைந்தார்கள்.

ஸர்க்கம் 55.

## ஸீதை இறந்தாளென்று மாருதி துக்கித்தது.

இப்படி லங்கை முழுவதையும் கொளுத்தி வாலினுள்ள நெருப்பை ஸமுத்ரத்தில் அணைத்தார். எங்கும் தீப்பிடித்து ராக்ஷஸர்கள் பயத்தால் கதறச், சுடுகாடுபோலான லங்கையைக் கவனித்துப் பார்த்து, ஆஞ்ஜநேயர் கவலைகொண்டார். "ஐயோ! இந்த லங்கையைக் கொளுத்தினதில் ஒரு பெரிய பாபத்தைச் செய்துவிட்டேன். என்ன புத்திமோசம் போனே"னென்று அவருக்கு அடங்காத பயமும் தன்னிடத்தில் வெறுப்புமுண்டாயின. "ஐயோ! கொழுந்துவிட்டெரியும் அக்னியை ஜலத்தால் அணைப்பதைப்போல், மனஸில் கோபம் பொங்கி எழுந்தபொழுது அதைப் புத்தியால் அடக்குகிற மஹாத்மாக்களல்லவா பாக்யவான்கள், புருஷோத்தமர்கள்! கோபத்திற்கு இடங்கொடுத்தால் எந்த பாபத்தைத்தான் செய்யமாட்டான். குருவையும் கொல்வான்; ஸாதுக்களை உபத்ரவிப்பான்; தான் பேசும் வார்த்தைகள் உசிதமா அல்லவாவென்று பார்க்கமாட்டான். அவன் செய்யாத கார்யமில்லை; சொல்லாத வார்த்தையில்லை. ஸர்ப்பம் பழைய சட்டையை எப்படி உரிக்குமோ அப்படிக் கோபமுண்டானவுடன் அதைப் புத்தியால் அடக்குகிறவனே புருஷன். நான் பாபிக்குள் பாபி, வெட்கமற்றவன், கெட்ட புத்தியுள்ளவன். ஸீதை இருக்கிறாளென்பதை மறந்து லங்கையில் நெருப்பு வைத்தேனே. என் புத்தியைச் சுடவேண்டும்; லங்கை எரிந்தால் அதிலுள்ள ஜானகி தப்புவாளா? என் யஜமானனுடைய கார்யத்தைப் படுமுட்டாளான நான் பாழாக்கிவிட்டேன். எதற்காக இவ்வளவு கார்யங்களையும் செய்தேனோ அதைக் கெடுத்துவிட்டேனே! ஸீதையை ரக்ஷிக்கும் ஏற்பாட்டைச் செய்யாமல் லங்கையில் என்ன புத்தியால் நெருப்பு வைத்தேன்? இவ்வளவு ச்ரமப்பட்டு ஸீதையைத் தேடிக் கண்டதும் வீணாயிற்றே. நான் கோபத்திற்கு இடங்கொடுத்து முக்யமான கார்யத்தை மூலநாசஞ்செய்துவிட்டேன்; லங்கையில் சாம்பலாகாதவிடத்தைக் காணேன். ஆகையால் ஜானகி நிச்சயமாய் இறந்திருப்பாள். என் புத்திக்குறைவால் இவ்வளவு கார்

யமும் வீணுனல் நான் இப்பொழுதே ப்ராணனை விடுவது நலம். இந்த லங்கையில் பற்றி எரியும் நெருப்பில் விழலாமா? வடவா முகாக்னியில் ப்ரவேசிக்கலாமா? கடலில் வாழும் ஜந்துக்களுக்கு இரையாக என் தேஹத்தை விடலாமா? நான் செய்ய வந்த ஸகல கார்யங்களையும் கெடுத்து ஸுக்ரீவனையும் ராமலக்ஷ்மணர்களையும் எந்தத் தைர்யத்தால் பார்ப்பேன்? இப்படிக் கோபத்திற்கு இடங்கொடுத்து மஹாபாபத்தைச் செய்ததால் நான் குரங்கென்று என் ஜாதிஸ்வபாவமான சாபல்யத்தைக் காட்டிக்கொண்டேனென்றும் மூன்று லோகங்களிலும் ப்ரஸித்தியாகும். ஸீதையை ரக்ஷிக்க எனக்கு சக்தியிருந்தும் கோபத்திற்கு இடங்கொடுத்து அப்படிச் செய்ய மறந்தேனே! இதற்குக் காரணமான ரஜோகுணத்தைச் சுடவேண்டும். அது கட்டிற்கு அடங்காதது, ஸ்திரமில்லாதது.

ஸீதை இறந்ததைக் கேட்டால் ராமலக்ஷ்மணர்கள் இறப்பார்கள். உடனே ஸுக்ரீவனும் அவனைச் சேர்ந்தவர்களும் உயிரை விடுவார்கள். அதைக் கேட்டு ராமனிடத்தில் ஸகல ப்ராணன்களையும் வைத்திருக்கும் பரதன் உடனே இறப்பான். அந்த தர்மாத்மா போனவுடன் அவனுடைய நிழல் போன்ற சத்ருக்னன் உயிரோடிருப்பானு? இப்படி இக்ஷ்வாகு வம்சம் அழிந்தால் ஸகல ப்ரஜைகளும் துக்கத்தால் துடிப்பார்கள். ஆகையால் புருஷார்த்தங்களை நன்ருய் ஸம்பாதிக்காமல் கோபத்திற்கு இடங்கொடுத்துக் கோபத்திற்குட்பட்ட நான் இந்த ப்ரபஞ்சம் முழுவதும் நாசமடைவதற்குக் காரணமாகிறேன். என்னைப்போன்ற பாக்யஹீனனுமுண்டோ''வென்று கவலைகொண்டார்.

ஸீதையைத் தேடிக் காணுமல் மனஞ்சோர்ந்து அவர் உயிரை விட நிச்சயித்திருக்கையில் சுபசகுனங்கள் நேர்ந்ததுபோல் இப்பொழுதும் உண்டாயின. அதைக் கண்டு மாருதி ஆச்சர்யமடைந்து "ஒருவேளை அந்தப் புண்யவதி தன் மஹிமையால் ஏன் ரக்ஷிக்கப் படக்கூடாது? ஸகல மங்களங்களுக்கும் இருப்பிடமான ஜானகிக்கு நாசமுண்டோ? நெருப்பு நெருப்பைக் கொளுத்துமா? அளவற்றபராக்ரமசாலியான ராமமூர்த்தியின் பார்வை அவருடைய தேஜஸாலும் தன் பதிவ்ரதா மஹிமையாலும் ரக்ஷிக்கப்படுகையில் அக்னிபகவான் அவளைத் தொடமுடியுமா? ராமனுடைய கிருபையாலும் ஸீதையின் புண்யவசத்தாலும் அந்த அக்னி என்னையே கொளுத்தவில்லையே! லக்ஷ்மண பரத சத்ருக்னர்கள் பஜிக்கும் தேவதையும் ராகவனுக்கு ப்ரிய பார்யையுமானவள் நாசமடைவாளா? யதார்த்தந்

களை எரிப்பதே தொழிலாயுள்ள அக்னிபகவானும் என் வாலைக் கொளுத்தாமலிருக்க, ஸீதையை மாத்ரம் எப்படிக் கொளுத்துவா'' ரென்று யோசித்து, ஸமுத்ரமத்யையிலிருந்து ஸமநாகப்பர்வதம் கிளம்பித் தனக்கு உபகாரஞ் செய்த ஆச்சர்யத்தை ஞாபகப்படுத்திக் கொண்டார். ''ஸீதை ஸத்யந்தவறுதவள்; இந்த்ரியங்களை அடக்கினவள்; பர்த்தாவிடத்திலேயே மனதை நாட்டினவள். அக்னி அவளைத் தொட்டால் எரிந்துபோவானேயொழிய அவளுக்கு அக்னியால் நாசமில்லை''யென்று ஸீதையின் பதிவ்ரதா தர்மத்தின் மஹிமையை ஞாபகப்படுத்திக்கொண்டார். அப்பொழுது ஆகாசத்தில் ஸஞ்சரிக்கும் சாரணர்கள் ''என்ன ஆச்சர்யம்! ஹனுமான் என்ன கார்யம் செய்தார்! லங்கையிலுள்ள ராக்ஷஸ கிருஹங்களில் ஒன்றும் பாக்கியில்லாமல் நெருப்பு வைத்தார். மலைக் குகையிலிருந்து ஜந்துக்கள் கதறுவதுபோல் லங்கையில் ராக்ஷஸர்களும் ஸ்த்ரீகளும் சிறுவர்களும் கிழவர்களும் கோலாஹலமாய்ப் பெருங்கூச்சலிடுகிறார்கள். லங்கையிலுள்ள அரண்மனைகளும் கோபுரங்களும் உப்பரிகைகளும் நெருப்புப்பட்டு அழிந்தன. ஆனால் ஜானகி யாதொரு அபாயமுமில்லாமலிருக்கிறாள். இது வல்லவா ஆச்சர்ய''மென்று பேசிக் கொண்டதை மாருதி கேட்டார்.

இப்படி அநேக சுபசகுனங்களாலும் முக்யமான காரணங்களாலும் சாரணர்களுடைய வாக்யங்களாலும் ஸந்தோஷமடைந்தார். பிறகு தன் எண்ணங்கள் நிறைவேறி ஸீதையை மறுபடியும் ப்ரத்யக்ஷமாய்ப் பார்த்துத் திரும்பிப் போகலாமென்று முடிவு செய்தார்.

---

## ஸர்க்கம் 56.

### மாருதி ஸீதையிடம் உத்திரவுபெற்றது.

பிறகு சிம்சுபாவிருக்ஷத்தினடியில் உட்கார்ந்திருக்கும் ஸீதையைக் கண்டு நமஸ்கரித்து, ''அம்மா! இந்த லங்கை முழுவதும் பற்றி எரியும்பொழுது தாங்கள் தைவானுக்ரஹத்தால் யாதொரு அபாயமில்லாமல் தப்பினது என் பாக்யமே. நான் திரும்பிப் போகும்படி உத்தரவு செய்யவேண்டு''மென்று ப்ரார்த்தித்தார். அவர் புறப்படத் தயாராயிருப்பதைக் கண்டு ஸீதை அவரை ப்ரியத்

றான் அடிக்கடி பார்த்து, "இவன் அசோகவனத்தை முறித்து ராக்ஷஸவீரர்களை நாசஞ்செய்து லங்கையைக் கொளுத்தின மஹா பராக்ரமசாலி; ராகவனிடத்தில் போய், "இந்த ராக்ஷஸர்கள் எனக்கு எம்மாத்ரம்? ஒரு க்ஷணத்தில் அவர்களைக் கொன்று ஸீதையை நாமே கொண்டு வருகிறோ"மென்று சொன்னாலும் சொல்வான். ஆனால், அது ராமனுக்குக் குறைவு; எனக்கு இஷ்டமில்லை; அதைத் தடுக்கவேண்டுமென்று ராமனிடத்தில் தான் வைத்த ஸ்நேஹத்தைக் குறிக்கும்படி,

"ஆஞ்ஜநேயா! நீ ஒருவனே இங்கிருக்கும் ஸகல சத்ருக்களையும் நாசஞ்செய்து என்னை இங்கிருந்து மீட்டுப்போக ஸமர்த்தன். அது உனக்கு அபார கீர்த்தியைக் கொடுக்கும். ஆனால், ராகவனுடைய கீர்த்தியைக் குறைக்கும்; ராமன் பாணவர்ஷத்தால் லங்கையை மறைத்துச் சத்ருக்களை ஸம்ஹாரஞ்செய்து என்னை அழைத்துப் போவதல்லவா அவருடைய கீர்த்திக்கும் வீர்யத்திற்கும் ராவணன் செய்த அவமானத்திற்கும் அழகு? ஆகையால் யுத்தத்தில் பின்வாங்காத அந்த சூரனுடைய பராக்ரமம் எப்படி விளங்குமோ அப்படி நன்றாய் ஆலோசித்துச் செய்யவேண்டிய"தென்றாள்.

இப்படி யுக்திக்கு ஒத்தும் விநயமாயும் ராமகார்யத்திற்கு அநுகூலமாயும் ஸீதை சொன்ன வார்த்தைகளைக் கேட்டு ஆஞ்ஜநேயர், "அம்மா! தங்களிஷ்டப்படியே ரகுவீரன் வானர ஸைன்யங்களுடன் அதிசீக்ரத்தில் இங்கே வந்து ஸகல சத்ருக்களையும் யுத்தத்தில் நாசஞ்செய்து தங்களை அழைத்துப்போவார். இது நிச்சய"மென்று ஜானகியை ஸமாதானஞ்செய்து திரும்பிப்போக உத்தேசித்து ஸீதையை நமஸ்கரித்தார்.

பிறகு மாருதி தான் வந்த கார்யம் நிறைவேறினதால் ப்ரபுவான ராகவனைப் பார்க்க ஆவல்கொண்டு அரிஷ்டமென்ற பர்வதத்தில் ஏறினார். அதில் உன்னதமான பத்மகவிருக்ஷங்கள் செழித்து வளர்ந்தன; வனவரிசைகளால் கறுப்பாகக் காணப்பட்டது. கொடிமுடியின் நடுவில் தொங்கும் மேகங்கள் உத்தரீயத்தைப்போல் விளங்கின; மங்களகரமான ஸூர்யகிரணங்களென்ற கைகளால் தட்டி எழுப்பப்பட்டு அந்தப் பர்வதம் தாதுக்களென்ற கண்களை விழித்துப்பார்த்து, கம்பீரமாய்ச் சப்திக்கும் மலையருவிகள், சிஷ்யர்கள் வேதங்கள் அத்யயனஞ்செய்வதுபோலும், மலைச்சாரல்களில் விழும்

நீர்த்தாரைகள் இனிமையாய்ப் பாடுவதுபோலும்; ஆகாசத்தை
அளாவியிருக்கும் தேவதாருமரங்களால் கைகளை உயரத்தூக்கிக்
கொண்டிருப்பதுபோலும்; கற்பாறைகளிலிருந்து பீறி விழும் ஜலங்
களால் அழுவதுபோலும்; காற்றில் ஆடும் கறுத்த ஏழிலைப்பாலை
மரங்களால் நடுங்குவதுபோலும்; காற்றால் அசைக்கப்பட்ட மூங்
கில்களால் கூவுவதுபோலும்; பயங்கரமான ஸர்ப்பங்களின் ச்வாஸத்
தால் கோபம் மிகுந்து பெருமூச்சு விடுவதுபோலும் பனியால் மூடப்
பட்டிருக்கும் குஹைகளால் த்யானஞ்செய்வதுபோலும்; மேகங்கள்
இறங்கி ஸஞ்சரிப்பதுபோலுமிருந்தது. மலைத்தாழ்வரைகளால் நாற்
புறங்களிலும் நடப்பதுபோலும்; மேகமாலைகளால் அலங்கரிக்கப்பட்ட
சிகரங்களால் ஆகாசத்தில் வளர்வதுபோலுமிருந்தது. மாருதியின்
பாதங்களால் உடைந்து முறிந்த குஹைகளால் நிறைந்திருந்தது.
ஆச்சா பனை அச்வகர்ணம் முதலிய விருக்ஷங்களாலும், மூங்கில்
களாலும், பூங்கொத்துகளையுடைய கொடிகளாலும், மதுரமான
பழம் கிழங்கு வேர் முதலியவைகளாலும், பலவித மிருகங்களாலும்,
தாதுக்களாலும், மலையருவிகளாலும், கற்பாறைகளாலும், குஹை
களில் வஸிக்கும் ஸிம்ஹங்களாலும், புலிக்கூட்டங்களாலும், மஹரி
யக்ஷ கந்தர்வ கின்னர உரககணங்களாலும் நிறைந்த அந்தப் பர்வ
தத்தில் ஆஞ்ஜநேயர், ராமனைப் பார்க்க ஆவல்கொண்டு ஸந்தோஷ
மாய் ஏறினார். அவருடைய பாதங்களில் அகப்பட்ட தாழ்வரை
களிலுள்ள பாறைகள் நொறுங்கிப் பெருஞ்சப்தத்துடன் சிதறி
விழுந்தன. பிறகு ஸமுத்ரத்தைத் தாண்டி வடகரை சேர நினைத்துத்
தேஹத்தை வளரச்செய்து, முன்போல் இடையூறுகளில்லாமல்
திரும்பிச்செல்லவேண்டுமென்று ராகவனை ப்ரார்த்தித்தார். அந்த
மலையிலேறி, அநேக ஜலஜந்துக்களால் நிறைந்து மிகவும் பயங்கர
மான ஸமுத்ரத்தைப் பார்த்து, வாயுபுத்ரன் தன் பிதாவைப்போல்
தானும் ஆகாசமார்க்கமாய் அதிசீக்ரத்தில் ஸமுத்ரத்தைத் தாண்டி
வடகரை சேர நினைத்தார். அந்தப் பர்வதம் அவருடைய காலடி
களால் அழுந்தி, அதிலுள்ள ஜலஜந்துக்களோடு பெயர்ந்து விழும்
சிகரங்களோடும் முறிந்துவிழும் விருக்ஷங்களோடும் பூமிக்குள் மறை
ந்துபோவதுபோல் சப்தித்து, அங்குள்ள புஷ்பித்த மரங்கள்
வஜ்ராயுதத்தால் அடிப்பட்டதுபோல் அவருடைய தொடைகளின்
வேகத்தால் முறிந்து பூமியில் விழுந்தன. குஹைகளிலுள்ள ஸிம்
ஹங்கள் தேஹம் நசுங்கி வீர்யம் குன்றிக் கதறுகிற சப்தம் பயங்கர
மாய் ஆகாசத்தைப் பிளந்தது. அங்கே வஸித்த வித்யாதரஸ்த்ரீ
கள் வஸ்த்ரங்கள் நழுவ ஆபரணங்கள் சிதற, அந்தப் பர்வதத்தி

ருந்து செய்பவர் உபாசித்தார்கள். பருத்த தேஹத்தையும் அதிக பலத்தையுமுடைய அங்கிருந்த மலைப்பாம்புகள், எரிகிற நாக்குகளுடன் கோரமான விஷங்களைக் கக்கிக்கொண்டு தலைகளும் கழுத்தும் நசுங்கிச் சுருட்டிக்கொண்டு கிடந்தன.

இப்படி மாருதியால் உபத்ரவிக்கப்பட்ட அந்த மலையிலிருந்து கின்னர உரக கந்தர்வ யக்ஷ வித்யாதர கணங்கள் வேறிடங்களுக்குப் போனார்கள். அவருடைய பாரத்தையும் வேகத்தையும் தாங்காமல், முப்பது யோஜனை நீளமும் பத்து யோஜனை அகலமுமுள்ள அந்த மலை, மரங்களோடும் மிருகங்களோடும் பூமிக்குள் நுழைந்து பூமியோடு ஸமமாயிற்று. மலைகளைப்போன்ற அலைகளால் நிறைந்த பயங்கர மான ஸமுத்ரத்தைத் தாண்ட உத்தேசித்து ஹனுமான் பிறகு விளையாட்டாய் ஆகாசத்தில் தாவினார்.

---

## ஸர்க்கம் 57.

### மாருதி திரும்பி வந்தது.

---

ஆகாசமென்ற மஹாஸமுத்ரத்தில் சந்த்ரனே குமுதபுஷ்பம்; ஸூர்யனே நீர்க்கோழி; புஷ்யம் ச்ரவணமென்ற நக்ஷத்ரங்களே ஹம்ஸங்கள்; மேகங்களே பாசியும் பசும் புல்லும்; புனர்வஸுவே பெரிய மீன்; அங்காரகனே முதலை; ஐராவதமே பெரிய தீவு; ஸ்வாதி நக்ஷத்ரமே ஹம்ஸம்; காற்றின் சேர்க்கைகளே ஓயாத அலைகள்; சந்த்ரகிரணங்களே குளிர்ந்த ஜலம்; புஜங்க யக்ஷ கந்தர்வ கணங்களே மலர்ந்த புஷ்பங்கள்; இப்படிக் கரைகாணாத ஆகாச ஸமுத்ரத்தை வாயுபுத்ரனான ஹனுமான், கப்பல் ஸமுத்ரத்தைக் கடப்பதைப்போல், தாண்டிச் சென்றார். மேகக்கூட்டங்களை இழுத்துக்கொண்டு போவதுபோலும், ஆகாசத்தை விழுங்குவதுபோலும், சந்த்ரனைக் கீறுவதுபோலும்; நக்ஷத்ரங்களோடும் ஸூர்யனோடும் கூடிய ஆகாசத்தைக் கைகளால் பிடிப்பதுபோலும் சென்றார். வெளுப்பு, சிவப்பு, நீலம், மஞ்சள் கலந்த சிவப்பு, மஞ்சள், இவ்வர்ணங்களுள்ள மேகங்களின் நடுவில் அவர் புகுந்து புறப்படுகையில், அவர் தரித்த வெண்மையான உத்தரீயத்தால், சற்று ப்ரகாசித்துக் சற்று மறையும் சந்த்ரனைப்போல் விளங்கினார். அடிக்கடி

மேகக்கூட்டங்களைப் பிளந்துகொண்டு வெளிக்கிளம்பும் ஆஞ்ஜநேயர், ஆகாசத்தில் போகையில் கருடனைப்போல் காணப்பட்டார். மேகங்கள் கர்ஜிப்பதுபோல் ஸிம்ஹநாதஞ்செய்துகொண்டு, ஆஞ்ஜநேயர் ராக்ஷஸவீரர்களைக் கொன்று தன் பெயரை லங்கையில் ப்ரஸித்தி செய்து, அந்த நகரத்தை நாசஞ்செய்து, ராவணனை வருத்தப்படுத்தி, அவனுடைய பயங்கரமான ஸைன்யத்தைக் கலக்கி, ஸீதையைக் கண்டு நமஸ்கரித்து மறுபடியும் ஸமுத்ரத்தைத் தாண்டி வந்தார். வழியில் மைநாக பர்வதத்தைக் கண்டு, நடந்த விருத்தாந்தங்களை அவனுக்குச் சொல்லி, வில்லிலிருந்து விடப்பட்ட பாணத்தைப்போல் அதிவேகமாய்க் கிளம்பிவந்தார். பிறகு மஹாமேகம் போன்ற மஹேந்த்ர பர்வதத்தை ஸமீபித்து, ப்ரளய காலமேகங்கள் கர்ஜிப்பதுபோல், ஸகல திக்குகளும் நடுங்கும்படி ஜயத்வனி செய்தார். அதிசீக்ரத்தில் தன் ஸ்நேஹிதர்களைப்பார்க்க ஆசைகொண்டு தன் வாலை ஆட்டி மறுபடியும் கர்ஜித்தார். ஆகாசவீதியில் அடிக்கடி மாருதி கர்ஜிப்பதால் க்ரஹமண்டலங்களோடு கூடின அந்த ப்ரதேசம் பிளந்து விழுவதுபோலிருந்தது.

வடகரையில் மாருதியை ஆவலுடன் எதிர்பார்த்துக்கொண்டு உட்கார்ந்திருந்த வானரவீரர்கள், பெருங்காற்றில் அடித்துக்கொண்டு வரப்பட்ட மேககூட்டங்களின் த்வனியைப்போன்ற ஹனுமாருடைய தொடை வேகத்தையும் ஸிம்ஹநாதத்தையும் கேட்டார்கள். ஏக்கம் பிடித்திருந்த அந்த வானரர்களெல்லோரும் மாருதியைப் பார்க்க ஆசைகொண்டிருக்கையில், ஜாம்பவான் மிகுந்த ஸந்தோஷத்துடன் ஸமஸ்த வானரர்களையும் ஸமீபத்தில் அழைத்து, "ஹனுமான் உத்தேசித்த கார்யத்தை ஸகலவிதத்திலும் முடித்து வருகிறானென்பது நிச்சயம்; இல்லாவிட்டால் இவ்வளவு தைர்யமாயும் ஸந்தோஷமாயும் சப்தஞ்செய்வானோ" வென்றார். பிறகு, ஹனுமானுடைய புஜங்கள் தொடைகளினின்று உண்டான வேகத்தையும் த்வனியையும் கேட்டு வானரர்கள் ஸந்தோஷத்தால் தாவிக் குதித்தார்கள். அவர்கள் ஆஞ்ஜநேயரைப் பார்க்க விரும்பி மரத்திற்கு மரம் பர்வதத்திற்குப் பர்வதம் தாவினார்கள். தூரத்திலிருப்பவனை வஸ்த்ரங்களை விசிறி அடையாளங்காட்டிக் கூப்பிடுவது போல், அவர்கள் மரங்களின் நுனியிலிருந்துகொண்டு கிளைகளையும் கொம்புகளையும் அசைத்தார்கள். மலைக்குஹைகளில் அடங்கின வாயு எப்படிக் கர்ஜிக்குமோ அப்படி ஹனுமான் கர்ஜித்துக்கொண்டே வந்தார். மஹாமேகத்தைப்போல் அவர் கீழே இறங்குவதைக்

கண்டு வானரர்கள் கைகூப்பி வணக்கமாய் நின்றார்கள். பிறகு விருக்ஷங்களடர்ந்த மஹேந்த்ரபர்வதத்தில் மற்றொரு பர்வதம் இறங்கினதுபோல் ஆஞ்ஜநேயர் தன் வேகத்தை அடக்கி இறங்கினார். ஸந்தோஷத்தால் தேஹம் பூரிக்க, அறுபட்ட இறக்கைகளையுடைய பர்வதத்தைப்போல் மாருதி ஆகாசத்திலிருந்து இறங்கினார். உடனே ஸகல வானரச்ரேஷ்டர்களும் ஆனந்தத்தால் மலர்ந்த முகங்களுடன் வெகு ப்ரீதியுடன் அந்த மஹாத்மாவைச் சூழ்ந்துகொண்டு யாதொரு அபாயமுமில்லாமல் திரும்பிவந்த வானர வீரனுக்கு கிழங்குகளையும் பழங்களையும் காணிக்கையாய்க் கொடுத்தார்கள்.

ஜாம்பவன் முதலான வானரவிருத்தர்களையும் அங்கதனையும் ஆஞ்ஜநேயர் நமஸ்கரிக்க, அவ்விருவரும் அவரை உபசரித்தார்கள். ஸகல வானரர்களும் மெச்சினார்கள். பிறகு "கண்டேன் ஸீதையை"யென்று நடந்த விருத்தாந்தங்களைச் சுருக்கமாய்த் தெரிவித்து, அங்கதனுடன் கைகோர்த்துக்கொண்டு மஹேந்த்ர பர்வதத்தில் ஓர் அழகான தோப்பில் உட்கார்ந்துகொண்டு, வானரர்களைப் பார்த்து "மித்ரர்களே! நாம் இவ்வளவு ச்ரமப்பட்டுத் தேடின ஸீதையைக் கண்டேன்; அசோகவனத்திலிருக்கிறாள். கோர ராக்ஷஸர்கள் அவளை வெகு ஜாக்ரதையாய்க் காத்துக்கொண்டிருக்கிறார்கள். ஒற்றைப்பின்னலுடன், தலைமயிர் சடைவிழுந்து, தேஹமிளைத்து அழுக்கடைந்து ஆஹாரமில்லாமல் மெலிந்து, ராமனைப் பார்க்க ஆசைகொண்டு உத்தமமான பதிவ்ரதாதர்மத்தை அனுஷ்டித்து வருகிறா"ளென்றார்.

அநேக அர்த்தங்களடங்கிய ஆஞ்ஜநேயருடைய வாக்யங்கள் துக்கத்தாலும் கவலையாலும் வெந்த மனஸில் அம்ருத தாரைகளைப்போல் விழுந்தவுடன் வானரவீரர்கள் எல்லாவற்றையும் மறந்து சிலர் ஸிம்ஹநாதஞ்செய்தார்கள்; சிலர் கூவினார்கள்; சிலர் கர்ஜித்தார்கள்; சிலர் கிலகிலவென்று சப்தித்தார்கள்; சிலர் ஒருவர்க்கொருவர் போட்டியாய்க் கர்ஜித்தார்கள்; சிலர் வால்களை உயரத்தூக்கிப் பூமியில் அடித்தார்கள். சிலர் பர்வதசிகரங்களிலிருந்து பாய்ந்து, மதயானையைப்போல் கம்பீரமாய் நிற்கும் ஆஞ்ஜநேயரை ஆலிங்கனஞ்செய்தார்கள். பிறகு அங்கதன் மாருதியின் வார்த்தையைக் கேட்டு வானரவீரர்களுக்கு நடுவில் விழுந்து "ஆஞ்ஜநேய! இந்த விஸ்தாரமான ஸமுத்ரத்தைத் தாண்டி மறுபடியும் வந்த உனக்குப் பராக்ரமத்திலும் வலிமையிலும் நிகருண்டோ? யஜமானனிடத்தில் உனக்குள்ள பக்திக்கும் உன் வீர்யத்திற்கும் பராக்ரமத்திற்கும் எல்

லையுண்டோ? ஸகல கீர்த்திக்கும் இருப்பிடமான ராம பார்வையைப் பார்க்கும் பாக்யத்தைப் பெற்றுயே! ஸீதையைப் பிரிந்த துக்கம் ராகவனுக்கு நீங்குவதற்கு நீயல்லவா காரண''மென்று கொண்டாடி னான். பிறகு வானரர்கள் மாருதியையும் அங்கதனையும் ஜாம்பவானை யும் சூழ்ந்து, அந்த வானரவீரன் பெருங் கடலைத் தாண்டினதையும், லங்கையைப் பார்த்ததையும், ஸீதையைத் தர்சித்ததையும் ராவண னைக் கண்டு பேசினதையும், இன்னும் மற்ற விருத்தாந்தங்களையும் விஸ்தாரமாய்க் கேட்க விரும்பிப் பெரிய பாறையில் ஹநுமானுக்கெ திரே கைகூப்பி உட்கார்ந்தார்கள். தேவதைகள் இந்த்ரனைச் சூழ் ந்து உபசரிப்பதுபோல் அங்கதனை வானரர்கள் சூழ்ந்து நின்றூர்கள்.

இப்படி மஹாகீர்த்திசாலியான ஆஞ்ஜநேயரும் புகழ்பெற்ற அங்கதனும் இன்னும் மற்ற வானரர்களும் ஸந்தோஷமாய் உட்கார்ந் திருக்கையில், அந்த மஹேந்த்ரகிரியின் சிகரம் காந்தியால் ஜ்வலித் தது.

---

## ஸர்க்கம் 58.

## மாருதி தன் யாத்ரையை வர்ணித்தது.

பிறகு மாருதியும் மற்ற வானரர்களும் அந்த மஹேந்த்ர பர்வ தத்தின் சிகரத்தில் அளவற்ற ஆனந்தத்துடன் உட்கார்ந்திருக்கை யில் ஜாம்பவான் ஸந்தோஷத்தால் மயிர்க்கூச்சலடைந்து வாயு புத்ர னைப் பார்த்து, "மாருதே! ஸீதையை எப்படிக் கண்டுபிடித்தாய்? அவள் எந்த ஸ்திதியிலிருக்கிறுள்? க்ரூரனை ராவணன் அவளிடத் தில் எப்படி நடந்துகொள்ளுகிறுன்? இவையெல்லாவற்றையும் எங்க ளுக்கு வாஸ்தவமாகச்சொல். ராமனுடைய ஸந்நிதியில் எதைச்சொல் லவேண்டியதென்றும் எதை மறைக்கவேண்டியதென்றும் இனிமேல் செய்யவேண்டிய கார்யம் இன்னதென்றும் நிச்சயிப்போ''மென்றூர்.

அப்பொழுது ஆஞ்ஜநேயர் ஸந்தோஷத்தால் மயிர்க்கூச்சலு டன் கைக்கூப்பி, ஜானகியை மனஸால் நமஸ்கரித்துப் பின்வருமாறு சொல்ல ஆரம்பித்தார். "நீங்கள் பார்த்துக்கொண்டிருந்தபொழு தே இந்தப் பர்வதத்திலிருந்து ஆகாசத்தில் தாவி, ஸமுத்ரத்தைத்

தாண்டித் தெற்குக் கரை சேர உத்தேசித்துப் புறப்பட்டேனல்லவா? வழியில் ஓர் பர்வதம் தங்கமயமான கொடிமுடிகளுடன் திடீரென்றுக் கிளம்பிற்று. அது வழிமறிப்பதைக் கண்டு என் ப்ரயாணத்திற்கு இடையூறென்று எண்ணினேன். இதைப் பிளந்தெறிந்து அப்புறம் செல்லவேண்டியதென்று நினைத்துக்கொண்டு, அதைக் கிட்ட வாலைச் சுற்றி ஸூர்யனைப்போல் ப்ரகாசிக்கும் சிகரத்தில் அடிக்க, அது தூளாயிற்று. (இது முதலாவது ஸர்க்கத்தில் சொல்லப்படவில்லை.) அந்தப் பர்வத தேவதைகள் என் உத்தேசத்தை அறிந்து 'குழந்தா'யென்று என்னை இனிமையாக அழைத்து, "வானரவீர! நான் உன் பிதாவான வாயுவிற்கு முக்ய மித்ரன். ஆகையால் உனக்குச் சிறிய தகப்பன் முறை. இந்தஸமுத்ரத்தில் வஸித்துக்கொண்டிருக்கிறேன். மைநாகமென்று எனக்குப் பெயர். பூர்வகாலத்தில் பர்வதங்கள் இறக்கைகளுடன் நினைத்தவிடங்களிலெல்லாம் ஸஞ்சரித்து லோகத்தில் அதிக உபத்ரவஞ்செய்துகொண்டிருந்தன. அதைக் கேட்டு மஹேந்த்ரன் வஜ்ராயுதத்தால் அவைகளின் இறக்கைகளை அறுத்தான். அப்பொழுது உன் பிதா என்னை இந்த ஸமுத்ரத்தில் அடித்துக்கொண்டு வந்து தள்ளி அந்தக் கஷ்டத்தை அனுபவிக்காமலிருக்கும்படி காப்பாற்றினார். மேலும், ராமன் தர்மாத்மாக்களுக்குள் ச்ரேஷ்டர்; பராக்ரமத்தில் மஹேந்த்ரனுக்கு ஸமமானவர். அவருக்கு நான் ஒத்தாசை செய்யவேண்டியது அவச்ய'மென்றது. உடனே நான்உத்தேசித்துப்போகும் கார்யத்தை அவருக்குத் தெரிவித்து உத்திரவு பெற்றுக்கொண்டு சென்றேன். மைநாகம் மனுஷ்ய சரீரத்தை மறைத்துப் பர்வத ரூபமாய் ஸமுத்ரத்திலிருந்தது.

பிறகு நான் அதிவேகத்துடன் ஆகாசத்தில் வெகுநேரம் சென்றுகொண்டிருந்தேன். அப்பொழுது நாகங்களுக்கு மாதாவான ஸுரஸையென்ற தேவஸ்த்ரீ ஸமுத்ரத்திலிருந்து என்னை அழைத்து, "வானர ச்ரேஷ்ட! தேவர்கள் உன்னை எனக்கு ஆஹாரமாகக் கொடுத்திருக்கிறார்கள்; வெகுகாலமாய் உன்னை எதிர்பார்த்துக்கொண்டிருந்தேன். இன்று கிடைத்தாய்; உன்னைத் தின்னப்போகிறே" னென்றாள். அதைக் கேட்டு நான் கை கூப்பி வணங்கி தீனமான முகத்துடன், "அம்மா! தசரத புத்ரனை ராகவன் மஹாபராக்ரமசாலி; தேஜஸ்வி; ஒரு கார்யமாய் லக்ஷ்மணனென்ற தம்பியோடும் ஸீதையென்ற பார்யையோடும் தண்டகாவனத்தில் ஸஞ்சரித்துக்கொண்டிருக்கையில் ராவணனென்ற

துராத்மா ஸீதையை அபஹரித்தான். நான் ராமனுடைய ஆக்ஞைபால் அவளைக் கண்டுபிடிக்கச் செல்லுகிறேன். ராமனுடைய ராஜ்யத்தில் வஸித்துக்கொண்டிருக்கும் நீ அவருக்கு ஸஹாயஞ் செய்யவேண்டாமா? அப்படியும் இஷ்டமில்லாவிட்டால் நான் ஸீதையைக் கண்டு ராமனுடைய விருத்தாந்தத்தை அவளுக்குத் தெரிவித்து, அவளுடைய க்ஷேமத்தை ராமனுக்குச் சொல்லி, இங்கே வந்து, உன் வாயில் ப்ரவேசிக்கிறேன்; இது ஸத்ய''மென்றேன். நினைத்த ரூபங்களை எடுக்கக்கூடிய ஸுரஸை 'என் கண்ணிற்பட்ட ஒருவனும் என்னைத் தப்பிப்போக முடியா'தென்றாள். உடனே நான் பத்து யோஜனையளவு என் தேஹத்தை வளர்த்தேன். அவள் அதற்குத் தகுந்தபடி வாயை வளர்த்தாள். நான் உடனே என் தேஹத்தைச் சுருக்கிக் கட்டை விரலளவு செய்து அவளுடைய வாயில் பாய்ந்து ஒரு க்ஷணத்தில் வெளியில் வந்தேன். பிறகு ஸுரஸை தன் நிஜ ரூபத்துடன் என்னைப் பார்த்துக் 'குழந்தாய்! நீ போகும் கார்யம் கைகூடட்டும். ஸீதையையும் ராமனையும் சேர்த்துவைப்பாய்; உனக்கு ஸகல மங்களங்களும் உண்டாகட்டும்; உன்னிடத்தில் விசேஷ ப்ரீதி வைத்தே'னென்றாள். அப்பொழுது ஸகல ப்ராணிகளும் 'நல்லது நல்ல'தென்று என்னைக் கொண்டாடின.

பிறகு நான் விசாலமான ஆகாசத்தில் கருடனைப்போல் அதி வேகமாய்ச் செல்லுகையில் திடீரென்று என் வேகம் அடங்கிற்று; செல்ல முடியவில்லை; ஸகல திக்குகளிலும் பார்க்கையில் ஒன்றும் காணப்படவில்லை. இது என்ன ஆச்சர்யம்! வேகமாய்ப் போய்க்கொண்டிருந்த எனக்கு இந்த இடையூறு நேர்ந்த காரணமென்ன? யாதொரு ப்ராணியையும் நான் போகும் வழியில் காணவில்லையே! என் நிழலை யாரோ பிடித்துத் தடை செய்திருக்கிறார்க'ளென்று சற்று யோசித்துத் துக்கித்துக் கீழே பார்க்கையில், ஜலத்தில் ஒரு பயங்கரமான ராக்ஷஸி படுத்திருப்பதைக் கண்டேன். அவள் என்னைப் பார்த்து இடிபோல் சிரித்துப், பரபரப்பில்லாமல் வெகு தைர்யத்துடன் பர்வதம் போன்ற சரீரத்தையுடையவனே! வெகு காலமாய் நான் ஆஹாரமில்லாமல் வருந்துகிறேன். உன் தேஹத்தை எனக்கு ஆஹாரமாய்க் கொடுத்து என்னைத் திருப்திசெய்'யென்றாள். நான் நல்லதென்று அவளுடைய வாயளவைக் காட்டிலும் அதிகமாக என் தேஹத்தை வளர்த்தேன்; அவள் என்னை விழுங்கப் போதுமான வரையில் தன் வாயை வளர்த்தாள். ஆனால் நான் நினைத்த ரூபங்களை எடுக்கக் கூடியவனென்று அவளுக்குத் தெரியாது. நான் உடனே

என் பெரிய தேஹத்தைச் சுருக்கி, அவளுடைய வாயில் நுழைந்து ஹ்ருதயத்தைப் பிளந்து, ஆகாசத்தில் தாவினேன். மலைபோன்ற அந்தக் கோர ராக்ஷஸி உடனே கைகளை உதறிக்கொண்டு ஸமுத்ரத்தில் விழுந்திறந்தாள். அப்பொழுது ஆகாசத்தில் ஸஞ்சரிக்கும் ஸித்த சாரணர்கள், "ஹநுமான் பயங்கரமான ஸிம்ஹிகையைக் கொன்று"வென்று சொல்லக் கேட்டேன்.

பிறகு நான் உத்தேசித்த கார்யத்தை நினைத்துக்கொண்டு ஆகாசவீதியில் வேகமாய்ச் செல்லுகையில், ஸமுத்ரத்தின் தென் கரையில் மலைகளும் வனங்களும் லங்காபட்டணமும் இருக்கக்கண்டேன். ஸூர்யன் அஸ்தமித்தவுடன் அங்கிருந்த பயங்கரமான காவற்காரர்களுக்குத் தெரியாமல் ராக்ஷஸர்களுடைய ராஜதானியில் ப்ரவேசித்தேன். அப்பொழுது ஒரு ஸ்த்ரீ ப்ரளயகால மேகத்தைப் போல் சிரித்துக்கொண்டு திடீரென்று கிளம்பி என்னைத் தடுத்தாள். நெருப்புக்கொழுந்து போன்ற தலைமயிரையுடைய அந்த ராக்ஷஸி என்னைக்கொல்ல வருவதைக்கண்டு, நான் இடது கை விரல்களை மடக்கி அவளைக் குத்தி அடித்துக் கீழே தள்ளி நகரத்தில் ப்ரவேசித்தேன். அப்பொழுது அவள், 'மஹாநுபாவ! நான் லங்கா தேவதை; என்னை நீ ஜயித்தபடியால் ஸகல ராக்ஷஸர்களையும் ஜயிப்பா'யென்றாள்.

பிறகு நான் அந்த ராத்ரி முழுவதும் லங்கையெங்கும் தேடி, முடிவில் ராவணனுடைய அந்தப்புரத்திலும் நன்றாகப் பரிசோதித்துப் பார்த்தேன்; ஸீதையைக் காணவில்லை; ஆகையால் நான் துக்க ஸமுத்ரத்தில் மூழ்கிக் கரை காணாமல் தவிக்கையில், ஓரிடத்தில் தங்க ப்ராகாரத்தால் சூழப்பட்ட ஒரு அழகான தோட்டத்தைக் கண்டேன். அந்தச்சுவற்றைத் தாண்டிக் குதித்து விருக்ஷங்கள் நிறைந்த அசோகவனத்தையும் அதன் நடுவில் ஓர் பெரிய சிம்சுபாவிருக்ஷத்தையும் அதைச்சுற்றி ஸ்வர்ணமயமான வாழைத்தோட்டத்தையும் கண்டேன். அந்த சிம்சுபாவிருக்ஷத்தின் ஸமீபத்தில் ச்ரேஷ்டமான வர்ணமுள்ள ஒரு ஸ்த்ரீ, பெண்புலிகளால் சூழப்பட்ட மானைப்போல், ரக்தமாம்ஸங்களையே ஆஹாரமாயுடைய கோர ராக்ஷஸிகளால் சூழப்பட்டிருப்பதைக் கண்டேன். அவள் நல்ல யௌவனப் பருவத்திலிருப்பவள்; தாமரை யிதழ்களைப்போன்ற நேத்ரங்களையுடையவள். ஆஹாரமில்லாததாலும் சோகத்தாலும் தேஹம் இளைத்து, முகம் வாடித், தலைமயிர் புழுதிபடிந்து, ஒற்றை வஸ்த்ரத்துடன் உட்கார்ந்திருந்தாள். எப்பொழுதும் பர்த்தாவையே த்யா

ஸிந்துக்கொண்டு ராவணாலயத்தில் இருந்த வெறுப்புடன் ராக்ஷஸி களால் மிரட்டப்பட்டும் பயந்த மான்குட்டிபோல் அங்குமிங்கும் பார்த்துக்கொண்டு ஒற்றைப்பின்னலுடன் தரையில் உட்கார்ந்திருந் தாள். ஹேமந்தருதுவில் தாமரைப்போடையைப்போல், விகாரவர்ணத் தையுடைய சரீரத்துடன், இனி உயிரை வைத்துக்கொள்வதில்லை யென்று நிச்சயித்திருந்தாள். இப்படி மஹாகீர்த்திசாலியான ராம பார்யையை நான் தரிசித்து அந்தச் சிம்சுபாவிருக்ஷத்திலேயே ஒளிந் திருந்தேன்.

பிறகு ராவணனுடைய அரண்மனையிலிருந்து ஒட்டியாணம் சிலம்பு முதலிய ஆபரணங்களுடன் நாதமும் கம்பீரமான ஹலஹ லாசப்தமுமுண்டாயிற்று. அதைக் கேட்டுப் பயந்து நான் தேஹத் தைச் சுருக்கிக்கொண்டு அந்த விருக்ஷத்தில் இலைகளின் மறைவில் பக்ஷியைப்போல் ஒளித்திருந்தேன். அப்பொழுது ஸீதையிருந்த விடத்திற்கு ராவணனும் அவனுடைய பத்னிகளும் வந்தார்கள். அவ னைக்கண்டு பதிவ்ரதையான ஸீதை துடைகளை நெருக்கிக்கொண்டு கைகளால் ஸ்தனங்களை மறைத்துக்கொண்டாள். என்ன நேருமோ வென்று பயத்துடன், நம்மை ரக்ஷிப்பவர்களுண்டோவென்று நான்கு புறங்களும் பார்த்துக்கொண்டு, ஒருவரையும் காணமல் நடுங் கிக் கொண்டு துக்கத்தால் கலங்கியிருந்தாள். ராவணன் அவளை நமஸ் கரித்து, “அழகால் கர்வமடைந்திருப்பவளே! என்னைப் புருஷனாக அங்கீகரிக்கமாட்டாயா? கொழுப்பால் நீ என்னிஷ்டப்படி நடக்காவிட் டால் இன்னும் இரண்டு மாஸங்கள் பொறுப்பேன். பிறகு உன் ரக் தத்தைக் குடித்துவிடுவே”னென்றான். அதைக் கேட்டு ஸீதை வெகு கோபங்கொண்டு “ராக்ஷஸப்பதரே! அபாரதேஜஸுள்ள ராமனுடைய பார்யையைப் பார்த்துச் சொல்லத்தகாத வார்த்தைகளைச் சொல்லுகிற உன் நாக்கு அழுகி விழவில்லை யே! இக்ஷ்வாகுகுல சக்ரவர்த்தியான தசரதருக்கு நாட்டுப் பெண் என்பதை மறந்தாயோ? அயோக்ய! பாபி! என் பர்த்தாவில் லாத ஸமயத்தில் அந்த மஹாத்மாவிற்குத் தெரியாமல் என்னை அப ஹரித்து வந்தாயே. உன் வீர்யத்தைச் சுடவேண்டும். ராகவனுக்கு நீ ஸமமாவாயா? அவருக்கு ஊழியஞ்செய்யக்கூடத் தகுந்தவனல்ல. ஸத்யவானும் யுத்தத்தில் எல்லோராலும் கொண்டாடப்பட்டவரும் யக்ஞங்களைச்செய்தவருமான ரகுவீரனெங்கே, நீயெங்கே,யென்றாள். ஸீதையின் கடுமையான வார்த்தைகளைக் கேட்டு, ராவணன் கோபங் கொண்டு, ச்மசானத்தில் சிதையில் எரியும் அக்னிபோல் ஜ்வலித்துக்

கண்களை உருட்டி விழித்து, வலதுகை விரல்களை மடக்கிக்கொண்டு ஸீதையைக் கொல்ல ஓடிவந்தான். அப்பொழுது அங்கிருந்த ஸ்த்ரீகள், 'ஹா! ஹா!' வென்று கத்தினார்கள். அவர்களுக்குள் மந்தோதரி "மஹாராஜ! பராக்ரமத்தில் மஹேந்த்ரனுக்கு ஸமமான தங்களுக்கு ஸீதையால் என்ன ப்ரயோஜனம். தேவ கந்தர்வ யக்ஷ கன்யைகள் கணக்கில்லாமல் தங்களுடைய இஷ்டத்தை எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறார்கள். அவர்களுடன் க்ரீடிக்கலாம், வாருங்க" ளென்று அழைத்துக்கொண்டு போனாள். அப்பொழுது ராவணன் கோபந்தணிந்து, காமபரவசனாய் அவர்களுடன் தன் அரண்மனைக்குச் சென்றான். உடனே அங்கிருந்த கோரராக்ஷஸிகள் ஸீதையைச் சூழ்ந்துகொண்டு, க்ரூரமான வார்த்தைகளால் அவளை மிரட்டினார்கள். அவர்களுடைய கர்ஜனைகள் ஸீதையிடத்தில் பலிக்கவில்லை. அவர்களுடைய வார்த்தைகளை அவள் துரும்புபோல் எண்ணினாள். பிறகு அவர்கள் வீணாய்க் கத்தி அலுத்து, ராவணனுக்கு ஸீதையின் நிச்சயத்தைத் தெரிவிக்கப்போனார்கள். அங்கிருந்தவர்கள் அவளை உட்படுத்துவோமென்ற ஆசையற்று ஸகல ப்ரயத்னங்களையும் விட்டு, ஸீதையின் நான்கு பக்கங்களிலும் படுத்துத் தூங்கினார்கள். தன் பர்த்தாவின் க்ஷேமத்தையே கோரும் ஸீதை துக்கந்தாங்காமல் தீனமாய் ப்ரலாபித்தாள்.

பிறகு, அந்த ராக்ஷஸிகளுக்கு நடுவிலிருந்த த்ரிஜடையென்றவள் எழுந்து, "துஷ்டைகளே! ஸீதையைத் தொடவேண்டாம். உங்களுக்குப் பசித்தால் உங்களையே பிடுங்கித் தின்னுங்கள். ஜனகருடைய புத்ரியும் தசரதருடைய நாட்டுப்பெண்ணுமான ஜானகி நாசமடையாள். இவளுடைய பர்த்தாவிற்கு ஜயமும் மங்களமுமுண்டாகப்போகின்றனவென்றும் ராவணனும் ஸகல ராக்ஷஸர்களும் நாசமடையப்போகிறார்களென்றும் தெரிவிக்கும் ஓர் ஸ்வப்னத்தைக் கண்டேன். ராகவனுடைய கோபத்திலிருந்து ராக்ஷஸிகளைக் காப்பாற்ற இவள் ஒருவளே போதும். நாம் இவளை ப்ரார்த்திப்போம். இது எனக்கு நல்ல யோசனையென்று தோன்றுகிறது. இவள் இப்பொழுது அதிக துக்கத்தை அனுபவித்துக்கொண்டிருக்கிறாள். ஆனால் அதிசீக்ரத்தில் ஸகல துக்கங்களும் நீங்கி உத்தமமான ஸுகத்தை அடைவா"ளென்றாள். அதைக் கேட்டு ஸீதை, தன் நாயகனுக்குக் கிடைக்கும் ஜயத்தைப்பற்றி ஸந்தோஷித்து, "நீ சொல்

ஸீதை அந்தப் பயங்கரமான ஸ்திதியிலிருப்பதைக் கண்டு நான் அதை நீக்குவதற்குப் பலவிதமாய் யோசித்தும் ஒன்றும் தோன்றாமல் வருத்தப்பட்டுக்கொண்டிருந்தேன். ஸீதையுடன் இன்ன விதமாய்ப் பேசுகிறதென்று நிச்சயித்துக்கொண்டு, இக்ஷ்வாகு வம்சபரம்பரையை வர்ணிக்க ஆரம்பித்தேன். ராஜர்ஷிகளால் கொண்டாடப்பட்ட அந்த வார்த்தைகளைக் கேட்டு ஸீதை கண்ணீர்பெருக, "வானர ச்ரேஷ்ட! நீ யார்? இங்கே எப்படி வந்தாய்! எந்தக் கார்யமாய் வந்தாய்? ராகவனுக்கும் உனக்கும் ஸ்நேஹம் உண்டான விதமென்ன'வென்று கேட்டாள். அதற்கு நான், "தங்களுடைய பர்த்தாவான ராமனுக்கு ஸுக்ரீவனென்ற ஓர் மித்ரனுண்டு. மஹாபலவான், பராக்ரமசாலி; நான் அவருடைய ஸேவகன்; என் பெயர் ஹநுமான். அவர் என்னைத் தங்களிடத்தில் அனுப்பியிருக்கிறார். அந்தப் புருஷோத்தமன் நம்பிக்கையுண்டாக்கும்படி தன் மோதிரத்தை அடையாளமாக என்னிடத்தில் கொடுத்தனுப்பியிருக்கிறார். ஆகையால் தங்களுடைய கட்டளையை நிறைவேற்றத் தயாராயிருக்கிறேன். என்ன செய்யட்டும்? தங்களை ராமலக்ஷ்மணர்களுடைய ஸமீபத்தில் கொண்டுபோய்விடட்டுமா? என்ன பதில் சொல்லுகிறீர்க''ளென்றேன்.

அதைக் கேட்டு ஸீதை என் ஸ்வரூபத்தை அறிந்து, "ராகவன் ஸைன்யங்களுடன் இங்கே வந்து ராவணனையும் மற்ற ராக்ஷஸர்களையும் யுத்தத்தில் கொன்று என்னை அழைத்துப்போகட்டு''மென்றாள். பிறகு நான் அந்தப் புண்யவதியை சிரஸால் நமஸ்கரித்து, "ராமனுக்கு நம்பிக்கையையும் ஸந்தோஷத்தையுமுண்டாக்கும் ஓர் அடையாளத்தைக் கொடுங்க''ளென்று கேட்டேன். அப்பொழுது தன் சூடாமணியை எடுத்து என்னிடத்தில் கொடுத்து, 'இதை ராமனுக்குக் காட்டினால், நீ என்னைக் கண்டு போனதென்று நம்பிக் கொள்ளுவார். ஆஞ்ஜநேயா! என் விருத்தாந்தங்களை ராகவனுக்குத் தெரிவிப்பாய். ராமலக்ஷ்மணர்களும் ஸுக்ரீவனும் வானர ஸைன்யங்களுடன் இங்கே வரும்படி செய்யவேண்டியது உன் கடமை. அப்படியில்லாவிட்டால் இரண்டு மாஸங்களுக்குமேல் பிழைத்திருக்கமாட்டேன். ராமன் என்னைப் பார்க்கமுடியாது. அநாதையைப்போல் மரணமடைவே''னென்று தன் அபிப்ராயத்தை முடிவாகச் சொன்னாள். அந்தத் தீனமான வார்த்தைகளைக் கேட்டு எனக்குத் தெரிக்கமுடியாமல் கோபம் வந்தது. மேல்நடக்கவேண்டிய கார்யம் செய்யப் பாக்கி யிருக்கிறதென்று அறிந்து,

மலைபோன்ற ரூபமெடுத்து, ராக்ஷஸர்களுடன் யுத்தஞ்செய்ய விரும்பி, அந்த அசோக வனத்தை அழித்தேன். மரங்கள் முறி படுவதையும் மிருகங்களும் பக்ஷிகளும் பயத்தால் கூச்சலிடுவதையும் கேட்டு ராக்ஷஸிகள் விழித்து அங்கே வந்து பார்த்து என்னைக் கண்டு, சீக்ரமாய்ப் போய் ராவணனிடத்தில் சொன்னார்கள். "ப்ர போ! தங்களுடைய பலபராக்ரமங்களை அறியாமல் ஓர் துஷ்டக் குரங்கு இங்கே வந்து பிறர் நெருங்க முடியாத நமது அசோக வனத்தை அழிக்கிறது. அந்தத் துர்ப்புத்தியுள்ள வானரன் தங்களுக்கு ப்ரியமில்லாத கார்யத்தைச் செய்துகொண்டிருக்கிறான், அவனைக் கொல்லும்படி சட்டளையிடுங்க"ளென்றார்கள்.

உடனே ராவணன் கிங்கிரர்களென்று ப்ரஸித்தி பெற்ற ராக்ஷஸர்களை அனுப்பினான். அவர்கள் லங்காதிபதியின் எண்ணங்களை அறிந்து நடப்பவர்கள். ஸுலபமாய் ஜயிக்கமுடியாதவர்கள். ஸம ஸ்த ஆயுதங்களையும் எடுத்துக்கொண்டு என்னுடன் யுத்தஞ்செய்ய வந்த எண்பதினாயிரம் கிங்கரர்களையும் அங்கிருந்த ஓர் இரும்புத்தடியால் கொன்றேன். அதில் பயந்து ஓடினவர்கள் அந்த ஸமாசாரத்தை ராவணனுக்குச் சொன்னார்கள்.

பிறகு, அந்தப் பட்டணத்து நடுவிலிருந்து ஓர் உன்னதமான உப்பரிகையில் தாவி ஒரு ஸ்தம்பத்தைப் பிடுங்கி, அங்கிருந்த ராக்ஷஸர்களைக் கொன்று, லங்கைக்குப் பூஷணமாயிருந்த அந்த கட்டடத்தை நாசஞ்செய்தேன். பிறகு ப்ரஹஸ்தனுடைய புத்ரனை ஜம்புமாலியையும் பயங்கரமான அநேக ராக்ஷஸர்களையும் அவனுடன் ராவணன் அனுப்பினான். யுத்தத்தில் நிபுணனான அந்தப் பலவானையும் அவனுடன் வந்த ராக்ஷஸர்களையும் ஒரு இருப்புலக்கையால் அடித்துக் கொன்றேன். பிறகு ராவணன் மஹாபலசாலிகளான ஏழு மந்த்ரிபுத்ரர்களைக் கணக்கற்ற காலாட்களுடன் அனுப்பினான். அவர்களையும் இருப்புலக்கையால் யமலோகத்திற்கு அனுப்பினேன். பிறகு சூரர்களான ஐந்து ஸேனாதிபதிகளை அனுப்பினான். அவர்களை ஸைன்யங்களுடன் இருந்தவிடந் தெரியாமல் கொன்றேன். பிறகு தன் புத்ரனை அக்ஷனென்ற பலவானை அளவற்ற ஸைன்யங்களுடன் அனுப்பினான். யுத்தத்தில் நிபுணனான அந்த மந்தோதரி புத்ரன் முடிவில் கத்தியை உருவிக்கொண்டு ஆகாசத்தில் கிளம்புவதைக் கண்டு, அவனுடைய கால்களைப் பிடித்துக் கறகறவென்று

பங்கொண்டு, பலத்தாலும் பாராக்ரமத்தாலும் கொழுப்படைந்த இந்த்ரஜித்தென்ற தன் புத்ரனை அனுப்பினான். அவனுடைய ஸைன்யம் முழுவதையும் கொன்று, அவனுடைய பாராக்ரமத்தை விணைச் செய்து வெகு ஸந்தோஷமடைந்தேன். கொழுப்படைந்த வீரர்களுடன் அந்த இந்த்ரஜித்தை ராவணன் பூர்ண நம்பிக்கையுடன் என்னுடன் யுத்தஞ்செய்ய அனுப்பினான். தன் பலன் ஒடுங்கினதையும் அஸ்த்ரங்களாலும் ஆயுதங்களாலும் என்னை ஜயிக்கமுடியாதென்றதையும் கண்டு அந்த ராக்ஷஸன் அதிவேகமாய் என்மேல் ப்ரஹ்மாஸ்த்ரத்தை ப்ரயோகஞ்செய்து என்னைக் கட்டினான்.

பிறகு ராக்ஷஸர்கள் என்னைக் கயிறுகளால் கட்டி ராவணனிடத்தில் கொண்டுபோனார்கள். அவன் என்னைப் பார்த்து நான் லங்கைக்கு வந்ததற்கும் ராக்ஷஸர்களைக் கொன்றதற்கும் காரணத்தைக் கேட்டான். "ஸீதையின் நிமித்தமாக நான் இப்படிச் செய்தே" னென்று சொன்னேன். "நான் வாயுவின் புத்ரன்; என் பெயர் ஹநுமான். ஸீதையைப் பார்க்க விரும்பி தங்களுடைய அரண்மனைக்கு வந்தேன், நான் வானரன். ஸுக்ரீவனுக்கு மந்த்ரி; ராமனால் அனுப்பப்பட்ட தூதன்; தங்களிடத்திற்கு வந்தேன். மஹாதேஜஸ்வியான ஸுக்ரீவன் தங்களை க்ஷேமம் விசாரித்துப், புருஷார்த்தங்களுக்கு ஒத்ததும் க்ஷேமகரமுமான பின்வரும் ஸமாசாரத்தைச் சொல்லியனுப்பியிருக்கிறார். 'ரிச்யமூக பர்வதத்தில் நான் வஸித்துக்கொண்டிருக்கையில் ரணதீரனான ராகவன் எனக்கு மித்ரனாய், என் பார்யையை ஒரு ராக்ஷஸன் கொண்டுபோனான்; அவளைத் திரும்பியடையும் விஷயத்தில் நீ எனக்கு ஸஹாயஞ்செய்ய வேண்டிய'தென்றார். 'அப்படியானால் என் சத்ருவான வாலியைக் கொல்வதில் தாங்களும் ஸஹாயஞ்செய்ய வேண்டிய' தென்றேன். பிறகு ராமலக்ஷ்மணர்கள் அக்னி ஸாக்ஷியாய் என்னுடன் ஸ்நேஹஞ்செய்தார்கள். ராமன் வாலியை யுத்தத்தில் ஒரே பாணத்தால் கொன்று, என்னை வானரர்களுக்கு அரசனாக அபிஷேகஞ்செய்தார். அவருக்கு ஸகல விதத்தாலும் நான் ஸஹாயஞ்செய்யவேண்டியது. ஆகையால் என் தூதனை உன்னிடத்திற்கு அனுப்பியிருக்கிறேன். (ஸுக்ரீவன் ராவணனுக்கு மாருதியின் மூலமாக யாதொரு வார்த்தையையும் சொல்லியனுப்பினதாகக் கிஷ்கிந்தா காண்டத்தில் கிடையாது.) உடனே ஸீதையைக் கொண்டு வந்து விடு; இல்லாவிட்டால் வானரவீரர்கள் உன் ஸைன்யங்களை அழிப்பார்கள். தேவர்கள் அடிக்கடி ஸஹாயத்திற்

காக ப்ரார்த்தித்து அழைத்துப்போகும் வானரர்களுடைய மஹிமை யாருக்குத் தான் தெரியா'தென்று ஸுக்ரீவ மஹாராஜா தங்களுக்குச் சொல்லியனுப்பியிருக்கிறு''ரென்று சொன்னேன். அதைக் கேட்டு ராவணன் கோபத்தால் மெய்மறந்து என்னை எரித்து விடுவதுபோல் பார்த்தான். பிறகு அந்தத் துஷ்டன் என் மஹிமையை அறியாமல், 'இவனைக் கொன்று விடுங்க'ளென்று ஆக்ஞாபித்தான். அப்பொழுது அவனுக்குத் தம்பியான விபீஷணன், மஹாபுத்திமான், ராவணனைப் பார்த்து, "அண்ணு! இது ந்யாயமல்ல; இப்படிச் செய்யக்கூடாது. இது ராஜநீதிக்கு விரோதம். தூதர்களைக் கொல்லக் கூடாதென்று சாஸ்த்ரங்கள் விதிக்கின்றன. யஜமானனுடைய க்ஷேமத்தைக் கோறுகிற தூதனிடத்தில் ஒப்புவிக்கப்பட்ட ஸமாசாரத்தை அவர் சொல்லவேண்டியதல்லவா? அவன் விசேஷ அபராதஞ்செய்தாலும் அவனுடைய ரூபத்தைக் கெடுக்கவேண்டுமே யொழியக் கொல்லக் கூடாதென்பது நீதிசாஸ்த்ர''மென்று ப்ரார்த்தித்தான். இப்படி எனக்காகப் பரிந்து பேசின விபீஷணருடைய வார்த்தையை அங்கிகரித்து, ராவணன் 'இந்தக் குரங்கின் வாலைக் கொளுத்தி விடுங்க'ளென்று கட்டளையிட்டான்.

உடனே அங்கிருந்த க்ரூர ராக்ஷஸர்கள் என்னைப் பாசங்களால் கட்டிக், கழிகளாலும் முஷ்டிகளாலும் அடித்து, என் வாலில் சணப்பக் கயிறுகளையும் வஸ்த்ரங்களையும் சுற்றித் தைலத்தில் நனைத்து நெருப்பு வைத்துப், பிறகு என்னை ராஜமார்க்கங்களிலும் மற்ற வீதிகளிலும் கட்டியிழுத்துக்கொண்டு ஜயகோஷத்துடன் சென்றார்கள். நான் என் பெரிய ரூபத்தைச் சுருக்கிக் கட்டுகளிலிருந்து விடுவித்துக்கொண்டு, பழைய ரூபத்துடன் இருப்புலக்கையால் அவர்களைக் கொன்றேன். பிறகு அந்த நகரத்திற்குள் சென்று, ப்ளயகாலாக்னி ப்ராணிகளைக் கொளுத்துவதுபோல், வாலிலிருந்த நெருப்பால் அமரிக்கையாய் லங்கை முழுவதையும் கொளுத்தினேன். ஓரிடம் பாக்கியில்லாமல் எங்கும் வெந்து சாம்பலாயிற்று. உடனே "ஐயோ! புத்தியில்லாமல் லங்கையில் நெருப்பு வைத்து ஸீதையையும் கொளுத்தி ராமனுடைய முக்யகார்யத்தைக் கெடுத்து விட்டேனே'னென்று சொல்லமுடியாத துக்கமடைகையில், சாரணர்கள் 'லங்கை ஓரிடம் பாக்கியில்லாமல் வெந்துபோயும் ஸீதை அபாயமில்லாமலிருப்பது என்ன ஆச்சரிய' மென்று சொல்லிக்கொள்வதைக் கேட்டேன். மேலும் என் வாலில் எரியும் நெருப்பு பனிபோல் குளிர்ந்திருந்தது; என் மனஸில் கொஞ்சமும் துக்க

மில்லை. காற்று பரிமளமாய் வீசிற்று; கண் சுபமாய்த் துடித்தது; மஹர்ஷிகளின் வார்த்தைகள் வீண்போகாதாகையால் ஸீதைக்கு அபாயமில்லையென்று ஸந்தோஷித்து, மறுபடியும் அவளைத் தர்சித்து உத்திரவு பெற்றுக்கொண்டு, அரிஷ்டமென்ற பர்வதத்திலேறி உங்களைப்பார்க்க ஆசைகொண்டு ஆகாசத்தில் கிளம்பினேன். வாயு சந்த்ரன் ஸூர்யன் ஸித்த கந்தர்வ கணங்கள் ஸஞ்சரிக்கும் ஆகாசமார்க்கமாய் இங்கே வந்து உங்களைக் கண்டேன். ராகவனுடைய மஹிமையாலும் உங்களுடைய ப்ரபாவத்தாலும் ஸுக்ரீவன் கட்டளையிட்ட ஸகல கார்யங்களையும் என்னால் கூடியவரையில் செய்து முடித்தேன். மேல் நடக்கவேண்டியவைகளை நீங்களே செய்து முடிக்கவேண்டியது.

---

## ஸர்க்கம் 59.

## மாருதி வானரர்களுடன் ஆலோசித்தது.

'நாமெல்லோரும் இப்பொழுதே லங்கைக்குச்சென்று ராவணனை ஜயித்து ஸீதையுடன் ராமலக்ஷ்மணர்களைப் பார்ப்போ' மென்று நீங்கள் சொல்லலாம். ஆனால், ராகவனுடைய ப்ரயத்னங்களும் ஸுக்ரீவனுடைய உத்ஸாஹமும் ஸீதையின் பதிவ்ரதாமஹிமையால் நிறைவேறிற்றேயொழிய வேறல்ல. அவளிடத்தில் என் மனஸ் எல்லையற்ற பக்தியுடனிருக்கிறது. 'அப்படிப்பட்ட ப்ரபாவத்தையுடைய ஸீதையைத் தொட்டெடுத்தும் ராவணன் இன்னும் எப்படிப் பிழைத்திருக்கிறனெ'ன்றால், அந்த ராக்ஷஸராஜன் கடுந்தபஸ்செய்து அளவற்ற பலத்தையும் பராக்ரமத்தையும் தேஜஸையும் பெற்றிருக்கின்றான். ஸகல லோகங்களையும் ரக்ஷிக்ககூடியவன்; கோபங்கொண்டால் அவைகளை நாசஞ்செய்யகூடியவனாகையால் ஸீதையைத் தொட்டும் அவன் சாம்பலாகவில்லை. ஆனால், ஸீதையின் பதிவ்ரதாமஹிமை பலமற்றதென்று எண்ணவேண்டாம். ஸீதை கொஞ்சம் கோபித்தால் ப்ரளயகாலாக்னியும் அதற்கு ஈடோ? நாயகனிருக்கும்பொழுது அவருடைய உத்தரவில்லாமல் தான் ஒன்றையும் செய்யக்கூடாது. ராவணனை ஜயித்துக் கொன்றானென்ற கீர்த்தி தன் பர்த்தாவிற்குக் கிடைக்கவேண்டும். அதைக் கெடுக்கக்கூடாதென்று ஸகல கஷ்டங்களையும் பொறுத்திருப்பதேயொழிய வேறென்ன?

"உடைக்க வார்க்களைத் தங்களுக்குத் தெரிவித்தேன். நாம் மைதிலையுடன் ராமலக்ஷ்மணர்களைப் பார்க்கவேண்டுமென்று ஜாம்பவா னை முதலியோர்களும் முடிவுசெய்தால் எனக்கு ஆக்ஷேப மில்லை. நான் ஒருவனே லங்கையையும் ராவணனையும் ஸகல ராக்ஷ ஸர்களையும் ஒரு க்ஷணத்தில் நாசஞ்செய்வேன். நீங்கள் சூரர்கள், பலவான்கள், தைர்யசாலிகள், ஆயுத ப்ரயோகங்களில் நிபுணர்கள்; ஜயிக்க நிச்சயித்தவர்கள்' நானும் உங்களுடன் சேர்ந்தால் கேட்க வேண்டுமோ? நான் ஒருவனே ராவணனையும் அவனுடைய ஸஹோ தரர்களையும் புத்ரர்களையும் ஸேவகர்களையும் ஸைன்யங்களையும் விளை யாட்டாய்க் கொல்லமுடியும். இந்த்ரஜித் ப்ரயோகிக்கும் பிறர் கண் ணெடுத்துப் பார்க்கமுடியாத ப்ரஹ்மாஸ்த்ரம் இந்த்ராஸ்த்ரம் வாயவ் யாஸ்த்ரம் வருணாஸ்த்ரம் முதலியவைகளைப் பொடியாக்குவேன். என் பராக்ரமத்தால் இந்த்ரஜித்தை மயக்குவேன். நான் இடை விடாமல் கல்மாரி பொழிய ஆரம்பித்தால் தேவர்களையும் கொல் வேன். ராக்ஷஸர்களைப்பற்றிச் சொல்லவும் வேண்டுமா? நீங்கள் உத் திரவு கொடுத்தால் அவர்களைக் கொல்வது எனக்கு ஒரு விளையாட்டு; ஸமுத்ரம் கரைபுரண்டாலும் மேருமலை அசைந்தாலும் ஜாம்பவானை யுத்தத்தில் அசைக்கக்கூடிய சத்ரு ஸைன்யமுண்டோ? ஸமஸ்த ராக்ஷஸர்களுக்குள் ச்ரேஷ்டமான வீரர்களை வாலிபுத்ரன் ஒருவனே நாசஞ்செய்ய முடியாதா? பனஸன் நீலனென்றவர்களுடைய துடை களின் வேகத்தால் மேருமலையும் பிளக்குமே! மந்தரகிரியும் பொடி யாகுமே, ராக்ஷஸர்கள் எப்மாத்ரம்? மைந்தன் த்விவிதனென்ற வர்களோடு யுத்தஞ்செய்யக்கூடிய தேவாஸுர யக்ஷ கந்தர்வ உரக பக்ஷிகணங்களைக் காட்டுங்கள். அவர்கள் அச்வினிபுத்ரர்கள்; அள வற்ற ப்ரபாவமுடையவர்கள். அவர்களுடன் ஸமமாய் யுத்தஞ்செய் யக்கூடியவர்களுமுண்டோ? ப்ரஹ்மாவின் வரத்தால் அளவற்ற கொழுப்படைந்தவர்கள்; அமிருதபானஞ் செய்தவர்கள். முன்பு அச்வினிதேவதைகளை ஸந்தோஷப்படுத்துவதற்காக ப்ரஹ்மா, 'இவர்கள் ஒருவராலும் மரணமடையார்'களென்று வரங்கொடுத்தார். அந்தக்காரணத்தால் கொழுப்படைந்து, பெரிய ஸைன்யத்தை நாசஞ்செய்து தேவர்கள் வைத்திருந்த அமிருதத்தைப் பானஞ்செய் தார்கள். நீங்களெல்லோரும் இருங்கள். இவ்விருவர் கோபங் கொண்டால் லங்கையையும் அதிலுள்ள ஸமஸ்த ப்ராணிகளையும் நாசஞ்செய்வார்களே. நான் இதுவரையிலுமே லங்கா தேவதையை ஜயித்து, அந்த நகரத்தைக் கொளுத்திச் சாம்பலாக்கி, ராஜமார்க்கங் களில் என் பெயரையும் ராமலக்ஷ்மணர்களுடைய பெயரையும் ப்ர

லித்தப்படுத்தினேன். 'ராகவனுக்கும் லக்ஷ்மணனுக்கும் அவர்களால் காப்பாற்றப்பட்ட ஸுக்ரீவனுக்கும் பலத்திலும் பராக்ரமத்திலும் நிகருண்டோ'வென்று கர்ஜித்தேன். 'நான் கோஸலாதிபதியான ரகுவீரனுடைய தூதன்; என் பெயர் ஹனுமான்; நான் வாயுவின் புத்ர'னென்று எல்லோரும் கேட்கும்படி கோஷித்தேன்.

ராவணனுடைய அசோகவனத்தில் சிம்சுபா விருக்ஷத்தடியில் ஜனகராஜபுத்ரி தீனமாய் உட்கார்ந்திருக்கிறாள். மேகங்களால் சூழப்பட்ட சந்த்ரனைப்போல் காந்தியற்று, ராக்ஷஸிகளால் சூழப்பட்டுச் சோக ஸமுத்ரத்தில் மூழ்கி, வெறுந்தரையில் உட்கார்ந்திருக்கிறாள். பலத்தால் கொழுப்படைந்த ராவணனைக் கொஞ்சமாவது லக்ஷ்யஞ் செய்யவில்லை. ரூபத்தில் நிகரில்லாத அந்தப் பதிவ்ரதை ராவணனால் சிறையில் வைக்கப்பட்டு, ஜனகராஜபுத்திரியாயும் ஸகல மங்களங்களுக்கும் வாஸஸ்தானமாயுமிருந்தும், இந்த்ரனைப் பிரிந்த இந்த்ராணியைப்போல் தன் பர்த்தாவையே த்யானித்துக்கொண்டு அவரிடத்திலேயே ஸகல ஆசைகளையும் வைத்து, ஒற்றை வஸ்த்ரத்துடன், தேஹமெங்கும் அழுக்கடைந்து, சோகத்தால் வாடி மெலிந்து 'என் நாதனுக்கு எப்பொழுது ஜயமுண்டாகும்? எப்பொழுது ராவணனை ஸம்ஹரிப்பார்? எப்பொழுது என் துக்கந்தீரு'மென்று ஆவலுடன் எதிர்பார்த்திருக்கிறாள். அசோகவனத்தில் கோரமான ராக்ஷஸிகள் அவளை அடிக்கடி மிரட்டுவதைப் பார்த்தேன். ஒரே பின்னலுடன், ஸந்தோஷமற்று, ராமனிடத்தில் நாடின மனஸுடையவளாய், வர்ணம் மாறித், தரையில் படுத்துக்கொண்டு, ஹேமந்தருதுவில் வாடி விகாரமடைந்த தாமரையோடையைப்போல் காணப்படுகிறாள். ராவணன் எவ்வளவு ப்ரார்த்தித்தும் அவனிடத்தில் கொஞ்சங்கூட மனஸ் வைக்காமல் உயிரைவிட நிச்சயித்து, மான் குட்டியைப்போல் மிரண்ட கண்களுடன் நான்கு புறத்திலும் பார்த்துக்கொண்டிருப்பதை நான் கண்டேன். வெகு கஷ்டப்பட்டு அவளுக்கு என்னிடத்தில் நம்பிக்கை வரும்படி செய்து, அவளுடன் பேசி, ஸகல விருத்தாந்தங்களையும் சொன்னேன். ராகவனுக்கும் ஸுக்ரீவனுக்கும் ஏற்பட்ட ஸ்நேஹத்தைக் கேட்டு மிகவும் ஸந்தோஷித்தாள். ராமனிடத்தில் விசேஷ பக்தி வைத்திருப்பதாலும், தன் பதிவ்ரதா தர்மத்திற்குக் குறைவு வருமென்பதாலும், மஹா அபராதஞ் செய்த ராவணனைக் கொல்லாமலிருக்கிறாள். இது ராவணன் செய்த புண்யமே. ஆகையால் ராகவனே அவனைக் கொல்லக்கடவர். ஸீதை கேவலம் அதற்கு நிமித்தமே. ராவணனுடைய பராக்ரமத்தையும் தபஸையும் வரங்களையும் யோசித்தால் ஸீதையைக் காரணமாக்கி ராகவன் அவனைக்

சொல்லவேண்டும். ஸ்வபாவத்திலேயே மெல்லிய தேஹமுடைய ஸீதை ராமனைப் பிரிந்ததால், ப்ரதமையில் அத்யயனஞ் செய்பவனுடைய வித்யையைப்போல இளைத்திருக்கிறாள். இப்படி ஸீதை படும் கஷ்டங்களை என்னால் கூடியவரையில் தெரிவித்தேன். இதற்கு எப்படிப் பதில் செய்யவேண்டுமோ அதைக் குறைவில்லாமல் செய்வது உங்களைச் சேர்ந்த"தென்றார்.

---

## ஸர்க்கம் 60.

### அங்கதனுடைய யோசனை.

அதைக் கேட்டு அங்கதன் "ஹநுமான் ஸீதையைக் கண்டு பிடித்தபிறகு அவளில்லாமல் நாம் ராமனிடத்தில் போவது யுக்தமல்ல. ஸீதையைக் கண்டோம், அழைத்துவரவில்லையென்று பராக்ரமத்தில் ப்ரஸித்திபெற்ற நீங்கள் சொல்வது யுக்தமல்ல. தாண்டுவதிலும் பராக்ரமத்திலும் தேவாஸுரர்களிலாவது எந்த லோகங்களிலாவது நமக்கு நிகருண்டோ? ராக்ஷஸவீரர்கள் ஹநுமானால் நாசமடைந்த பிறகு வேறென்ன செய்யவேண்டியிருக்கிறது? ஜாநகியை அழைத்துக்கொண்டே போவோ"மென்றான். அப்பொழுது விஷயங்கள் நன்றாயறிந்த ஜாம்பவான் அங்கதனைப் பார்த்துப் பரமப்ரீதியுடன் "குழந்தாய்! நீ சொல்லும் யோசனை யுக்தந்தான். ஆனால் ராகவனுடைய அபிப்ராயத்தை ஒத்து அவர் உத்தேசித்த கார்யம் கெடாமல் நடக்கவேண்டியதல்லவா"வென்றார். (ஸர்க்கங்கள் ஏறக்குறைய ஒரே அளவாயிருப்பது உத்தம காவ்ய லக்ஷணம். நமக்குள் வழங்கும் ராமாயண பாடத்தில் அப்படியில்லை. இதைப்போன்ற மிகச் சிறிய ஸர்க்கங்களும் இந்தக்காண்டம் முதலாவது ஸர்க்கத்தைப்போல் மிகப்பெரிய ஸர்க்கங்களும் காணப்படுகின்றன. நமது பாடம் சுத்தமல்ல, புராதனமல்லவென்பதற்கு இது ஒரு காரணம்.)

---

## ஸர்க்கம் 61.

### வானரர்கள் மது வனத்தில் ப்ரவேசித்தது.



அங்கதனும் மற்ற வானரர்களும் ஹநுமானும் ஜாம்பவானுடைய வார்த்தையை யுக்தமென்று அங்கீகரித்தார்கள். பிறகு ஸகல வானரர்களும் ஹநுமானை முன்னிட்டு வெகு ஸந்தோஷத்துடன் மஹேந்த்ர பர்வதத்திலிருந்து கிளம்பி ஆகாசமார்க்கமாகச் சென்றார்கள். பெரிய சரீரங்களுடன் அளவற்ற பலத்துடன் மேருமந்தரமென்ற பர்வதங்களைப்போலும் மதயானைகளைப்போலும் ஆகாசத்தை மறைத்துக்கொண்டு, பலத்திலும் தைர்யத்திலும் வேகத்திலும் ஸமஸ்த ப்ராணிகளாலும் கொண்டாடப்பட்ட மாருதியைத் தங்களுடைய ப்ரியமான பார்வைகளால் சுமந்துபோவதுபோல் சென்றார்கள். ராகவனுக்கு ஜயத்தையும் கீர்த்தியையும் செய்ய நிச்சயித்தவர்கள்; தாங்கள் உத்தேசித்த ப்ரயோஜனம் கைகூடினதால் பெருமை கொண்டவர்கள்; ராகவனிடத்தில் ஸந்தோஷ ஸமாசாரத்தைச் சொல்ல ஆவல்கொண்டவர்கள்; ராக்ஷஸர்களுடன் எப்பொழுது யுத்தம் நேருமென்று கைதிட்டிக் கொண்டிருப்பவர்கள்; ராகவன் ஸுக்ரீவனுக்குச் செய்த உபகாரத்திற்கு ப்ரத்யுபகாரஞ் செய்ய நிச்சயித்தவர்கள்; விசாலமான மனஸையுடையவர்கள்.

வெகு தூரஞ்சென்று, நந்தனமென்ற இந்த்ரனுடைய வனத்திற்கு ஸமமாய், மரங்களாலும் கொடிகளாலும் விளங்கும் ஒரு வனத்திற்கு வந்தார்கள். அது ஸகல ப்ராணிகளும் கண்டு ஆசைப்படக்கூடியது; எவரும் நெருங்க முடியாதது. ஸுக்ரீவனால் நன்றாய்க் காப்பாற்றப்பட்டது; அந்த மதுவனத்தை ஸுக்ரீவனுக்கு மாமனான ததிமுகனென்ற வானர வீரன் வெகு ஜாக்ரதையாய் எப்பொழுதும் ரக்ஷித்துவந்தான். அதைக் கண்டு வானரக்கூட்டங்கள் மிகுந்த உத்ஸாஹத்தையடைந்து, "இங்கிருக்கும் தேனைக் குடிக்கும்படி எங்களுக்கு உத்தரவு செய்யவேண்டு'மென்று அங்கதனை ப்ரார்த்தித்தார்கள். அவனும் ஜாம்பவான் முதலிய பெரியோர்களைக் கலந்து யோசித்து, "நீங்கள் இஷ்டப்படி இங்கிருக்கும் தேனைகுடி

அதைக் கேட்ட வானரர்கள் அங்கதனால் அனுமதி கொடுக்கப்பட்டுச் சிலர் குதித்தார்கள்; சிலர் பாடினார்கள்; சிலர் ஆடினார்கள். சிலர் விழுந்தார்கள்; சிலர் நமஸ்கரித்தார்கள்; சிலர் திரிந்தார்கள்; சிலர் சிரித்தார்கள்; சிலர் தாவினார்கள்; சிலர் பிதற்றினார்கள்; சிலர் ஒருவரையொருவர் கட்டிக்கொண்டார்கள்; சிலர் ஒருவர்மேலொருவர் பாய்ந்தார்கள்; சிலர் அக்ரோசமாய்ப் பேசிக்கொண்டிருந்தார்கள். சிலர் ஒருவரோடொருவர் விளையாடிக்கொண்டிருந்தார்கள்; சிலர் மரத்திற்கு மரம் தாவினார்கள். சிலர் மரங்களின் நுனியிலிருந்து பூமியில் விழுந்தார்கள்; சிலர் பூமியிலிருந்து வெகுவேகமாய் மரங்களின் நுனியில் தாவினார்கள்; ஒருவன் பாடிக்கொண்டிருக்கையில் வேறொருவன் சிரித்துக்கொண்டு அவனிடத்தில் போனான்; சிரித்துக்கொண்டிருப்பவனிடத்தில் வேறொருவன் அழுதுகொண்டு போனான். அவனிடத்தில் வேறொருவன் அதிகாரஞ்செய்துகொண்டு போனான், அவனைப்பார்த்து வேறொருவன் இரைந்தான். தேனைக் குடித்துக் கொழுப்படைந்து தேஹந்தெரியாமல் அந்த வானரஸைன்யம் வனத்தில் பரவிற்று. அதில் மதுபானத்தால் மயங்காதவனாவது திருப்தியடையாதவனாவது கிடையாது. அவர்கள் மரங்களை முறித்து இலைகளை உதிர்த்து புஷ்பங்களைப்பறித்து மதுவைக் குடித்து வனத்தை அழிப்பதைத் ததிமுகன் பார்த்துக் கோபங்கொண்டு தடுத்தான். பெரிய வானரவீரர்கள் அவனை மிரட்ட, மஹாப்ரதாபமுள்ளவனாகையால், அந்த வனத்தை ரக்ஷிக்க விரும்பிச், சிலரை நல்ல வார்த்தைகளாலும் சிலரைக் கடுஞ்சொற்களாலும் சிலரைக் கலஹத்தாலும் சிலரை அடிப்பதாலும் தடுத்துப் பார்த்தான். அதைக்கண்டு வானரர்கள் பலத்தாலும் கொழுப்பாலும் குடியாலும் ஸுக்ரீவனிடத்திலுள்ள பயத்தை மறந்து, ததிமுகனைச் சூழ்ந்து, அவன் யஜமானனுடைய மாமனென்பதையும் அவனை எதிர்ப்பது தோஷமென்பதையும் லக்ஷ்யஞ்செய்யாமல் அவனைத் திட்டி அவமானப்படுத்தி, அங்குமிங்கும் இழுத்து, நகங்களால் கிறிப், பல்லுகளால் கடித்துக் கைகளால் அறைந்து, கால்களால் உதைத்து அந்த மஹாவனத்தைப் பாழாக்கினார்கள்.

---

## ஸர்க்கம் 62.

## வானரர்கள் மதுவனத்தை அழித்தது.

---

அப்பொழுது ஹநுமான் "வானரர்களே! நீங்கள் கவலைப்படாமல் யதேச்சையாய்த் தேனைக் குடியுங்கள். உங்களைத் தடுப்பவர்களை நான் பார்த்துக்கொள்ளுகிறே"னென்றார். பிறகு, அங்கதன் வெகு ஸந்தோஷத்துடன், "ஸ்நேகிதர்களே! இஷ்டப்படி தேனைக்குடியுங்கள். நமது கார்யத்தை நிறைவேற்றி வந்த மாருதி சொல்லும் வார்த்தை அயுக்தமாயிருந்தாலும் அதை நாம் நிறைவேற்ற வேண்டியது அவச்யம். இந்த விஷயத்தில் கேட்கவேண்டுமோ"வென்றான்.

வானரர்களெல்லோரும் அந்த வார்த்தையை "நல்லது நல்ல"தென்று கொண்டாடி, நதிப்ரவாஹத்தைப்போல் சீக்ரமாய் மதுவனத்தில் ப்ரவேசித்தார்கள். அவர்கள் ஹநுமானைப் பார்த்ததாலும் ஸீதையின் க்ஷேமத்தைக் கேட்டதாலும் அங்கதன் உத்திரவு கொடுத்ததாலும் இறுமாப்படைந்து, அங்கிருந்த காவற்காரர்களை லக்ஷ்யஞ் செய்யாமல் பழங்களைப்பறித்துத் தின்று தேனைக் குடித்தார்கள். காவலர்கள் தடுத்தபொழுது எல்லோரும் ஒன்று சேர்ந்து அவர்களை அடித்துத் துரத்தினார்கள். சிலர் தொன்னைகளில் தேனைக் குடித்தார்கள்; சிலர் தேனை வாரி எறிந்தார்கள்; சிலர் தேனைக் குடித்துத் தேனடைகளைப் பிழிந்து விட்டெறிந்தார்கள். சிலர் தேன்மெழுகை மற்றவர்மேல் விட்டெறிந்தார்கள்; சிலர் தேனைக் குடித்து மயங்கி மாங்களின்டியில் கிளைகளைப்பிடித்துக்கொண்டு தரையில் இலைகளைப் பரப்பிப் படுத்துத்தூங்கினார்கள். மதுபானத்தால் கொழுத்துப், பைத்யம் பிடித்தவர்களைப்போல் ஒருவர்க்கொருவர் ஸந்தோஷத்தால் இடித்துக்கொண்டார்கள்; சிலர் போட்டி போட்டுக்கொண்டு குதித்தார்கள்; சிலர் ஸிம்ஹநாதஞ் செய்தார்கள்; சிலர் ஸந்தோஷம் தாங்காதது போல் கூவினார்கள்; சிலர் ஒன்றும் தோன்றாமல் பூமியில் படுத்துத் தூங்கினார்கள்; சிலர் ஏதோ ஒரு கார்யத்தைச் செய்துவிட்டுச் சிரித்தார்கள்; அதைப் பார்த்துச் சிலர்வேறு கார்யங்களைச் செய்

தார்கள்; சிலர் ஒரு கார்யத்தைச் செய்துவிட்டு இதை நான் செய்தே னென்று சொல்லிக்கொண்டார்கள்; சிலர் இதை இப்படிச் செய்யவே மென்று நிச்சயித்தார்கள்.

அந்த வனத்தில் ததிமுகனால் நியமிக்கப்பட்ட காவற்காரர்கள் வானரர்களால் மிரட்டப்பட்டு மூலைக்கு மூலை ஓடித் ததிமுக னிடத்தில் சென்று, "ஸ்வாமி! வானரர்கள் நமது மதுவனத்திற் புகுந்து அழிக்கிறார்கள். நாங்கள் கூடியவரையில் தடுத் தோம். எங்களை அடித்துத் தூக்கிக் கால்களைப் பிடித்திழுத்து ஆகாசத்தில் விட்டெறிந்தார்கள். ஹனுமானுடைய உத்திரவால் இப்படிச் செய்கிறார்க" ளென்று முறையிட்டார்கள். அதைக் கேட்டுத் ததிமுகன் கடுங்கோபமடைந்து, காவற்காரர்களை ஸமாதா னஞ் செய்து, "என்னுடன் வாருங்கள். நமது வனத்தை அழிக்கும் அந்தத் துஷ்டர்களை நமது ஸைன்யத்தால் அடித்துத் துரத்துவோ" மென்றான். பிறகு ததிமுகனும் காவற்காரர்களும் மதுவனத்தில் ப்ரவேசித்து மரங்களையும் கல்லுகளையும் பாறைகளை யும் எடுத்துக்கொண்டு, ததிமுகனுடைய தைர்யத்தால், தேனைக் குடித்துக்கொண்டிருக்கும் வானரர்களிருக்குமிடத்திற்குச் சென் றார்கள்; ஹனுமானும் மற்ற வானரர்களும் ததிமுகன் கோபத்துடன் வருவதைக் கண்டு எதிர்சென்றார்கள். பிறகு மஹா பலவானான ததி முகன் பெரிய விருக்ஷத்தைப் பிடுங்கிக்கொண்டு தங்களை எதிர்ப்பதைக் கண்டு, அங்கதன் குடிமயக்கத்தால் ஒன்றும் தெரியாமல், தனக்குப் பூஜ்யனான ததிமுகனைக் கைகளால் அறைந்து கீழே தள்ளித் தேய்த்துப் பிண்டமாக்கினான். ததிமுகன் கைகள் முறிந்து, கால்கள் ஒடிந்து, ரக்தத்தால் நனைந்து, கொஞ்ச நேரம் ப்ரக்ஞையற்றுக் கிடந்தான்; பிறகு சீக்ரமாய் மூர்ச்சை தெளிந்து, கோபங்கொண்டு, தேனைக் குடித்து மயங்கியிருக்கும் வானரர்களைத் தடியால் அடித்து விலக்கினான். பிறகு கஷ்டப்பட்டு அவர்களிடத்திலிருந்து தன்னை விடுவித்துக்கொண்டு, தனியாய் ஓரி டத்தில் போய்த் தன் வேலைக்காரர்களைப் பார்த்து, "இந்தத் துஷ் டர்கள் இங்கிருக்கட்டும். நமது ப்ரபுவான ஸுக்ரீவமஹாராஜா வும் ராமனுமிருக்குமிடத்திற்குப் போவோம்; அங்கதனிடத்தில் ஸகல தோஷத்தையும் சுமத்துகிறேன். உடனே ஸுக்ரீவன் கோபங்கொண்டு ஸகல வானரர்களையும் கொல்லும்படி ஆக்ஞாபிப் பான்; இந்த மதுவனம் தேவர்களும் அண்டக்கூடாதது; ஸுக்ரீவ னுக்கு மிகவும் ப்ரியமானது; முன்னோர்களுக்குக் கிடைத்தது;

மிகவும் அழகானது. தேனைக் குடித்து மதங்கொண்ட இந்த வானர வீரர்களையும் அவர்களைச் சேர்ந்தவர்களையும் நிர்பயமாய்க் கொல்வான். அரசனுடைய ஆக்ஞையைக் கடந்த இவர்களைக் கொல்ல வேண்டியதே. நம்மை இப்படி அவமானஞ் செய்தது வீண்போகு மா"வென்று அங்கிருந்து அதிவேகமாய்க் காவற்காரர்களுடன் கிளம்பி, ஸூர்யபுத்ரனை ஸுக்ரீவனிருக்குமிடத்திற்குக் கண் மூடித் திறப்பதற்குள் வந்தான், அங்கே ராமலக்ஷ்மணர்களையும் ஸுக்ரீவனையும் கண்டு ஆகாசத்திலிருந்திறங்கித் தன் சேவகர்களு டன் தலைமேல் கைக்கூப்பி வெகுதீனமாய் ஸுக்ரீவனுடைய பாதங் களில் வணங்கினான்.

---

## ஸர்க்கம். 63.

## ததிமுகன் முறையிட்டது.

---

அதைக் கண்டு ஸுக்ரீவன் பயந்து, என்ன அனர்த்தம் நேர்ந் ததோவென்று கவலைகொண்டு, "வானரவீர! எழுந்திரும், எழுந்தி ரும், ஒன்றிற்கும் பயப்படாத நீர் என் பாதங்களில் விழுந்தது ஆச் சர்யமாயிருக்கிறது. நடந்ததைச் சொல்லும்; உமது பயத்தை நீக்கு கிறே"னென்றான். மஹாபுத்திமானை ததிமுகன் இப்படி ஸமா தானஞ் செய்யப்பட்டு எழுந்து, "தங்களுடைய பிதாவான ரிக்ஷராஜ ஸும் தமையனை வாலியும் தாங்களும் மதுவனத்தைப் பிறர் அனு பவிக்கும்படி விட்டதில்லையல்லவா? அங்கே தங்களைச் சேர்ந்த வான ரர்கள் ப்ரவேசித்து, என் காவற்காரர்கள் தடுத்தும் கொஞ்சங்கூட லக்ஷ்யஞ் செய்யாமல், பழங்களைப் பறித்துத் தேனைக் குடிக்கிறார் கள். மிகுதியை விட்டெறிகிறார்கள். தடுத்தால் வெறித்துப் பார்க் கிறார்கள்; கோபத்தால் கண்கள் சிவந்து இவர்களை வனத்திலிருந்து அடித்துத் துரத்திவிட்டார்கள். சிலரைக் கைகளால் அறைந்து சிலரை முழங்கால்களால் அடித்துச், சிலரை பூமியில் தள்ளிபிழுத் துச், சிலரைக் காலைப் பிடித்திழுத்து ஆகாசத்தில் எறிந்து, இப்படி ப்ரபுவான தாங்களிருக்கும்பொழுது எங்களை உபத்ரவித்துத் தங் களையும் அலக்ஷ்யஞ் செய்து மதுவனத்தில் நினைத்தபடியெல்லாம் கொட்டமடிக்கிறார்க"ளென்று தெரிவித்தான்.

பிறகு லக்ஷ்மணன் ஸுக்ரீவனைப் பார்த்து, "இந்த வானரன் யார்? வனங்களுக்குக் காவற்காரனைப்போல் தோன்றுகிறது. என்ன கார்யமாய் இங்கே வந்தான்? வாடின முகத்துடன் என்ன சொல்லுகிறு"னென்று கேட்டார். அதற்கு ஸுக்ரீவன் "லக்ஷ்மணு! தெற்கே அனுப்பப்பட்ட அங்கதன் முதலிய வானரர்கள் என் மது வனத்தில் புகுந்து யதேச்சையாய்த் தேனைக் குடிக்கிறுர்களென்று ததிமுகனென்ற இந்த வானரவீரன் சொல்லுகிறுன். உத்தேசித்த கார்யத்தை முடிக்காமல் வானர வீரர்கள் மதுவனத்தில் ப்ரவேசிக்க மாட்டார்கள்; தேனைக் குடிக்கமாட்டார்கள்; வனத்தை அழிக்கமாட்டார்கள். ஆகையால், போன கார்யத்தை முடித்துக்கொண்டு வந்திருக்கிறுர்கள். ஸீதையைக் கண்டுபிடித்தார்களென்பதில் ஸந்தேஹமில்லை. மேலும் ஹனுமானே அந்தக் கார்யத்தைச் செய்திருக்கிறுன். அவனைத் தவிர வேறொருவராலும் அது செய்யக்கூடுமென்று நான் எண்ணவில்லை. கார்யஸித்தியும் புத்தியும் ப்ரயத்னமும் பராக்ரமமும் சாஸ்த்ர ஞானமும் அவனிடத்தில் குடிகொண்டிருக்கின்றன. ஜாம்பவான் மந்த்ரியாயும் அங்கதன் ஸேனுநாயகனுயும் ஹனுமான் ரக்ஷகனுயுமிருக்கையில் கார்யம் முடியாமல் வேறுவிதமாகுமோ? அவர்கள் அடங்காத ஸந்தோஷத்தால் மதுவனத்தில் ப்ரவேசித்துத் தேனைக் குடிக்கிறுர்கள். ததிமுகனும் காவற்காரர்களும் அவர்களைத் தடுத்தபொழுது முழங்கால்களால் இடித்துத் துரத்திவிட்டார்கள். இந்த ஸந்தோஷ ஸமாசாரத்தை நமக்குச் சொல்ல வானரவீரனுன ததிமுகன் இங்கே வந்திருக்கிறுன். லக்ஷ்மணு! வீரச்ரேஷ்ட! ஸீதையைக் கண்டுபிடித்தோம் நிச்சயமாய் நம்பும். ஆகையாலேயே நமது வீரர்கள் மதுவனத்தில் புகுந்து தேனைக் குடித்து உத்ஸவங்கொண்டாடுகிறுர்கள். நான் வைத்த கெடுவையும் கடந்து; ஸீதையையும் பார்க்காமல், நான் கண்ணுக்குக் கண்ணுய் வைத்திருக்கும் ச்ரேஷ்டமான மதுவனத்தை, ப்ரஹ்மாவால் என் பிதாவான ரிக்ஷரஜஸுக்குக் கொடுக்கப்பட்ட ரத்னத்தை, எட்டிப் பார்ப்பார்களா"வென்றுன்.

ஸுக்ரீவனுடைய வார்த்தைகள் அம்ருத தாரைபோல் ராம லக்ஷ்மணர்களுடைய செவிகளில் விழுந்து ஹ்ருதயத்திலுள்ள தாபங்களைப் போக்கி அளவற்ற ஆனந்தத்தை உண்டுபண்ணின. பிறகு ஸுக்ரீவன் ததிமுகனை நோக்கி ஸந்தோஷத்துடன் "மாமா! அங்கதனும் மற்ற வானரர்களும் நமது கார்யத்தை முடித்து வந்த ஸந்தோஷத்தால் மதுவனத்தில் புகுந்து விளையாடுகிறுர்கள்.

"அது எனக்குத் திருப்தியே. ஜயத்துடன் வந்தவர்களால் செய்யப்பட்ட இந்த அபராதத்தை மன்னிக்கவேண்டியது அவச்யம்; அப்படியே மன்னித்தேன். அனுப்பின கார்யத்தை முடித்துக்கொண்டு வந்த ஸிம்ஹம்போன்ற பராக்ரமசாலிகளான அந்த வானரவீரர்களையும் அவர்களுக்குப் பூஷணமான ஹனுமானையும் பார்த்து ஸீதையைக் கண்ட விருத்தாந்தத்தைக் கேட்க ராமலக்ஷ்மணர்களும் நானும் ஆவல்கொண்டிருக்கிறோ"மென்றான். பிறகு ஸந்தோஷத்தால் கண்கள் மலர்ந்து தேஹமெங்கும் மயிர்க்கூச்சலிட்டுப் பேரானந்தத்தால் பூரித்த ராமலக்ஷ்மணர்களைப் பார்த்துத் தானும் மயிர்க்கூச்சலடைந்து, தங்களுடைய உத்தேசங்களெல்லாம் கைகூடினதுபோல் எல்லையற்ற ஆனந்தமடைந்தான்.

---

## ஸர்க்கம் 64

### வானரர்கள் ஸுக்ரீவனிடத்தில் வந்தது.

இப்படி ஸுக்ரீவனால் கட்டளையிடப்பட்ட ததிமுகன் ஸந்தோஷமாய் ராமலக்ஷ்மணர்களையும் மஹாராஜாவையும் நமஸ்கரித்துத், தன் ஸேவகர்களுடன் ஆகாசத்தில் கிளம்பி வெகு சீக்ரமாய் மதுவனத்திற்கு வந்து குதித்தான். அங்கே வானரர்கள் மயக்கந் தெளிந்து, குடித்த தேன் ஜீர்ணமாய், மூத்ரங்களை விட்டுக்கொண்டிருந்தார்கள். ததிமுகன் கைகூப்பி வணக்கமாய் அவர்களிடத்தில் சென்று, ஸந்தோஷத்துடன் அங்கதனைப் பார்த்துக் "குழந்தாய்! என் ஸேவகர்கள் கோபத்தாலும் தெரியாத்தனத்தாலும் உங்களைத் தடுத்தார்கள். அதைப்பற்றிக் கோபிக்கக்கூடாது. நீ மஹா பலவான், யுவராஜா, எங்களுக்கு ப்ரபு. முதலில் தெரியாத்தனத்தால் செய்யப்பட்ட அபராதத்தைப் பொறுக்கவேண்டியது. உன்னிடத்தில் யாதொரு குற்றமுமில்லை. நீங்களெல்லோரும் இங்கே வந்திருக்கிறீர்களென்று உன் சிற்றப்பனிடத்தில் தெரிவித்தேன். நீயும் மற்றவானர வீரர்களும் இங்கே வந்திருப்பதையும் இந்த மதுவனத்தில் ப்ரவேசித்து இஷ்டப்படி ஸஞ்சரித்ததையும் கேள்விப்பட்டுக் கோபித்துக்கொள்ளவில்லை; மிகவும் ஸந்தோஷப்பட்டான். 'ஸகல வானரர்களையும் அதிசீக்ரமாய் என்னிடத்தில் அனுப்பவேண்டிய'தென்று எனக்கு உத்திரவு செய்தா"னென்றான்.

ததிமுகனுடைய மதுரமான வார்த்தைகளைக் கேட்டுப் புத்திமானான அங்கதன், "வானரச்ரேஷ்டர்களே! இந்த விருத்தாந்தம் ராமனுக்குத் தெரிந்ததென்றெண்ணுகிறேன். ஆகையால் கட்டளையிட்ட கார்யத்தை முடித்துவிட்டு நாம் இங்கே தங்குவது யுக்தமல்ல. நமது ஸைன்யங்கள் யதேச்சையாய்த் தேனைக் குடித்துக் களைப்பாற்றிக்கொண்டார்கள். ஆகையால் நமது ப்ரபுவிடத்திற்குப் போவதைத்தவிர வேறென்ன செய்யவேண்டியது? நீங்களெல்லோரும் எப்படிச் சொல்லுகிறீர்களோ அப்படிச் செய்கிறேன். உங்களுடைய யோசனைப்படி நடக்கவேண்டியதென்று என் கருத்து. நான் உங்களுக்கு யுவராஜாவாயிருந்தாலும் உங்களைக் சட்டளையிட எனக்கிஷ்டமில்லை. நம்மை அனுப்பின கார்யத்தை முடித்து வந்த உங்களை அலக்ஷ்யஞ் செய்யத்தகுமா? ஆகையால் இருக்கவேண்டுமென்றால் இருப்போம். போவோமென்றால் போவோ"மென்றான்.

அதைக் கேட்டு ஸகல வானரர்களும் மிகுந்த ஸந்தோஷமடைந்து, "ப்ரபோ! தங்களைப்போல் யுவராஜாவாயும் கணக்கில்லாத வானர ஸைன்யங்களுக்கு அதிபதியாயுமிருந்து, இப்படிப்பட்ட வினயமான வார்த்தைகளைச் சொல்லுகிறவன் தங்களைத் தவிர வேறுண்டோ? இந்த வார்த்தைகள் தங்களுக்கே தகும்; மற்ற எவனுக்கும் தகாது. லோகத்தில் பெரும்பாலும் ஜனங்கள் ஐச்வர்யத்தால் கொழுப்படைந்து எல்லாம் நானேயென்று எண்ணுகிறார்கள்; தங்களிடத்தில் விளங்கும் இந்த வினயம் இனி தங்களுக்குக் கிடைக்கும் மங்களத்தைக் காட்டுகிறது. நாங்களெல்லோரும் ஸுக்ரீவ மஹாராஜாவிடத்திற்குப் போகத்தயாராயிருக்கிறோம். தங்களுடைய ஆக்ஞையில்லாமல் அடியெடுத்து வைக்க எங்களால் முடியுமா? இது உபசாரவார்த்தையல்ல. ஸத்ய"மென்றார்கள். அதற்கு அங்கதன் ஸம்மதிக்க உடனே வானரர்கள், 'புறப்படுவோ' மென்று ஆகாசத்தில் கிளம்பி, அதை மறைத்துக்கொண்டு யந்த்ரத்திலிருந்து எறியப்பட்ட கற்பாறைகளைப்போல் அங்கதனைப் பின்தொடர்ந்து பெருங்காற்றால் அடிக்கப்பட்ட மஹாமேகங்களைப்போல் கர்ஜித்துக்கொண்டு அதிவேகமாய்ச் சென்றார்கள்.

அதற்குள் அங்கதன் முதலிய வானரவீரர்கள் வருவதற்குத் தாமஸப்பட்டதால் ராமனுடைய செந்தாமரைக்கண்கள் துக்கத்தால் கலங்க, அதைக் கண்டு ஸுக்ரீவன், "ரகுவீர! தங்களுக்கு ஸகல மங்களங்களுமுண்டாகட்டும். மனதை ஸமாதானஞ்செய்து

கொள்ளுங்கள். ஸீதை கண்டுபிடிக்கப்பட்டாளென்பதில் ஸந்தேஹமேயில்லை. நான் வைத்த கெடுவைத் தாண்டி வானரர்கள் இங்கே வரத்துணிவார்களா? யுவராஜாவும் மஹாபராக்ரமசாலியுமான அங்கதன் கார்யஸித்தியில்லாமல் இங்கே வரமாட்டானென்பது தங்களுக்குத் தெரியாதா? கார்யத்தை முடிக்காமல் மதுவனத்தை அழித்திருந்தால் அங்கதன் தீனமான முகத்துடன் மனங்கலங்கி நடுங்கமாட்டானா? ப்ரஹ்மாவால் என் பிதாவிற்குக் கொடுக்கப்பட்டு அவராலும் வாலியாலும் வெகுஜாக்ரதையாய் ரக்ஷிக்கப்பட்ட மதுவனத்தை துக்கப்பட்டுக்கொண்டிருப்பவன் அழிக்கத் துணிவானா? ராம! ஸீதையைக் கண்டு பிடித்தோம். ஸகல ப்ராணிகளுக்கும் ஸந்தோஷத்தைக் கொடுப்பவரென்ற (ராமன்) பெயர் இப்பொழுது தான் தங்களுக்குத் தகும். இப்பொழுது ஸகல துக்கமுந்தீர்ந்து அளவற்ற ஆனந்தமடைந்தீர்களல்லவா? ஸீதையைக் கண்டதால் தங்களுடைய ப்ராணன் நிலைபெற்றது. இன்றுதான் கௌஸல்யா தேவி ச்ரேஷ்டமான புத்ரனைப் பெற்றாளென்று சொல்லலாம். தாங்கள் இதுவரையில் அனுஷ்டித்த மஹாவ்ரதங்கள் இப்பொழுது தான் பயன்பெற்றன. துக்கப்படவேண்டாம். ஸீதையைக்கண்டு பிடித்துவிட்டார்கள். அதுவும் ஹனுமானே செய்திருக்கவேண்டும். அவனைத் தவிர இந்தக் கார்யத்தைச் செய்யக்கூடியவர்கள் வேறொருவருமில்லை. ஸூர்யனிடத்தில் தேஜஸ் ஸ்வபாவமாயும் அளவற்றதாயுமிருப்பதுபோல், ஹனுமானிடத்தில் கார்யஸித்தியும் புத்தியும் முயற்சியும் பராக்ரமும் குடிகொண்டிருக்கின்றன. யோசனை சொல்லுகிறவன் ஜாம்பவனும் ஸேனாநாயகன் அங்கதனும் ரக்ஷகன் ஹனுமானுமிருக்கையில் கார்யம் வேறு விதமாய் முடியுமா? ஆகையால் அளவற்ற பராக்ரமுள்ள தங்களெண்ணங்களெல்லாம் கைகூடும். இந்த ஸமயத்தில் துக்கப்படுகிற"தென்று ஸமாதானஞ்செய்தான்.

அதற்குள் தெற்கே தேடப்போன வானரர்கள், ஹனுமான் ஸீதையைக் கண்டுபிடித்ததால் கொழுப்படைந்து, கார்யத்தை முடித்தோமென்றதைத் தெரிவிப்பவர்கள்போல் கர்ஜித்துக் கொண்டு, கிலகிலா சப்தத்துடன் ஆகாசமார்க்கமாய் வருவது ஸமீபத்தில் கேட்கப்பட்டது. உடனே ஸுக்ரீவன் ஸந்தோஷத்தால் மயிர்க்கூச்சலடைந்து தன் நீண்ட வாலைச் சுழற்றினான். அப்பொழுது வானரச்ரேஷ்டர்கள் அங்கதனையும் ஹனுமானையும் முன்னிட்டு ராமனைத் தர்சிக்கவிரும்பி, அங்கே வந்து, ஆனந்தத்தால்

தேஹத்தை மறந்து ஸுக்ரீவனும் ராமலக்ஷ்மணர்களுமிருக்குமிடத்தில் ஆகாசத்திலிருந்து பூமியில் குதித்தார்கள். பிறகு ஹனுமான் மஹாராஜாவையும் ராமலக்ஷ்மணர்களையும் ஸாஷ்டாங்கமாய் நமஸ்கரித்து, ராகவனை நோக்கி, "ஸ்வாமி! கண்டேன் ஸீதையை, யாதொரு அபாயமுமில்லாமல் பதிவ்ரதாதர்மத்தைப் பூர்ணமாய் அனுஷ்டித்துக் கொண்டிருக்கிறா"ளென்று விக்ஞாபனஞ்செய்தார். தங்களுடைய கார்யம் நிறைவேறிற்றென்று நிச்சயமடைந்து, ஸுக்ரீவனும் லக்ஷ்மணனும் ஹனுமானை வெகு கௌரவத்துடனும் ப்ரீதியுடனும் கண்கொட்டாமல் பார்த்தார்கள். ரகுவீரன் அடைந்த ஆனந்தத்திற்கு எல்லையுமுண்டோ?

---

## ஸர்க்கம் 65.

## ஸீதா விருத்தாந்தம்.

---

பிறகு அந்த வானரர்கள் ப்ரஸ்ரவணகிரிக்கு வந்து, அங்கதனை முன்னிட்டுக்கொண்டு ராம லக்ஷ்மணர்களையும் ஸுக்ரீவனையும் நமஸ்கரித்து, ஸீதையின் விருத்தாந்தத்தைச் சொல்ல ஆரம்பித்தார்கள். ஜானகி ராவணனுடைய அந்தப்புரத்தில் சிறைப்பட்டிருப்பதையும், ராக்ஷஸர்களால் மிரட்டப்படுவதையும், ராமனிடத்தில் மாறாத விச்வாஸத்தை வைத்திருப்பதையும் ராவணன் கெடுவிட்டிருப்பதையும் ஸகல வானரர்களும் ராமனிடத்தில் சொல்ல ஆரம்பித்தார்கள். ஸீதை க்ஷேமமாயிருக்கிறாளென்று கேட்டு ராமன், "வானரர்களே! ஸீதை எங்கிருக்கிறாள்? என்னிடத்தில் எப்படி அபிப்ராயப் படுகிறாள்? இதை விஸ்தாரமாய்ச் சொல்லுங்க"ளென்றார். அப்பொழுது ஸகல வானரர்களும் ஸீதையின் விருத்தாந்தத்தை நேரில் பார்த்தறிந்த ஆஞ்ஜநேயரை ராமனிடத்தில் விண்ணப்பஞ் செய்யும்படி தூண்டிவிட்டார்கள். அவர்கள் சொல்வதைக் கேட்டு ஹனுமான் ஸீதை இருக்கும் திசையைப் பார்த்து வெகு பக்தியுடன் நமஸ்கரித்து, ஸீதையின் விருத்தாந்தத்தை வெகு சாதுர்யமாய்ச் சொல்ல ஆரம்பித்தார்.

"நான் இங்கிருந்து புறப்பட்டு நூறு யோஜனை விஸ்தீர்ண முள்ள ஸமுத்ரத்தைத் தாண்டி, ஸீதையைத் தேடிக்கொண்டு, எப்படியாவது அவளைக் கண்டுபிடிக்கிறதென்ற நிச்சயத்துடன் போகையில், ஸமுத்ரத்திற்கு அக்கரையில் ராவணனென்ற துஷ்ட ராக்ஷஸனுடைய ராஜதானியான லங்கையில் ப்ரவேசித்து ஓரிடம் பாக்கியில்லாமல் தேடினேன். முடிவில் அவனுடைய அந்தப்புரத்தில் ஸீதை காவலில் வைக்கப்பட் டிருப்பதைக் கண்டேன். அங்கே அசோகவனத்தில் ராக்ஷஸிகளால் சூழப்பட்டு, அவர்களுடைய க்ரூர வார்த்தைகளையும் ஹிம்ஸையையும் பொறுத்துக்கொண்டு, தங்களிடத்தில் மாறாத ப்ரீதி வைத்திருப்பதைக் கண்டேன். பரம பதிவ்ரதையாயும் துக்கத்தை அனுபவிக்கத் தகாதவளாயுமிருக்கும் தங்களுடைய பார்யை, ஒரே பின்னலுடன் துக்கசமுத்ரத்தில் முழுகிக் கரை காணாமல், வெறுந்தரையில் படுத்திருக்கிறாள். ஹேமந்தருதுவில்வாடியிருக்கும் தாமரையோடையைப்போல் நிறம் மாறி, ராவணன் எவ்வளவு ப்ரார்த்தித்தும் அவனிடத்தில் கொஞ்சங்கூட மனதைச் செலுத்தாமல், தங்களிடத்திலேயே நாடின சித்தத்தையுடையவளாய் இனி உயிரை வைத்துக்கொள்ளுகிறதில்லையென்று நிச்சயங்கொண்டிருக்கையில், நான் அவளைக் கண்டேன். இக்ஷ்வாகுவம்சத்தின் மஹிமையை நான் வர்ணிப்பதைக் கேட்டு அவளுக்கு என்னிடம் மெள்ள மெள்ள நம்பிக்கை பிறந்தது. பிறகு அவளுடன் ஸம்பாஷித்து நடந்த விருத்தாந்தம் யாவற்றையும் தெரிவித்தேன். தங்களுக்கும் மஹாராஜாவிற்கும் ஸ்நேஹம் ஏற்பட்டதைக் கேட்டு மிகவும் ஸந்தோஷித்தாள். அவளுடைய ஆசாரம் ச்ரேஷ்டமா யிருக்கிறது; தங்களிடத்தில் பக்தியும் எல்லையற்றதா யிருக்கிறது; மஹா சக்தியுள்ளவள்; உக்ரமான தபஸையுடையவள். தங்களிடத்தில் வைத்த பக்தியை எப்படி வர்ணிப்பேன்?

நிகரில்லாத புத்தியையுடைய மஹானுபாவ! தாங்கள் சித்ரகூடத்தில் வஸிக்கையில் ஒரு காக்கையின் விஷயமாய் நடந்த விருத்தாந்தத்தைத் தங்களுக்கு அடையாளமாகச் சொல்லச் சொன்னாள். 'வாயுபுத்ரா! இங்கே பார்த்த விஷயங்களெல்லாவற்றையும் விஸ்தாரமாய்ச் சொல்லவேண்டியது. மேலும், நான் தண்டகாரண்யத்தில் வஸிக்கையில் ஒருநாள் என் திலகம் அழிந்துபோகத் தாங்கள் மனச்சிலையால் என் நெற்றில் திலகம் வைக்கவில்லையா? இந்த விஷயத்தை நன்றாய் ஞாபகப் படுத்திக்கொள்ளவேண்டியது. நான்

இப்பொழுது அனுப்பும் சூடாமணியை இதுவரையில் வெகு ஜாக்ரதையாய் ரக்ஷித்துவந்தேன். நான் தங்களைப் பிரிந்து துக்கப்படும்பொழுதெல்லாம் தங்களைப் பார்ப்பதுபோல் இதைப் பார்த்து ஆறுதலடைந்தேன். இப்பொழுது அதையும் அனுப்பிவிட்டேன். நான் இன்னும் ஒரு மாஸம் மாத்ரம் பிழைத்திருப்பேன். ராக்ஷஸிகளால் ஒவ்வொரு நிமிஷமும் உபத்ரவிக்கப்பட்டு ஒரு மாஸத்திற்கு மேல் பிழைத்திருக்கமாட்டே''னென்று இந்த வார்த்தைகளை ஸுக்ரீவன் கேட்டுக்கொண்டிருக்கையில் ராமனிடத்தில் சொல்லிப் பிறகு சூடாமணியைக் கொடு'வென்று என்னை ஆக்ஞாபித்தாள்.

ராவணனுடைய அந்தப்புரத்தில் ராக்ஷஸிகளுக்கு நடுவில் அகப்பட்டுக் காட்டில் புலிகளுக்கு நடுவில் அகப்பட்ட மானைப்போல் பயத்தால் மிரண்டு, தங்களைப் பிரிந்த துக்கத்தால் தேஹமிளைத்து, இவ்வளவு கஷ்டத்திலும் பதிவ்ரதா தர்மத்தைக் கொஞ்சங்கூடக் கைவிடாமல் பூர்ணமாய் அனுஷ்டிக்கும் தங்களுடைய பார்யை சொல்லியனுப்பின ஸமாசாரம் இதுதான். நடந்தபடி ஸகல விருத்தாந்தங்களையும் தெரிவித்தேன். எது எப்படியிருந்தாலும் ஸமுத்ரத்தைக் கடந்து லங்கைக்குப் போவதற்கு வேண்டிய ஸகல ப்ரயத்னங்களையும் இப்பொழுதே செய்யவேண்டிய''தென்று, ஆரம்ப முதல் முடிவு வரையில் ஸகல விஷயங்களையும் சாதுர்யமாயும் உருக்கமாயும் வர்ணித்து, ராம லக்ஷ்மணர்கள் துக்கத்தை விட்டு, ஆறுதலடைந்தார்களென்று அறிந்து ஸீதை அடையாளமாய்க் கொடுத்த சூடாமணியை ரகுநாதனிடத்தில் வணக்கமாய் ஸமர்ப்பித்தார்.

---

## ஸர்க்கம் 66.

## சூடாமணியைக் கண்டு ராமன் துக்கித்தது.

---

ஹநுமான் இப்படிச் சொல்லிச் சூடாமணியைக் கொடுத்தவுடன் ரகுவீரன் அதை மார்போடணைத்து, அடங்காத ப்ரீதியுடன் பார்த்துப் பூர்வஞாபகத்தால் துக்கம் மேலிட்டுக் கண்ணீர் கண்களை மறைக்கச் சூடாமணியைப் பார்க்க முடியாமல் ஸுக்ரீவனை நோக்கித் தோழா! கன்றிடத்தில் வைத்த ப்ரியத்தால் பசு எப்படிப் பாலை

பெருக்குமோ, அப்படி இந்தச் சூடாமணியைப் பார்த்தவுடன் என் ஹ்ருதயம் உருகுகிறது. என் விவாஹகாலத்தில் தசரதசக்ரவர்த்தி இதை ஜனகமஹாராஜனிடத்திலிருந்து வாங்கி ஸீதையின் தலையில் வைத்து அலங்கரிக்கும்படி கொடுத்தார். அப்படியே ஸீதையின் மாதா இதைச் சூட்டினுள். உடனே இந்த ஆபரணம் முன்னைவிட அதிசமாய் ப்ரகாசித்தது. இந்த உத்தம ரத்னம் ஸமுத்ரத்திலிருந்து உண்டானது. ஸாதுக்களால் பூஜிக்கப்பட்டது. இதைத் தேவேந்த்ரன் முன்னொரு காலத்தில் ஜனகர் செய்த யக்ஞத்தால் ஸந்தோஷித்து அவருக்கு வெகுமதியாய்க் கொடுத்தான். இதைக் கண்டவுடன் என் பிதாவையும் மஹாத்மாவான ஜனகரையும் பார்த்தது போலாயிற்று. இது என் ஸீதையின் சிரஸில் அழகாய் விளங்கும் ஆபரணமல்லவா? இதைப் பார்த்தவுடன் அவளையே அடைந்ததுபோல் எண்ணுகிறேன். ஸீதை என்ன சொன்னாள்? அதையே அடிக்கடிச் சொல். தாஹத்தால் தபிப்பவனுக்கு குளிர்ந்த ஜலம் கிடைத்தால் எப்படியோ, அப்படி அவளுடைய வார்த்தைகள் என் தாபத்தைத் தணிக்கின்றன. இந்த ஆபரணத்தை ஸீதையின் சிரஸில் பார்த்துவிட்டு இப்பொழுது ஸீதையில்லாமல் இதை மாத்ரம் பார்க்கும்படி நேர்ந்ததே! இதைவிட கஷ்டமுண்டோ?

ஸீதை ஒரு மாஸம் வரையில் பிழைத்திருப்பேனென்றால், அவள் தீர்க்காயுஸுஉள்ளவளென்றே சொல்லவேண்டும். ஏனென்றால் அழகான கண்களையுடைய ஜானகியைப் பாராமல் ஒருநிமிஷங்கூடப் பிழைத்திருக்கமாட்டேன். ஸீதையை எவ்விடத்தில் கண்டாயோ அவ்விடத்திற்கு என்னையும் அழைத்துப்போ. ஸீதையின் விருத்தாந்தத்தைத் தெரிந்த பிறகு ஒரு க்ஷணங்கூட இங்கிருக்கமாட்டேன். அழகில் நிகரற்றவள்; ஸ்வபாவமாய் மிகவும் பயந்தவள்! ச்ரேஷ்டமான பதிவ்ரதை; அப்படிப்பட்டவள் பயங்கரமான க்ரூர ராக்ஷஸர்களுக்கு நடுவில் பிழைத்திருப்பதெப்படி? ஸரத்காலத்தில் இருள் நீங்கி மேகங்களால் சூழப்பட்ட சந்த்ரனைப்போல், விகாரரூபமுள்ள ராக்ஷஸர்களுக்கு நடுவில் அவளுடைய முகம் ப்ரகாசிக்காதல்லவா? ஸீதை என்ன சொன்னாள்? அதை நிஜமாகச் சொல்; ரோகத்தால் பீடிக்கப்படுகிறவன் ச்ரேஷ்டமான ஔஷதங்களால் எப்படிப் பிழைப்பானோ, அப்படி நீ சொல்லும் வார்த்தைகளால் நான் உயிரை வைத்துக்கொண்டிருப்பேன். அவளுடைய ரூபம் பார்க்கப் பார்க்க இன்பத்தைக் கொடுக்

கும்; அவளுடைய வார்த்தைகள் கேட்கக் கேட்க அமிருததாரை யைப்போலிருக்கும். என்னை விட்டுப் பிரிந்து தபிக்கும் ஸீதை என்ன சொன்னு''ளென்று மிகவும் தீனமாய்க் கேட்டார்.

---

## ஸர்க்கம் 67.

## ஸீதையின் விருத்தாந்தம்

---

அதைக் கேட்டு ஆஞ்ஜநேயர் ஸீதையின் ஸகல விருத்தாந்தங் களையும் சொல்ல ஆரம்பித்தார். "ரகுவீர ! தங்களுடைய பார்யை தாங்கள் சித்ரகூடத்திலிருந்தபொழுது நடந்த விஷயத்தையும் நடந்தபடி வர்ணித்து, இதையே அடையாளமாகச் சொன்னுள். ஒரு நாள் ஸீதையும் தாங்களும் ஸௌக்யமாய்ப் படுத்துத் தூங்கிக் கொண்டிருந்தீர்கள். அவள் தங்களுக்குமுன் எழுந்துவிட்டாள். அப்பொழுது ஒரு காக்கை வேகமாய்ப் பறந்து வந்து அவளை ஸ்த னங்களுக்கு நடுவில் கொத்திற்று. பிறகு அவளுடைய மடியில் தாங்கள் தூங்கும்பொழுது மறுபடியும் அந்தக் காக்கை அவளை ஹிம் ஸித்தது. அடிக்கடி கூர்மையான மூக்கால் மார்பைக் கிழிக்கையில் ரத்தம் பெருகித் தூங்கிக்கொண்டிருந்த தங்களுடைய முகத்தில் விழத் தாங்கள் விழித்துக்கொண்டீர்கள். தாங்கள் ஸுகமாய்த் தூங்கிக்கொண்டிருக்கையிலேயே சத்ருக்களை நாசஞ்செய்யும் ஸாமர் த்யமுள்ளவர்களல்லவா ? அந்தக் காக்கையின் உபத்ரவத்தைத் தாங்காமல் ஸீதை தங்களை எழுப்பினுள். தாங்களோ க்ஷத்ரியர். இக்ஷ்வாகு குலத்தில் பிறந்தவர் ; ரணதீரர் ; தங்களுடைய பார்யை மார்பில் காயப்பட்டு ரத்தம் பெருகுவதைக் கண்டு, காலஸர்ப்பத்தைப் போல் கோபத்தால் சீறிக்கொண்டு, 'ஸீதே ! உன்னை நகங்களால் இப்படி மார்பில்கிழித்துக் காயப்படுதினவன் யார்? கோபங்கொண்ட ஐந்து தலை நாகத்துடன் விளையாடுகிறவன் யா'ரென்று நான்கு புறத் திலும் சுற்றிப் பார்க்கையில், அந்தக் காக்கை ரத்தத்தால் பூசப்பட்ட நகங்களுடன் எதிரில் உட்கார்ந்திருப்பதைக் கண்டார். அது இந்த்ர னுடைய பிள்ளையான ஜயந்தனல்லவா ? ராமன் தன்னிடத்தில் கோபங்கொண்டதைக் கண்டு வாயுவேகத்துடன் பூமிக்குள் மறைந் தான். தாங்கள் மஹாபுத்திமானுனதால் அவனுடைய நிஜஸ்வ

ரூபத்தையும் கெட்ட எண்ணத்தையும் கண்டு, அவனை க்ரூரமாய்த் தண்டிக்க நிச்சயித்து, ஆஸனத்திலிருந்து ஒரு தர்ப்பையை எடுத்து அதில் ப்ரஹ்மாஸ்த்ரத்தின் மந்த்ரத்தை ப்ரயோகித்தீர்களல்லவா? அந்த அஸ்த்ரம் அக்னிஜ்வாலைகளைக் கக்கிக்கொண்டு காக்கையைத் துரத்திற்று. அப்பொழுது அவன் தாய் தகப்பனையும் தேவர்களையும் மஹர்ஷிகளையும் சரணமடைந்தும் அவர்கள் கைவிட்டார்கள். பிறகு மூன்று லோகங்களில் அலைந்தும் காப்பாற்றுவாரில்லை. ஆகையால் மறுபடியும் தங்களிடத்திலேயே சரணமடைந்து பாதங்களில் விழுந்தான். ஸகல லோகங்களுக்கும் தாங்கள் ரக்ஷகன்; சரணமடைந்தவர்களைக் காப்பாற்றுவதென்ற தர்மத்தை அனுஸரித்தும், பூர்வத்தில் தங்களுடைய முன்னோரான ககுத்ஸ்தனால் ஒத்தாசை செய்யப்பட்ட இந்த்ரனுடைய புத்ரனென்ற அபிமானத்தாலும், அவன் மஹா அபராதஞ் செய்திருக்கிறானென்பதையும் அதற்காக அவனைக் கொல்லவேண்டியதென்பதையும் மறந்து, அபாரகிருபையால் ரக்ஷித்தீர்கள். ஆனால், ப்ரஹ்மாஸ்த்ரம் வீணாகாது; அதற்காக அவனுடைய வலது கண்ணைப் பலியாகக் கொடுக்கச்செய்தீர்கள். பிறகு அவன் தங்களையும் தசரதரையும் நமஸ்கரித்துத் தங்களிடம் உத்தரவுபெற்று தன்னிருப்பிடஞ் சென்றான். (இந்த விஷயம் சில ராமாயண பாடங்களில் அயோத்யா காண்டத்தில் சொல்லப்படுகிறது. அதற்கும், ஸீதை சொல்வதற்கும், மாருதி சொல்வதற்கும் சில பேதங்கள் காணப்படுகின்றதைக் கவனிக்கவும்.)

தாங்கள் அஸ்த்ரங்களின் ரஹஸ்யத்தை அறிந்தவர்களுக்குள் ச்ரேஷ்டரல்லவா? தங்களுடைய பலத்திற்கும் வீர்யத்திற்கும் எல்லையுண்டோ? தாங்கள் க்ஷத்ரிய சுத்தவீரனல்லவா? குலாசாரத்தைப் பூர்ணமாய் அனுஷ்டிக்கிறவர்களல்லவா? இப்படியிருந்தும் அந்த ப்ரஹ்மாஸ்த்ரத்தை ராக்ஷஸர்களிடத்தில், ஏன் ப்ரயோகிக்கக் கூடாது? நாக கந்தர்வ அஸுரமருத்கணங்களும் யுத்தத்தில் ராமனுக் கெதிரில் நிற்க முடியாதென்பதை லோகப்ரஸித்தமல்லவா? அவருக்கு வீர்யம் கொஞ்சமாவதிருந்தால், என்னை மறுபடியும் அடைய வேண்டுமென்ற கவலை கொஞ்சமாவதிருந்தால், கூர்மையான பாணங்களால் ராவணனை யுத்தத்தில் கொல்லட்டும். மஹா பராக்ரமசாலியும் ரோஷமுடையவனுமான லக்ஷ்மணனாவது தமயனுடைய உத்தரவு பெற்றுக்கொண்டு ஏன் என்னைக் காப்பாற்றவில்லை? அந்தப் புருஷ ச்ரேஷ்டர்கள் தேஜஸில் வாயுவிற்கும்

அக்னிக்கும் ஸமானவர்கள். தேவர்களும் நெருங்கக்கூடாதவர்கள்; எதையும் செய்யச் சக்தியுள்ளவர்கள்; இப்படியிருந்தும் என்னை ஏன் கவனிக்கவில்லை! சத்ருக்களுக்குக் காலர்களும் ஸமர்த்தர்களுமான ராம லக்ஷ்மணர்கள் என்னை இப்படி உபேக்ஷைசெய்வதைப் பார்த்தால், நான் ஏதோ மஹாபாபத்தைச் செய்திருக்கிறேனென்பதில் ஸந்தேஹமில்லையென்று தினமாய்க் கண்ணீர்விட்டுக் கொண்டு ஜானகி சொன்னதைக் கேட்டு,

"அம்மா! ராகவன் தங்களை விட்டுப் பிரிந்த சோகத்தால் வேறொரு கார்யத்தில் மனம் செல்லாதவராயிருக்கிறார். ராமன் துக்கப்படுகையில் லக்ஷ்மணன் தபிக்கிறாரென்று சொல்ல வேண்டுமோ? இது ஸத்யமென்று ப்ரமாணஞ்செய்கிறேன். போகட்டும். எவ்வளவோ கஷ்டப்பட்டுத் தங்களைக் கண்டுபிடித்தேனல்லவா? இனிமேலும் தாங்கள் துக்கப்படவேண்டுமா? தாங்கள் அனுபவிக்கும் ஸகல கஷ்டங்களும் இந்த க்ஷணத்திலேயே தீர்வதைப் பார்ப்பீர்கள். புருஷச்ரேஷ்டர்களான அந்த ராஜகுமாரர்கள் தங்களைப் பார்க்கவேண்டுமென்ற ஆவலுடன் அதிசீக்ரத்தில் இங்கே வந்து லங்கையைச் சாம்பலாக்குவார்கள். ராவணனைப் புத்ர மித்ர ஸகல பரிவாரங்களுடன் ராகவன் யுத்தத்தில் கொன்று தங்களை அயோத்யைக்கு அழைத்துப் போவார். இது நிச்சயம். ஆகையால் ராமனுக்கு நன்றாய்த் தெரிந்ததாயும் அவருக்கு ப்ரீதியை உண்டுபண்ணக்கூடியதாயுமிருக்கும் ஓர் அடையாளத்தைச் சொல்லவேண்டு"மென்று ப்ரார்த்தித்தேன். அப்பொழுது ஸீதை ஸகல திக்குகளிலும் பார்த்துத், தன் வஸ்திரத்திலிருந்து இந்த ஆபரணத்தை அவிழ்த்துத் தங்களுக்கு அடையாளமாகக் கொடுக்கும்படி என்னிடத்தில் ஒப்புவித்தாள். தங்களுக்காக அதைப் பெற்றுக்கொண்டு ஸீதாதேவியை நமஸ்கரித்துத் திரும்பிப்போக யத்தனித்தேன். நான் தேஹத்தை வளர்த்துக் கொண்டு புறப்படத் தயாராயிருப்பதைக் கண்டு ஸீதை,

"ஐயோ! இவனும் போய்விட்டால் என்ன செய்வே"னென்று கண்ணீரால் முகம் நனைந்து குரல் தழதழத்துச் சோகந்தாங்காமல் "ஆஞ்ஜநேய! புருஷஸிம்ஹங்களான ராமலக்ஷ்மணர்களையும் ஸுக்ரீவனையும் நான் க்ஷேமம் விசாரித்தேனென்று சொல்லவேண்டியது. இந்தத் துக்க ஸமுத்ரத்திலிருந்து ராகவன் என்னைக் கரையேற்றும்

மான சோகத்தையும் ராக்ஷஸிகள் என்னை க்ரூரமாய் ஹிம்ஸிப்பதை யும் ராமனிடத்தில் நீ விஸ்தாரமாய்ச் சொல்லவேண்டியது. நீ போகிற வழியில் உனக்கு ஸகல க்ஷேமங்களுமுண்டாகட்டு''மென் ருள். ராஜ ச்ரேஷ்ட! அந்தப் புண்யவதி, சொல்லமுடியாத துக்கத் துடன், நான் இது வரையில் தெரிவித்த விஷயங்களைத் தங்களிடத் தில் விக்ஞாபனம் செய்யச்சொன்னாள். இதைக்கேட்டு, ஸீதை பூர்ண மான க்ஷேமத்தை அடையும்படி தாங்கள் கவலையெடுத்துக்கொள்ள வேண்டும்.

---

## ஸர்க்கம் 68.

## (தொடர்ச்சி)

"தாங்கள் என்னிடத்தில் வைத்த ப்ரீதியாலும், ஸீதை என்னி டத்தில் வைத்த ஸ்நேஹத்தாலும், அவளால் நான் கௌரவிக்கப்பட்டு, [மேல்] நடக்க வேண்டிய கார்யத்தைப்பற்றிப் பின் வருமாறு ஆக்ஞாபிக்கப்பட்டேன். 'ராமன் ராவணனை யுத்தத்தில் கொன்று என்னை அதிசீக்ரமாய் அடையும்படி நான் சொன்னபடியும் இன்னும் உன் புத்திக்குத் தோன்றும் பலவிதமாயும் சொல்லவேண்டியது. உனக்கிஷ்டமிருந்தால் இங்கே இன்னும் ஒரு தினம் தங்கிப் போ. ராக்ஷஸர்கள் காணக்கூடாத ஓரிடத்தில் ச்ரமந்தீர்த்துக்கொண்டு மறுநாள் போகலாம். மஹாவீரனை நீ என் ஸமீபத்திலிருக்கும் வரையில், பாக்யமில்லாத நான் அனுபவிக்கும் துக்கம் ஒரு முஹூர் த்தமாவது விலகியிருக்கும். நீ போய்விட்டால், திரும்பி வருவா யென்று நான் எதிர்பார்த்துக்கொண்டிருக்கையில் என் ப்ராணன் போனாலும் போகும். துக்கத்தின்மேல் துக்கமாய் என்னை வாட்டு கிறது. துக்கத்தைத் தவிர எனக்கு வேறு ப்ராப்தமில்லை; சொல்ல முடியாத கஷ்டத்தை அனுபவிக்கிறேன்; உன்னையும் பார்க்காவிட் டால் மறுபடியும் துக்கம் என்னை வாட்டுமே!

"அதிருக்கட்டும். கருடனையும் வாயுவையும் வாயுபுத்ரனை உன்னையும் தவிர இந்த ஸாகரத்தைத் தாண்டகூடியவர் ஒருவரு மில்லையே. ராம லக்ஷ்மணர்களாவது வானரச்ரேஷ்டர்களாவது வானரஸைன்யங்களாவது மலைபோன்ற அலைகளையுடைய இந்தப் பெருங்கடலை எப்படித் தாண்டப் போகிறார்கள்? இந்த ஸந்தேஹம் எப்பொழுதும் என் மனதில் குடிகொண்டு என்னை

சொல்லவேண்டியது. ஸமுத்ரத்தைத் தாண்டி, ராவணனையும் அவனைச் சேர்ந்தவர்களையும் யுத்தஞ்செய்து கொன்று, லங்கையை நாசஞ்செய்து, என்னை அழைத்துப் போக நீ ஒருவனே போதும். மஹாபராக்ரமசாலியான உனக்கு அது விசேஷ கீர்த்தியைக் கொடுக்கும். ஆனால் ராமன் ஸைன்யங்களுடன் இங்கே வந்து, ராவணனையும் ராக்ஷஸர்களையும் யுத்தத்தில் கொன்று, என்னை அயோத்யைக்கு அழைத்துப் போனால், அது அவருடைய குலத்திற்கும் ஆசாரத்திற்கும் பராக்ரமத்திற்கும் கீர்த்திக்கும் அழகு. அவரிடத்தில் பயந்து அவரில்லாத வேளையில் திருடனைப்போல் ராவணன் என்னை எடுத்து வந்தபடியால், இங்கிருந்து அவனுக்கு தெரியாமல் ரஹஸ்யமாய் என்னை அழைத்துப் போவது அவருக்குத் தகாது. மஹாவீரன்; லோகமறிய ஸேனாஸமுத்ரத்தை இங்கே அழைத்து வந்து, லங்கையைத் தூளாக்கி, ராக்ஷஸர்களை வேரறுத்து, என்னை ஜயலக்ஷ்மியுடன் அழைத்துப் போவது அவருக்குத் தகும். யுத்தத்தில் அவரைப்போன்ற சூரனுண்டோ? அவருடைய பராக்ரமமும் ப்ரதாபமும் எப்படி விளங்குமோ அப்படிச் செய்யவேண்டியது நீயே' யென்று வினயமாய் அநேக காரணங்களுடன் விசேஷ அர்த்தங்களடங்கச் சொன்னாள்.

அதைக் கேட்டு நான் "அம்மா! கணக்கற்ற வானரஸைன்யங்களுக்கு அதிபதியான ஸுக்ரீவமஹாராஜர், மஹாபலவான்; ஒப்பற்ற பராக்ரமமுடையவர். அவருடைய ஆக்ஞைகளை நிறைவேற்றுவதற்கு மஹாபலவான்களும் பராக்ரமசாலிகளும் உத்ஸாஹமுள்ளவர்களும் மனோவேகமுள்ளவர்களுமான வானரவீரர்கள் கணக்கில்லாமல் காத்துக்கொண்டிருக்கிறார்கள். எந்தத் திக்குகளிலும் அவர்களுக்குத் தடையில்லை. அபாரமான தேஜஸ்விகளானதால் பெரிய கார்யங்களைத் தயங்காமல் நிறைவேற்றுவார்கள். கேவலம் பலக்கொழுப்பால் அவர்கள் ஆகாசமார்க்கமாய் இந்தப் பூமியை அநேக தடவை ப்ரதக்ஷிணஞ்செய்திருக்கிறார்கள். ஸுக்ரீவனிடத்திலிருப்பவர்கள் எல்லோரும் எனக்கு ஸமானர்கள் அல்லது எனக்கு மேலானவர்கள்; எனக்கு தாழ்ந்தவன் அங்கே ஒருவனும் கிடையாது. நானே இங்கே வந்திருக்கையில் அவர்கள் வரத் தடையென்ன? அரசன் தனக்குள்ளிருக்கும் ஸாமான்யர்களை இதைப்போன்ற வேலையிடுவானேயொழிய ச்ரேஷ்டமானவர்களை ஏவுவானோ? ஆகையால், ஏன் ஸந்தேஹப்படுகிறீர்கள்? கவலையை விடுங்கள். அவர்கள் கிஷ்கிந்தையிலிருந்து ஒரு மூச்

சில் தாண்டி இங்கே வந்து குதிப்பார்கள். புருஷஸிம்ஹங்க ளான அந்த ராமலக்ஷ்மணர்கள் என் முதுகில் ஏறிக்கொண்டு ஸூர்யசந்த்ரர்களைப்போல் ஆகாசமார்க்கமாய் இங்கே வரு வதையும், சத்ருகுலகாலனும் ஸிம்ஹத்தைப்போல் பராக்ரம முள்ளவருமான ராமன் கோதண்டபாணியாய் லக்ஷ்மணனுடன் இந்த லங்கைக் கோட்டைவாசலில் நிற்பதையும், நகத்தையும் பற்களையும் ஆயுதங்களாயுடையவர்களும் பராக்ரமத்தில் ஸிம்ஹங்களுக்கும் புலிக ளுக்கும் நிகரானவர்களும் மதயானையைப்போல் விளங்குகிறவர்களும் வீரச்ரேஷ்டர்களுமான வானரஸைன்யங்கள் லங்கையைச் சூழ்ந்து அதன் ஸமீபத்திலுள்ள மலைத் தாழ்வரைகளில் மஹாமேகங்களைப் போல் வீரகோஷஞ்செய்வதையும், ஸ்ரீ ரகுவீரன் வனவாஸத்தை முடித்துச் சத்ருக்களை நிர்மூலஞ்செய்து தங்களுடன் அயோத்யைக் குப் போய் ராஜ்யாபிஷேகம் பெறுவதையும் மஹாபாக்யசாலியான தாங்கள் அதிசீக்ரத்தில் பார்க்கப்போகிறீர்க''ளென்று கம்பீரமா யும் மங்களகரமாயும் நான் சொல்வதைக் கேட்டுத் தாங்கள் அனுப விக்கும் கஷ்டத்தைக் கேள்விப்பட்டு எனக்கெதிரே விசேஷ துக் கத்தை அடைந்த ஜனகராஜபுத்ரி, மனந்தெளிந்து ஆறுதலடை ந்தா''ளென்றார்.

ஸுந்தர காண்டம் முற்றிற்று.

ஸீதா லக்ஷ்மண பரத சத்ருக்ன ஹனுமத் ஸமேத
ஸ்ரீராமசந்த்ர பரப்ரஹ்மணேநமஃ

———

# ஸுந்தர காண்ட

## மஹிமை.

1. இதை ஸம்ஸ்கிருதத்திலாவது இதர பாஷைகளிலாவது ஒவ்வொரு நாளும் பாராயணஞ் செய்யவேண்டும். அர்த்தம் தெரிந்து படிப்பது முக்யம். சம்ஸ்கிருதம் தெரியாமல் படிப்பதை விட இந்தத் தமிழ் வசனமே உத்தமம்.

2. இப்படிச் செய்தால் நினைத்த கார்யம் நிறைவேறும்.

3. தீராத ரோகங்கள் தீரும் பூதப்ரேத பிசாசங்கள் பறக்கும் புத்ரனில்லாதவர்களுக்குப் புத்ரபாக்யமுண்டாகும். சத்ருக்களின் உபத்ரவமும் கடன்காரர்களின் தும்பமும் ஏழ்மைத்தனமும் நீங்கும். சித்தப்ரமை தீரும்.

4. ஸப்த ஸர்க்கம் பாராயணமென்று ஒரு முறையுண்டு. அடிமுதல் ஏழு ஸர்க்கங்களை ஒவ்வொரு நாளும் படிக்கவேண்டும். ஒவ்வொரு சுற்றிலும் 9, 10, 10, 9, 10, 10, 10, நாள்கள் செல்லும்.— 5, 3, 1, 6, 4, 2, 0, ஸர்க்கங்கள் பாக்கியாயிருக்கும். இவைகளை 68 ஸர்க்கங்களுடன் கூட்டி மறுபடியும் ஆரம்பிக்கவேண்டும். இதற்கு 68 நாள்கள் செல்லும். பாக்கி வராமல் எந்த நாளில் 68-வது ஸர்க்கத்துடன் முடிகிறதோ அன்று ஆஞ்ஜநேயருக்குப் பூஜை, ஸஹஸ்ரநாம அர்ச்சனை, பானகம் நீர்மோர், கடலை, வெள்ளரிக்காய், வடைமாலை வடைப்பருப்பு, தேன், பால், வெண்ணெய், இளநீர், முதலிய நைவேத்யம் செய்யவேண்டும். அபிஷேகம் நடத்தவேண்டும். ஏழைகளுக்கு அன்னம் போடவேண்டும். இதனால் கைகூடாத கார்யமில்லை.

ரமணி பிரஸ், மைலாப்பூர் சென்னை.

# ராமமூர்த்தியின் பட்டாபிஷேகமஹோத்ஸவம்.

~~~

## அவதாரிகை.

இப்படிப் புஷ்பகவிமானத்தைக் குபேரனுக்கு அனுப்பிவிட்டுப், பரதனுடைய அனுமதியில்லாமல் அயோத்யையில் ப்ரவேசிக்கக்கூடாதென்று நினைந்து, நந்திக்ராமத்தில் ராமன் தங்கியிருந்தார். அயோத்யாநகரத்துஜனங்களும் அவனைவிட்டுப் பிரமனமில்லாமல் அங்கே இருந்தார்கள். கௌஸல்யை முதலிய ராஜஸ்த்ரீகளும் ராமனைச் சூழ்ந்திருந்தார்கள். பரதன் அவருடைய முகஜாடைகளாலும் இங்கிதங்களாலும் உட்கருத்தை அறிந்து தன் அபிப்ராயத்தை வெளியிடுகிறார்.

———

பரதன் தலைமேல் கைகூப்பி, மஹானுபாவரான தன் தமயனைப்பார்த்துப் பின்வருமாறு சொன்னார். கைகேயீ அந்த வார்த்தைகளைக் கேட்டு முகம்மலர்ந்து பரமானந்தமடைந்தாள். ('கைகூப்பி'யென்றதால் வனவாஸகாலத்தில் சித்ரகூடத்தில் செய்த ப்ரபத்தியை ஞாபகப்படுத்துகிறார். தனக்கு வேறு கதியில்லையென்று தெரிவிப்பதற்காகக் கைகூப்பினார்).

"ஸ்வாமி! தாங்கள் இந்த ராஜ்யத்தை வேண்டாமென்று ஒப்புக்கொள்ளாமல் வனவாஸஞ்செய்ததால், என் மாதாவின் மனதை ஸந்தோஷப்படுத்தினீர்கள். பிறகு சித்ரகூடத்தில் இதை என்னிடத்தில் ஒப்புவித்தீர்கள். ஆகையால், தாங்கள் என்னிடத்தில் அடைக்கலமாய் வைத்த கோஸலராஜ்யத்தை இப்பொழுது தங்களிடத்தில் மறுபடியும் கொடுத்துவிட்டேன். ஆனால் 'நான் கேட்டபொழுது நீ கொடுக்கலாம்; அதுவரையில் வைத்துக்கொண்டிரு. நான் அயோத்யையில் ஸகல போகங்களையும் அனுபவித்துக்கொண்டு ஸுகமாய் வஸிக்கிறேன். நீயே ராஜ்யத்தை ஆண்டுவா'வென்று சொல்வீர்கள். பூர்ணபலமுள்ள ஓர் எருது ஒண்டியாய் ஸஹாயமில்லாமல்
~~~

சுமந்துவந்த வாஹனத்தைச் சிறு கன்றுக்குட்டி சுமக்குமா? 'அப்படியானால் இதுவரையில் எப்படி ஆண்டுவந்தா'யென்று கேட்பீர்கள். ஆற்றில் ஜலத்தின் வேகத்தைத் தடுப்பதற்கு மரக்கிளைகள் வைக்கோல் மரம் முதலிய பதார்த்தங்களால் உறுதியாய் அணை கட்டாவிட்டால், அங்கங்கே சிறுத்வாரங்கள் ஏற்பட்டு அவைகளின் வழியாய் ஜலம் ப்ரவாஹித்து முடிவில் அணையை அடித்துக்கொண்டுபோவதுபோல், இந்த ராஜ்யபாலனம் ஸுலபமல்ல. ஆளுகிறவனுக்கு உத்தம குணங்களென்ற பலமான அணையில்லாவிட்டால் ராஜ்ய ரஹஸ்யங்கள் சீக்ரத்தில் வெளிப்படும். ஆனால் 'என்னைப் போல் நீயும் ப்ரஜைகளை உத்தமகுணங்களால் வசப்படுத்தக்கூடாதா'வென்பீர்கள். உத்தம அச்வத்தின் நடைக்கும் கழுதையின் நடைக்கும் உபமையுண்டோ? காக்கை ராஜஹம்ஸத்தைப்போலாகுமோ? தாங்கள் போகும் வழியில் வேறொருவர் அடிவைக்கமுடியுமோ? ஆனால் நானும் 'உனக்கு ஸஹாயமாயிருக்கிறேன். நீயே ராஜ்யத்தை ஆண்டுவா'வென்பீர்கள். ஓர் குடும்பி தன் வீட்டில் ஓர் உத்தமஜாதி விருக்ஷத்தை வைத்துப் பயிர்க்கிறான். அது காலக்ரமத்தில் விசாலமான கிளைகளுடன் அழகான புஷ்பங்களால் நிறைந்து விளங்கிற்று. ஆனால் ஒரு பழமாவது கிடையாது. அப்படியிருந்தால் அதை வளர்த்தவனுக்கு என்ன ப்ரயோஜனம்? நமது பிதா அறுபதாயிர வர்ஷங்கள் வரையில் புத்ரனில்லாமல் அச்வமேதம் புத்ரகாமேஷ்டி முதலிய யாகங்களைச் செய்து தங்களைப் பெற்றார். தாங்கள் லோகோத்தரமான அனந்த கல்யாணகுணங்களுடன் வளர்ந்துவந்தீர்கள். இந்த ராஜ்யத்தைத் தங்களிடத்தில் ஒப்புவித்துத் தான் செய்த ப்ரயத்னங்களின் பலத்தை அனுபவிக்கலாமென்று அவர் நினைத்தார். இப்பொழுது ஸகல பூமண்டலத்தையும் தர்மமாய்ப் பரிபாலனஞ்செய்யத் தகுந்த உத்தமகுணங்கள் தங்களிடத்திலிருந்தும், வம்சபாரம்பரையாய் ஜ்யேஷ்டபுத்ரர்களால் ஆளப்பட்டுவந்த இந்த ராஜ்யத்தைத் தாங்கள் ஆளாவிட்டால் தங்களைப் பெற்று வளர்த்ததின் ப்ரயோஜனமென்ன? ஸூர்யன் மத்யாஹ்னகாலத்தில் ஆகாசவீதியில் பூர்ணகிரணங்களுடன் ஸகல ஜகத்திற்கும் ப்ரகாசத்தையும் ஆயுளையும் கொடுத்துக்கொண்டு விளங்குவதுபோல், தாங்கள் பட்டாபிஷேக மஹோத்ஸவம்பெற்று, ஸிம்ஹாஸனத்திலிருந்து எங்களெல்லோருக்கும் க்ஷேமத்தைக் கொடுப்பதை நாங்கள் பார்த்து மகிழ்கிறோம். விடியற்காலத்தில் மதுரமான கானங்களாலும், வாத்யசப்தங்களாலும், தங்கச்சலங்கைகளால் அலங்கரிக்கப்பட்ட உத்தம

ஸ்த்ரீகளின் நாட்டங்களாலும், தாங்கள் எழுப்பப்படுவதை நாங்கள் கண்டு மகிழ்கிறோம். ஸகல போகங்களையும் அனுபவிக்கத் தகுந்தவர்கள் தாங்களே. ஆனால் 'நீங்களும் என்னுடன் பிறந்தவர்களல்லவா? உங்களுக்கும் ராஜ்யபாலனம் செய்யவேண்டுமென்ற ஆசையில்லையோவென்று கேட்பீர்கள். ஸூர்ய சந்த்ர க்ரஹங்களும் நக்ஷத்ரங்களும் உள்ளவரையிலும், இந்தப்பூமியுள்ளவரையிலும் தாங்கள் எங்களைப் பரிபாலனஞ்செய்துவர வேண்டுமென்பதே எங்களுடைய ப்ரார்த்தனையெ''ன்றார்.

ராமன் பரதனுடைய சரணாகதியை அங்கீகரித்து, உத்தமமான ஆஸனத்தில் உட்கார்ந்தார். பிறகு ஸுகமாயும் சீக்ரமாயும் சாதுர்யமாயும் க்ஷவரஞ்செய்யக்கூடியவர்களை சத்ருக்னர் தருவிக்க, அவர்கள் ராமலக்ஷ்மணபரதசத்ருக்னர்களுடைய ஜடைகளை நீக்கினார்கள். பரதன் லக்ஷ்மணன் ஸுக்ரீவன் விபீஷணன் முதலியவர்கள் ஸ்நானஞ்செய்தபிறகு விசித்ரமான மாலைகளாலும் பரிமளங்களாலும் வஸ்த்ரங்களாலும் ஆபரணங்களாலும் ராமலக்ஷ்மணர்களைச் சத்ருக்னன் அலங்காரஞ்செய்வித்தார். தசரதருடைய பத்னிகள் ஸீதைக்கு ஸகல அலங்காரங்களையும் தாங்களே செய்தார்கள். தாரை முதலிய வானரஸ்த்ரீகளுக்கு ஸகல அலங்காரங்களையும் ராமனிடத்தில் எல்லையற்ற வாத்ஸல்யத்தை வைத்த கௌஸல்யை செய்வித்தாள். பிறகு சத்ருக்னருடைய உத்திரவால் இக்ஷ்வாகுகுல ஸாரதியான ஸுமந்த்ரர் உத்தம அச்வங்கள் பூட்டின ராஜரதத்தைக் கொண்டுவந்து நிறுத்தினர். ('கைகேயிபுத்ரனை பரதன் ஸ்நானஞ்செய்யாமல் நான் ஸ்நானஞ்செய்யமாட்டேனென்று விபீஷணனிடத்தில் சொன்னபடி பரதனை முதலில் ஸ்நானஞ்செய்வித்தார். ஸுக்ரீவன் கிஷ்கிந்தையைவிட்டுப் புறப்பட்டதுமுதல் ஸ்நானஞ்செய்யவில்லை. விபீஷணன் லங்கையைவிட்டுப் புறப்பட்டதுமுதல் ஸ்நானஞ்செய்யவில்லை. சத்ருக்னன் தபஸ்விவேஷத்தைத் தரித்தா'னென்று அயோத்யாகாண்டத்தில் சொல்லப்படவில்லை. மேலும் ஸகல கார்யங்களையும் நடத்தவேண்டியிருந்ததால் ஸ்நானஞ்செய்ய அவகாசமில்லையென்று சிலர் சொல்லுகிறார்கள். ஆனால் ஸங்க்ஷேபராமாயணத்தில் 'நந்திக்ராமத்தில் ராமனும் அவருடைய ஸஹோதரர்களும் ஜடையைக் களைந்தார்களெ'ன்று சொல்லியிருப்பதால் சத்ருக்னனும் ஜடையை நீக்கி ஸ்நானஞ்செய்திருக்கவேண்டுமென்று ஏற்படுகிறது). ஸூர்ய மண்டலத்தைப்போல் ப்ரகாசிக்கும் அந்த ரதத்தைப் பார்த்த ராமன்

ஸந்தோஷமடைந்து, அதில் ஏறினார். ஸுக்ரீவனுக்கு ஹநுமானும் மஹேந்த்ரனைப்போல் தேஜஸால் ஜ்வலித்துக்கொண்டு, நேர்த்தியான வஸ்த்ராபரணங்களால் அலங்கரிக்கப்பட்டு ராமனுடன் போனார்கள். ஸுக்ரீவனுடைய பார்யைகளும் ஸீதையும் திவ்யாலங்காரங்களுடன் அயோத்யையைப் பார்க்க ஆசைகொண்டு, அவர்களுடன் போனார்கள்.

பிறகு அயோத்யையில் தசரதருடைய மந்த்ரிகளும் வஸிஷ்டரும் ராமனுடைய பட்டாபிஷேகத்திற்கு வேண்டிய மங்களத்ரவ்யங்களை ஸம்பாதித்தார்கள். அசோகன் விஜயன் ஸுமந்த்ரன் முதலியவர்கள், "ராமனுக்கு க்ஷேமமும் ஸுகமும் ஐச்வர்யமும் விருத்தியாவதற்கும், இந்த நகரமும் ராஜ்யமும் எப்பொழுதும் மங்களத்தை அடைவதற்கு வேண்டிய ஸகல சுபக்ரியைகளையும் குறைவில்லாமல் செய்யவேண்டியதெ"ன்று வஸிஷ்டரை ப்ரார்த்தித்து, ராமனைப் பார்ப்பதற்காகத் திரும்பிவந்தார்கள். திவ்ய அச்வங்கள் பூட்டின ரதத்தில் மாதலி ஸாரத்யஞ்செய்ய, தேவகணங்கள் புடைசூழ இந்த்ரன் வருவதுபோல், திவ்யமான ரதத்தில் ஸுமந்த்ரர் ஸாரத்யஞ்செய்ய, ஸஹோதரர்களும் வானரர்களும் ராக்ஷஸர்களும் ப்ரஜைகளும் புடைசூழ, ராமசந்த்ரன் விளங்குவதைக் கண்டார்கள். பரதன் கடிவாளங்களை பிடித்துக்கொண்டு ஸுமந்த்ரருக்குப் பக்கத்திலிருந்து ஸாரத்யஞ்செய்துவந்தார். சத்ருக்னன் இக்ஷ்வாகு சக்ரவர்த்திகளுடைய வெண்குடையைப் பிடித்தார். லக்ஷ்மணன் ராமனுக்கு முன் நின்று விசிறினார்; வெண்சாமரத்தை வீசினார். ('ராமனுக்கு ஸகல கைங்கர்யங்களையும் நானே செய்வேனெ'ன்ற மஹானுபாவரானபடியால், இரண்டு கார்யங்களையும் தானே ஏற்றுக்கொண்டார்). ராக்ஷஸாதிபதியான விபீஷணன் மற்றொரு வெண்சாமரத்தை வீசினான். அப்பொழுது ஆகாசவீதியில் தேவ கந்தர்வ யக்ஷ கின்னர வித்யாதர உரக கருட பன்னக ஸித்த ஸாத்ய நாக மருத்கணங்கள், ராவணாதிராக்ஷஸர்களை நாசஞ்செய்து தங்களுக்கு எல்லையற்ற ஸுகத்தையும் க்ஷேமத்தையும் கொடுத்ததைப்பற்றி ராமனைக் கொண்டாடும் மதுரமான த்வனி கேட்கப்பட்டது. மஹா பர்வதத்தைப்போல், மதஜலத்தைப் பெருகவிட்டுக்கொண்டிருக்கும் சத்ருஜயனென்ற பட்டத்துயானையின்மேல் ஸுக்ரீவன் ஏறி, ஐராவதத்தின்மேல் விளங்கும் இந்த்ரனைப்போல் ப்ரகாசித்தான். இதர வானரர்கள் மனுஷ்யரூபத்துடன் ஸர்வாபரணபூஷிதர்களாய் ஒன்பதாயிர மதயானைகளின்மேல் ஏறிவந்தார்கள். இப்

ங்களுடன் ரகுவீரன் அயோத்யையை நோக்கிப் போனார். மந்த்ரிகள் அவரை 'ஜய விஜயீபவ' என்று வாழ்த்தி, அவரால் உபசரிக்கப்பட்டு, அவரை பின்தொடர்ந்து வந்தார்கள். ப்ரஜைகளாலும் ப்ராஹ்மணர்களாலும் மந்த்ரிகளாலும் சூழப்பட்டு ராகவன், ஆகாசவீதியில் நக்ஷத்ரகணங்களால் சூழப்பட்ட சந்த்ரனைப்போல் ப்ரகாசித்தார். அவருக்குமுன் அநேகர் மங்களவாத்யங்களைக் கோஷித்துக்கொண்டு சென்றார்கள். ஸ்வஸ்திகம் முதலிய மதுரமான வாத்யங்களை அநேகர் வாசித்துக்கொண்டு போனார்கள். கன்னிகைகளும், ப்ராஹ்மணர்களும், மஞ்சள் கலந்த அக்ஷதைகளை எடுத்துக்கொண்டு முன்னே போனார்கள். அநேகர்கள் மோதகங்களை எடுத்துக்கொண்டு போனார்கள். உத்தமலக்ஷணங்களுள்ள பசுக்கள் சென்றன. ராமனுக்கும் ஸுக்ரீவனுக்கும் நேர்ந்த ஸ்நேஹத்தையும், வாயுபுத்ரனுடைய ப்ரபாவத்தையும், வானரர்களுடைய பராக்ரமத்தையும், ராக்ஷஸர்களுடைய பலத்தையும், விபீஷணனுடைய ஸஹாயத்தையும் ராமன் மந்த்ரிகளுக்கு விஸ்தாரமாய் எடுத்துச் சொன்னார். அதைக் கேட்டு நகரத்து ஜனங்கள் ஆச்சர்யமடைந்தார்கள்.

இப்படிப் பேசிக்கொண்டே ஸகல ஸௌக்யங்களும் பொருந்தின ஜனங்களால் அலங்கரிக்கப்பட்ட அயோத்யையில் ராமன் ப்ரவேசித்தார். ஒவ்வொரு வீட்டிலும் மாலைகளாலும் ஹாரங்களாலும் தோரணங்களாலும் கொடிகளாலும் த்வஜங்களாலும் விசித்ரமாய் அலங்கரிக்கப்பட்டிருந்தது. ராமன் ப்ரஜைகளால் வாழ்த்தப்பட்டு இக்ஷ்வாகுவம்சத்தரசர்கள் வஸிக்கும் அரண்மனையில் ப்ரவேசித்தார். கௌஸல்யை ஸுமித்ரை கைகேயி முதலிய ராஜபத்னிகளை நமஸ்கரித்துப், பரதனை நோக்கி, "அழகான அசோகத்தோட்டத்துடன் விளங்கும் என் உத்தமமான அரண்மனையில் ஸுக்ரீவன் தங்கட்டு"மென்றார். அவருடைய அபிப்ராயத்தை பரதன் அந்த வார்த்தைகளால் அறிந்துகொண்டு, ஸுக்ரீவனுடைய கையைப் பிடித்து, அந்த அரண்மனைக்கு அழைத்துக்கொண்டுபோனார். பிறகு பரிசாரகர்கள் சத்ருக்னனுடைய உத்திரவால் தீபங்களையும் ஆஸனங்களையும் விரிப்புகளையும் படுக்கைகளையும் அந்த அரண்மனையில் கொண்டுபோய் வைத்தார்கள். பிறகு சத்ருக்னன் ஸுக்ரீவனைப்பார்த்து, "ப்ரபோ! ராமனுடைய அபிஷேகத்திற்காக வானரர்களை அனுப்புங்க"ளென்றார். ஸுக்ரீவன் நான்கு வானர ச்ரேஷ்டர்களை அழைத்து, ரத்னங்களிழைத்த நான்கு ஸ்வர்ண

கடங்களைக் கொடுத்து, "வானரர்களே! பொழுதுவிடியுமுன் நான்கு திக்குகளிலுமுள்ள ஸாகரங்களிலிருந்தும் புண்யதீர்த்தங்களிலிருந்தும் பரிசுத்தமான ஜலத்தைக் கொண்டுவந்து ஸித்தமாயிருக்க வேண்டு"மென்று ஆக்ஞாபித்தான். உடனே மதயானைகளைப் போன்ற வானரவீரர்கள் ஆகாசத்தில் கிளம்பிக் கருடனைப்போல் அதிவேகமாய்ப் போனார்கள். ஜாம்பவான் ஹனுமான் வேகதர்சி ரிஷபன் முதலியவர்கள், தங்கக்கலசங்களில் ஐந்நூறு நதிகளிலிருந்து புண்யதீர்த்தங்களைக் கொண்டுவந்தார்கள். ஸுஷேணன் கிழக்கு ஸமுத்ரத்திலிருந்தும், ரிஷபன் தெற்குஸமுத்ரத்திலிருந்தும், கவயன் மேற்குஸமுத்ரத்திலிருந்தும், நளன் வடக்குஸமுத்ரத்திலிருந்தும் ஜலத்தைக் கொண்டுவந்தார்கள். வானரர்கள் ராமனுடைய அபிஷேகத்திற்காகப் புண்யஜலங்களைக் கொண்டுவந்தார்களென்றறிந்து, சத்ருக்னனும் மந்த்ரிகளும், வஸிஷ்டருக்கும் இதரஸ்நேஹிதர்களுக்கும் தெரிவித்தார்கள்.



## ஸ்ரீ ராமமூர்த்தியின் பட்டாபிஷேக மஹோத்ஸவம்.

பிறகு, இக்ஷ்வாகுகுலசக்ரவத்திகளுக்குக் குருவும் தீர்காயுஸுள்ளவருமான வஸிஷ்டமஹர்ஷி, இந்த்ரியங்களையும் மனஸையும் ஸமாதானஞ்செய்து கொண்டு, ஸகல ப்ராஹ்மணர்களுடைய அனுமதியைப் பெற்று, ஸ்ரீ ராமனை ஸீதாதேவியுடன் ரத்னமயமான ஸிம்ஹாஸனத்தில் உட்காரச்செய்தார். தேவேந்த்ரனை அஷ்டவஸுக்கள் அபிஷேகஞ்செய்தது போல், வஸிஷ்டர் வாமதேவர் ஜாபாலி காய்ச்யபர் காத்யாயனர் ஸுயக்ஞர் கௌதமர் விஜயரென்ற எட்டு மஹாத்மாக்களும், வேதோக்த மந்த்ரங்களை ஜபித்து, ராமசந்த்ரனைப் பரிமள த்ரவ்யங்கள் கலந்த புண்ய தீர்த்தத்தால் விதிப்படி பட்டாபிஷேகஞ் செய்தார்கள். பிறகு ஸகல ஓஷதிகளும் ரஸங்களும் கலந்த புண்ய ஜலத்தால் ரித்விக்குகளும் ப்ராஹ்மணர்களும் கன்யைகளும் மந்த்ரிகளும் யுத்த வீரர்களும் வர்த்தகத் தலைவர்களும் ரகுவீரனை அபிஷேகஞ் செய்தார்கள்,

ஆகாசவீதியில் லோகபாலர்களும் தேவகணங்களும் நின்று ஆனந்தமாய்க் கொண்டாடினார்கள். சத்ருக்னன் வெண்குடை பிடித்தார். ஸுக்ரீவன் வெண்சாமரம் போட்டார். இந்த்ரனால் அனுப்பப்பட்ட வாயுபகவான் எண்ணிறந்த தங்கத்தாமரைப்புஷ்பங்களால் அமைக்கப்பட்ட ஓர் ப்ரகாசமான மாலையையும் நவரத்னங்கள் கலந்த ஓர் முத்துஹாரத்தையும் கொண்டுவந்தார். தேவகந்தர்வர்கள் அந்த மஹோத்ஸவஸமயத்தில் மதுரமாய்ப் பாடினார்கள். அப்ஸரஸ்கணங்கள் சாதுர்யமாய் நாட்யஞ்செய்தார்கள். ஸமஸ்த பயிர்களால் பூமி செழித்தது. விருக்ஷங்கள் பழங்களால் நிறைந்தன. புஷ்பங்களிலிருந்து நேர்த்தியான பரிமளம் வீசிற்று. (ராமன் வனவாஸட் போகும்பொழுது விருக்ஷங்களும் வாடியிருந்தனவென்று சொல்லப்பட்டது. இப்பொழுது அந்தத் துக்கம் நீங்கி, அளவற்ற ஸந்தோஷமடைந்தன). எண்ணிறந்த பசுக்களையும், கன்றுகளையும் காளைகளையும் குதிரைகளையும் முப்பது கோடி தங்கநாணயங்களையும் பலவித ஆபரணங்களையும் வஸ்த்ரங்களையும் ரகுநாதன் ப்ராஹ்மணர்களுக்கும் மற்ற ஜாதியார்களுக்கும் கொடுத்தார். நவரத்னங்களிழைத்து, ஸூர்யனைப்போல் ப்ரகாசிக்கும் ஓர் தங்கஹாரத்தை ராகவன் ஸூர்யபுத்ரனான ஸுக்ரீவனுக்குக் கொடுத்தார். வாலி புத்ரனான அங்கதனுக்கு நவரத்னங்களிழைத்த இரண்டு அங்கதங்களை, (அதாவது, தோள்வளைகளை)க் கொடுத்தார். சந்த்ரகிரணங்களைப் போல் ஒளிவீசும் ரத்னங்கள் கலந்த ஓர் முத்துஹாரத்தை ஸீதைக்குக் கொடுத்தார். அவள் இரண்டு உத்தமமான வஸ்த்ரங்களையும் அநேக ஆபரணங்களையும் பர்த்தாவின் அனுமதியைக் கண்ஜாடையால் அறிந்து ஆஞ்ஜநேயருக்குக் கொடுத்தாள். (தான் கொடுத்த ஹாரத்தை ஸீதை ஆஞ்ஜநேயருக்குக் கொடுக்கவேண்டுமென்பது ராமனுடைய கருத்து. ஸ்த்ரீக்குத் தானாய் ஒரு தானத்தையும் செய்ய அதிகாரமில்லாததால் ராமனுடைய அனுமதியை ப்ரார்த்தித்தாள்). பிறகு தன் கழுத்திலிருந்து அந்த ஹாரத்தைக் கழற்றி, ஸகல வானரர்களையும் தன் பர்த்தாவையும் ஸீதை அடிக்கடி பார்த்தாள். (இந்த ஸதஸில் ராமன் எனக்கு இந்த ஹாரத்தை கொடுத்ததின் உத்தேசம், நான் இதை யாருக்காவது பஹுமானஞ்செய்யவேண்டுமென்றல்லவா ? இங்கிருப்பவர்களுக்குள் யாருக்கு இதைக் கொடுக்கலாமென்று பார்த்தாள்). ராமன் அவளுடைய கருத்தை அறிந்து, "ஸீதே! எவனிடத்தில் உனக்கு விசேஷ திருப்தியிருக்கிறதோ, எவனிடத்தில் ஆண்மையும் பராக்ரமமும் புத்தியும் எல்லையற்று விளங்குகின்றனவோ அவனுக்கு இதைப்

பஹுமானமாய்க் கொடுவெ"ன்றார். (ஸமுத்ரத்தைத் தாண்டின தால் ஆண்மையும், லங்கையைக் கொளுத்தினதால் பராக்ரமமும், அசோகவனத்தில் ப்ரவேசித்துத் தன்னைக் கண்டதால் புத்தியும் மாருதியிடத்தில் அபரிமிதமாய் விளங்குகின்றன). உடனே ஸீதை அந்த ஹாரத்தை ஆஞ்ஜநேயருடைய கழுத்தில் போட்டாள். அதி ஞல் சந்த்ரகிரணங்கள் சூழ்ந்த வெண்மையான மேகங்களால் விளங் கும் பர்வதத்தைப்போல் ப்ரகாசித்தார். மைந்தன் த்விதன் நீலன் முதலிய ஸகல வானரர்களுக்கும் அவரவர்களுடைய உத்தமகுண ங்களுக்குத் தகுந்தபடி வஸ்த்ரங்களையும் பூஷணங்களையும் அபரிமித மாய்க் கொடுத்தார். விபீஷணன் ஸுக்ரீவன் ஹனுமான் ஜாம்பவான் முதலிய வானரவீரர்கள் ரத்னங்களாலும் வஸ்த்ரங்களாலும் ஆப ரணங்களாலும் பூஷணங்களாலும் வெகுமதி செய்யப்பட்டுத் தங்க ளிருப்பிடம் போனார்கள். வானரர்கள் அந்தப் பட்டாபிஷேக மஹோத்ஸவத்தைக் கண்டு களித்து, ராமனிடத்தில் உத்திரவுபெற் றுக்கொண்டு கிஷ்கிந்தைக்குச் சென்றார்கள். ராக்ஷஸாதிபதியான விபீஷணன் இக்ஷ்வாகுவம்சத்தரசர்களுக்கு குலதனமான ஸ்ரீரங்கவி மானத்தை ராமனிடத்திலிருந்து பெற்று லங்கைக்குப்போனன். (இங்கே குலதனமென்ற பதத்தால் ராமன் முன்பு விபீஷணனுக்குக் கொடுத்த ராக்ஷஸகுலதனமான லங்கையே குறிப்பிடப்படுகிறது. இதற்கு ஸ்ரீரங்கவிமானமென்று ஸம்ப்ரதாயமாப் அர்த்தஞ்செய்வது பொருந்தாது. குலதனமென்ற பதத்திற்கு முன் இக்ஷ்வாகுவென்ற பதம் மூலத்திலில்லை. மேலும் ராமன் தன் அவதாரத்தை முடித்து வைகுண்டத்திற்கு எழுந்தருளும்பொழுது விபீஷணனுக்கு ஸ்ரீரங்க விமானத்தைக் கொடுத்தாரென்று உத்தரராமாயணத்தில் (108-31.) சொல்லியிருக்கிறது. மேலும் பாத்மபுராணத்தில் ராமன் "விபீஷண! சந்த்ரஸூர்யர்களும் பூமியும் உள்ளவரையில் நீ இந்த ராஜ்யத்தை ஆண்டுவந்து பிறகு, என் திருவடிகளை அடைவாயெ"ன்று இக்ஷ்வாகு வம்சத்தரசர்களுக்குக் குலதைவமான ஸ்ரீரங்கநாதனை அவருக்குக் கொடுத்தாரென்று சொல்லப்படுகிறது). விபீஷணன் ஸகல சத்ருக் களையும் ஜயித்து, மஹாகீர்த்திசாலியாய்த் தர்மராஜ்யஞ்செய்துவந் தான்.

ராமன் ப்ரஜைகளைத் தன் குழந்தைகளைப்போல் பாதுகாத்துத், துஷ்டநிக்ரஹ சிஷ்டபரிபாலனஞ்செய்துவந்தார். பிறகு" லக்ஷ்மண தர்ம ரஹஸ்யங்களை அறிந்த புத்திமானே! நமது முன்னோர்களால் ஆளப்பட்டுவந்த இந்த ராஜ்யத்தை என்னுடன் நீயும் பரிபாலனஞ்

செய். உன்னை யுவராஜாவாக நியமிக்கிறேனென்”ன்றார் அவர் எவ்வளவு சொல்லியும் லக்ஷ்மணன் கொஞ்சமாவது ஸம்மதிக்கவில்லை. (தான் பகவானுக்குச் சேஷபூதனென்ற தர்மத்திற்கு விரோதிக்குமென்றதாலும், தனக்கு ச்ரேஷ்டனான பரதனிருப்பதாலும் அதை ஒப்புக்கொள்ளவில்லை). பகவானுக்குப் பரதந்த்ரனாயிருக்கும் தர்மத்தையே அனுஷ்டித்த பரதனுக்கு ராமன் யௌவராஜ்யபட்டாபிஷேகஞ்செய்வித்தார். பௌண்டரீகம் அச்வமேதம் வாஜபேயம் முதலிய யாகங்களைக் கணக்கில்லாமல் செய்தார். பதினோராயிர வர்ஷங்கள் வரையில் ராஜ்யத்தை ஆண்டார். அபரிமிதமான தக்ஷிணைகளுடன் எண்ணிறந்த அச்வமேதயாகங்களைச் செய்தார். முழங்கால் வரையில் நீண்ட திருக்கைகளுடனும், மேருமலையைப்போன்ற திருமார்புடனும், மஹாப்ரதாபசாலியாய், லக்ஷ்மணனால் எப்பொழுதும் உபசரிக்கப்பட்டு லோகத்தை ஆண்டார். பந்துக்களுடனும் மித்ரர்களுடனும் பலவகை யக்ஞங்களைச் செய்து முடித்தார். அவருடைய ராஜ்யத்தில் ஸ்த்ரீகள் புருஷனை இழந்து வருத்தப்பட்டதில்லை. துஷ்டமிருகங்களால் உபத்ரவமில்லை. வ்யாதியால் பீடிக்கப்பட்டவர்களில்லை. திருடர்களால் பயமில்லை. ஒருவனுக்கும் கஷ்டமென்பது நேரவில்லை. அகாலத்தில் ஒருவரும் மரணமடையவில்லை. எல்லோரும் ஸந்தோஷமாய்க் காலங்கழித்தார்கள். எல்லோரும் தர்மத்திலேயே நாடின மனஸுடையவர்களாயிருந்தார்கள். தர்மஸ்வரூபியான ராமனுடைய ஆசாரத்தையே ப்ரஜைகளும் அனுஸரித்து ஒருவரையொருவர் உபத்ரவிக்கவில்லை. அநேக ஆயிரவர்ஷங்கள் ஜீவித்திருந்து, அநேக ஆயிர புத்ரர்களுடன், வ்யாதியில்லாமலும் சோகமில்லாமலும் வாழ்ந்தார்கள். ராமன் ராஜ்யத்தை ஆளும்பொழுது எங்கே பார்த்தாலும் ராமன் ராமனென்றே எல்லோரும் அவருடைய சரித்ரங்களை வர்ணித்து அவரையே கொண்டாடினார்கள். ஜகத்முழுவதும் ராமமயமாயிற்று. எந்த ருதுவிலும் விருக்ஷங்கள் விசாலமான கிளைகளுடனும் புஷ்பங்களுடனும் பழங்களுடனும் செழித்தன. மேகங்கள் அந்தந்தக் காலத்தில் மழைபெய்தன. காற்று ஸுகமாய் வீசிற்று. ப்ராஹ்மணர்களும் க்ஷத்ரியர்களும் வைச்யர்களும் சூத்ரர்களும் பேராசையற்றவர்களாய்த், தங்களுடைய வர்ணாச்ரம தர்மங்களைத் திருப்தியாயும் ஸந்தோஷமாயும் நடத்திவந்தார்கள். ஸகல ப்ரஜைகளும் தர்மத்தில் ப்ரியமுள்ளவர்களாயும், தர்மத்தில் எப்பொழுதும் நோக்கமுள்ளவர்களாயும், ஸத்யவான்களாயும், சுபலக்ஷணங்கள் பொருந்தினவர்களாயுமிருந்தார்கள். ஸ்ரீராமன் ஸஹோதரர்களால்

உபசரிக்கப்பட்டு, பதினோராயிர வர்ஷங்கள்வரையில் நிகரற்ற காந்தியுடன், ராஜ்யபாலனஞ்செய்தார்.

வால்மீகிமஹர்ஷியால் ஆதியில் செய்யப்பட்ட இந்தக் காவ்யம் தனத்தையும் கீர்த்தியையும் ஆயுளையும் ஜயத்தையும் அரசர்களுக்குக் கொடுக்கும். இதைப்படித்தவனும் கேட்டவனும் பாபத்திலிருந்து விடுபடுகிறான். ராமனுடைய பட்டாபிஷேக மஹோத்ஸவகதையைக் கேட்பவன் புத்ரர்களை விரும்பினால் புத்ரர்களை அடைகிறான்; தனத்தை விரும்பினால் தனத்தை அடைகிறான். அரசனாயிருந்தால் சத்ருக்களை ஜயித்து லோகத்தை ஆளுகிறான். ஸ்த்ரீகளாயிருந்தால் கௌசல்யை ராமனை அடைந்ததுபோலும், ஸுமித்ரை லக்ஷ்மணனை அடைந்ததுபோலும், கைகேயி பரதனை அடைந்தது போலும், தீர்க்காயுஸுள்ள உத்தமபுத்ரர்களை அடைகிறாள். இந்த ராமாயணத்தையும் ராமனுடைய விஜயத்தையும் கேட்கிறவன் தீர்க்காயுளைப் பெறுகிறான். வேதார்த்தங்களை விளக்கும்பொருட்டு வால்மீகிமஹர்ஷியால் செய்யப்பட்ட இந்த உத்தமகாவ்யத்தைக், காமக்ரோதங்களை அடக்கி ச்ரத்தையுடன் கேட்கிறவன் ஸகல கஷ்டங்களையும் ஸகல க்லேசங்களையும் தாண்டுகிறான். தூரதேசத்திற்குப் போயிருந்தால் தன் புத்ரமித்ரபந்துகளுடன் சேருகிறான். ரகுநாதனிடத்திலிந்து வேண்டியவரங்களைப் பெருகிறான். இந்த ராமாயணத்தைக் கேட்பவனிடத்தில் ஸகல தேவதைகளும் ப்ரீதிவைக்கிறார்கள். அவனுடைய க்ருஹத்திலிருக்கும் விநாயகர்களென்ற தேவதைகள் (கார்யங்களுக்கு விக்னஞ்செய்யும் க்ரகங்கள்) ப்ரஸன்னமாகின்றன. அரசனாயிருந்தால் இந்தப் பூமியை ஜயிப்பான். தேசாந்த்ரம் போனவனாயிருந்தால் க்ஷேமமாய் வந்து சேருவான். யௌவனஸ்த்ரீகள் இதைக் கேட்டால் உத்தமமான புத்ரர்களைப் பெறுவார்கள். இந்தப் புராதனமான இதிஹாஸத்தை ப்ரதிதினமும் பூஜித்துப் படித்தால் ஸகல பாபங்களிலிருந்தும் விடுபட்டுத் தீர்க்காயுளை அடைவார்கள். க்ஷத்ரியர்கள் எப்பொழுதும் இந்தப் புண்யசரித்ரத்தை நமஸ்கரித்து ப்ராஹ்மணர்களிடத்திலிருந்து கேட்கவேண்டியது. அவர்களுக்கு அளவற்ற ஐச்வர்யமும் புத்ரலாபமும் கிடைக்கும். இந்த ராமாயணம் முழுவதையும் எப்பொழுதும் ஒருவன் கேட்டாலும் படித்தாலும் ஸ்ரீராமமூர்த்தி அவனிடத்தில் அழிவற்ற ப்ரீதியை வைக்கிறார். அவர் அனாதியான மஹாவிஷ்ணுவல்லவா? ஆதிதேவனும் மஹாபாஹுவும் ஸர்வேச்வரனுமான ஸ்ரீமந்நாராயணனே ஸாக்ஷாத்

ராமனும், அவருக்கு ப்ராணனமான ஆதிசேஷனே லக்ஷ்மணனும் அவதரித்தார்கள். இந்த மங்களாகாமான காவ்யத்தைக் கேட்கிறவர்களுக்குக் குடும்பவிருத்தியும் தனதான்யவிருத்தியும் உத்தமமான லாபமும் கிடைக்கும். ஸகல புருஷார்த்தங்களும் கைகூடும். ஸகல மனோரதங்களும் நிறைவேறும். உத்தமமானஸ்த்ரீகளை அடைவார்கள். தீர்க்காயுஸும் தேஹாரோக்யமும் கீர்த்தியும் ஸஹோதரர்களின் ஒற்றுமையும் தீக்ஷணமான புத்தியும் அழிவற்ற லாபமும் கிடைக்கும். தேஜஸ் பலம் வீர்யம் முதலியவைகளைக் கொடுக்கும் இந்த க்ரந்தத்தை ஐச்வர்யத்தை விரும்பும் ஒவ்வொருவரும் நியமத்துடன் கேட்கவேண்டியது.

வெகு காலத்திற்குமுன் நடந்த இந்தச் சரித்ரம் இவ்விதமாய்ச் சொல்லப்பட்டது. உங்களுக்கு ஸகல மங்களங்களுமுண்டாகட்டும். விஷ்ணுவினுடைய மஹோவாக்கிற்கெட்டாத சக்தி லோகங்களில் விருத்தியடையட்டுமென்று ஸந்தேஹமில்லாமல் வெட்கப்படாமல் நிச்சயமாய்ச் சொல்லுங்கள். ராமாயணத்தைப் படிப்பதாலும் கேட்பதாலும் ஸகல தேவர்களும் ஸந்தோஷமடைகிறார்கள். ராமாயணத்தைக் கேட்பதால் பிதிருக்களும் ஸந்தோஷமடைகிறார்கள். வேதஸம்ஹிதைக்கு ஸமமான இந்த வால்மீகிராமாயணத்தைப் பக்தியுடன் எழுதுகிறவர்கள் என்நாளும் ஸ்வர்க்கத்தில் வஸிப்பர்கள்.

---

Ramani Printing Press, Mylapore.

